கம் 14-ம் ச்லோகத்தில் மாரீசன் ராவணனிடம் ராமநாமத்தைச் சொன்னாலேயே பயமாய் இருக்கிறது என்கிறான். அதாவது
வ்ருக்ஷே வ்ருக்ஷே ச பஶ்யாமி சீரக்ருஷ்ணாஜிநாம்பரம் । க்ருஹீத
தநுஷம் ராமம் பாஶஹஸ்தமிவாந்தகம் । அபி ராமஸஹஸ்ராணி
பீத: பஶ்யாமி ராவண । ராமபூதமிதம் ஸர்வமரண்யம் ப்ரதி
பாதி மே । ராமமேவ ஹி பஶ்யாமி ரஹிதே ராக்ஷஸாதிப ।
த்ருஷ்ட்வா ஸ்வப்நகதம் ராமம் உத்ப்ரமாமி விசேதந: । ரகாராதீநி நாமாநி
ராமத்ரஸ்தஸ்ய ராவண । ரத்நாநி ச ரதாஶ்சைவ த்ராஸம் ஸம்
ஜநயந்தி மே । என்று ராவணனைப்பார்த்து நான் ராமனை இந்த வனத்தில் மான்தோல் மரவுரி உடுத்தினவனாயும் பாசம் பிடித்த அந்தகன்போலவும் பார்க்கிறேன். இந்தவனம் முழுமையும் ராமமயமாய் பார்க்கிறேன். நான் ஆயிரக்கணக்கான ராமனைப் பார்க்கிறேன். இந்தப்படி பயப்படுகிறேன். ரத்னம், ரதம், இப்படி ரகாரத்தைச சொல்லும்போதெல்லாம் ராமனோ என்று பயம் உண்டாகிறது என்கிறான். இப்படி ராமநாமம் சத்ருவுக்கு பயத்தை உண்டுபண்ணக்கூடியது. யுத்தகாண்டத்தில் லக்ஷ்மணன் இந்திரஜித்தைக் கொல்ல ஆரம்பித்தபோது யுத்தகாண்டம் 91-ம் ஸர்க்கம் 14-ம் ச்லோகத்தில் தர்மாத்மா ஸத்யஸந்தஶ்ச
ராமோ தாஶரதிர்யதி பௌருஷே சாப்ரதித்வந்த்வ: ததைநம் ஜஹி
ராவணிம். இப்படி அதாவது ராமன் ஸத்யஸந்தனாயும் தர்மிஷ்டனாயும் தசரதனுக்கு பிள்ளையாயும் யுத்தத்தில் எவனும் எதிரி இல்லாதவனாயும் இருப்பானேயாகில் நீ இந்த ராவணியைக்கொல் என்றுசொல்ல, அந்த அஸ்திரம் கொன்றுவந்தது. இப்படி ராமநாமமானது ஸம்ரக்ஷண ஸம்ஹாராதி ஸர்வயோக்யதையுடன் கூடினது. பக்தர்களுக்கு ஸம்ரக்ஷணத்தையும் சத்ருக்களுக்கு பயங்கரமாயும் ஸம்ஹாரத்தையும், உத்தமர்களுக்கு இஷ்டஸித்தியையும் உத்தமலோகத்தையும் அளிக்கக்கூடியது. என்பது ஸத்யம், என்று இப்படி நாரதரும் வால்மீகியும் ஸ்தாபித்து இருக்கிறார்கள். இப்படி ஸ்ரீராமநாமமஹிமையும் ஸ்ரீமத் ராமாயண மஹிமையும் வர்ணிக்கப்படுகிறது.

---

## 2. ஸ்ரீமத் ராமாயணம் வேதம் என்பதற்கு ஆதாரமும் ஸ்ரீராமன் வேதபுருஷனை பிர்மம் என்பதற்கு ஆதாரமும்.

*ஸ்ரீமத் ராமாயணத்தை செய்வதற்கு பிரம்மா வால்மீகிக்குச் சொன்னபோது பாலகாண்டம் 2-ம் ஸர்க்கம் 3-ம் ச்லோகத்தில் ராமஸ்ய சரிதம் ஸர்வம் குரு த்வம் ருஷிஸத்தம ! என்று ராமனுடைய ஸர்வ கதையையும் நீர்செய்யும் என்றார் இதை ஸ்ரீராமருடையகதை என்றார். நாரதர், வால்மீகிக்குசசொன்ன முதல் ஸர்க்கமான ஸம்க்ஷேபத்தில் 98-ம் ச்லோகத்தில் இதம் பவித்ரம் பாபக்நம் புண்யம் வேதைச்ச ஸம்மிதம் ! (ஸம்ஹிதம்) ய: படேத் ராமசரிதம் ஸர்வபாபை: ப்ரமுச்யதே ! என்று ராமசரிதத்தை வாசித்தால், அதாவது வால்மீகி நாரதரிடம் உத்தமகுணங்கள் உள்ளவன்யார என்றபோது அவர், அது ராமன் என்று சொல்லிவிட்டு ஸாவகுணமுள்ள அவர் சரித்திரத்தை மேலும் சொலலி இது பரித்ரம் என்றார். பிறகு வால்மீகி ஸவிஸ்தாரமாய் எல்லாவற்றையும் சொன்னார். அவரே சரித்திரத்தைச செய்தார என்றதை மேமேல பிரமாணம்.*

*(இக்க்ரந்தரீதியாய் வால்மீகி பிரசேதஸ்ஸுக்கு 10-வது புத்திரர் என்று இருப்பதாலும், இவர் வேடனாயிருந்து மராமரா என்று சொல்லிக்கொண்டு இருந்து புத்துமூடி இருந்து அதிலிருந்து வெளிவந்தவர் வால்மீகி என்பது இல்லாததாலும் ப்ருகு வம்சம் என்றும் குறிப்பிட்டு இவருக்கு பார்க்கவர் என்று வம்சபபேரும், வால்மீகி என்று வைக்கபபட்டபெயரும் என்று தெரிகிறதால் மற்ற இதர புராணங்கள் இக்க்ரந்தரீதியாய் அங்கீகரிக்க இடம் இல்லை என்றும ஸிதாந்தம். இது ராகவனுடைய கதையே தவிற த்வனி ப்ரதானமான காவ்யம் அல்ல என்று ஸ்பஷ்டம்) மேலும் ப்ரமமா நீர் நாரதரிடம் கேட்டபடி க்ரந்தத்தைசசெய்யும். உமக்கு ரகஸ்யமாய் நடந்ததும் வெளிப்படையாய் நடந்ததும், ஸகலமும் தெரியும், நீர் சொன்னதில் தவறுதலே கிடையாது என்று பாலகாண்டல் 2-ம் ஸர்க்கம் 36-ம் ச்லோகத்தில் குரு ராமகதாம் புண்யாம் ச்லோகபத்தாம் மநோரமாம் ! என்று மனஸுக்கு ரம்யமாய் இருக்கிற ராமகதையை*

ச்லோகமாய் செய்யும் என்றார். இதிலிருந்தும் இது, ஸ்ரீராமனதுகதை என்பது ஸத்யம், அதேஸர்க்கம் 37-ம் சலோகத்திலும் யாவத்ராமாயணகதா த்வத்க்ருதா ப்ரசரிஷ்யதி । என்ற இந்த வாக்யத்திலும் ராமாயணகதை என்றார். அதே ஸர்க்கம் 44-ம் சலோகத்திலும் ததுபகதஸமாஸஸந்தியோகம் ஸமமதுரோபநதார்த்தவாக்யபத்தம் । ரகுவரசரிதம் முநிப்ரணீதம் தசசிரஸஸ்ச வதம் நிசாமயத்வம் । என்ற இந்த சலோகத்தில் ரகுவரசரிதம் என்றார். உத்தரகாண்டம் 31-ம் ஸர்க்கத்தில் 42-ம் சலோகத்தில ஸச்ரத்த: ச்ருணுயாத் பக்த்யா ராகவீம்கதாம் । ஸர்வபாபாத் விமுச்யேத விஷ்ணுலோகம் ஸ கச்சதி । என்று எவன் சரத்தையுடன் ராகவனுடைய கதையைக் கேட்கிறானோ அவன் ஸர்வபாபத்திலிருந்து பரிகாரமாகி விஷ்ணுலோகத்தை அடைகிறான் என்றார். இதிலும் ராகவனுடையகதை என்றார். மேலும் உத்தரகாண்டம் 82-ம் ஸர்க்கம் 16-ம் ச்லோகத்தில் ஸுச்ராவ ராமசரிதம் தஸ்மின் காலே யதாக்ரமம் என்று ராமசரித்திரத்தைக்கேட்டார் என்றதால் இதிலும் ராமசரிதம் என்றார். மேலும் பாலகாண்டம் 2-ம் ஸர்க்கத்தில் வால்மீகியைப்பார்த்து ப்ரம்மா ரஹஸ்யம் ச ப்ரகாசம் ச யத்வ்ருத்தம் தஸ்ய தீமத: । ராமஸ்ய ஸஹ ஸௌமித்ரே ராக்ஷஸானாம் ச ஸர்வச: । வைதேஹ்யாச்சைவ யத்வ்ருத்தம் ப்ரகாசம் யதி வா ரஹ: । தச்சாப்யவிதிதம் ஸர்வம் விதிதம் தே பவிஷ்யதி என்று ரகஸ்யமாய் நடந்ததோ வெளிப்படையாய் நடந்ததோ ஸகலமும் உமக்குத் தெரியும். ராமன் லக்ஷ்மணன் ராக்ஷஸர்கள் முதலிய ஸகலருடையவும் ராமன் ஸீதையுடன் வெளிப்படையாய் இருந்ததும் ரகஸ்யமாய் இருந்ததும் முதலிய ஸகலமும் தெரியும் என்று சொல்லியிருக்க ஸகலமும்தெரிந்து வால்மீகி க்ரந்தம்செய்தார். இதை மறுபடி பாலகாண்டம் 3-ம் ஸர்க்கம் 9-ம் சலோகத்தில் ரகுவம்சஸ்ய சரிதம் சகார என்று வால்மீகி ரகுவம்சத்தின் கதையைச செய்தார் என்று இருக்கிறது. இப்படி எல்லாம் தெரிந்து வால்மீகி சொல்லியிருக்கும்போது ஒவ்வொரு சலோகத்திற்கும் ராமாயணம் காவ்யம், காவ்யலக்ஷணம், வ்யங்கிய, த்வனி, யுக்தி விசேஷார்த்தங்கள் என்று வைத்துகொண்டு ராமா

யணத்திற்கு வ்யங்கியாதி அர்த்தங்கள் சொன்னால் நடந்தது ஒரு தினுஸா பலதினுஸா ? நடந்தது ஒருதினுஸே தவிர பலதினுஸு இல்லையே. தவிற வ்யஙகாதி அாத்தங்கள் நடந்ததா நடக்காததா என்று கேள்வி ? எல்லாம் நடந்த அாத்தங்கள் தான் என்றால் வாச்யார்த்தத்திற்குமேல், சொலலப்பட்டது தான வ்யஙகாதி அர்த்தஙகள் அலலவா. இதனால் வயங்காதி அர்த்தங்கள் வாச யார்த்தம் அலல. இப்படியிருகக வ்யங்காதி அர்த்தங்களை நடந்த தாய்சசொன்னால் வெவவேறு அாத்தங்களைச சொல்வதால் அதற்கு சலோகங்கள் ஒனறுமே இல்லையே. ஸர்வாகஸ்யமும் தெரியும், அதாவது ஸவஉ ஂ விதிதஂதெ ஹவிஷ்டி என்று ப்ரம்மா சொல்லியிருக்கும்போது வால்மீகியே எல்லாம் சொல் லியிருக்க வ்யங்காதி அர்த்தங்கள் ஏது ? ரஹஸ்யமான கன்னத் தில பொட்டுவைத்த கதையென்ன, காகாஸுர வருத்தாந்த மான கதையென்ன, இப்படி பசசையான பலகதைகளையும் பல ரஹஸ்யங்களையும் கவியே சொலலியிருக்க வேறு வயங்கியாதி அர்த்தங்களால் எதைசசொலலுவது ? எப்படி ? அவருக்கு தெரியாதென்றால், எல்லாமதெரியும் என்று ப்ரமமதேவ வாக்ய மல்லவா ? தெரிந்து சொன்னதாயும் வாலமீகியின் ப்ரமாணமும் இருக்கிறதே. வ்யங்காதி அாத்தஙகள் நடக்காதது, ச்லோகங் களில் இருந்து உண்டாகிற அர்த்தங்கள் என்றால் வால்மீகியை ப்ரம்மா நடந்தகதையை செய்யசசொனனாரே தவிற நடக்காததை (வ்யங்காதி அாத்தத்தை) செய்யச சொல்லவில்லையே. ராமன் ராஜ்யத்தை அடைந்த பிறகே இக்ரநதகர்த்ரவான வால்மீகி ராமாயணத்தை செய்ததாய் இருப்பதால நடந்தபடியே ஸகல மும் தெரிந்து செய்துவிட்டதால் இவர் விட்டது ஒன்றுமே இல்லை. பரம்மா, நடந்த கதையைசசொன்னால் அதுதானே பாபத்தைபபோக்கும் எனறார். நடக்காத கதை எப்படி பாபத் தைப்போக்கும் ஆதலால் நடக்காத அர்த்தங்களான வ்யங்காதி கள் ஸ்ரீமத் ராமாயண ஸம்பந்தமட்டில் ஸகலமும் தெரிந்து வால்மீகி சொலலிவிட்டதாய் ப்ரமாணமாதலால் தள்ளத்தகுந் தவைகள். ஊாமிஷாஃ ப்ரேதிஷாஂகவஉஹஉ... யக் ... லியஃ நாஜெஹஉவயீஃ காஉஜொஷிதஂ ॥ என்ற இந்த ச்லோகத்

திற்கே ஒரே அர்த்தமே தவிர இரண்டாவது அர்த்தம் கிடையாது என்று ஸ்பஷ்டம். இதற்கே வயங்காதி அர்த்தம் இல்லாத போது மற்றதற்கு எப்படிவரும்? விஷயத்தை கவனிப்போம்:—

வால்மீகி ஸ்நானத்திற்கு சென்றபோது இரண்டு பக்ஷிகளில் ஒன்றான க்ரௌஞ்சபக்ஷியை ஒருவேடன் அடித்தான். ஆண்பக்ஷி அடிபட்டுவிட பெண்பக்ஷி கதறிக்கொண்டு இருக்க அதைக் கண்டவுடனே உண்டான கருணையால் எதிரில இருந்த வேடனையும் பார்த்துவிட்டு வாலமீகி மேலே குறிப்பிட்டு இருக்கும் சலோகத்தைச சொன்னார். இந்த சலோகம் வாயில் வந்ததும் இவர், தான், என்ன சொன்னேன என்று எண்ணினார். இந்த சலோகமே இவர் யத்னததில் வந்ததல்ல. ப்ரம்மா, தன் ஆக்ஞையால் வந்ததாகச் சொலலியிருப்பதால் இவர் யத்னத்தில வந்ததலல என்பது ஸ்பஷ்டமே. இப்படியிருக்க இந்த சலோகம் வந்ததே. இது நமது யதனத்தில வந்ததா தெய்வ யத்னமா, என்று அதை எண்ணாமல வந்த சலோகம், என்ன பாவத்தில், வந்தது என்று கவனித்தார. அவர் கவனிக்கும் போது பதத்தை, தபபாகப் பிரிதது்க்கொண்டு கவனித்தார். இந்த சலோகமே ராமன ராவணனைக் கொன்றுவிட்டு பட்டாபிராமனாக இருக்கிறபோது நாரதரும் வந்து வாலமீகிக்கு அவர் கேட்டபடி ராம கல்யாண குணங்களை சுருக்கமாய் நூறு ச்லோகங்களாய் சொல்லிப்போன பிறகு தான், தபஸா நதிக்கரையில் வால்மீகி வாக்கில் இது வந்தது என்பது முதலில கடைசிபரியந்தம் ஞாபகத்தில இருக்கவேணடும். இபபடி இருகக ஊாமிஷாஃ என்ற ஒரே பததை ஊா, மிஷாஃ, எனறு இரண்டு, பதமாய் பிரித்துக்கொண்டு விட்டார். புத்தியில ஒன்று பட்டால் அது மேல் ஓட்டம் ஓடும் குணமாதலால் தப்பாக பிரித்துக்கொண்டதால் புத்தியில் தப்பாகபட்டது. அப்படிப பிரித்துகொண்டு விட்டதால் சலோகார்த்தமே விபரீதார்த்தமாய் போய்விட்டது. உள்ள அர்த்தம என்னவெனறால் ராவணனென்றும் மந்தோதரி என்றும் பெயருடன் கூடின இரட்டையான பக்ஷிகளில் ராவணனாகிற ஆண் பக்ஷியைக்கொன்று லக்ஷ்மியாகிற, ஸீதையாகிற, பத்னியை உடைய, இபபொழுது இஙகு வேடரூபியாய நிறகும்

ராமா! நீர் துஷ்டனைக் கொன்றதால் நீடித்தகாலம் க்ஷேமமாய் இருப்பீர் என்பது அர்த்தம். பதத்தை தப்பாக பிரித்ததால் விபரீதமாய் ஆணும் பெண்ணுமான இரண்டு பக்ஷிகளில், காமத்தில் பீடிக்கப்பட்டதுகளில, ஒன்றைக் கொன்று விட்டதால் நீ வெகுகாலம் வாழமாட்டாய் என்று பட்டது. இது பிசகான அர்த்தமே. வேடன் வாழ்ந்தான் இல்லை என்று ஏதாவது பிந்தி தெரியுமா? பெண் பக்ஷிகதி என்ன, தெரியுமா? அது இருக்கட்டும். இந்த சாபார்த்தத்திற்கும் ராமாயணத்திற்கும் ஏதாவது லவலேசம் ஸம்பந்தமுண்டா. அப்படி ஸம்பந்தம் இல்லாமல் இருக்கும் அர்த்தம் நிஜமா? பக்ஷிகள் வேடன் என்பதெல்லாம் எது. எது பரியங்கம் இருந்தது. அதுகள் எங்கிருந்து வந்தது. எங்கு, எப்பொழுது, போனது, என்ற விஷயம் ஏதாவது தெரியுமா? ப்ரம்மா, நாரதரை எதற்காக வால்மீகியிடம் அனுப்பினார்? பிறகு இவர் எதற்காக வந்தார்? இவர் சாபார்த்தத்தைச் சொல்லவந்தாரா? ராமாயண ஸம்பந்த அர்த்தத்தைச் சொல்லவந்தாரா? பரம்மா, வரவேண்டிய காரணம் என்ன. இவ்வளவு விஷயத்தையும், நிராக்கமாய் ஆலோசனைசெய்து பார்த்தால் எந்த அர்த்தம் இக்க்ரந்தத்திற்காக ஏற்பட்டது? இந்த ராமாயணத்திற்கும் எந்த அர்த்தத்திற்கும் ஸம்பந்தம் இருக்கிறது என்பது தெரியும். இந்த ச்லோகம் பட்டாபிஷேகாநந்தரம், சொல்லப்பட்டதாலும், இதற்கு முதலில சொன்ன அர்த்தம தவிர மற்ற எந்த அர்த்தமும் பொருத்தம் இல்லாதிருப்பதாலும் இந்த ச்லோகத்திற்கும் ஒரே அர்த்தமே. இரண்டாவது அர்த்தம கிடையாதலாலும் இந்த ச்லோகத்திற்கு சாபார்த்தம கிடையாது, அனுக்ரஹார்த்தமேயாதலாலும் வால்மீகி செய்த எல்லா ச்லோகத்திற்கும் ஒரே அர்த்தம தான் என்றும் இககரந்தரீதியாய் ஸித்தாந்தம். சாபார்த்தம் எப்படி பிசகாகிறதென்பதை கவனிப்போம்:—

வால்மீகி சொன்னதான மாநிஷாத என்ற ச்லோகத்தில் மாநிஷாத என்ற ஒரே பதத்தை மா, நிஷாத, என்று இரண்டாக பிரித்துக்கொண்டு விட்டதால் அர்த்தம் தப்பாகப்பட்டது. இவரே சோகத்தில் வந்ததற்கு கௌரவம் கிடையாதென்று

தெரிவித்து இருப்பதாலும் இந்த ச்லோகம் சோகததில் வந்த தாலும் சோகத்தில் வந்தது சோகமாகாமல் ச்லோகமாகட்டும் என்று குறிப்பிட்டதால் வேடனை சபித்ததான அர்த்தம் பிசகு என்றும் மேலும் வால்மீகியே தப்பாகப்பட்ட அர்த்தத்தை எண்ணி என் வாக்கில் இப்படி வரலாமா என்று கவலைப்படுவ தாய் இருப்பதால் சாபார்த்தம் தப்பு என்றும் சாபார்த்தத்தி ற்கும். ராமாயணத்திற்கும் யாதொரு ஸம்பந்தமும் இல்லா திருப்பதாலும் சபிக்கப்பட்ட வேடனும் பிந்தி அழிந்துவிட் டான், அல்லது அழியவில்லை என்று அவனைப்பற்றி யாதொரன் றும் தெரியாததாலும் பிந்தி பெண் பக்ஷியின்கதியும் இன்னது ஆனது என்று தெரியாமல் இருப்பதாலும் இந்த ஊநிஷாத என்ற சலோகம் வால்மீகி வாக்கில் வருவதற்காகவே ப்ரம்மா, வேடன் பக்ஷி முதலியவைகளை தன மாயையால சிருஷ்டித்த தாலும் இந்த சலோகம் வந்ததும் வேடன் பக்ஷி முதலிய ஸகல மும் ப்ரம்மாவின் மாயையாதலால் அது உடனே மறைந்து விட்டதாய்த் தெரிவதாலும சாபாாத்தம் தபபு என்றும் மேலும் ஒரு க்ரந்தத்தை ஆரம்பிக்கும்போது மங்களத்தில தான் ஆரம்பிக்க வேண்டுமே தவிற அமங்களததில் ஆரமபிக்கக் கூடாதாதலாலும் சாபார்த்தும பிசகு என்றும் இந்த ச்லோகம் சாபார்த்தமுள்ளதானல், பரம்மா என அனுக்ரஹத்தால் இந்த ச்லோகம் வந்தது என்று மங்களார்த்தத்தைச் சொலலி அவர் கவலையை நீக்கியதாய் மேல் கதையாதலாலும் ப்ரமமா அனுக் ரஹத்தால் அமங்களமான அர்த்தம உள்ள சலோகம் வந்தது என்பது உசிதமில்லையாதலாலும், இதனலும் சாபார்த்தம் பிச குக்காகத்தெரிவதாலும், சாபார்த்தம உண்மையானல் ப்ரம்மா வால்மீகியிடம் வரவேண்டியதனவசயமாதலாலும்,இந்தசாபார்த் தம் உண்மையானல நாரதர் வால்மீகிக்கு ஸம்க்ஷேபமான ராமா யணத்தை சொலலவேண்டிய தனவசயமாதலாலும் இந்த ஸம் க்ஷேப ராமாயணத்திலேயே அதையே சிநதிததுக்கொண்டே ஸ்னனத்திறகு செல்லும்போது தான் இந்தசலோகம் வநததாய் தெரிவதாலும், பிறகு ஆசரமமவந்து இந்த ச்லோகதலைதபற்றி சிந்தனையில் இருக்கும வாலமீகியைபபார்த்து ராமன்கதை எப

படி எபபடி நடந்ததோ அப்படி அப்படியே ஸகலமும்தெரியும், நீர் க்ரந்தத்தைசசெய்யும் என்றதாலும் சாபார்த்தம் பிசகு என்று தெரிவதாலும் சலோகத்தைசசொன்ன வால்மீகி தப பான அர்த்தத்தை எண்ணி, பெரியோர்கள் வாக்கில க்ஷேமமாய் இருபபாய் என்றல்லவா வரவேண்டும், என்வாக்கில வாழ மாட்டாய் என்று வந்ததுபோல இருக்கிறதே என்று கவலைப் படுகிருரே தவிற ஒரேபதமாக சோத்துப்பார்க்காமல் கவலைப் படுவதாய் இருப்பதால் சாபார்த்தம் பிசகு என்றும் டரம்மா உண்மையான அர்த்தத்தைக காட்டவே வந்ததாலும், அநுகர ஹத்தால வந்த சலோகமாதலால அநுக்ரஹத்தால தான் அறிய முடியுமாதலால் உண்மையான அர்த்தத்தை அறியமுடியாமல் கவலைப்படுவதாலும் சாபார்த்தம் பிசகு என்றும் சாபார்த்தம் உண்மையானுல, ஸமாஸ்ஸமா: என்று ஆரம்பப்படி முடிவு என்ருல், சாபத்தில் இக்க்ரந்தம் ஆரம்பமானுல முடிவி லும் சாபத்தில முடியவேண்டுமே. அபபடி முடிவில இல்லை யாதலாலும் சாபார்த்தம் ஸத்யமல்ல என்றும், தவிற இக்க்ரந் தாரம்பத்தில உத்தமன் யார் என்று வால்மீகிகேட்க அதற்கு நாரதர் ராமன் உத்தமன் என்றபடி, முடிவிலும இகக்ரந்தத்தில் ராமன் உத்தமன் என்றும், இக்க்ரந்தம் பாபபரிஹாரம் செய்யக் கூடியது என்று இப்படி மங்களமாய் முடிந்ததாலும் சாபார்த் தம் பிசகு என்றும் தவிற வால்மீகி கோபத்தைக்கொண்டு வேடனை சபிதது இருபபாரேயானுல், சபித்தால் அநேககாலம் செய்ததபஸ் போய்விடுகிறது. என்று பல இடங்களில் க்ரந் தத்தில் இருப்பதால வால்மீகி தபஸை இழந்ததாய் இக்க்ரந்தத் தில இல்லையாதலாலும் அநுக்ரஹத்தால் வந்த அர்த்தத்திற்கு அதுபோகும்வழியில ஆததமே தவிற வேறுவழியில் இல்லை என்பது ஸத்யமாதலாலும ஸ்ரீராம பட்டாபிஷேகமான பிறகு தான் ஸம்க்ஷேபமான, முதல ஸர்க்கம் வால்மீகிக்கு சொல்லப் பட்டதாலும உடனே அவர் ஸ்னானத்திற்கு சென்றதாலும் நதிக்கரையில இந்த ச்லோகம் வந்ததாலும் இதற்கு சாபார்த் தமே கிடையாதென்றும் அநுக்ரஹமான அர்த்தம் தான் என் றும் ஸித்தாந்தம். ஸம்க்ஷேபமான ராமாயணத்தை அநுப

விக்கும் வால்மீகியின் அனுபவரஸத்தை வெளிப்படுத்துவதற்காகவே வேடனும் பக்ஷிகளும் ப்ரம்மாவால் ஸ்ருஷ்டிக்கபபட்டதாய்த் தெரிவதால் சாபார்த்தம் கிடையாதென்றும் மேலும் அவதாரபூர்ததியில் ஸீதையை லக்ஷ்மியாயும் ராமனை விஷ்ணுவாயும் சொல்லி இருபபதால் இக்ரந்தத்திற்கு பௌலஸ்திய வதம் என்றுபெயரும் குறிப்பிட்டு இருப்பதால இந்த சலோகமும் ராவணனைக் கொன்றபிறகு ராமபட்டாபிஷேகத்திற்குபிறகு வந்ததால (ராமாவதாரம் பூர்த்தியாகும் பரியந்தம் வெளிபபடையாய், தான் தசரதபுத்ரன் தான் என்றே எண்ணியிருக்கும் அந்த ராமன் அபிப்ராயத்திற்கு விரோதமாய் ராமனை விஷ்ணு என்று சொல்ல ப்ர்ம்மாவும் இஷ்டப்படாதவராய் இந்த ஊாமிஷாஃ என்ற ச்லோகத்தில் பெயர் குறிப்படாமல் காட்டினர்) மேற்படி ச்லோகத்திற்கு சாபார்த்தம் கிடையாதென்றும், ப்ரம்மா வால்மீகி ஆச்ரமம் வந்தபோது அவரை உபசரித்து விட்டு முன் தன் வாக்கிலிருந்து வெளிவந்த சலோகத்தைப்பற்றி இது வேடனை சபித்ததுபோல் இருக்கிறதே என்று எண்ணிக் கொண்டு அதனுல் உண்டான சோகத்தால் அதே சிந்தனையிலிருக்கும் வால்மீகியை ப்ரம்மா பார்த்து, ஒ௵வஙு ஊ-மிவ-ஂமவஂ! என்று நன்ருகச்சிரித்து, அதாவது இந்த ச்லோகம் என் ஆக்ஞையால் வந்து இருக்க இன்னதற்காக இதுவந்தது என்று என்பாவம் புரியாமல் இப்படி தப்பர்த்தம்செய்து கவலைப்படுகிருரே என்று தன் சிரிப்பால் அவர் விசாரபபடும் சாபார்த்தத்தை அடித்துவிட்டு இதைபபற்றி (சாபார்த்தத்தைபபற்றி) நீர் விசாரிக்கவேண்டாம் இந்த சலோகத்திற்கு அந்த அர்த்தமே கிடையாது இந்த சலோகம் என் ஆக்ஞையால் வந்ததால இது ராமசரிதம். ராமசரிதம் ஸகலத்தையும் நீா செய்யும் எனறு மேலே சொன்னதால் சாபார்த்தம் கிடையாது என்றும் இக்ரந்தத்தில் பல இடங்களில் இதைப்பற்றி விசாரிக்கவேண்டாம் என்று சொல்லி இருக்கும் இடங்களில் எலலாம் அதைப்பற்றி விசாரித்து இருக்கமாட்டார்கன் என்பதையும் நன்கு அறியலாமாதலாலும் விசாரிக்கவேண்டாம் என்றதாலேயே இவர் நினைத்த சாபார்த்தம் கிடையாததலாலும் மேல் கதையிலும் ப்ரம்மா

பௌலஸ்தியவதம் என்று சொன்னபடி பக்ஷியை வேடன் அடிப்பதாய் அதாவது ராவணனை அடிப்பதாய் வால்மீகிக்குக் காட்டி (ராமாயண ஐதிஹ்யம் என்ற இந்தபதம், ஸீதாயாஶ்சரிதம் மஹத் என்றபதம், வளுஷ்ணவயம், என்றபதம், இதுகள் இந்த மாநிஷாத என்ற ச்லோகத்திற்கு பிந்தினதுகள், ஆனால் ராம பட்டாபிஷேகத்திற்கு பிறகு பாலகாண்டம் முதல் ஸர்க்கம் பிறகு இரண்டாம் ஸர்க்கம், பிறகு மூன்றும் ஸர்க்கம் நடந்தது. முன்விஷயத்திற்கு ராவணவதமானதும் பட்டாபிஷேகம் ஆனதும் அதை ஆதாரமாய்ச செல்லி, பிறகு இரண்டாம் ஸர்க்கம் மூன்றும் ஸர்க்கம் அதற்கு பொருந்தி இருப்பதால் காட்டப் பட்டதே தவிற மாநிஷாத என்ற சலோகத்திற்கு பௌலஸ்திய வதம் என்ற பதங்களை ப்ரமாணமாகச் சொல்ல இல்லை) மங் களமான ராம ஆசீர்வாத ச்லோகத்தை ப்ரம்மா உண்டுபண்ணி ஞர். தவிற மாநிஷாத என்ற பதத்திற்கு ஆத்மவதத்திற்காக காமத்தால் பீடிக்கப்பட்டவனை ராவணனைக்கொன்று தேவர் கள் அபிப்ராயத்தையும், ராவண அபிப்ராயத்தையும் பூர்த்தி செய்வித்த ராகவனை நீடித்தகாலம் க்ஷேமமாய் இருக்க வேண்டு மென்றுசீர்வதித்ததே தவிற வேறர்த்தமல்ல என்றும் ஸித்தாந் தம். தவிற ராமாயணஐதிஹ்யம் என்றுபெயர் வைக்கப்பட்டு இருக்க (ப்ரம்மா, நாரதரிடம் கேட்டபடி ராமாயணத்தைச்செய் யும் என்றதால், அவர் ராமசரிதமென்றதால், அதற்கு விரோத மிலலாமல் முதலில் அந்தபேரைக் கொடுத்து பிறகு மற்றபெயர் களான, ஸீதையை அபஹரித்ததால் ஸீதாசரிதம் என்பதை மத்தியிலும் பிறகு ராவணவதமாதலால் பௌலஸ்யவதம் என் பதை கடைசியிலும் சொன்னார்.) அதில இந்த மாநிஷாத என்ற ச்லோகம் இரண்டாம் ஸர்க்கத்தில் ப்ரதான ச்லோகமாயிருக்க, இதறகு சாபார்த்தமானல ராமாயணம என்று இக்க்ரந்தத்திற்கு எப்படி பெயர்வரும்? தவிற இக்க்ரந்தத்தைப் படித்தால் ஸர்வ பாபம் போகிறது என்றிருக்க மேலும் ஒவ்வொருவனும் இஷ்ட ஸித்தியடைகிறான் என்றும் இருகக மாநிஷாத என்ற ஸ்லோகத் திற்கு சாபார்த்தமானல் இக்க்ரந்தம் எப்படி படிக்கிறவனுக்கு மங்களத்தைக்கொடுக்கும்? தவிற வால்மீகி சபித்து இருந்தால்

வேடனுக்கு அது பலித்ததாய் சொல்லாததால், மற்ற ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொருவருக்கும் சாபம் பலித்ததாய் சொல்லத்தெரிந்த வால்மீகிக்கு தன்னால சபிக்கப்பட்ட வேடனுக்கு பலித்ததா இல்லையா என்றறிய யோக்யதை இல்லையா ? உமக்கு ஸகலமும் தெரியும் என்ற ப்ரம்மா அனுக்ரஹம் இது தானோ? இது அவசியமில்லை என்று ஏதாவது ப்ரமாணம் உண்டா ? சபித்தது உண்மையானல் வாழ்ந்தான் இல்லை என்று சொல்லாவிட்டால் சாபத்திற்கு என்ன கௌரவம் ? எப்பொழுது, வேடனுக்கு சாபம்பலித்ததாய் இல்லையோ, எப்பொழுது, பெண்பக்ஷியின் கதியும் தெரியவில்லையோ, அதனாலேயே சாபார்தம் ஸத்யமல்ல என்றும் இந்த மாநிஷாத என்ற ச்லோகத்திற்கு இந்த மங்களார்த்தத்தை ஸ்தாபிப்பதற்காகவே ஸம்க்ஷேபமான முதல்ஸர்க்கம் நாரதரால் வால்மீகிக்கு ப்ரம்மாவின் ஆக்ஞையால் சொல்லப்பட்டதாய் இருப்பதாலும், அதையே ப்ரம்மாவும் வந்து ஸ்தாபித்ததாலும், இது ஆசீர்வாதமான ச்லோகமாதலால், தான், இக்ரந்தம் பாராயணம் செய்கிறவனுக்கும் மங்களத்தை அளிக்கிறதென்றும் ஸ்பஷ்டம். இக்ரந்தத்தில் இக்கதை எப்படி போகிறதோ அது போகிறவழியில அர்த்தம் செய்யவேண்டுமே தவிற மனம் போனபடி பதம்பிரித்தல் கூடாதென்றும் ஸித்தாந்தம் ஆதலால் இக்ரந்தரீதியில மாநிஷாத என்ற ச்லோகத்திற்கு சாபார்த்தம் கிடையாதென்றும் ஸித்தாந்தம். ஆதலால் வால்மீகி ராமாயணத்திற்கு பதார்த்தம் மட்டும் தான் ப்ரமாணம். ஆனல் காவ்யம் என்று பதம் உள்ள இடத்தில் வால்மீகியும், நாரதரும், ப்ரம்மாவும் என்றே மூலத்திலேயே குறிபபிட்டு இருக்கிறார்கள். இது முன்சொன்ன ப்ரமாணங்களிலேயே இருக்கிறது. காவ்யம் என்ற பதத்திற்கு கவிநா க்ருதம் காவ்யம் அதாவது கவியால் செய்யபபட்டது என்ற மட்டில் தான் இக்ரந்தபடி ப்ரமாணம். ஆதலால் காவ்யம் என்ற இடங்களுக்கெல்லாம் கதை என்றே அர்த்தம் என்றும் ஸித்தாந்தம். இந்த வ்யங்காதி அர்த்தங்களெல்லாம் யாரார் எந்தெந்த சாஸ்திரம் படித்தார்களோ, அந்த அந்த படிபபை ப்ரகடனம் செய்யச்சொல்வது தவிற வேறு அலல. இந்த அர்த்

தங்கள் ராமாயணத்திற்கு மட்டில் தான் இல்லை. யாரும் எந்த க்ரந்தத்தையும் அதது எபபடி சொலலுகிறதோ, அது போகிற வழியில சென்று அதது எததற்காக ஏற்பட்டதோ அதையும் சொல்லவேண்டும். ஸ்ரீமத்வால்மீகி ராமாயணம் வேதாந்த அர்த்தத்திறகாக ஏற்பட்டது அல்ல அதற்கு அந்த அர்த்தமும் கிடையாதென்றும் ஸ்பஷ்டம். ஒரு க்ரந்தத்திற்கு வேறொன்றை யாகிப்பது கூடாது. ஒருவேளை அதில இல்லாமல் போனால் யாசிககலாம இந்த ராமாயண ஸம்பந்தமட்டில எல்லாம் இதிலேயே இருபபதாய் பரமாணம் இதற்கு ஆதாரம் வேறு க்ரந்தம் கிடையாது. அதற்கு அதுவே பிறமாணம், வால்மீகி ஸமுத்ரத்திற்கு ஸமுத்ரமே உபமானம், ஆகாசத்திற்கு ஆகாசமே உபமானம், ராமாயணத்திற்கு ராமாயணமே உபமானம், ராமனுக்கு ராமனே உபமானமென்று பல இடங்களில ஸ்தாபிக்கிறார். நாரதாதிகள் காவ்யம் என்ற பதத்திற்கு அர்த்தத்தை மூலத்திலேயே கதை என்று ஸ்தாபித்ததால் கதை என்றே ஸித்தாந்தம்.

வால்மீகி பாலகாண்டம் 4-ம் ஸர்க்கத்தில் 6-ம் ச்லோகத்தில் 𑌵𑍇𑌦𑍋𑌪𑌬𑍃𑌂𑌹𑌣𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌤𑌾𑌵𑌗𑍍𑌰𑌾𑌹𑌯𑌤 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 வேதமாகிற இந்த ராமாயணத்தின் பொருட்டு குசலவர்களை வால்மீகி அங்கீகரித்தார் என்று ப்ரமாணம். வால்மீகி குசலவர்களை ஸ்வீகரித்து அவர்களுக்கு ப்ரம்ம தேஜஸ்ஸை அனுக்ரஹம் செய்து இக்க்ரந்தத்தை உபதேசித்தார். இக்க்ரந்தத்தில் உள்ளபடி வேதங்களை மூன்று ஜாதிக்காரன் தான், அத்யயனம்செய்யலாம். இந்த ராமாயணமான வேதத்தை ப்ராம்மஷ்டனான ப்ராம்மணன ஒருவன் தான் மூலம் (24536) இருபத்திநாலாயிரதது ஐநூற்றிமுப்பத்தாறு சலோகங்களை அத்யயனம் செய்யலாம் மற்றவன் கேட்கத்தான் வேண்டும் என்கிறார். வால்மீகி யுத்தகாண்டம் (131)-ம் ஸர்க்கம் (117)-ம் ச்லோகத்தில் 𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯 𑌶𑌿𑌰𑌸𑌾 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌶𑍍𑌰𑍋𑌤𑌵𑍍𑌯𑌂 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑍈𑌰𑍍𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌤𑍍 । என்று க்ஷத்ரியர்களால தினம் சிரஸால் நமஸ்கரிக்கப்பட்டு ப்ராம்மணனிடத்தில் இருந்து கேட்கபபடவேண்டும் என்றார். இவ்விஷயத்தை நாரதரும் ஸம்க்ஷேபத்தில் 1-ம் ஸர்க்கம் கடைசி ச்லோகத்தில் 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑍋 𑌭𑍂𑌮𑌿𑌪𑌤𑌿𑌤𑍍𑌵𑌮𑍀𑌯𑌾𑌤𑍍 । என்பதில் 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍

என்கிற க்ரியையை நாலு பாதத்திற்கும் சொல்லக்கூடாது. இது த்விஜநு ஒருவனுக்குததான் சொல்லபபட்டது மற்றவன் கேட்கத்தான் வேண்டுமெ என்று இபபடி நாரதர் விதிததததை தான் மேலே வால்மீகி ஸ்பஷ்டமாய்வர்ணிக்கிறார். தவிற உத்தர காண்டம் (121)-ம் ஸர்க்கம் 48-ம் சலோகத்தில ஸ்ராவயெதிஹ ராவ்யாநம் ப்ராஹ்மணெஹ்யோதிநெதிநெ। என்று சரேயஸ்ஸை இச்சிக்கிரவன் ப்ராம்மணனிடம் இருந்து தினம் தினம் இதைக் கேட்டால் சிரேயஸ்ஸை அடைவான் என்றார். இதிலிருந்தும் இது உத்தமவேதமாதலால் க்ஷத்ரியர்களே ப்ராம்மணனிடம் இருந்து கேட்கவேண்டும் என்று. வாலமீகி விதித்ததால் அதற்காகவே அவர், பிறக்கும்போதே இரட்டைக் குழந்தைகளாகவே ஜனித்த குசலவாகளை ஸ்வீகரிததுக்கொண்டு அந்த ராமாயணமான வேதத்தை அத்யயனம் செய்வதற்காக ப்ரம்மதேஜஸ்ஸை அவவிருவர்களுக்கும் அனுக்ரஹம்செய்து அதை உபதேசித்து, ஸர்வரிஷிகள் ஆசரமங்களிலும் சென்று அவர்களை கானம் செய்யும் படியும் சொனனா. ரிஷிகளும் இக்குழந்தைகள் பரம்மதேஜஸ்ஸுடன் விளங்குவதையும கண்டு பரமஸந்தோஷத்துடன சரவணம் செய்தார்கள் எனறு கவி குறிப்பிடுகிறார். இநத விஷயத்தையே ஸ்ரீராகவனும் குழந்தைகளிடம கதை கேட்க ஆரமபிக்கும்போது பாலகாண்டம் (4)-ம் ஸர்க்கம் (27)-ம் சலோகத்தில் ஸ்ரூயதாமிதமாவ்யாநமநயொர்தேவவர்சஸொ: என்று ப்ரம்மதேஜஸ்ஸை உடைய இவர்களிடம் இருந்து இந்த கதை கேட்கபபடட்டும் என்றா. இதினாலும் பரம்மதேஜஸ் உள்ளவர்கள் என்றுப் ஸ்பஷ்டம. குசலவாகள் பட்டாபிஷேகம்முடிய 27 நாளிலும் உத்தரகாண்டம் பூாவபாகம் உத்தரபாகம் இரண்டையும் 6 நாளிலும் கானம்செய்து முடியும பரியந்தம் பரம்மதேஜஸ்ஸுடன் விளங்கினாகள். ஸ்ரீராமனிடம் கானம செய்த பிறகு இவர்கள் ஒரு இடத்திலும்சென்று கானம் செய்யவே இல்லை. இந்த க்ரந்ததததை உபதேசிக்கும் போது வால்மீகி ப்ரம்ம தேஜஸ்ஸை அளித்தார். இது உலகததில் பரகடனமாகி கடைசியாய் ஸ்ரீராமனிடம் முடிந்தது. அத்துடன் அவர்கள் ப்ரம்ம தேஜஸ்ஸும் மறைந்தது என்றும் கவியின்வசித்தாந்தம்.

மேலும் உத்தரகாண்டத்தில் (121)-ம் ஸர்க்கத்தில் ஸ்ரீராமாயணம் வேதஸமம் ச்ராத்தேஷு ச்ராவயேத் புத: । என்று ராமாயணம் வேததுல்யம் என்றார். சிரார்த்த காலங்களில் புத்திமான்கள் கேட்டால் பிதிர்க்கள் திருப்தியடைகிறார்கள் என்றார். மேலும் சிரார்த்தகாலத்தில் வேதம் ஒன்றுதான் அத்யயனம் செய்யலாம் என்றும் குறிப்பிடுகிறார். தவிற ஏன் இதை குறிப்பிடுகிறார் என்றால் ராமாயணம் முழுமையும் காயத்ரீ என்றார். ஆயிரம் சலோகத்திற்கு முதல் அக்ஷரம் காயத்ரீ அல்ல. அதை உத்தர காண்டம் (121)-ம் ஸர்க்கம் (45)-ம் ச்லோகத்தில் காயத்ர்யாச்ச ஸ்வரூபம் தத்ராமாயண முத்தமம் । என்று ஸர்வச்லோகமும் காயத்ரீ என்றார். அதனால் தான் அதில் ஒருபாதம் சொன்னாலும் பாபம்போகும் என்றார். இப்படி ராமாயணம் என்பது ராகவன்சரிதம் அந்தராகவன் வேதத்தின் ஒற்றுதயம் என்றும் இருக்கிறது. மேலும் இக்க்ரந்தம் செய்யபபட்டபோது ராமன் பட்டாபிராமனாக இருநததால் அப்பரம்மத்தினுடைய கல்யாண குணங்களுடன் கூடின இது, வேத புருஷன்கதை, இது வேத மாதலால் அதனாலேயே குசலவர்களுக்கு ப்ரம்மோபதேசத்தை அனுக்ரஹம்செய்து ராமாயணத்தையே வால்மீகி உபதேசித்தார் தவிற ராமாயண மஹிமையை வால்மீகி வர்ணிக்கும போதும் நாரதரிடம் கேட்டபோதும் முதல் ஸர்க்கம் ராமாயணம் வேதங் களுடன் கூடினது என்று நாரதர் சொன்னபடி வால்மீகியும் ஸமுத்ர இவ ரத்நாட்யம் ஸர்வச்ருதி மநோஹரம் என்று சொன்ன இடத்தில் ஸமுத்ரம் ரத்னங்களுடன் கூடினதுபோல் ராமாயண மான ஸமுத்ரம் ரத்னத்துடன் கூடினது (அதாவது சிலர் சொல் வதுபோல் வ்யங்கியாதி அர்த்தஙகளான ரத்னங்களல்ல) ஸ்ரீமத் ராமாயணமான ஸமுத்ரத்தில் வால்மீகியால் நாரதரிடம் கேட் சுப்பட்ட எந்த ராம கல்யாணகுணங்களோ அந்த ராம கல்யாண குணங்களான ரத்னங்களுடன் கூடியதே தவிற வேறு அல்ல என்று ஸித்தாந்தம். மேலும் அந்த ராமாயணமானது ஸர்வ வேதங்களுடைய மனஸுகளையும் உபஹரிக்கிறது என்றார். இது பாலகாண்டம் (3)-ம் ஸர்க்கம் (8)-ம் ச்லோகம். (மற் றொரு இடத்தில அதாவது (4)-ம் ஸர்க்கம் (23)-ம்ச்லோகத்தில்

ஶ்ரோத்ரஸுகம் ப்ரஜ்ஞாநகம் ஸர்வஶ்ருதி மநோஹரம் | என்ற இடத்தில கேட்கிறவர்களுடைய காது வழியாய்சசென்று மனஸ்ஸை அபஹரிக்கிறதென்று இங்கு தாத்பர்யம்) தவிற வேதத்தில சாகை, ஸம்ஹிதை என்பதுபோலும் ராமாயணத்தில முன் ஆறுகாண்டங்கள் ஸம்ஹிதை என்றும் பின் உத்தரகாண்டம் சாகை என்றும் வாலமீகி வர்ணித்தார் வேதத்திற்கும் காண்டங்கள் ஏழு. ராமாயணத்திற்கும் காண்டங்கள் ஏழு. அதற்கு ஸ்வரம் உண்டு இதற்கும் ஸ்வரம் உண்டு என்று வால்மீகி வர்ணித்தார். இக்க்ரந்தமான வால்மீகி ராமாயணத்திறகு பார்க்கவ ஸம்ஹிதை என்று பெயா  வாலமீகிக்கு பார்க்கவர் என்று பெயர் குறிப்பிடப்பட்டு இருக்கிறது. யுத்தகாண்டம் (131)-ம் ஸர்க்கம் (124)-ம் ஸ்லோகத்தில ஸம்ஹிதாம் ஜ்ஞாநாக்ருதாம் | என்று இருக்கிறது. மேலும ஸாமுத்ரீம் கதாம் என்றும இருக்கிறது. தவிற ஆர்ஷம் வால்மீகிநாக்ருதம் என்றும் இருக்க இந்த க்ரந்தம் முழுமையும் ஆர்ஷம் என்ருர். ஸம்ஹிதாயாம் என்று ஸர்க்கமுடிவிலும் கதை மத்தியிலும் காட்டினுர். இப படி மற்றும் பல பரமாணங்களாலும் முக்யமாய் வேதமாகிற இக்க்ரந்தத்தின் பரகடனத்தின பொருட்டு (இங்கு சிலர் ராமாயணம், வேதார்த்தத்தை வெளிபபடுத்த வந்தது என்பார்கள். அது கிடையாது. இது ஸ்வதநதிரக்ரந்தம். ராமன்செய்த காரியங்களை வெளிப்படுத்தும் இகக்ரந்தம் வேதார்த்தத்தை வெளிபபடுத்த வரவே இல்லை ) குழநதைகளுக்கு வால்மீகி உபதேசித்தாா என்றும் இருப்பதால ஸ்ரீமத் ராமாயணம் வேதமென்றே பரமாணம இபபடி நாரதரும் வாலமீகியும் ப்ரமமதேவனும் இப்படியே ஸ்தாபிப்பதால ஸ்ரீமத் ராமாயணம் வேதம எனறே ஸித்தாநதம. எந்த புராணமும் எந்த சாஸ்திரமும ராமாயணத்தை கட்டுப்படுத்தாது கட்டுப்படுத்தவும முடியாது ஏனென்ருல் இதை வால்மீகி ஸ்வதந்திர க்ரந்தம் என்ருர். மேலும் இக்க்ரந்தத்தில பதம் ஆர்ஷம், கதை ஆர்ஷம், ச்லோகமே ஆர்ஷம், க்ரந்தம்முழுமையுமே ஆர்ஷம், எனறு மூலத்திலேயே இபபடி பல ப்ரயோகம் இருப்பதால் இதர சாஸ்திராதிகளுக்கு இது கட்டுபபடாதது. ருஷிகள், இருநதது என்பதறகு

மனுஷ்யஜந்மாவில் தன்னை அறியாமல் இருப்பதால் அஞ்சலி செய்துகொண்டு நின்றும் ராகவனைபபார்த்து (14)-ம் ச்லோகத்தில் அக்ஷரம் ப்ரஹ்ம ஸத்யஞ்ச என்று நீர் அக்ஷரம் நீர் ப்ரம் மம் நீர் ஸத்யஸ்வரூபம் என்றும் விராட்ஸ்ரூபி என்றும் வர்ணிப்பதால் ராமன் வேதபுருஷனை பரப்ரம்மம் என்று ஸித்தாந்தம். அதே ஸர்க்கம் முழுமையுமே ராமனை பரப்ரம்மம் என்று வர்ணிபபதால் பரப்ரம்மம் என்று ஸித்தாந்தம். உத்தரகாண்டத்தில அகஸ்தியரும் ராமனை பரபரம்மம் என்றதால் பரப்ரம்மம் எனறே ஸித்தாந்தம். உத்தரகாண்டம் (121)-ம் ஸர்க்கம் (10)-ம் சலோகம் வைஷ்ணவீம் தாம் மஹாதேஜாஆகாசம் வா ஸநாதநம் என்று ப்ரம்மா ராகவனைப்பார்த்து நீர் வைஷ்ணவதேஜஸ்ஸிலாவது ஆகாசமான பரம்மத்திலாவது கலக்கலாம் என்று சொல்ல அவரும் அப்படியே வைஷ்ணவஸ்ரூவபியாகி பிறகு ப்ரம்மமானூர் என்று இருப்பதால் இது வால்மீகி வாக்யமாதலால ராமன் வேதபுருஷனை பரப்ரம்மம் என்று ஸித்தாந்தம். உத்தரகாண்டம் (88)-ம் ஸர்க்கம் (10)-ம் ச்லோகம் த்வம்ஹி நாராயண: ஸ்ரீமாந் த்வயி ஸர்வம் ப்ரதிஷ்டிதம். த்வம் ப்ரபு: ஸர்வ பூதாநாம் த்வம் ஏவ ஸநாதந: ॥ என்று அகஸ்தியபகவான் நீரே நாராயணன் ஸர்வமும் உம்மிடம் விளங்குகிறது நீர் ஸாவபூதஙகளுக்கும் பிரபு நீர ஸநாதநமூர்த்தி, நீரே பரமபுருஷன் என்றதாலும் ராமன் வேதபுருஷனை பரப்ரம்மம் என்று ஸித்தாந்தம். ஆரண்யகாண்டம் (44)-ம் ஸர்க்கம் (15)-ம் ச்லோகம் ஸுமித்ரை கௌஸல்யைபபார்த்து ஸூர்யஸ்யாபி பவேத் ஸூர்ய: ஹ்யக்னேரக்னி: ப்ரபோ: ப்ரபு: । ச்ரியச்ஸ்ரீ ச்ச பவேதக்ர்யா கீர்த்யா: கீர்த்தி: க்ஷமாக்ஷமா ॥ தைவதம் தேவதாநாம்ச பூதாநாம் பூதஸத்தம: என்று ஏ! கௌஸல்யே, ராமன் ஸூர்யனுக்கும் ஸூர்யன் அக்னிக்கும் அக்னி ஸ்ரீயிக்கும் ஸ்ரீ கீர்த்திக்கும் கீர்த்திபொறுமைக்கும் பொறுமை. ஸர்வதேவதைகளுக்கும் தேவதை பூதங்களுக்கும் பூதன் என்று இபபடி வர்ணிபபதால் ராமன் வேதபுருஷனை பரப்ரம்மம் என்ற ஸித்தாந்தம்.

பாலகாண்டம் (76)-ம் ஸர்க்கம் (16)-ம் ச்லோகம் அக்ஷய்யம் மதுஹந்தாரம் ஜாநாமி த்வாம் ஸுரேஶ்வரம் । தநுஷோऽஸ்ய பராமர்ஶாத் ஸ்வஸ்தி தேऽஸ்து பரந்தப ॥ என்று பரசுராமன் ராகவனைப் பார்த்து நீர் அழிவில்லாதவராயும் மதுவைக்கொன்ற மதுஸூதனனாயும் தேவதைகளுக்கு ஈசுவரனாயும் இந்த வில்லை நீர் நாணேற்றிவிட்டதால் தெரிந்துகொண்டேன் என்று பரசுராமன் இப்படி சொன்னதாலும் ஸ்ரீராகவன் வேதபுருஷனான பரப்ரம்மம் என்ற ஸித்தாந்தம். பாலகாண்டத்தில் (70)-ம் ஸர்க்கத்தில் (20)-ம் ச்லோகத்தில் அவ்யக்தப்ரபவோ ப்ரஹ்மா ஶாஶ்வதோ நித்ய அவ்யய: । என்று வசிஷ்டர் சொன்னார். அவரே அயோத்யாகாண்டத்தில் (110)-ம் ஸர்க்கத்தில் (5)-ம் ச்லோகத்தில் ஆகாஶப்ரபவோ ப்ரஹ்மா ஶாஶ்வதோ நித்ய அவ்யய: என்று அவ்யக்தமானதில் ப்ரம்மா உண்டானார் என்றும் ஆகாசத்தில இருந்தும் ப்ரமமா உண்டானார் என்றும் வர்ணித்தார் வால்மீகியும், பாலகாண்டம் (18)-ம் ஸர்க்கம் (10)-ம் ச்லோகம் ப்ரோத்யமாநே ஜகந்நாதம் ஸர்வலோகநமஸ்க்ருதம் । கௌஸல்யாஜநயத்ராமம் ஸர்வலக்ஷணஸம்யுதம் ॥ என்று ஸர்வலோகத்தாலும் நமஸ்கரிக்கபபட்ட ஜகந்நாதனை ஸர்வலக்ஷணத்துடன் கூடினவனை கௌஸல்யாதேவி பெற்றாள் என்றதால வால்மீகிவாக்யத்தாலும் பகவான் பிறக்கும்போது குறிப்பிட்டதால் ராமன் வேதபுருஷனான பரப்ரம்மம் என்று ஸித்தாந்தம். அந்த ப்ரம்மமே லோக ரக்ஷணைக்காக மனுஷ்யனாய் பிறந்து இருப்பதால், அது அழிவில்லாததால் புண்யலோகம் செல்லும்போதும் பிறந்த அதே சரீரத்துடன் தம்பிகளுடன் அவர்கள் சரீரங்கள் விழாமல் அப்படியே விஷ்ணுரூபியாகிபிறகு ப்ரம்மமாய் மறைந்ததாய் வால்மீகி குறிப்பிட்டார். இதனால் ஸாக்ஷாத் ராகவன் வேதபுருஷனான பரப்ரம்மம் என்றும் ஸ்ரீமத் ராமாயணம் வேதம் என்றும் வால்மீகியின் ஸித்தாந்தம்.

---

## 3. பாலகாண்டத்தில் உள்ள ஸம்க்ஷேபமான முதல் ஸர்க்கம் குரு சிஷ்ய பாவத்துடன் கூடியதல்ல என்ற ஸித்தாந்தம்.

ஸ்ரீமத் வால்மீகி ராமாயண ஆரம்பம் முதல் ச்லோகம் என்னவென்றால தபஸ்ஸ்வாத்யாயநிரதம் தபஸ்வீ வாக்விதாம்வரம் । நாரதம் பரிபப்ரச்ச வால்மீகிர் முநிபுங்கவம் ॥ என்று தபஸ் என்ன, அத்யயனம் என்ன இந்த இரண்டிலும் கெட்டிக்காரராயும் பேசுகிறவர்களுக்குள் சரேஷ்டராயும் (சப்தத்தை அறிந்தவர்களுக்குள் சரேஷ்டராயும்) முநிகளுக்குள் சிரேஷ்டராயும் இருக்கும் நாரதரை தபஸ்ஸை உடைய வால்மீகி கேட்டார் என்று இதுதான முதல சலோகம். இப்படி இருக்க, இதில் நாரதரை குரு என்றாவது, வால்மீகி சிஷ்யரென்றாவது ஒரு பிரயோகமும் இல்லை. தவிற, நாரதா உபதேசித்தார் என்றும் இலலை ஆதலால விஷயத்தை கவனித்தால இவ்விருவர்களுக்குள் குரு சிஷ்யபாவத்திற்கு நாரதர் இவருக்கு முந்தி எப்பொழுதாவது குருவாய் இருநதாரா அலலது இனிமேல் வால்மீகி, தன் ஆசரமத்தை நாடி வந்திருக்கும் நாரதரை கேழ்வை கேழ்க்கப்போவதால குருவா எபபடி? முதலில ஒருவன் ஒருவனை குருவாக எண்ணினால் அவரை அடைந்து நான தங்களை குருவாய் வரிக்கிறேன். தாங்கள் அங்கீகரிக்கவேண்டும். எனக்கு ஞானோபதேசம் செய்யவேண்டும் என்று நமஸ்கரிக்கவேண்டும். பிறகு குரு அங்கீகரித்து உபதேசிப்பதை உடனேயோ, கொஞ்சகாலம் கழித்தோ செய்வார். குருவை ஆரம்பததிலேயே கேழ்வை கேட்கமாட்டார்கள். சிஷ்யன் குரு இருப்பிடத்தை நாடிச சென்று உபதேசம் பெற்றுகொள்ளுவது குரு சிஷ்ய முறைக்கு க்ரமம். இரணடாவது பக்ஷம் உத்தம சிஷ்யனாகில் குரு சிஷ்யன் வீட்டை நாடிச் செல்லலாம். தவிற, நாரதர் வந்தார். அந்த குருவை வாலமீகி பூஜித்தார் என்று ஒன்றும் இலலை. பெரியவர்கள் வந்தால் பூஜிக்கவேண்டும்; பூஜித்தாா என்று நாம் வைத்துக்கொள்வோம். தவிற, பிர்ம்மா வந்தாா உடனே பரபரப்புடன் வால்மீகி எழுந்து அர்சசிய பாத்ய ஆசமனியங்களால் உபசரித்தார் என்று இருக்க அபபடி நாரதரை பூஜித்தார் என்றும்

ச்லோகம் இல்லை. பிந்தி நாரதர் போகும்போது அவரை பூஜித்ததால முந்தி பூஜித்து இருக்கவேண்டும் என்றும் வைத்துக்கொள்வோம் பெரியவாளமுறைக்கு பூஜிக்கத்தாவாஸ்தவமே. குரு சிஷ்ய முறையில என்பதற்குத் தான பொருத்தம் இல்லை என்பது. மேலும் உபமானமாக வஸிஷ்டர் பரதனுடன் பரத்வாஜாச்ரமம் வந்ததும் அயோத்யாகாண்டம் (89)ம் ஸர்க்கம் (4)ம் ச்லோகம் வஸிஷ்டமத த்ருஷ்ட்வைவ பரத்வாஜோ மஹாதபா: । ஸஞ்சசாலாஸநாத்தூர்ணம் சிஷ்யாநர்க்யமிதி ப்ருவந் ॥ என்று பரத்வாஜர் அதிவேகத்துடன் ஆசனத்திலிருந்து எழுந்திருந்து அர்க்யபாத்யங்களை எடுத்துக்கொண்டு வஸிஷ்டரை அடைந்தார். அவரை உபசரித்தார் என்று இருக்கிறது. ஏன் நாரதரை பூஜித்தார் என்று முந்தி பிரயோகம் இல்லை பரம்பரா வந்தபோது பரபரப்புடன் எழுந்து உபசரித்தார் என்று இருக்க, நாரதர் வந்தபோது சொல்லத் தெரியவில்லை போலும். கதையின் போக்கை கவனித்தால் இவர்கள் இருவரும் பரம மித்ரர்கள் என்று தெரிகிறது. தவிர, கடைசியில், தான ராமனைப்பற்றி கேட்டதால அவர் தன் மனோபிப்ராயப்படி, தான நினைத்தபடி, அப்படியே வர்ணித்ததால உண்டான பரமானந்தத்தால் அவரைப் பூஜித்தார் என்பது ஸ்பஷ்டம். வால்மீகி தன அபிப்ராயத்திற்கு தக்கவரை உத்தமன் யார்? ஸத்யவந்தன் யார்? ஸர்வஞ்ஞன் ஸமர்த்தன் யார்? என்று இப்படி சில கேள்விகளை தமக்கு ராமனிடம் இருக்கும் பக்தியை த்ருடப்படுத்திக்கொள்வதற்காகக் கேட்டார். இது ஸ்நேகபாவமே தவிர, குரு சிஷ்யபாவமே அல்ல. இதில் சிஷ்யன் குருவை நான் கேட்கிறபடி நீர் சொல்லவேண்டும் என்கிறார். அப்படி கேட்டதும அவரிடம் குரு என்றால் அந்த நாரதர் நான அறிந்து சொல்லுகிறேன் என்கிறார் அவரும் பிறகு அறிந்து சொல்லுகிறார் என்று மேலே ப்ரயோகம் இரு தான் குரு உபதேசிக்கும் திறமை சிஷ்யனைகயிருப்பவன் ஸத்குருவை அடையும்போதே நான் கேட்பதற்கு நீர் பதில் சொல்லும் என்று கேட்பது தான் சிஷ்யலக்ஷணம் போலும்? (நாரதரும் வால்மீகியும் குரு சிஷ்யர்கள் என்கிற மத ஸித்தாந்தத்தைப்பற்றி நாம் இப்பொழுது பேசவே இல்லை. அந்த மதத்

திற்கு அது பரமாணமே இந்த க்ரந்தத்தில அதறகு ப்ரமா ணம் இல்லை என்றபட்டில தான் சொலலுகிறோம. அதற்கு அது பரமாணமே.) மேலும குருவாகவந்தவரும அவர் கேடட தற்குமட்டும பதில சொலலிவிட்டு சென்றுவிட்டாரே தவிற வேறு எதைபபறறியும சொலலவுமிலலை இவரும் கேட்க விலலை. வாலமீகி தெரிந்துகொண்டிருப்பதை தான் நாரதரைக் கேட்டாரே தவிற தெரியாததைக கேட்கவே இல்லை. தனக்கு ராமனிடத்தில் இருககும் பக்தியை தருடப்படுத்திக்கொள்வதற் காகவே கேட்டதாக தெரிகிறதே தவிற, வேறு ஒன்றுமே இல்லை என்பது ஸ்பஷடம. பிரமமா வந்தபோது வாலமீகி நாரதரைக் கேட்டபடி ஒனறுமே பிர்மமாவைக கேட்கவில்லை. தன்னிடம் ஒன்றும் கேட்காமல சிந்தனையில இருக்கும் வால்மீகியை பிரம்மா என்ன சிந்தனை என்று கேட்க, அவா மேலே தனக்கு உண்டான சிந்தனையைச சொலலுகிறா. இங்கும் குரு சிஷ்ய பாவம் சொலலவிலலை. பிர்மமாவை தெய்வமாய் பூஜிககிறார் வாலமீகி என்று இருககிறது பிறகு பிர்ம்மா அவர் சிந்தனையைபபோக்கி ஸ்ரீமத் ராமாயணத்தை நாரதரிடம கேட்டபடியும் செய்யும் ரஹஸ்யாதி ஸகலமும் நடந்தபடி தெரியும். இது என் அனுக்ர ஹம் என்று சொன்னா. தெய்வமான அவா அனுக்ரஹத்தால் வால்மீகி க்ரந்தம செய்தார் என்று மேலே பிரமாணம். இதுவும் பிர்ம்மா வால்மீகி ஆசரமம வநது சொன்னது. ஸாக்ஷாத் பிர்ம் மாவுககு பகவான் பூலோகத்தில் பிறந்து, துஷ்டாதிகளை ஸம்ஹ ரித்துவிடடு பட்டாபிராமனுக இருபபதால அந்த ராமப்பிர்ம்மத் தின் கதையை ஜகத்தில பிரகடனமாகச செயயவேண்டும என்ப தற்காக வால்மீகி ராமனிடம அதிக பிரேமையுடன இருபபது கண்டு பிர்ம்மா தன பிள்ளை நாரதரை வாலமீகியிடம அனுப்பி னுல் வாலமீகி ராமனைபபற்றி இவரிடம் கேட்பன் அதன் மூலம் ஸங்கிரஹமாய் கதையைசசொல்லிவிட்டால் அவரிடம் ஈடுபட்ட வாலமீகியிடம் இருந்து அனுபவஞானத்தை நாம் வெளிப் படுத்தி பிறகு அவர்மூலம் உலகத்தில் பிரகடனம் ஆகும்படி கிரந்தத்தை உண்டுபண்ணி விககலாம் என்றே ப்ரம்மா நாரதரை அனுப்பினது. அதற்காகவே பிறகு பரம்மாவும் தானுகவநதது.

அதை அனுஸரித்தே வால்மீகி வாக்யத்தில் வந்த ச்லோகமும் (ப்ரம்மா) தன் அனுக்ரஹத்தால் வந்ததாக குறிப்பிட்டதாலும் இவ்வளவும் ப்ரம்மாவின் காரியம் என்றே ஸ்பஷ்டம். வால்மீகிக்கு நாரதர் உபதேசித்தார் என்று ப்ரயோகமும் இல்லை. இது உபதேசமுமாகாது. உத்தமனான பரமாத்மாவின், கதையை நாரதர் தனக்கு சொன்னதைக்கேட்டுவிட்டு வால்மீகியும் அவரை க்ரமப்ரகாரம் பூஜித்து அனுப்பினார் என்றுமட்டில் தான் ப்ரயோகம். ஆதலால் இக்ரந்தரீதியில் குரு சிஷ்யலக்ஷணம், இல்லை. வஸிஷ்டருக்கும் ராமாதிகளுக்கும் க்ரமப்படி உண்டு. விஸ்வாமித்ரருக்கும் ராம லக்ஷ்மணருக்கும் குரு சிஷ்ய பாவம் உண்டு. வால்மீகிக்கும் குசலவாளுக்கும் குரு சிஷ்யபாவம் உண்டு. இப்படி குறிப்பிட்டு இருப்பதுபோல் நாரத வால்மீகிக்கு குரு சிஷ்யபாவம் சொல்லப்படவில்லை. ஆதலால் ஸம்க்ஷேபமான முதல் ஸர்க்கம் குரு சிஷ்யபாவத்துடன் கூடினது என்பது பொருத்தமல்ல என்ற ஸித்தாந்தம்.

---

4. லோகத்தில் சிலர் பாலகாண்டம் உத்தரகாண்டம் இரண்டும் வால்மீகியே செய்யவில்லை என்பதால் அயோத்யாகாண்டமுதல் ஐந்துகாண்டமே வால்மீகிசெய்யவில்லை என்றும், ஸப்தகாண்டங்களையுமே வால்மீகிதான் செய்தார் என்ற ஸித்தாந்தமும் முதல் ஸர்க்கமும் எல்லா ஸர்க்கமும் வால்மீகியே செய்ததென்றும் இக்ரந்தத்தில் ப்ரக்ஷிப்த அதிகபாடங்கள் என்பதே கிடையாது என்பதும் ஸகலமும் வால்மீகியே செய்ததென்ற ஸித்தாந்தமும்.

உலகத்தில் சிலர் காண்டம் முதலில், அதாவது பாலகாண்டம், அனாவஸ்யமான பல கதைகளுடன் கூட இருப்பதினாலும் அயோத்யாகாண்டம் முதல் ஸர்க்கத்தில் (7)-ம் ச்லோகத்தில் ஸஹி தே³வைருதீ³ர்ணஸ்ய ராவணஸ்ய வதா⁴ர்தி²பி⁴: । அர்தி²தோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ்ஸநாதந: ॥ என்ற ச்லோகத்தை,

அதாவது தேவதைகளால பார்த்தித்தபடி ஸநாதநமூர்த்தி யான பகவான் ராவணவதத்திற்காக பூமியில பிறந்தார் என்று எப்பொழுது இருக்கிறதோ இதிலிருந்து தான் கதா ஆரம்பம். பாலகாண்டத்தை பிந்தி சேர்த்தாரகள் என்கிறார்கள். தவிற அயோத்யாகாண்டம் முதல ஸர்க்கம் முதல் சலோகததில் பரதன் சத்ருக்னனுடன் மாமாவின கருஹத்தில் புத்ர ஸ்னேகத்தால் கொண்டாடப்பட்டான் என்று கதை இருபபதால் ஒரு கதையை இப்படி நடுவில் இருந்துதான் ஆரம்பிக்கவேண்டும், அதுதான ரஸம் ஆதலால் கவி அயோத்யாகண்டம் முதல ஆரம்பித்தார் என்பது ஒருககூஷி. இதனால் பாலகாண்டம் கிடையாது என்று ப்ரமாணம் என்கிறாகள். தவிற பாலகாண்டத்திற்கு ஸகல ஆதாரமும் உத்தரகாண்டத்தில ரொமப இருப்பதால உத்தரகாண்டமும செய்யவிலலை எனற தீரமானம். தவிற மற்றும் சிலர் உத்தரகாண்டத்தில் அதை வாசிததாலேயே ச்லோகம் போயிருக்கும் படியான சகிலியில் இதுமட்டும் வால்மீகி செய்ததல்ல என்கிறார்கள். மற்றும் சிலர் பாலகாண்டம் (2)-ம் ஸர்க்கத்தில (44)-ம் சலோகத்தில் 𑌤𑌦𑍁𑌪𑌗𑌤𑌸𑌮𑌾𑌸 𑌸𑌨𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌂 𑌸𑌮𑌮𑌧𑍁𑌰𑍋𑌪𑌨𑌤𑌾𑌰𑍍𑌥𑌵𑌾𑌕𑍍𑌯𑌬𑌦𑍍𑌧𑌮𑍍 । 𑌰𑌘𑍁𑌵𑌰 𑌚𑌰𑌿𑌤𑌂 𑌮𑍁𑌨𑌿𑌪𑍍𑌰𑌣𑍀𑌤𑌂 𑌦𑌶𑌶𑌿𑌰𑌸𑌶𑍍𑌚𑌵𑌧𑌂 𑌨𑌿𑌶𑌾𑌮𑌯𑌧𑍍𑌵𑌮𑍍 ॥ என்று ஸமமான ஸந்திகளுடன் கூடினதாயும் உண்மையான அர்த்தத்துடன் கூடின வாக்யத்தால் செய்யப்பட்டதாயும முநியால் செய்யப்பட்டதாயும் ராமனுடைய சரிதமாயும ராவணனுடைய வதமாயும உள்ள இக்கதையைக் கேளுஙகள் என்று இருபபதால் ராவணவததத்திற்கு பிறகு உததரகாண்டம் வால்மீகி செய்யவில்லை எனற ஒருககூஷி. மேலும் வாலமீகி க்ரநதத்திறகு பெயர் வைத்த இடத்தில் பாலகாண்டம் (4)-ம் ஸர்ககத்தில 𑌪𑍌𑌲𑌸𑍍𑌤𑍍𑌯𑌵𑌧𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌵 𑌚𑌕𑌾𑌰 𑌚𑌰𑌿𑌤𑌵𑍍𑌰𑌤𑌃 । என்று இக்க்ரந்ததத்திற்கு ராமாயணம் என்றும் பெயர் இரண்டாவது ஸீதாசரிதம் மன்றும் பெயர் மூனறாவதாக பௌலஸத்யவதம் எனற ஒருபெயர் இபபடி மூனறுபெயா என்று இருப்பதால பௌலஸதியவதத்துடன இக்கரநதம். அதறகுமேல் உத்தரகாணடம கிடையாதென்று ஒருககூஷி. பாலகாண்டம், உததரகாண்டத்திறகும் பல

இடங்களில் விரோதமான கதைகள் காணப்படுகின்றன. உததர காண்டத்திலும் பல அனுவசயமான கதைகள் காணப்படுகின் றன. அதனால் உத்தரகாண்டம்கிடையாது என்று மற்றொருககூறி வால்மீகி பட்டாபிஷேக ஸர்க்கம் முடிந்ததும் ராமாயணத்திற்கு பலனைச் சொல்லிவிட்டதால் உத்தரகாண்டம் அவர் செய்ய வில்லை என்று மற்றொருககூறி, பலன் சொல்லிவிட்டதால் மேலே கிடையாது என்பதுவேறு. வால்மீகி 24000 ச்லோகங்களையும் (500) ஸர்க்கங்களையும் ஏழு காண்டங்களையும் செய்ததாய்ச் சொல்லியிருப்பதால் யுத்தகாண்டத்துடனேயே (537) ஸர்க்கங் கள் இருப்பதால் உத்தரகாண்டம் வால்மீகி செய்யவில்லை என்று ககூறி. மேலும் சிலர் பாலகாண்டம் உத்தரகாண்டம் இரண்டும் வால்மீகி செய்ததுதான் ஆனால் பாலகாண்டம் முதல நாலு ஸர்க்கமும் யுத்தகாண்டத்தில (131)-ம் ஸர்க்கம் அதாவது பட் டாபிஷேகத்தில் உள்ள பலசருதிகதையும் உத்தரகாண்டத்தில் பலச்ருதிகதையும் வாலமீகி செய்யவில்லை என்று ஒருககூறி. வால்மீகிக்கு அனுஷ்டுப், விருத்தம் தான் தெரியும் மற்ற விருத் தம் தெரியாது. ஏனென்றால் நான் (வால்மீகி) இந்தமாதிரி சலோகங்களைச செய்கிறேன் என்றதால் முந்தி மாநிஷாத என்ற சலோகம் இவர் அறியாமல வாக்கில் வந்ததால் இந்தமாதிரி என்றதால் வேறு வ்ருத்தம் இவருக்கு தெரியாது. ஆதலால் எந்த இடத்தில் பெரியவிருத்தம் இருக்கிறதோ அத்தனையும் வால்மீகிசெய்யவில்லை என்று இது ஒருககூறி. மேலும் பாலகாண் டம் முதல் ஸர்க்கம் முதல் ச்லோகத்தில தபஸ்ஸ்வாத்யாயநிரதம் தபஸ்வீ வாக்விதாம்வரம் । நாரதம் பரிபப்ரச்ச வால்மீகிர் முனி புங்கவம் ॥ என்ற தபஸ் என்ன அத்யயனம் என்ன இ: – இரண்டிலும் கெட்டிக்காரராயும் பேசுபவர்களுக்குள் ச்ரேஷ்ட ராயும் முனிகளில் ச்ரேஷ்டருமான நாரதரை வால்மீகிகேட்டார் என்று இருப்பதால் பரிபப்ரச்ச என்று இருப்பதால் இப்படி முதல் நாலு ஸர்க்கம் யாரோசெய்தது என்றொரு ககூறி. சில கதைகள் முன்பின் விரோதமாய் தெரிவதால் அதுகள் ப்ரக்ஷிப் தங்கள் அதிக பாடங்களாய் இருக்கவேண்டும். ஏனென்றால் சிலது மனதுக்கு ஸமாதானப்படவில்லை. ஆதலால் சேர்த்து

இருக்கலாம் என்று ஒருகக்ஷி இப்படி சொல்லும் இவ்வளவு கக்ஷிக்கும் ராமாயணத்தில் ஆதாரம் இல்லையென்றும். இவ்வளவையும் எப்படி பூர்வபக்ஷம் செய்து உண்மை இன்னது தான் என்பதை எப்படி ஸ்தாபித்து இருக்கிறார் வால்மீகி என்பதையும் ஸப்தகாண்டங்களும், முதல் ஸர்க்கம் முதல் வால்மீகியே செய்ததென்றும் ப்ரக்ஷிப்த அதிக பாடங்கள் என்பதே கிடையாதென்றும் ஸகலமும் வால்மீகிதான் செய்ததென்றும் எப்படி கவி ஸ்தாபித்து இருக்கிறார் என்பதை கவனிப்போம்:—

பாலகாண்டத்தில் வால்மீகி வாக்யரீதியாய் அனுவச்யமான கதை ஒன்றும் இல்லை என்று நிரூபணம். க்ரந்தாரம்பத்தில் கதாநாயகனுடைய மஹிமை இன்னது, இன்ன இன்ன குணங்களுடன் கூடினவன் என்பது தெரிந்தால் தான் மேலே அந்த அந்த குணங்கள் வர்ணிக்கப்படுகிறபோது தெரியும் என்றும் தவிர குணங்களில் கொஞ்சம்கூட மாத்ரை குறைவு இல்லை என்பதை ஸ்தாபிப்பதற்காகவும் முதல் ஸர்க்கமும் பிறந்தகதையும் கல்யாணமானகதையும் இருந்தாலல்லவோ பத்னியுடனும் தம்பியுடனும் காடு சென்றாரென்று சொல்லமுடியும்? ஆதலால் பாலகாண்டத்தையும், ஜனனமான பிறகு முடிவும் சொன்னால் தான் வஶாவு்ம் உயமாகூ ஜம் என்று க்ரந்தம், பூர்த்தி. ஆதலால் உத்தரகாண்டத்தையும் செய்தார். கதையை நடுவில் ஆரம்பிப்பது ரஸம் என்று சொல்வது ஸரியே ஆனால் கவியானவர் நமது ரஸத்திற்கு இந்த ராமாயணத்தைச் செய்யவில்லை. இது பகவான் சரிதம் அவனுடைய கல்யாண குணங்கள் அவனுடைய ஸ்வரூபவர்ணனை அதைக் கேட்பதால் அது பாபத்தைபோக்கும் புண்யத்தையளிக்கும் என்று செய்யப்பட்டதே தவிற இந்த கதை நன்றாய் எழுதப்பட்டு இருக்கிறது என்ற பட்டப்பேரை வாங்குவதற்கு கவி எழுதவில்லை. அவர் ஒன்றையும் அபேக்ஷித்தவர் அல்ல. உத்தமர்களான ஸாதுக்கள் ஹ்ருதயத்தில்வாஸம் செய்யப்பட்ட பரபரம்மத்தின் அவதாரமாதலால் அதன் சரிதம் என்று செய்தார். ஆதலால் தான் அந்த பகவான் ஜனித்தது முதல், அதற்குகாரணம் முதலிய ஸகலத்தையும் சொல்லி அப்படியே ஸர்வகதையும் சொல்லி பிறகு முடிவையும் சொன்னார்

அயோத்யாகாண்டத்தில் முதல ச்லோகத்தில் தேவர்களால் ப்ரார்த்திக்கப்பட்டவர் பிறந்தார் என்றதால் முந்தி, ஜனித்த கதை சொல்லி, பிறகு கல்யாணத்தையும் சொல்லி பாலகாண்டத்தை பூர்த்திசெய்யும்போது லக்ஷ்மியுடன் விஷ்ணு விளங்கினால் எப்படியோ அப்படி ராமன் விளங்கினார் என்று முடித்து இருப்பதால் அடுத்தபடி (1)-ம் ஸர்க்கத்தில ராம கல்யாணங் குணங்களை வர்ணிக்க ஆரம்பித்ததால அந்த குணங்கள் உள்ளவன் யார் என்பதை திருப்பிக்காட்டுவதற்காக அவதரித்தார் பகவான், அவர் இன்ன குணங்களில் இருக்கிறார் என்று கவி தன் வாக்கில் இந்த இடத்தில தான் சொல்லுகிறார் ஆதலால் பாலகாண்டத்தில நாரதர் இன்ன இன்ன குணமுள்ளவன் என்று சொன்னாரே தவிர வால்மீகி தன வாக்கினால் பாலகாண்டத்தில் வர்ணிக்காததால் இங்கு வர்ணிப்பதால் அவர் இன்னார் என்பதை திருப்பிக்காட்டியதால் இதனால் அயோத்யாகாண்டத்தில் இருந்து தான் கதாரம்பம் என்பது ஒரு விதத்திலும் பொருத்தம் இல்லை. தவிர ஸப்தகாண்டத்தையுமே வால்மீகி செய்ததாய் பாலகாண்டம் (3)-ம் ஸர்க்கம் கடைசி ச்லோகத்தில் தச்சகாரோத்தரே காவ்யே வால்மீகிர்பகவாந்ருஷி: என்று உத்தரகாண்டத்தையும் வால்மீகியே செய்தார் என்ற ப்ரமாணமாதலாலும் பாலகாண்டம் (4)-ம் ஸர்க்கம் (2)-ம் ச்லோகத்தில் ஷட்காண்டாநி ததோத்தரம் । என்று ஆறுகாண்டங்களுடன் ஏழாவது காண்டமும் செய்தார் என்று இருப்பதால் உத்தரகாண்டம் வால்மீகிசெய்தார் என்பதே ப்ரமாணம் உத்தரகாண்டத்தில் குசலவர்கள் ராம ஸன்னிதானத்தில் கானம் செய்யும்போது உத்தரகாண்டம் (106)-ம் ஸர்க்கத்தில் (27)-ம் ச்லோகத்தில் காண்டாநி ஷட் க்ருதாநீஹ ஸோத்தராணி மஹாத்மநா । என்று ராமனைப்பார்த்து ஆறு காண்டங்களுடன் ஏழாவது காண்டமும் மஹரிஷியினால் பண்ணப்பட்டது என்றும் அதனாலேயே உத்தரகாண்டம் (106)ம்ஸர்க்கம் (16)ம் ச்லோகத்தில் ப்ரவ்ருத்த ஜாதித: ஸர்வம் ஸர்க்கம் நாரததர்சிதம் । என்று நாரதர் சொன்ன ஸர்க்கம்முதல் கானம் செய்தார்கள் என்றும் ப்ரமாணமாதலால் ஸப்தகாண்டமும் வால்மீகியே செய்தது என்ற விஷ

தாந்தம். தவிற இரண்டாம் ஸர்க்கம் கடைசி ச்லோகத்தில் ராமசரிதமான ராவணவதத்தை கேளுங்கள் என்று சொன்னதால் உத்தரகாண்டம் கிடையாது என்றால் இரண்டாம் ஸர்க்கம் கடைசி சலோகத்தை ஒத்துக்கொண்டு பேசினால் பாலகாண்டம் (3)-ம் ஸர்க்கம் கடைசி ச்லோகத்தையும் தஉ'காரொ ாத்ரெ காவெ) வாஶீகிஹு-உமவாநு ஜஷிஃ என்று அதாவது உத்தரகாண்டமான கதையையும் பகவானை வாலமீகி செய்தார் என்றும் நாலாம் ஸர்க்கம் இரண்டாம் ச்லோகத்தில் ஆறு காண்டங்களுடன் ஏழாவது காண்டத்தையும் செய்தார் என்கிற, ச்லோகத்தையும் ஒத்துக்கொள்ள வேண்டுமாதலால் இதைக்கொண்டு உத்தரகாண்டம் செய்யவில்லை என்று சொல்லமுடியாதலால் இது பூர்வபக்ஷம். முதல் நாலு ஸர்க்கம் வால்மீகி செய்யவில்லை. அப்படியே யுத்தகாண்ட பட்டாபிஷேக ஸர்க்கத்தில் உள்ள பல ச்ருதியும் உத்தரகாண்ட பல சருதியும் செய்யவில்லை என்பதையும் பூர்வபக்ஷம் செய்கிறார் அதாவது வஉூ என்பது வால்மீகியே சொல்லுகிறாரே தவிற இதரர்கள் யாரும் சொல்லவில்லை. வால்மீகி, தான் செய்தேன் என்று சொல்லாமல் அவர் செய்தார் அவர் கேட்டார் என்று குறிப்பிட்டார். இது கவிகளின் ஸ்வபாவவாக்யம். இதையே இந்த கவியும் தன் வாயினாலேயே வஉூ! கேட்டார் என்றது தவிற பாலகாண்டம் (2)ம் ஸர்க்கம் கடைசி சலோகத்தில் ஶவ-வஶஉரிதம் உ-கிவூணீதம் என்று முனியால் செய்யப்பட்ட ராமசரிதம் என்றார். (இது இவரிடம் மட்டும் அல்ல வெகு கவிகளிடத்திலும உண்டு (18) புராணம் செய்த வியாஸாசார்யாள் பாகவதம் செய்தபோது அதில் ஸ்ரீஉஹூாமவெதெ உஹாஉ-மிகூரதெ। என்று வர்ணித்து இருக்கிறார்கள் (இதை உலகத்திற்கு காட்டினேமே தவிற நாம் இதை எடுத்துக்கொள்ளவில்லை நமக்கு வால்மீகி வாக்யமே ப்ரமாணம்) ஆதலால் முதல் நாலு ஸர்க்கமும் வால்மீகி செய்ததே. நாரதர் சுருக்கமாய் வால்மீகிக்கு சொன்ன ஸம்க்ஷேப ராமாயணத்திலும் நாரதர் பலன் சொல்லியிருப்பதால் நாரதரிடம் கேட்டபடி, செய்யும் அவர் சுருக்கமாய் சொன்னார் நீர் விரிவாய் செய்யும் என்றார் ப்ரம்மா, ஆதலால் இவர் பட்டாபிஷேகம் ஆன

தும் பலச்ருதி சொன்னார் இது க்ரந்தத்தில் முதலாவது பாகம் தவிற பட்டாபிஷேகம் ஆனதும் இவா க்ரந்தம் செய்துவிட்டதால் அப்பொழுது ராமன் இருந்துகொண்டு இருப்பதால், உத்தரகாண்டம் 46-வது ஸர்க்கபரியந்தம் பட்டாபிஷேகத்திற்கு பிறகு ராவணாதி ராக்ஷஸர் பிறந்தகதைகளை, வானரர்கள் பிறந்த கதைகளை, ராவண திக்விஜயாதிகளை ராமன் கேட்டதால் அகஸ்தியர் அக்கதைகளை பட்டாபிஷேகத்திற்கு பிறகு சொன்னதால் முன் ஆறு காண்டங்களில் கதைகள் முன் நடந்ததாய் இருந்தாலும், கேட்டதுபின் ஆதலால் பிந்தித்தான் சொலலவேண்டும் என்று (46)-வது ஸாக்கபரியந்தம் சொன்னார். இதற்கு பிறகு தான் ஸீதா த்யாகம். ஆதலால் இதை உத்தரகாண்டத்தில் சொன்னார். ராவண வதாநந்தரம் உலகம் க்ஷேமத்தையடைந்ததும் பூமி ஸௌக்யத்தை அடைந்ததையும் கண்ணாரக்கண்ட வால்மீகி ராமன் பரப்ரம்மம் என்று அவர் அறிந்தவராதலால் ஆறு காண்டபரியந்தம் அது ஸப்றிதையாதலால, அது வேதமாதலால், அதற்கு பலனை முந்திச்சொலவி பிறகு உத்தரகாண்டம் பூர்வபாகம் உத்தரபாகம் என்ற இரண்டுடன் கூடியதால் அதை முடிக்கும்போது அதற்கும் பலனைச்சொன்னார். ஆதலால் இரண்டு இடத்தில் அவர் பலன் சொல்லவேண்டியதே. ஒரு இடத்தில் பலன் சொல்லிவிட்டால் மேலே க்ரந்தம் இருக்கக்கூடாது என்ற விதியும் இல்லை. தேவதைகளால் ப்ரார்த்திக்கபட்டு பூமியில பகவான் பிறந்தார் என்றால் வந்தகாரியம் முடிந்த பிறகு அவர் மறைந்து விட்டார் என்று அந்த முடிவையும் சொன்னால் அல்லவோ க்ரந்தம் பூர்த்தி. ஆதலாலல்லவோ க்ரமப்படி ஸமாப்தமும் ஆயிருக்கிறது என்று சொல்லப்பட்டு இருக்கிறது. ஆதலால் ஸமாப்தமானது உத்தரகாண்டமாதலால் அதையும் அவரேசெய்து பலனையும் சொன்னார் என்பதே ப்ரத்யக்ஷம். உத்தாகாண்டம் பாலகாண்டம் இரண்டும் வால்மீகி செய்யவில்லை என்றால் இக்க்ரந்தம் செய்தவர் யார், எவ்வளவு செய்யப்பட்டது, எந்த ஸமயம்? யார் செய்யச்சொன்னது, ஏன் செய்யவேண்டும், என்ற ஒன்றுமே தெரியாது, யார்கேட்டது என்பதும் தெரியாமல்போகும். ஸம்க்ஷேபமான முதல் ஸர்க்கம்

இருக்கக்கொண்டு தான், பின் காண்டங்கள் எல்லாம் இதுகால பரியந்தம் இருக்கிறது, இலலா விட்டால் பரமதோஷங்கள் ராமாதிகளிடம் ஏற்பட்டுவிடும். ஆதலால் இது ஸரியலல என்று தள்ளிவிடுவார்கள் அதில் கலயாணகுணங்களை ப்ரசனம் செய்து அதுகளின் ஸ்தாபனம் அதிலேயே செய்யப்பட்டு பிந்தினதற்கு ஜீவனாக நிற்கிறது. உத்தரகாண்டம் (46) பரியந்தம் ராவணாதிகள் பிறந்ததும் பௌருஷாதிகள் வர்ணிக்கபபடுகிறது உத்தரகாண்டம் இல்லை என்றால் ராவணாதிகள் பிறந்து திக்விஜயம் செய்த பௌருஷலக்ஷணவர்ணனை இல்லை என்றால், ராவணன் பிறநததே இல்லாதபோது வாழ்ந்தகதை ஏது. பால காண்டம் இலலை என்றால ராமாதிகள் பிறந்த கதையே இலலாதபோது காடுபோனகதையும் இருந்தகதையும் என்ன நிஜம் ஆதலால் ஸகலகதையும் உண்டு என்பதும் உததரகாண்டம் பாலகாண்டம் இரண்டும் வால்மீகியே செய்தார் என்றும் ஸ்தாபனம்.

உத்தரகாண்டம் பாலகாண்டம் இரண்டும் இல்லை என்றால் பாக்கி ஐந்து காண்டமுமே இலலை. இந்த ஐந்து காண்டங்களுக்குள்ளே முன்பின் விரோதங்கள் பல இடங்களில் இருக்க இப்படி விரோதமாய் ஒருகவி செய்வரா இபபொழுது முன் விரோதமான பாகத்தை காட்டுகிறோம். இதை எதற்காகக் காட்டுகிறோம் என்றால், பாலகாண்டம் உத்தரகாண்டம் இரண்டும் வால்மீகி செய்யவில்லை என்றால் ஒருரிஷி இட்டு முன்பின் விரோதமாய் செய்யமாட்டார். ஆதலால் ரிஷி[illegible]ததே அல்ல என்பதற்காக சொலலுகிறோம். இரண்டையும் [illegible]த்துக்கொண்டால் பாக்கி ஐந்தையும் ஒததுக்கொள்ளலாம் விஷயத்தைக் கவனிபபோம் :—தசரதவாகயத்திலும் கூனிவாக்யத்திலும் வால்மீகி வாக்யத்திலும் ஸீதாவாக்யத்திலும் இராமருக்கு பலபத்னி என்பதும் ஒரேபத்னி என்பதும் இருப்பதால் கவிகதை நடந்தபிறகு எழுதுவதால் முன்பின் விரோதம் இதில எதுநிஜம் ?

ஓர் உத்தமக்ரந்தத்தை ஆரம்பித்தபோதே சோகத்தில் பக்ஷியை அடித்த கதையில ஆரம்பித்தால (இப்படிலோக அபிப்ராயம்) இது ஆரம்பிக்கும் முறையலல சோகத்தில் வந்தது

ச்லோகமாகட்டும் என்கிறார் என்று வால்மீகி முன்பின் சொல்லி யிருப்பதாலும் யுத்தகாண்டத்திற்கும் ஆரண்யகாண்டத்திற்கும் விரோதம். ரிஷிகளிடம் ராக்ஷஸபூண்டுகள் முழுமையும் அழிப்ப தாய்சொல்லிவிட்டு ராவணனை சரணாகதிசெய்தால ராமன்ரக்ஷிப பேன் என்கிறார இது நேரிடைவிரோதம் ஸுந்தரகாண்டத் திற்குள் ஸுந்தரகாண்டம் விரோதம். அயோத்யாகாண்டத் தில் தசரதர், பரதன் ராஜயத்தை இச்சித்தால் தனக்கு கர்மா செய்யக்கூடாது என்கிறார். ஆதியில் கைகேயிக்கு ராஜயத்தை சுல்கம் வைத்து இருந்தால் தசரதன் இப்படிச் சொல்லுவாரா? பிறகு அப்பாக்கொடுத்த ராஜ்யத்தை பெற்றுக்கொள் என்கிறார் வஸிஷ்டர் இதில் எது நிஜம்? இப்படி ஏராளமான விரோதங் கள் உண்டு. இத்தனையும் ஸர்வஸந்தேகங்களுக்கும் ஸமாதானம் பாதிக்குமேல் பாலகாண்டத்திலும் உத்தரகாண்டத்திலும் தான் ஸமாதானம் ஏற்படுவதால் பாலகாண்டம உத்தரகாண்டம் இரண்டுமே வால்மீகி தான் செய்தார் என்பது ஸ்பஷ்டம்.

வால்மீகிக்கு எல்லா வ்ருத்தமும் தெரியும். இது பரம்மா அனுக்ரஹம் பாலகாண்டம (2)-ம் ஸர்க்கத்தில [illegible] என்று இதிலிருந்து வால்மீகிக்கு ஸர்வ விருந்தங்களும் தெரி கிறது என்பது ப்ரம்மா அனுக்ரஹத்தால் என்பது ஸ்பஷ்டம்.

தவிற உத்தரகாண்டம் வாலமீகி சகிலி அல்ல என்று சிலர் கக்ஷி, எத்தனை மஹாவித்வானாலும் இந்த க்ரந்தத்தில மட்டும் அவர்கள் ஸாமார்த்தியம் பலிக்காது பாக்கி ஆறுகாண்டங்களும் என்னசகிலியோ அதேசகிலியில் தான் உத்தரகாண்டம் இருக் கிறதே தவிற வேறு அல்ல. உத்தரகாண்டம் என்னசகிலியோ அதே சகிலியில் தான் முன் ஆறுகாண்டங்களும் இருக்கிறது. இதில கொஞசமும் வித்யாஸமில்லை உத்தரகாண்டம் இல்லை என்று சொலலவேண்டும் என்பதற்காக பிடிவாதமான பேச சைத் தவிற வேறு அல்ல. கதகம்முதலிய அனேக வ்யாக்யானங் கள் மூலத்திற்கு விரோதமாய் இருப்பதால அந்த வ்யாக்யானங் களும மூலத்திற்கு விரோதமானால தள்ளத்தகுந்தவைகள். (கோவிந்தராஜீயம்; தீர்த்தீயம், திலகம், ராமானுஜீயம் தனி

ச்லோகி தர்மாகூதம், உடாரி, சிரோமணி, பூஷணம், முநிபாவப்ரகாசிகா, விரோதபஞ்ஜனி, வெஙகடாத்வரி, கதகம், சதுரார்த்தி, வால்மீகி ஹ்ருதயம், வீரராகவீயம், சிதிகண்டவயாக்யானம், ஸ்ரீனிவாஸீயம், மஹேச்வதீக்ஷிதீயம், ஆதி மத்வாச்சார்யார் செய்த தாத்பர்ய நிர்ணம், அப்பய்யதீக்ஷிதர் செய்த ராமாயண ஸாரஸங்கிரஹம், ஆதி வைஷ்ணவாச்சார்யார் செய்த பாதுகா ஸஹஸ்ரம், அபயபரதானஸாரம், ரகுவீரகத்யம், இப்படி (25) வ்யாக்யானங்கள் பரியந்தம் பலதேசங்கள் நாலு திக்குகளிலும் சென்று அங்கங்கு ப்ரதான வ்யாக்யானங்களை எல்லாம் நன்றாய் ஆராய்நது கவி பாவத்திறகு விரோதமான பாவங்களை எல்லாம் வர்ஜித்து அனுக்ரஹத்தால கவி பாவத்தை அறிந்து இக்க்ரந்தம் எழுதபபட்டு இருக்கிறது. வாலமீகி ராமாயணத்திற்கு எந்த வ்யாக்யானங்களைக் கொண்டும் ஸித்தாந்தம் செய்யமுடியாது. வ்யாக்யாதாக்கள் ஒவவொருவரும தஙகள் படிப்பைக்காட்டி இருக்கிறார்களே தவிற ஒருவராவது கவியின் ஹ்ருதயத்தை அறிந்து வெளிப்படுத்தவே இல்லை என்பதை எங்கும எந்த ஸதஸிலும் என்றைக்கும் குறிபபிடுகிறோம். நாம் அனுக்ரஹத்தால் வெளிப்படுத்தும் இவ்விஷயங்களில அபிப்ராயபேதம் உள்ளவர்கள் தாராளமாய் வ்யங்கியாதி ஆததங்கள் இல்லாமல் வ்யாக்யானங்கள் இல்லாமல் மூலபபடி யோகயதை இருந்தால் நம்மை பொது ஸதஸில் இக்க்ரந்தத்திறகு என்று உழைத்தவர்களை, விவஹாரகோடி தெரிந்தவர்களை, மத்யஸ்தராக வைத்துக் கொண்டு ஜெயித்துக்கொள்ளலாம். ஸதஸில் பேசுபவர்கள் அக்க்ரந்தத்தை நன்றாய் ஆராய்சசி செய்தவர்களாய் இருக்க வேண்டும் என்றும் தெரிவிக்கிறோம்.) உத்தரகாண்டத்தை இவர்கள் (பண்டிதர்கள்) ஜாஸ்தியாய் வாசிக்காததால் சொல்லும் காரணம் தவிற வேறு அல்ல. இது நிற்க வால்மீகி பௌலத்யவதம் என்று பெயர் வைப்பதற்கு முந்தி ராமாயணம் என்று பெயர்வைத்தார். ராமாயணம் என்ற மொத்தமானபெயர், எப்பொழுது உண்டோ அதில் உத்தரகாண்டம் உண்டு என்று ஸ்தாபனம். ஆதியில் தேவதைகள் பகவானை நாலு காரியத்தைச் செய்வதற்காக உம்மை நாலுபாகம் செய்துக்கொண்டு

பிறக்கவேண்டும் என்றார்கள். அதாவது:—ராவணவதம், இந்திரஜித்துவதம், மூன்றுகோடி கந்தர்வர்கள்வதம் லவணாஸுரவதம். இப்படி இந்த நாலில ராமன் ராவணவதத்தையும் லக்ஷ்மணன் இந்திரஜிதது வதத்தையும் செய்தார்கள். இது யுத்தகாண்டத்துடன் முடிந்தது. உத்தரகாண்டத்தில் தான் பரதன் செய்த மூன்றுகோடி கந்தர்வர்கள் வதமும் சத்ருக்னன் செய்த லவணாஸுரவததகதையும் இருக்க உத்தரகாண்டம் வால்மீகி செய்யவில்லை என்றால் இந்த இரண்டுபேர்கள் பரதனும் சத்ருக்னனும் எதற்காக பிறந்தார்கள? ஆதலால் இதுகள் அனுவசியமான பேச்சைத்தவிற வேறு ஒன்றுமில்லை. இதுகளை கவனிக்க ஸப்தகாண்டமும் வால்மீகி செய்தார் என்றே ஸித்தாந்தம். (மேலும் வால்மீகி பாலகாண்டம் (3)-ம் ஸர்க்கம் கடைசியில் பட்டாபிஷேகத்திற்கு பிறகு ஸீதாத்யாகத்திற்கு பிறகு கொஞ்சகாலம் இருந்ததும் குறிப்பிட்டதால் உத்தரகாண்டம் உண்டு என்றும் ஸித்தாந்தம்) பாலகாண்டம் உத்தரகாண்டம் இரண்டுக்கும் விரோதமே கிடையாது. உண்டு என்று சிலர் எண்ணம். இல்லவே இல்லை. (இக்க்ரந்தம் பக்தி ஒன்று தவிற, வ்யாகர்ணாதி ஆறு சாஸ்திரங்களை அறிந்த மஹா வித்வான்களாலும் அறியமுடியாது. அதிகப்படிப்பினால் சண்டை, ஒன்று போடலாமே தவிற கவிஹ்ருதயத்தை ஒருக்காலும் அறியமுடியாது. அறிய வேண்டுமேயானால், ஒரு விஷயத்தை ஸ்தாபிக்கிறேன். என்பவனிடத்தில், விவாதத்திற்கு போகவேபோகாமல் எக்க்ரந்தத்தில் ஸ்தாபிக்கிறேன் என்கிறானோ அக்க்ரந்தத்தை திருப்பித் திருப்பி சிலவருஷங்கள் பக்தியுடன்வாசித்தால், தானே அவனுக்குத்தெரிந்த அர்த்தங்கள் நமக்கும் கிடைக்கும். ஒருவன் ஸ்தாபிக்கிறேன் ஒரு தர்மத்தை என்று தர்மவழியிலே இறங்கி ஸ்தாபிக்க ஸகலரையும் எதிர்க்கிறோம் என்று நின்றுவிட்டால் அவன் எத்தனைவருஷம் 'அதில் உழைத்து இருப்பனோ அத்தனைவருஷம் தானும் உழைக்கவேண்டும் தவிற அத்துடன் அவனை ஒருக்காலும் எவனாலும் ஜயிக்கமுடியாது என்றும் எண்ணவேண்டும். ஏனெனில் பக்தியை முன்னிட்டு நிற்பவனாதலால் அவனுடைய பக்தி எப்படியோ என்று எதிராளி எண்ணவேண்டும். இக்க்ரந்தத்திற்கு பக்தி தான் ப்ரதானம் என்றும் ஸித்தாந்தம்.

பாலகாண்டம் (4)-ம் ஸர்க்கம் (2)-ம் ச்லோகத்தில் சதுர்விம்ஶத் ஸஹஸ்ராணி ஶ்லோகாநாமுக்தவாந்ருஷி: ததாஸர்க்கஶதாந் பஞ்ச ஷட்காண்டாநி ததோத்தரம் । என்று வால்மீகி (24000) இருபத்திநாலாயிரம் ச்லோகங்களையும் (500) ஐநூறு ஸர்க்கங்களையும், ஏழுகாண்டங்களையும் செய்தார் என்பது இதற்கு அர்த்தம். இது ரிஷிவாக்யமே. இப்பொழுது உலகத்தில் என்ன சொல்லுகிறார்கள் என்றால் ச்லோகங்கள் (24000) இருபத்திநாலாயிரத்திற்குமேல் (24536) சலோகங்கள் இருக்கிறது. (எந்த அச்சுப்பிரதி, எட்டுப்பிரதி புஸ்தகப்படியும் (24500)-க்கு குறையவில்லை) ஆதலால் இந்த (536) ச்லோகங்கன் கூட இருக்கிறதால் இதுகள் சேர்க்கப்பட்ட ச்லோகங்கள் என்பதும் ஸர்க்கங்கள் (500) என்று இருக்க (537) ஸர்க்கங்கள் யுத்தகாண்டம் உள்பட இருப்பதால், உத்தரகாண்டம் தவிற இருப்பதால், உத்தரகாண்டம் அதனால் கிடையாது, யுத்தகாண்டத்திலேயே (37) ஸர்க்கங்கள் கூடபபோய் விட்டதால் உத்தரகாண்டம் வால்மீகி செய்யவில்லை என்று ஒருகக்ஷி. ஆனால் காண்டத்தில் ஏழு என்பதுமட்டும் ஸரியாய் இருக்கிறது. ஆனால் அது வால்மீகிசெய்யவில்லை என்று கக்ஷி. சிலர் இங்கு யுக்தி சொல்லுகிறார்கள் ஆறு காண்டங்களுக்கு ஐநூறு ஸர்க்கம் என்று வைத்துக்கொள் என்கிறார்கள். இது ஒரு விதத்திலும் பொருத்தம் அல்ல. வால்மீகி அவர்வாயினால் ப்ரக்ஷிப்தம் அதிக பாடம் என்று சொல்லாதபோது இந்த கல்பனையே உதவாது, இக்க்ரந்தம் போகும் வழியைக் கவனித்தால் என்ன தெரிகிறதென்பதை கவனிப்போம். வால்மீகி முதலில் ச்லோகங்கள் கணக்கையும், பிறகு ஸர்க்கங்கள் கணக்கையும், பிறகு காண்டங்கள் கணக்கையும், சொன்னார். அதன்படி ச்லோகம் (24536) இருக்கிறது. ஸர்க்கங்கள் (537) யுத்தகாண்டம் உள்பட இருக்கிறது. உத்தரகாண்டம் 121, சிலபுஸ்தகங்களில் ப்ரக்ஷிப்தம் அதிக பாடங்கள் என்று கணக்கு தள்ளிப்போட்டு இருக்கிறார்கள். அதன்படி சிலதில் 91, சிலதில் 111, இப்படி இருக்கிறதுகள். இப்பொழுது $537 + 121 = 658$ ஸர்க்கங்கள் ஆகிறது. ச்லோகங்கள் 24536. காண்டங்களைப் பற்றி ஸம்சயம் இல்லை. இப்படி விரோதம் வருகிறதே என்று

யோசனை? உத்தரகாண்டத்தை சேர்த்துத்தான் வால்மீகி ச்லோகக்கணக்குச் சொல்லியிருக்கிறார். 24536 என்பது ஸர்க்கங்களுக்கு விரோதமாய் இருக்கிறதே என்று யுத்தகாண்டபரியந்தம் ச்லோகங்களை கூட்டிப்பார்ப்போம் என்றால் (20000) இருபதினாயிரம் ச்லோகங்கள் தான் இருக்கிறது. ஆதலால் ஆறுகாண்டங்களுக்கு ஐநூறு ஸர்க்கங்கள் என்று சொல்லும் யுக்தி ஸரியல்லை. உத்தரகாண்டம் சேர்த்தால் மொத்தத்திற்கு (536) ச்லோகங்கள் தான் கூட இருக்கிறது. ஆதலால் தவறுதல் இல்லை. இப்பொழுது விஷயத்தைக் கவனிக்க இதனாலும் உத்தரகாண்டம் சேர்த்தால் தான் (24000) ச்லோகங்கள் வரும் ஆதலாலும் உத்தரகாண்டம் இந்த கவி செய்யவில்லை என்று சொல்லமுடியாது. இப்பொழுது இக்க்ரந்தம் போகும்வழியில் ஸமாதானத்தை கவனித்தால் என்ன ஸ்தாபனம் என்றால் கதை நடந்த பிறகே இக்க்ரந்தம் செய்யப்பட்டதால் மஹர்ஷி வாக்யத்தில் தாரையாக ச்லோகங்கள் வந்துகொண்டு இருப்பதால் வந்தது (24536) தான். கணக்குக்காக ஒரு நிதானம் சொன்னது, அவ்வளவு தான். (24000) என்றால் (536) அல்லது (500) கூடவும் இருக்கலாம் குறைந்தும் இருக்கலாம் அதற்குமேலும் மீறியும் போகக்கூடாது பதினாயிரக்கணக்கில (536) ஒரு பொருட்டல்ல என்று ஸ்பஷ்டம். தவிர இந்த ஸமாதானம் ஸர்க்கங்களுக்கு அல்ல. ஏனெனில் ச்லோகங்களை வைத்து ஸர்க்கங்களும், காண்டங்களுமே தவிர ஸர்க்கங்களை வைத்து ச்லோகம் அல்ல. ஆதலால பங்தியைக்கவனிக்க ஸர்க்கங்கள் வாசிக்க ரொம்ப பெரியதாய் யிருக்கிறதென்று ஸர்க்கங்களை பிந்தினவர்கள் சிறியதாகச் செய்து இருக்கிறார்கள். வால்மீகி ஸ்வயம் வாக்யத்தில ஸஹஸ்ராணிதம் என்று இருக்கிறது. இருந்தும் அல்ல. என்று ஸர்க்கங்கள் பெரிதாய் யிருக்கிறதாலும் வாசிக்க சரமப்பட்டு சின்னதாக்கி விட்டார்கள். இதில் ஸந்தேகமே இல்லை. ஆதலால் காண்டங்களிலும், ச்லோகங்களிலும் வித்யாஸம் இல்லாதபோது ஸர்க்க வித்யாஸம் ப்ரமாணம் அல்ல இக்க்ரந்தத்திற்கு ச்லோகம் ப்ரதானமாதலால் அதை வைத்துத்தான் ஸகலமுமாதலால் ச்லோகத்தை வைத்துத்தான் ஸகல ப்ரமாணமும் செய்யவேண்டும். ஆதலால் ஸப்தகாண்டமும் வால்மீகிசெய்ததே என்று ஸித்தாந்தம்.

இக்க்ரந்தத்தில் ப்ரக்ஷிப்த ஸர்க்கங்கள், அதிகபாட ஸர்க்கங்கள் என்று சிலர் சிலவற்றை போட்டுப்பட்டு இருக்கிறதே. அந்த ஸர்க்கங்கள் ஒன்றுமே ப்ரக்ஷிப்தமும் அல்ல. அதிகபாடமும் அல்ல. எந்த கதைகளை எல்லாம் ப்ரக்ஷிப்தம் அதிகபாடம் என்று பிசகாக அச்சடித்து இருக்கிறார்களோ, அத்தனைக்கதைகளும் இக்க்ரந்தத்திற்கு ஜீவனாயிருக்க எப்படி இவர்கள் சொன்னார்கள் என்பதுதான் தெரியவில்லை. கேட்டால் ஏதாவது வ்யாக்யானத்தை காட்டுகிறார்கள். இந்த பண்டிதர்கள் சில இடங்களில் வ்யாக்யானங்களை ஒத்துக்கொள்ளச் சொன்னால் மாட்டோம் என்கிறார்கள். சில இடங்களில் வ்யாக்யானம் வேண்டுமாம். இது என்ன முறையோ தெரியவில்லை. இவர்கள் ப்ரக்ஷிப்தம் அதிகபாடம் என்று சொன்னகாரணம் உத்தரகாண்டத்தை வால்மீகி செய்யவில்லை என்று சொல்லிக்கொண்டு யுத்தகாண்டம் உள்பட உள்ள (537)-ல் (37) குறைத்து (500) ஆகவும் செய்யவேண்டும் என்று, எது பிஜமோ அதை (அதாவது ச்லோகங்களை) தள்ளிவிடுகிறார்கள் இது என்ன முறையோ. இப்படி ப்ரக்ஷிப்தம் அதிகபாடம் என்று ஸர்க்கங்களை போட்டவர்கள் அவ்வளவு பேருக்கும் இக்க்ரந்தத்தில் பரிசயம் மட்டு என்றும் ஒன்றும் ப்ரக்ஷிப்த அதிகபாடமே அல்ல என்றும் நாம் ஸ்தாபிக்கத்தயாராக இருக்கிறோம். இன்னமும் யாராவது சேர்த்துவிட்டால் என்செய்வது என்பார்கள் க்ரந்தத்தில சேர்க்கட்டுமே. பகவத் கல்யாணகுணங்கள் தானே. தவிற சேர்த்தாலும் சேர்க்கமுடியாது. எவ்வளவு சேர்த்தாலும் அது நிலைக்காது. இக்க்ரந்தப்படி ராமாயணம் நடந்து அனேக லக்ஷக்கணக்கான வருஷம் ஆகிறது. த்ரேதாயுகத்தில நடந்து பிறகு த்வாபரயுகம முடிந்து இப்பொழுது ஐயாயிரத்து நாற்பத்திமூன்று வருஷங்கள் ஆகிறது. அப்பொழுது சொன்ன க்ரந்தத்தில இதுபரியந்தம் எத்தனை ச்லோகங்கள் சேர்ந்து இருக்கிறது? இதரர்கள் சொல்லும்படி (536) என்று வைத்துக்கொள்வோம். (500-க்குமேல் 600-க்குள் என்பது ஸத்யம்) வால்மீகி அப்பொழுது செய்தது (24000) என்று சொல்லிவிட்டார். அதலால் லக்ஷக்கணக்கான வருஷங்களுக்கு (536) ச்லோகங்கள்

சேர்ந்து இருக்கிறதென்றால் அதிலும் அது எதுகளோ தெரியாது. அதிலும் தப்புகளையும் காணோம். ஸப்தகாண்டங்களிலும் ப்ரக்ஷிப்த அதிகபாடங்கள் என்றால எது பரக்ஷிப்தம், எது அதிகபாடம் யாருக்கு சொல்லயோக்யதை, இருக்கிறது? தவிர வால்மீகி செய்ததையே இவர்கள தள்ளுகிறார்களோ க்ரந்தம் செய்ய சக்தி இல்லாவிட்டாலும் தள்ளலாகுமா இக்க்ரந்தம் புண்ணியத்தை யளிக்கக்கூடியதாயிருக்க பகவத் சரிதமாயிருக்க கல்யாணகுணங்களை நாம் குறைபபதும் சலாகிப்பதும் நமது அபிப்ராயமல்ல. க்ரந்தம் போகும் மார்ககத்தை கவனித்தால் ப்ரக்ஷிப்த அதிகபாடங்களே கிடையாது என்றும் ஸகலமும் வால்மீகியே செய்ததென்றும் ஸப்தகாண்டத்தையும் வால்மீகியே செய்ததுதானென்றும் சலோகங்கள் (24536) என்றும் ஸர்க்கங்கள் இப்பொழுது உள்ளபடி மொத்தம் (658) என்றும் காண்டஙகள் ஏழு என்றும் ஸித்தாந்தம்.

இந்த ஸித்தாந்த புஸ்தகத்தில இத்தனாவது ஸர்க்கம் இத்தனாவது சலோகம் என்று ஆதாரம் காட்டியிருக்கிறோம். இந்த ஆதாரம் பட்டணம் சிந்தாதிரிபேட்டையில் இருந்து வெளிவந்ததான (1890)-ம் வருஷத்திய க்ரந்தலிபி புஸ்தகத்தையும் பல பிராசீன ஏடுகளையும் மற்றும் பலதேச புஸ்தகங்களையும் பார்த்துவிட்டு ஆதாரமாய்க் கொண்டு போடப்பட்டது. ஆதாரங்கள்முன் ஆறு காண்டங்களிலும் அனேகமாய் பூர்ணம் ஒத்து இருக்கும், உத்தரகாண்டததில் ப்ரக்ஷிப்தம் அதிகபாடங்கள் என்று போட்டு இருக்கிறார்களே அதை அந்த அந்த ஸர்க்கங்கள் சொன்ன இடத்தில் 10 அல்லது 20 ஸர்க்கங்களை கழித்துக் கொண்டாவது அல்லது கூட்டிக்கொண்டாவது பார்த்தால் ஸர்க்கம் ஸரியாகவேவரும். ஆதலால் தான் ஸர்க்கத்தையும் சலோகத்தையும் அந்த சலோக அர்த்தத்தையும் கதையையும் இடத்தையும் அங்கு அங்கு காட்டியிருக்கிறோம். ஆதலால் உத்தமர்கள் சற்று கவனிக்கவேண்டும். என்பதையும் வெளிப்படுத்துகிறோம். தவிற உத்தமர்களான ஸாதுக்களுக்கு இவருக்கு ஸ்ரீராகவன்எந்தஎந்த கட்டத்தில எவ்விதத்தில்எப்படி எப்படி அனுக்ரஹம் செய்து இருக்கிறார் என்பதை அறியும் விஷ

யத்தில் தான் ஞானம் ஏற்படுமே தவிற மற்ற விதத்தில் செல்லாது மேலும் ராகவகுணத்தில் பகவானிடத்தில் இவர் எப்படி ஈடுபடுகிறுர் என்பதை கவனிக்கவும், தாங்கள் பகவானிடத்தில், அப்படி அனுபவிக்கவும் தான் எண்ணுவார்களே வேறு மார்க்கத்தில் எண்ணமாட்டார்கள். மேலும் பரம சாந்தத்தை அவலம்பிக்கும் மஹான்கள் ராமனிடத்தில் மாத்திரை கூட குணக்குறைவு இல்லாமல் கவிஹ்ருதயத்தை ஒவ்வொரு கட்டத்திலும் வர்ணிக்கும் இக்க்ரந்தத்தை பூர்ணம் பார்த்து மேலும் ராம பக்தியில் ஈடுபட்டு அந்த ஸ்ரீ ஸீதா ராமர்களுடைய க்ருபைக்கு பாத்திரர்களாக விளங்குவார்கள் என்று நம்புகிறோம்)

---

## 5. கைகேயீதேவி தசரதருக்கு நடுபத்னியல்ல கடைசி பத்னி என்ற ஸித்தாந்தம்.

பாலகாண்டம் 15-ம் ஸர்க்கம் 19-ம் ச்லோகம் தஸ்ய பார்யாஸு திஸ்ருஷு ஹ்ரீ ஶ்ரீ கீர்த்யுபமாஸு ச । என்று அவருடைய பார்யைகள் ஹ்ரீ, தேவி, ஸ்ரீதேவி, கீர்த்திமுதலிய தேவிகளுக்கு உபமானமாய் இருப்பவர்கள் (இது தேவதைகள் வாக்யம்) (இதில் ஹ்ரீ, தேவியாக கௌஸல்யாதேவியையும் ஸ்ரீ தேவியாக சுமித்ராதேவியையும் கீர்த்திதேவியாக கைகேயீதேவியையும் உபமானம் சொல்லப்பட்டு இருக்கிறது). பாலகாண்டம் 16-ம் ஸர்க்கம் கௌஸல்யாயை நரபதி꞉ பாயஸார்தம் ததௌ ததா । அர்தாதர்தம் ததௌ சாபி ஸுமித்ராயை நராதிப꞉ । கைகேய்யை சாவஶிஷ்டார்தம் ததௌ புத்ரார்தகாரணாத் । ப்ரததௌ சாவஶிஷ்டார்தம் பாயஸஸ்யாம்ருதோபமம் । அநுசிந்த்ய ஸுமித்ராயை புநரேவ மஹீபதி꞉ । ஏவம் தாஸாம் ததௌ ராஜா பார்யாணாம் பாயஸம் ப்ருதக் । என்று வால்மீகி, தசரதன் முதலில் கௌஸல்யைக்கும், பிறகு சுமித்ரைக்கும், பிறகு கைகேயிக்கும் பாயஸம் கொடுத்ததாகச் சொல்லுகிறுர். இதுவே வரிசைக்கிரமம் என்றும் ஸ்பஷ்டம் (இது ரிஷிவாக்யம்.)

பாலகாண்டம் 77-ம் ஸர்க்கம் 11-ம் ச்லோகம் கௌஸல்யா ஸுமித்ரா ச கைகேயீ ச ஸுமத்யமா । என்று வால்மீகி இந்த

ச்லோகத்தில் கௌஸல்யை, சுமித்ரை உத்த, மத்யஸ்தானமுடைய கைகேயி என்ன, மற்ற ராஜஸதிரிகள் எலலாரும் என்று சலோகததை வாணித்ததால வரிசைக்க்ரமமாய்ச சொலலுகிறா. (இது கவிவாக்யம).

அயோதயாகாண்டததில 10-ம் ஸர்க்கம் 23-ம் ச்லோகம் [illegible] என்று கவி, அந்த கிழவரான தசரதர் பராணனைக் காட்டிலும் மேனமையாய் இருக்கிற அந்த பால்யமான அந்த பத்னியை தரையில படுததுககொண்டு இருக்க பார்த்தார் என்றார் இதில கைகேயி நல்ல பாலயம் என்றார் (இது கவிவாக்யம்) அயோத்யா காண்டம் 22-ம் ஸாக்கம் 30-ம் சலோகம் [illegible] என்று ராகவன லக்ஷ்மணனைபபார்த்து கடைசி அம்மா விடம் கோபிக்காதே என்கிறார் (இது ராமவாக்யம).

அயோத்யாகாண்டம் 52-ம் ஸாககம 61-ம் ச்லோகம் ராமன் லக்ஷ்மணனைப்பார்த்து சொலலுகிறார். [illegible] லக்ஷ்மணா! நீ ஒருகசு வந்தமைதக்கண்டால அந்த கடைசி அம்மாவான கைகேயி ராமன் காட்டுக்குச்சென்று விட்டான் இதில ஸநதேகமிலலை என்று ஸந்தோஷத்துடன் நிச சயமாய் ராஜாவிடமும ஸநதேகப் படமாட்டாள் அவரைப் பொய் சொன்னவராயும் எண்ணமாட்டாள் என்றார். (ராம வாக்யம).

அயோத்யாகாண்டம் 92-ம ஸர்க்கம் 15-ம் ச்லோகத்தில பரத்வாஜமஹரிஷியை மூவரும், மூன்று பெண்டுகளும் நமஸ கரிததார்கள். முதலில் கௌஸல்யை, பிறகு சுமித்ரை, பிறகு கைகேயி இப்படி நமஸ்கரித்தார்கள். பிறகு பரதனைப பார்த்து இவர்கள் யார் யார் என்று கேட்க பரதன் அவரைப் பார்த்து க்ரமபபடி சொல்லுகிறான் 23-ம் ச்லோகத்தில் முதலில் கௌஸலயைச சொலலி 26-ம் சலோகத்தில் லக்ஷ்மணசத்ருக் னர்களுக்கு மாதா இவள் சுமித்ரை, என்று சொல்லி பிறகு கைகேயியை [illegible]ரான்றான் என்றார் வால்மீகி (பரதவாக்யம்).

ஆரண்யகாண்டம் 2-ம் ஸர்க்கம் 20-ம் ச்லோகம். அத்யேதா னீம் ஸகாமா ஸா யா மாதா மம மத்யமா। என்று ராமன் லக்ஷ்மணனைப்பார்த்து ஏ! லக்ஷ்மணா எப்பொழுது ஸகல பூதங்களுக்கும் ஹிதபரனான நான் எவளால் வனத்திற்கு அனுப்பப்பட்டேனோ அவள் அந்த நடு அம்மாவான அவள் தன் எண்ணம் நிறைவேறினவளாகி விட்டாள் என்றார். இங்கும் நடு அம்மா என்பது (இது ராம வாக்யம்).

ஆரண்யகாண்டம் 16-ம் ஸர்க்கம் 37-ம் ச்லோகம் நதேம்பா மத்யமா தாத கர்ஹிதவ்யா கதஞ்சந। தாமேவேக்ஷ்வாகுநாதஸ்ய பரதஸ்ய கதாம் குரு। என்று லக்ஷ்மணனைப் பார்த்து நடு அம்மாவான கைகேயியை இன்னும் தூஷிக்காதே இன்னும் இக்ஷ்வாகு நாதன் பரதன் கதையைச சொல்லு கேட்போம் என்றார். நடு அம்மா கைகேயி என்றார் (இது ராம வாக்யம்).

அயோத்யாகாண்டம் 70-ம் ஸர்க்கம் 8, 9, 10-ம் ச்லோகங்கள் ஆர்யா ச தர்மநிரதா தர்மஜ்ஞா தர்மதர்சிநீ। அரோகா சாபி கௌஸல்யா மாதா ராமஸ்ய தீமத:। கச்சித்ஸுமித்ரா தர்மஜ்ஞா ஜநநீ லக்ஷ்மணஸ்ய யா। சத்ருக்நஸ்ய ச வீரஸ்ய ஸாரோகா சாபி மத்யமா। ஆத்மகாமா ஸதா சண்டீ க்ரோதநா ப்ராஜ்ஞமாநிநீ। அரோகா சாபி கைகேயீ கிமாஹ ச। என்று இதிலும் வரிசைக்ரமம் சொல்லப்படுகிறது. முதலில் கௌஸல்யை சௌக்யமா என்றும் பிறகு சுமித்ரை சௌக்யமா என்றும் பிறகு கைகேயி சௌக்யமா என்று இப்படி பரதன் கேட்கிறான் (இது பரதவாக்யம்).

யுத்தகாண்டம் 49-ம் ஸர்க்கம் 8-ம் ச்லோகம். கிந்நு வக்ஷ்யாமி கௌஸல்யாம் மாதரம் கிந்நு கைகயீம்। கதமம்பாம் ஸுமித்ராம் ச புத்ரதர்சநலாலஸாம்। என்று லக்ஷ்மணன் நாகபாசத்தால் பீடிக்கப்பட்டு இருப்பது கண்டு சொல்லுகிறார் ராமன். நான்கௌஸல்யைக்கு என்னசொல்லுவேன் கைகேயிக்கு என்னசொல்லுவேன் சுமித்ரைக்கு என்னசொல்லுவேன் என்றார் (ராமவாக்யம்).

யுத்தகாண்டம் 122-ம் ஸர்க்கம் 42-ம் ச்லோகம். ஆஸ்வாஸ்ய ஸுஹ்ருதம் தீநம் கௌஸல்யாஞ்ச யசஸ்விநீம்। கைகேயீஞ்ச

ஸுமித்ராம்ச த்ருஷ்ட்வா லக்ஷ்மணமாதரம் । என்று பரமசிவன் ராகவனைப்பார்த்து தீனஞனபரதனை ஆசுவாஸப்படுத்தி கௌஸல்யையும், கைகேயியையும், சுமித்ரையையும் பாரு என்றார் இது (பரமசிவவாக்யம்).

யுத்தகாண்டம் 131-ம் ஸர்க்கம் 43-ம் ச்லோகம் கௌஸல்யாம்ச ஸுமித்ராம்ச கைகேயீம்சாபி வாந்தயன் । என்று ராமன் கௌஸல்யையும், சுமித்ரையையும், கைகேயியையும் நமஸ்கரித்தார் என்றார் இது (வால்மீகி வாக்யம்).

உத்தரகாண்டம் 112-ம் ஸர்க்கம் 15, 16-ம் ச்லோகம் கௌஸல்யா ப்ரமுகா நாம்நா யாஸ்ஸர்வா ராஜயோஷித: । ஸுமித்ராசாபி கைகேயீ யசஸ்விநீ । கௌஸல்யை முந்தி புண்யலோகம் புறப்பட்டாள் பிறகு சுமித்ரை, கைகேயியும் அனுஸரித்தாள் என்றார். (இது வால்மீகிவாக்யம்.) இப்படிவாக்யங்கள், இதுகள் இத்தனையிலும் வால்மீகிவாக்யம் ஒன்று தான் ஸத்யம். மற்றதுகள் யார் வாக்யங்களானாலும் அங்கீகரிக்கருந்ததில்லை என்று ஸ்பஷ்டம். தவிற முன்பின் ப்ரகாரணங்களை கவனிக்கும்போது பரதன் நடுவில் பிறந்தவன். (அதாவது:—ராமன், பரதன், லக்ஷ்மண சத்ருக்னர்கள்) நடுவில் பிறந்தவனை தரித்தவர் நடு, என்று இதனுலும் பரதனுக்கு நடுவில் பிறந்தவன் மத்யம: என்று ஒருபெயரையும் குறிப்பிட்டு இருப்பதாலும் தான் கைகேயியை மத்யமா என்றதே தவிற வேறுயாது காரணமுமல்ல என்று கவி வாக்யப்படி ஸித்தாந்தம். மற்றவர்கள் எவர்கள் வாக்யங்கள் ஆனாலும் அதுகள் ப்ரமாணமாகாது. மற்றவர்கள் சொன்னதை கவி சொன்னுரே தவிற அதுகள் கவி வாக்யங்கள் அல்ல. ஆதலால் அதுகள் ப்ரமாணம் அல்ல என்றும் ஸித்தாந்தம். வால்மீகியானவர் க்ரமவரிசைப்படி குறிப்பிட்டு இருப்பதாலும் வரிசை மட்டும் அல்ல. ஆதாரத்துடன் கௌஸல்யையை க்ரியையாயும் கைகேயியை நல்ல பால்யமாயும் சுமித்ரையையும் வயஸானவளாயும் காட்டியிருப்பதாலும், கைகேயியை கீர்த்தியாகிற தேவதைக்கு உபமானம் கொடுத்து குறிப்பிட்டு இருப்பதாலும் வால்மீகி வாக்யத்திற்கே முதல் கௌரவம் ஆதலாலும், சிலர் 353

பேருக்கு நடு பத்னி கைகேயி என்பதும் ஒருவிதத்திலும் அங்கிகரிக்கத்தகுந்ததில்லை என்றும் இந்த மூவர்கள் தான் பட்டமஹிஷிகளே தவிர மற்ற 350பேர்களும் பட்டமஹிஷிகள் அல்ல ஆதலாலும் அம்மூவரைப்பற்றி பேசும்போது இந்த 350 பேரை கலந்துபேசுவது உசிதம் அல்ல ஆதலாலும் ஸர்வமும் தெரிந்து வால்மீகி சொன்னபடி கௌஸல்யை மூத்தவள், இரண்டாவது சுமித்ரை, மூன்றாவதுதான் கைகேயி என்றும் ஸித்தாந்தம்.

---

## 6. அவதார நிர்ணயம்.

ஸாக்ஷாத் பகவான் வைகுண்டத்தில் விளங்கும் காலத்தில் பூலோகத்தில் அயோத்தியை பரிபாலிக்கும் தசரத சக்ரவர்த்தி, பிள்ளை தனக்கு இல்லாமல் இருந்ததால் கவலையடைந்து அதற்காக புத்ர காமேஷ்டியாகத்தை ஸரயூ நதிக்கரையில் செய்யும்போது அந்த யாகத்தில் ஹவிர்ப்பாகம் வாங்கவந்த தேவதைகள் அங்கு யாகசாலையின் ஆகாசவீதியில் தங்களுடன் இருக்கும் ப்ரம்மதேவனைப்பார்த்து ராவணவதத்திற்கு உபாயத்தைச் செய்யவேண்டும் என்று ப்ரார்த்திக்கும்போது ஏற்கனவே இந்திரனிடம் ஸமயம் வரட்டும் நாமாகவந்து ரக்ஷிக்கிறோம். என்று சொல்லியிருக்கும் விஷ்ணுவானவர் வெகுகாலமாகியும் தர்சனம் கொடுக்காததால் கவலையில ப்ரம்மதேவனை ப்ரார்த்திக்கும்போது அந்தஸமயம் தர்சனம்கொடுத்த விஷ்ணுவைபரர்த்து தேவதைகள் ஏ! ப்ரபோ பாலகாண்டம் 15-ம்ஸர்க்கம் 20-ம்ச்லோகம் விஷ்ணோ புத்ரத்வமாகச்ச க்ருத்வாத்மாநம் சதுர்விதம் । என்று ஏ! விஷ்ணுவே, நீர் உம்மை நாலு பாகம் செய்துகொள்ளும் என்றபடி அவரும் அங்கீகரித்து அப்படியே என்று தன்னை நாலுபாகம் செய்துகொண்டார். பாலகாண்டம் 15-ம் ஸர்க்கம் 30-ம் ச்லோகம். தத: பத்மபலாசாக்ஷ: க்ருத்வாத்மாநம் சதுர்விதம் । என்று இப்படி செய்துகொண்டு பிறகு பிறந்தார். இதற்கு பிறகு தான் பாயஸபாகம். தேவர்களால் ப்ரார்த்திக்கப்பட்ட பிறகு பகவான் மறைந்ததும் யாகம் நடக்கும் யாகசாலையில் ஜ்வலிக்கும் அக்னிகுண்டத்தில் இருந்து உக்ரமான ரூபத்துடன் வந்தது ஒருபூதம். அது அக்னிபகவானுமல்ல. விஷ்ணு

வும் அல்ல. வந்தது ப்ரம்மதேவ ஸம்பந்தமான மனுஷ்யனே. அந்த பூதத்தை விஷ்ணு என்றும் அக்னி என்றும் சொல்லுவது பலவிதத்திலும் முன்பின் அறிந்து வர்ணிக்கும் கவி வாக்யத்தால் பிசகு என்று ஸித்தாந்தம். மேலும் ஸர்வமும் தெரிந்து வர்ணிக்கும் வால்மீகிக்கு பூதம்யார் என்றுதெரியாதா? விஷ்ணு பூதமாகவந்து இருந்தால் விஷ்ணு பூதமாய் வந்தது என்று சொல்லத் தெரியவில்லையா அக்னிபகவான் பூதமாக வந்து இருந்தால் அக்னிபகவான் பூதமாக வந்தார் என்று சொல்லத் தெரியாதா எபபொழுது சொல்ல இல்லையோ அதனால் வந்தது பூதமே பூதமே தவிற வந்தது அக்னிபகவானுமல்ல. விஷ்ணுவுமல்ல. என்பது ப்ரத்யக்ஷம். தவிற வந்தபூதம் தசரதனைப் பார்த்து நான் ப்ரம்மதேவ ஸம்பந்தமான மனுஷ்யன் என்று சொன்னதே தவிற தான் அக்னிவான், அல்லது விஷ்ணு என்று சொல்லவில்லை அந்த பூதம் பொய்ச் சொன்னதா. இப்படி சொன்னதானால் இதனால என்னபலன். தவிற வால்மீகி, வந்தது பூதமாதலால பூதம் என்றே குறிப்பிட்டாராதலால மற்ற ஸகலமும் இக்காரந்தபபடி பிசகு என்றே ஸித்தாந்தம். தவிற யுத்தகாண்டத்தில ஸீதை அக்னிபரவேசம் செய்த பிறகு அவளை அக்னிபகவான் எடுத்துக்கொண்டு வந்துவிட்டார் என்று அங்கு சொல்லத்தெரிந்த வால்மீகிக்கு இங்கு அக்னிபகவானுனால் அக்னிபகவான் தான் பாயஸம் கொண்டுவந்தார் என்று சொல்லத்தெரியவில்லையா. க்ரந்தத்தின்படி வால்மீகி வாக்யத்தில் கவனித்தால பாயஸம் கொண்டுவந்தது ப்ரம்மதேவ ஸம்பந்தமான பூதமே தவிற அக்னிபகவானுமல்ல. விஷ்ணுவுமல்ல. என்று ஸித்தாந்தம். பூதத்தால் கொண்டு வந்து கொடுக்கப் பட்ட பாயஸத்தை தசரதர் மூவருக்கும பாகம்செய்து கொடுத்தார் எப்படியெனில அதாவது:—பாலகாண்டம் 16-ம் ஸர்க்கம் 27 முதல் 29-ம் ச்லோகம வரை கௌஸல்யாயை நரபதி: பாயஸார்த்தம் ததௌ ததா। அர்த்தாதர்த்தம் ததௌ சாபி ஸுமித்ராயை நராதிப:। கைகேய்யை சாவசிஷ்டார்த்தம் பாயஸஸ்யாம்ருதோபமம்। அநுசிந்த்ய ஸுமித்ராயை புநரேவ மஹாமதி: ஏவம் தாஸாம் ததௌ ராஜா பார்யாணாம் பாயஸம்

வார்த்தம் என்று கௌஸல்யைக்கு மொத்தத்தில் ஸரிபாதி பாய ஸத்தையும், பிறகு பாக்கி இருக்கும் பாதியில் பாதியை இரண்டாவது பத்னி ஸுமித்ரைக்கும், பாக்கி இருக்கும் மொத்தத்தில் கால்பாகத்தில் பாதியான அரைக்கால் பாகத்தை, கைகேயிக்கும் மறுபடி திரும்பியோசித்து மிசசமான அரைக்காலை சுமித்ரை கரத்தில் கொடுத்தார். (யாருக்கு கொடுபபோம் என்று எண்ணினார். சுமித்ரைக்கு என்று மனதில்பட உடனே கொடுத்து விட்டார். வேறு எந்த யோசனையுமே கிடையாது) எப்படி பாய ஸபாகமோ அபபடியே அவதாரம், அதை வர்ணிக்கிறார் வால்மீகி. பாலகாண்டம் 18-ம் ஸர்க்கம் 11-ம் ச்லோகம முதல் 13 வரை விஷ்ணோரர்த்தம் மஹாபாகம் புத்ரமைக்ஷ்வாகுவர்த்தனம் । கௌஸல்யா ஶுஶுபே தேன புத்ரேணாமிததேஜஸா । யதா வரேண தேவானாம் அதிதிர்வஜ்ரபாணினா । பரதோ நாம கைகேய்யாம் ஜஜ்ஞே ஸத்யபராக்ரம: ஸாக்ஷாத்விஷ்ணோஶ்சதுர்பாக: ஸர்வை: ஸமுதிதோ குணை: । அத லக்ஷ்மணஶத்ருக்நௌ ஸுமித்ராஜனயத்ஸுதௌ । வீரௌ ஸர்வாஸ்த்ரகுஶலௌ விஷ்ணோரர்த்தஸமன்விதௌ । என்று விஷ்ணுவினுடைய ஸரிபாதி பாகத்துடன் இக்ஷ்வாகு வம்சத்தை விருத்திபண்ணிவிக்கும் குழந்தையை கௌஸல்யைபெற்று இந்திரனால் அதிதி விளங்கினதுபோல் விளங்கினாள். வால்மீகி வாக்யரீதியாய் சித்திரைமாஸத்தில் தான் ராமஜனனம். சிலர் சைத்ரமாஸம் வந்துவிட்டது. ஆதலால் பங்குனி மாஸத்தில் தான் ஜனனம். என்று சிலர் அபிப் பிராயம். சைத்ரம் என்பது. ராமாயணத்தில் சித்திரை மாஸத்திற்கே முக்கியமாய் பரயோகம் இருக்கிறது. இந்த ராமாயணம் ஜோதிஸ்சாஸ்திராதிகளுக்கு கட்டுப்படாதது. ஸர்வ சாஸ்திரங்களும் ஸர்வவேதங்களும் ராமாயணத்திற்கு கட்டுப் படவேண்டுமே தவிற இது ஒன்றும் கட்டுப்படாதது. அததற்கு அததுவே ப்ரமாணம். ஆதலால் மற்றொன்றுக்கு விரோதமாய் இருக்கிறதே என்று இழுத்து அர்த்தம் செய்யவேகூடாது. மற்றொரு இடத்தில் விபரீதகாலத்தில் சூரியன் நக்ஷத்ரமாலையுடன் விளங்கும் 'என்று ஸ்பஷ்டமாய் வால்மீகி வர்ணித்து இருக்க இதை விபரீதமாக வ்யாக்யாதா சொல்கிறார். பகலில் சூரியனைச்

சுற்றி நக்ஷத்ரமாலை இருக்காது. அதாவது பகலுக்கு விபரீதம் ராத்ரி. பூர்ண சந்திரனுக்கு சூர்யன் என்று ஜோதிஸ்சாஸ்திரம் ராத்திரியில் நக்ஷத்ரமாலையுடன் பூர்ண சந்திரன் விளங்கினுலெப் படியோ என்ருர். இது ஸரியல்ல. பட்டப்பகலில விபரீதகாலத் தில் நக்ஷத்ரமாலையுடன் சூரியன் விளங்கும் என்றே கவி யுத்த கிஷ்கிந்தா, ஆரண்யகாண்டங்களிலும் ஸ்தாபிபபதாலும் கவி வாக்யமேஸரி என்று ஸித்தாந்தம. பரம்மா உமதுவாக்கில் தப்பு வராது என்று குறிப்பிட்டு இருக்க இந்த ஜோதிஸ்சாஸ்திரத்தை கொண்டு ஸமாதானம் சொலவது சுத்தப்பிசகு என்று ஸித் தாந்தம். மேலும் ஆகாசத்தில் முன் சொன்னபடி இருப் கதைக் கண்ணுரக்கண்டு வர்ணிப்பதாய் வால்மீகி குறிப்பிடுவ தால் இக்க்ரந்தம் போகும் மார்க்கத்தில தான் இதற்கு அர்த்தம் சொல்ல வேண்டும். என்றும் ஸித்தாந்தம். தவிற கவி வாக்யரீ தியாய் ராகவனுக்கு ஐந்துகிரஹங்கள் உச்சமென்பதும் உண்மை என்றும் ஸித்தாந்தம். பிறகு கைகேயியானவள் திருடமான பராக்ரமத்துடன் கூடினவனையும் ஸாக்ஷாத் விஷ்ணுவில் நாலில ஒரு பாகத்துடன் கூடினவனையும் ஸகல குணங்களுடன் கூடின பிள்ளையைப்பெற்ருள். பிறகு சுமித்ராதேவியானவள் ஸகல அஸ்திரங்களை அறியப் போகிறவர்களாயும் விஷ்ணுவினுடைய காலும் அரைக்காலுமான (சுயடீஉஸஜஙிதஎ) என்பது இங்கு பாதிக்கு பெயர் அல்ல. காலே அரைககாலுக்கே பெயர் இது ரிஷியின் சூக்ஷ்ம ப்ரயோகம். ஏனெனில் அதை கவனிப் போம். தேவர்கள் அபிப்ராயப்படி அவதாரத்தை முன்னிட்டு பாயஸம். பூலோக அபிப்ராயப்படி பாயஸத்தை முன்னிட்டு அவதாரம். ஆதலால் பாயஸ பாகப்படித் தான் அவதார பாகம் சொல்லவேண்டும். பகவானும் தன்னை ஏற்கனவே நாலுபாகம் செய்துக கொண்டவர் பாயஸத்தை எப்படி ராஜா பாகம் செய்தாரோ அப்படியே பிறக்கிருர். இதற்கு ஆதாரம் பாயஸத்தில் ஸரிபாதி கௌஸல்யை. ஆதலால் பாதி விஷ்ணுபலம் முதல் குழந்தை ஸ்ரீராமன். பிறகு கால்பங்கு பாய ஸம் சுமித்ரை. ஆதலால் முதலில் பிறந்த குழந்தை லக்ஷ்மணன் கால் விஷ்ணுபலம் (பாயஸம் பெற்றுக்கொண்டவள் இரண்டாவ

தாக சுமித்ரை, பிள்ளையைப்பெற்றது மூன்ருவது. அப்படி பாய ஸம் பெற்றுக்கொண்டது கைகேயி மூன்ருவது பிள்ளையைப் பெற்றது, இரண்டாவது ) (உலகத்தில் இரண்டாவதாக பாய ஸம் சாப்பிட்டவள் கைகேயி, ஆதலால் இரண்டாவதாக பிள்ளை யைப்பெற்ருள். என்று உலகத்தில் சொல்லுகிருர்கள். அது ஸரியல்ல. வால்மீகி சொல்லாதபோது அது பிசகு, பிரஸவிப் பது த்ரேகத்தின் ச்ரமத்தை பொறுத்தது என்கிருர் வால்மீகி.) பிறகு கைகேயி அரைக்கால் பங்கு பாயஸம் உடையவள். அப் படியே மொத்தம் விஷ்ணுவுக்கு எத்தனை பலமோ அதில் ஸரி பாதி முதல் குழந்தைபோக பாக்கி இருக்கிற அந்த விஷ்ணு பலம் பாதியில் நாலில் ஒன்று, அரைக்கால் பலத்துடன் பரத ஜனனம். தேவதைகள் ஆதியில் விஷ்ணுவைப்பார்த்து நீர் உமது சரீரத்தை நாலுபாகம் செய்துக்கொண்டு பிறக்கவேண்டும் என்றதால் விஷ்ணு சரீரத்தில் இருந்தே அவரே நாலுபாகமாய் பிறக்கவேண்டுமே தவிற ஸாக்ஷாத்விஷ்ணோர்பாகம் பிறந்து இருக்கிற ராமனுகிற விஷ்ணுவில் பரதஜனனம் என்று சொல் லும் வ்யாக்யானம் ஸரியல்ல என்று ஸ்பஷ்டம். மேலும் பரத னுக்கு, பிறந்து இருக்கிற ராமனுகிற (விஷ்ணுவில்) பாகம்சொன் ஞல் தேவர்கள் உம்மை நாலாக செய்துக்கொள்ளும் என்று சொல்லியிருக்க பரதனுக்கு விஷ்ணுரூபத்தில் சொல்லுவதா! பிறந்து இருக்கிற ராமனிடம் சொல்லுகிறதா? அப்பொழுது பின்பிறந்த குழந்தைகளுக்கும் பிறந்து இருக்கிற ராமனில் என்று ஏன் சொல கூடாது? லக்ஷ்மண சத்ருக்னர்களுக்கு ப்ரத் யக்ஷ விஷ்ணுவாகிற ராமனில் பாதி என்று ஒரு அர்த்தமும் சிலர் சொல்லுகிருர்கள். காரணம் ஸாக்ஷாத்விஷ்ணோர்பாகம் என்று பரதனுக்கு சொன்னதால் மொத்தம் விஷ்ணுவுக்கு எத் தனை பலமோ அதில் கால்பாகம் என்றும் வைத்துக்கொண்டு லக்ஷ்மண சத்ருக்னர்களுக்கு ராமனுகிற விஷ்ணு பாதியாதலால் அதில் பாதி லக்ஷ்மண சத்ருக்னர்கள் அதாவது இருவரும் கூடி மொத்தத்தில் கால்பாகம். ஒவ்வொருவரும் அரைக்கால் என்று இப்படி ஒரு அர்த்தம் சொல்லுகிருர்கள். காரணம் பரதனைக் கால்பாகமாகச் சொல்லவேண்டும் என்ற எண்ணம். இது பிசகு

ஏனெனில் தேவதைகள் விஷ்ணுவை அவரையே நாலுபாகம் செய்துகொள்ள வேண்டும் என்று கேட்டதால் ஸர்வக்ஞரான அவரும் தன்னை பாயஸம் எப்படி, நாலுபாகம் செய்யப்படப் போகிறதோ அப்படி கூரஸ்வாத்மாநம் சதுர்விதம்! என்று செய் துக்கொண்டு அப்படியே பிறந்ததாய் கவி ப்ரயோகித்ததால் மொத்தத்தில் பரதன் கால்பாகம் என்பதும் லக்ஷ்மண சத்ருக் னர்கள் ராமனில் பாதி அதாவது அதாவது ஒவ்வொரு வரும் அரைக்கால் என்பதும் பிசகு என்றும் லக்ஷ்மண சத்ருக் னர்கள் ராமனில் கால்பாகம் என்பதும் பிசகு என்றும ஸிதாந் தம். தவிர ஸாக்ஷாத்விஷ்ணோ: என்பது ராம ரூபத்திறகா! விஷ்ணு ரூபத்திற்கா! விஷ்ணு நாலாகப் பிறந்தபிறகு வால்மீகி ராமனும் காவது மற்ற யாருக்காவது விஷ்ணு என்று சொல்லியிருக்கிறார ஒரு இடத்திலாவது வைகுண்டம் சென்ற இடம் தவிற வேறு எங்கும் தெரிவிக்கவில்லையே. ஆதலால் அது உசிதம் அல்ல என்று ஸ்பஷ்டம். ஆதலால் ஸாக்ஷாத்விஷ்ணோ: என்பது பாக்கி இருக்கும் பாதியான ஆதிவிஷ்ணு என்பதை குறிப்பதற்கே காட்டியதால் பிறந்து இருக்கும் ராமனில் (விஷ்ணுவில) என் பது உசிதமல்ல. காரணம் கவி ராமன் பிறந்தபிறகு அவரை ஒரு இடத்திலும் விஷ்ணு என்று ப்ரயோகிக்க இல்லை. பிறகு முன் சொன்னபடி மூன்றாவது பத்னியான சுமித்ரையானவள் தான் பெற்ற இரண்டு குழந்தைகளில் முதல் குழந்தையை கால்பலத் திலும், இர[illegible]ாவ[illegible] குழந்தையை, அரைக்கால்பங்கு பாயஸம் பிந்தி பெற்றுகொண[illegible]டதால், அரைக்கால்பங்கு பலமுள்ளதாயும் பெற்றாள். தவிற [illegible]த்தரகாண்டத்தில் லக்ஷ்மணன் புண்யலோகம் செல்லும் கட்டமான 117-ம் ஸர்க்கம் 25-ம் ச்லோகத்தில் ததஃ விஷ்ணோர்சதுர்பாகமாகதம் ஸுரஸத்தமாஃ! த்ருஷ்ட்வா ப்ரமுதிதா ஸர்வே பூஜயந்தி ஸ்ம ராகவம்! என்று லக்ஷ்மணன் கால்பாகம் விஷ்ணு பலமுடையவர் வருவது கண்டு தேவர்கள் ஸந்தோஷித் தார்கள் என்று இரு[illegible]பதால் லக்ஷ்மணர் கால்பாகம் என்பது ஸ்பஷ்டம் சத்ருக்னன் அரைக்கால் என்பதும் ஸ்பஷ்டம். ஆத லால் ஸுமித்ரா என்று லக்ஷ்மண சத்ருக்னர்களை சேர்த்துச் சொன்ன இடத்தில் காலே அரைக்கால் பாகத்திற்கே என்பது

ஸ்பஷ்டம். ஒரு பாயஸத்தில் இருந்தே எப்படி மூவருக்கும் பாகமோ. அப்படியே ஓரே விஷ்ணுவில் இருந்து தான் நால்வருக்கும் பாகம் சொல்லவேண்டும் என்பதும் தேவர்கள் கேட்டபடியும் இதுவே, நால்வரின் அவதாரநிர்ணயம் என்று ஸித்தாந்தம். ஸகலத்திற்கும நாரத வால்மீகி வாக்யமே ப்ரமாணமாதலால் அதன்படி இதுதான ஸத்யம் என்று ஸித்தாந்தம்.

ஸமீபத்தில் மைலாப்பூரில் லாஜர்னல் பிரஸ்ஸில் இருந்து வெளியான ராமாயண மூலம் மாத்திரம் அச்சாயிருக்கும் அந்த புஸ்தகத்தில் வீரளஸ்வ'–ரஜூ கூ–பறுளவிஷோரய–ரவஜஙி_தள । என்று இப்படி சலோகங்கள எத்தனையோ எடுக்கப்பட்டு இருக்கிறது. கேட்டால் எல்லா வயாக்யானத்திற்கும் முந்தின வ்யாக்யானம் கதகம். அதை அனுஸரித்தோம் என்றும் அதில் கையெழுத்திட்டிருக்கும் பண்டிதர்கள் சொல்லுகிறார்கள். அதில், பல புஸ்தகங்களை வைத்துக்கொண்டு அச்சடித்து இருப்பதாக சொல்லுகிறார்கள். எது எப்படியிருந்தாலும் கணக்கில் இருந்து ஸ்லோகங்களை எடுக்க இவர்கள் யாருக்காவது சக்தியுண்டா! யோக்யதையுண்டா! இவர்களில் எல்லாரிடமும் நாம் நேறிடபேசியிருப்பதால் அதில் கையெழுத்திட்டு இருக்கும் அந்நால்வர்கள் யாரார் என்றால் அண்ணாமலை யூனிவர்ஸிட்டி வித்யாவாசஸ்பதி ப்ரம்மஸ்ரீ குப்புஸ்வாமி சாஸ்திரிகள், ஸித்தியடைந்த ப்ரம்மஸ்ரீ மஹாமஹோபாத்யாய கருங்குளம் கிருஷ்ணசாஸ்திரிகள், ரிடையேட் ப்ரஸிடென்ஸி காலேஜ பண்டிட் ம்பகதூர் ப்ரம்மஸ்ரீ பத்மநாப சாஸ்திரிகள், இப்பொழுது மைலாப்பூர ஸமஸ்கிருத கலாசாலை பிரின்ஸ்பாலாக இருக்கும் பக்ஷிதீர்த்தம் ப்ரம்மஸ்ரீ ராமசசந்திரதீக்ஷிதர். இந்நால்வரில் ஒருவருக்கும் ஸ்ரீமத் ராமாயணத்தில் திருடமான ப்ரக்ஞையும் கிடையாது என்பதை நாம் அனுபவத்தில் நேரிட தெரிந்துகொண்டு இருக்கிறோம். ஆனால் அவர்கள் நால்வரும் மற்ற சாஸ்திரங்களில் மஹாவித்வான்களே. அந்த புஸ்தகத்தில பலசலோகங்கள் எடுபட்டு இருப்பதை கவனிக்காமல இப்பொழுது விளங்கும் கும்பகோணம் மடாதிபதிகளும் அதில ஸ்ரீமுகம் எழுதியிருக்கிறார்கள். விஷயததைக கவனித்தால, நாலு வித்வான்கள்,

வாசித்தவர்கள் கேட்கிறார்கள். ஸ்ரீராமாயணத்திற்கு ஸ்ரீமுகம் இருக்கட்டும் புண்யசரிதம் என்று அவர்கள் எழுதினதாக இருக்கவேண்டுமே தவிற க்ரந்தத்தை முழுவதும் கண்டு இருந்தால் ஒருக்காலும் எழுதவே மாட்டார்கள் என்பது ஸத்யமே. இதனால என்பேரில கோபிப்பதில உபயோகம் இல்லை. எடுக்கப் பட்ட சலோகங்கள் முழுமையும் நாம் கணக்கில் சேர்ந்தவை என்று நிரூபிக்கத் தயாராக இருக்கிறோம். இப்பொழுது நாம் எழுதி இருப்பதற்கு பதில எழுதி கண்டிக்க இந்த லாஜர்னல் பிரஸில ராமாயண புஸ்தகத்தை போட்ட பண்டிதர்களும் மற்ற அனேகரும் ஆரம்பிக்கலாம். பதில் பத்திரிகைளில் எழுதுவதும், இக்க்ரந்தத்தில் பரிசயம் இல்லாமல்அனுவச்யமான தூஷணைகளை செய்யவும் வேண்டியதில்லை. நாம் சொலலுவதை தடுக்க யோக்யதை இருக்கும் பக்ஷத்தில் ஸ்ரீமத் ராமாயணத்தில் திருடபரிசயம் உளளவர்கள் என்று சொல்லிக்கொள்ளுபவர்கள் மற்றொரு இடத்தில் கொடுத்து இருக்கும் முறையில் ஸபையில் நம்மை ஜயித்து பிறகு பத்திரிகைகளில் பதில் எழுதுவதை ஆரம்பிக்கலாம் என்று தெரிவித்துக் கொள்ளுகிறோம். நமக்கு பூர்ணம் ராமானுக்ரஹம் இருப்பதால் நம்மை மற்ற எவராலும் மூலரீதியாய் ஜெயிக்கவும் முடியாது. நமது ஸித்தாந்தங்களில் எதையும் பிசகு என்று சொல்லவும் முடியாதென்றும் ஸ்தாபிக்கிறோம். உத்தமர்களை மூலப்படி க்ரந்தத்தை நன்றாய் பரிசீலனை செய்யுமாறு தெரிவித்துக் கொள்ளுகிறோம், நிற்க, வ்யாக்யானம் முந்தியா! மூலம் முந்தியா! கதகர் எத்தனையோ இடத்தில் பொருத்தமில்லாமல் வ்யாக்யானம் செய்து இருக்கிறார். ஆதலால் ஸகல ஜனங்களுக்கும் யாம் தெரிவிப்பது யாதெனில் ச்லோகங்கள் எடுப்பட்டு இருக்கும் அப்புஸ்தகம் பாராயணத்திற்கு அனர்ஹம் என்றும் அதைவைத்துக்கொண்டு மற்றொருவரிடத்தில் ஆதாரங்கள் காட்டமுடியாதென்றும் இதன் மூலம் தெரிவிக்கிறோம். மேலும் கும்பகோணம் மத்வவிலாஸ் எடிஷனில், சேர்க்கடபட்டது என்று அவர்களுக்கு பட்டதை அந்த ச்லோகங்களுக்கு மட்டில் மத்தியில் ப்ராக்கெட் போட்டார்கள். மேல் சொன்னவர்களோ ச்லோகங்களையே மற்றவைகளோடு

ஸம்பந்தம் அற்று அதை எடுத்து கீழே போட்டார்கள். கீழே போட்டகாரணம் என்ன! இன்னம் கொஞ்சநாள்போனால் மற்றும் சிலர், முந்திய பண்டிதர்கள் அதை ஒதுக்கிவிட்டார்கள். அது கிடையாது என்பார்கள். ஆதலால் இது உசிதமல்ல என்பதை இது பல வித்வான்களுடைய அபிப்ராயமாய் இருப்பதாலும் மூலத்துடன் முக்யமாய் இருக்கவேண்டிய ச்லோகங்கள் இல்லாதிருப்பதாலும்(லோகோபவாதத்திற்கு ராமன் பயப்பட்டபடி ராமன் வாக்யத்தால்) இந்தலோகம் அந்த புஸ்தகத்தை அங்கீகரிக்க இல்லை என்பதை வெளிப்படுத்துகிறோம்.

---

## 7. எந்த எந்த விதத்தில் புத்ரோத்ஸவம் ஏற்படும் என்றும் ஜனனத்தில் எத்தனைவிதம் ஏற்பட்டு இருக்கிறது என்றும் ஸித்தாந்தம்.

1. பாயஸத்தில் இருந்து ஜனனம். 2. பூமியில் இருந்து ஜனனம். 3. கேவலம் வீர்யத்தால் மட்டில் ஸ்தானம் இல்லாமல் ஜனனம். 4. மனவலினால் ஜனனம். 5. கண்பார்வையினால் ஜனனம். 6. சொல்லான ஆசீர்வாதத்தால் ஜனனம். 7. வாக்கினின்றும் ஜனனம். 8. கொட்டாவியினின்றும் ஜனனம். ஆகாசத்தினின்றும் ஜனனம். 10. பாற்கடலினின்றும் ஜனனம். 11. கர்ப்ப, தும்பத்தினின்றும் ஜனனம். 12. கும்பத்தினின்றும் ஜனனம். 13. கோபத்தினின்றும் ஜனனம். 14. மந்திரத்தினின்றும் ஜனனம். 15. ஸம்பந்தத்தால் கர்ப்பம்தரித்து ஜனனம். 16. ஸ்பர்சனத்தினால் ஜனனம். 17. கண் ஜலத்தினின்றும் ஜனனம். இப்படி இவ்வளவு விதத்திலும் புத்ரோத்ஸவமும், ஜனனமும் ஸத்யம். இவ்வளவு தினுஸு ஜனனத்தையும் அங்கீகரிக்க வேண்டுமானால், இருக்காது என்பவன் இங்கு யார் உண்டு பண்ணினார்கள் என்று சொல்லப்பட்டதோ அவர்களைப்போல் அனேககாலம் தபஸ்செய்து நியமத்தில் இருந்து ஆசாரத்திலும் இருந்து காயக்க்லேசம் செய்து தன்னையறிந்து ப்ரம்மவிசாரம் செய்து லோகம், மித்யை, என்பதை தன் அனுபவத்தால் அறிந்து, ஸ்வகுலாசார முறையிலும், ஸ்வதாமத்

திலுமிருந்தால் இத்தனை திஹுவிலும் ஜனனம் உண்டாகும் என்பன். அந்த அந்த தன்மையில் இருந்தால் எல்லாம் உண்டுபெண்ணலாம் ஆதலால் ஒன்றும் விசித்ரம் இல்லை என்றும் ஸித்தாந்தம். இது அனுபவித்த க்ரந்தமாதலால் அனுபவ க்ரந்தத்தை, தான் அனுபவித்தால் தான் அங்கீகரிப்பானே தவிற இல்லாவிட்டால் எவ்வளவு வாய்ச் சொல்லும் உபயோகப்படாது. ஏனெனில் அனுபவித்ததை வாய்ச் சொல்லில் சொல்ல வராததாதலால் அனுபவித்தால் தான் தெரியும் என்பது ப்ரத்யக்ஷம். இக்க்ரந்தத்தை எழுதின கவி இக்க்ரந்தம் மற்றொருவனுடைய மூளைக்கு ஸரியாய்இருக்க வேண்டுமே, காலத்தை அனுஸரித்து இருக்க வேண்டுமே, பொது அறிவுக்கு ஒத்து இருக்கவேண்டுமே என்று அதற்காக இவர், வால்மீகி க்ரந்தம் எழுதவில்லை. இந்தசரித்ரம் ஸாக்ஷாத் பரமாத்மாவுடைய சரிதம். அந்த பகவான் மனுஷ்யனாக விளங்கினதும் அவருடைய கல்யாண குணங்களை அவர் செய்த காரியங்களை வர்ணிக்கும் சரிதம். இது ஸர்வபாபத்தை போக்கக்கூடியது, பரிசுத்தமான பக்தர்கள் இஷ்டத்தை பூர்த்தி செய்விக்கக்கூடியது. (இதுவும் அனுபவித்தால் தான் தெரியும்.) ஆதலால் பக்தியைக் கொள்ளப்பட்டவனுக்கு அவ்விஷயத்தை அறியப்பட்டவனுக்கு பரமஸாதகமாயும் இகலோக வைபோகத்தையும் பிறகு சதுர்வித பல புருஷார்த்தத்தையும் அளிக்கக்கூடியதாதலால் ஸர்வஜீவராசிகளும் கடைத்தேறும் பொருட்டு செய்யபபட்டதாதலால் பக்தர்கள் இக்க்ரந்தத்தை பக்தியுடன் படித்தால் அனுபவித்தால் ஸகலமும் ஸத்யம் என்றே தெரியும் என்றும் ஸித்தாந்தம்.

1. **பாயஸத்தில் இருந்து ஜனனம்:—** புமானுடைய ஸம்பந்தமன்னியில் பாயஸத்தால் கர்ப்பம் ஏற்பட்டு புத்ரோத்ஸம். ஸ்ரீராமாதிகள் நால்வரும் ஜனனம். பாலகாண்டம் 16-ம் ஸர்க்கம் 31-ம் ச்லோகம் ததஸ்து தா: ப்ராஸ்ய தமுத்தமஸ்த்ரியோ மஹீபதேருத்தமபாயஸம் ப்ருதக் । ஹுதாஸநாதித்யஸமாந தேஜஸோऽசிரேண கர்பாந் ப்ரதிபேதிரே ததா । என்று ராஜனிடத்தினின்று உத்தம பாயஸத்தையடைந்து கர்ப்பத்தினல் உத்

தம தேஜஸ்ஸை உடையவர்களாய்க் கொண்டு விளங்கினார்கள் என்றதால் பாயஸத்தால் ஜனனம் என்பது ஸ்பஷ்டம்.

2. பூமியில் இருந்து ஜனனம் :— அயோத்யாகாண்டம் 118-ம் ஸர்க்கம் 28-ம் ச்லோகம் ஃஹஂ கிமொ ஹ்நதா வி ஷவா ஜ மதீஂ நூவமெதஹுாதா । என்று ஸீதை அநுஸூயா தேவியைப்பார்த்து ராஜபுத்ரியான நான் பூமியை பேதித்துக்கொண்டு வெளிவந்தேன் என்றாள். (இது ஸீதாவாக்யம்) பாலகாண்டம் 66-ம் ஸர்க்கம் 14-ம் ச்லோகம் ஹூ தமாஉதிதாஸா தவ வயூஉதஉஉாஜா । என்று பூமியில் இருந்து வெளிவந்த அவள் விருத்தியடைந்தாள் என்றார் ஜனகன். இதிலிருந்து பூமியில் இருந்து ஜனனம் என்பதும் ஸ்பஷ்டம். இவளும் ஃயொநிஜெ என்றும் யோநியில் உண்டாகாதவள் என்றும் குறிப்பிடப்பட்டு இருக்கிறது.

3. கேவலம் வீர்யத்தால் மட்டில் ஸ்தானம் இல்லாமல் ஜனனம் :— உத்தரகாண்டம் 43-ம் ஸர்க்கம் 35-ம் ச்லோகம் ததஹுாவாநஃவதிஂ ஷாஷஃவெமுபாஙிநஂ । வாமெஷுவதிதஂ ஸீஜஂவாஞ்நாஉவெஹ்வஹ । அந்தஸ்திரீ பலசாலியான வாலியை உண்டுபண்ணினாள். இந்திரனுடைய வீர்யமானது அந்த பெண்ணினுடைய தலைமயிர்களில் விழுந்துவிட அங்கிருந்து வாலி உண்டானான். அதேஸர்க்கம் 36-ம் ச்லோகம் ஸீஜஂ தஷிக்ஷஂ ஸ்ரீவாயாஂ வியாநஉநு வதிஉநா । ஸ்ரீவாயாஂ வதிதெஸீஜெ ஸாஸ்ரீவஃ ஸஉஜாயத । என்று சூர்யனுடைய வீர்யமானது அந்த ஸ்திரீ ஜாதியினுடைய கழுத்தில் விழுந்துவிட சுக்ரீவன் ஜனித்தான்.

4. மனஸினால் ஜனனம் :— ப்ரம்மாவின் மனஸினால் வஸிஷ்டர், நாரதர், பிரஜாபதிகள், இவர்கள் ஜனனம்.

5. கண்பார்வையினால் மட்டில் ஜனனம்:— திருணபிந்து ஆச்ரமத்தில் தபஸ்ஸை புலஸ்த்தியர் செய்துகொண்டு இருக்க அப்பொழுது உத்தம கன்னிகைகள் எல்லாரும் அவா நிஷ்டையைக் கலைத்துக்கொண்டு இருந்ததால அவர் உத்தரகாண்டம் 2-ம் ஸர்க்கம் 13-ம் சலோகம் யாமெஉபஉநஉாமெ தாமஹுஉஂ

யாமயிஷ்யதி । என்று யார் என்னுடைய தர்சனத்தை அடைகி றளோ அவள் கர்ப்பமடைந்து விடுவள் என்று சபித்துவிட பிறகு யாரும் வருவதில்லை. ஒருநாள் திரணபிந்து புத்ரீ இந்த சாபம் அறியாதவளாய் தன் ஸகீ ஜனத்தைத் தேடிக்கொண்டு அங்கு வந்து ஸகீகளைக் காணுமல் ரிஷியைக்கண்டு உடனே அவள் கர்ப்ப சின்னங்களை யடைந்து கர்ப்பவதியாகிவிட்டாள். 17-ம் ச்லோகம் ஸாவஸ்தாந்தராஸந்நாஸ்து த்ருஷ்ட்வாவிவ்யதாபரம் । கன் னிகையான தனக்கு திடீரென்று அப்படி உண்டானது கண்டு மிகவும் நடுங்கினுள். என்று இப்படி இருக்கிறது இதிலிருந்து பார்வையால் ஜனனம் ஸ்பஷ்டம்.

6. சொல்லான ஆசீர்வாதத்தால் ஜனனம் :— ஸந்தியா காலத்தில் கேகஸீ என்பவள் பிள்ளைக்காக விச்ரவஸ்ஸிடம் வர அவர் நீ இந்தவேளையில் வந்ததால் உனக்குப்பிறக்கும் பிள்ளை கள் எல்லாரும் உலகத்தை அழிக்கும் மஹாபாபிகளாய் ஜனிப் பார்கள் என்றார். மறுபடி அவள் ப்ரார்த்தனையை உத்தேசித்து கடைசிபிள்ளை என் வம்சத்திற்கு அனுரூபனுய் இருப்பன் என் றார். இந்த வார்த்தையைக் கேட்டுக் கொண்டு சென்றாள். கொஞ்சநாளைக் கெல்லாம் ராவண, கும்பகர்ண, சூர்ப்பனகா, விபீஷணன் நால்வரும் ஓரே நாளில ஜனனம், உத்தரகாண்டம் 9-ம் ஸர்க்கத்தில் குறிப்பிடப்பட்டது. இவர்கள் வார்த்தையி னல் ஸ்திரீஸம்பந்தம் இல்லாமல் ஜனனம். 27-ம் ச்லோகம் பச்சாத்யோ ஜாயதே புத்ரஸ்ஸ பவிஷ்யதி ஸாத்விக: । ஸ்வத்வம்சாநுரூபஸ்ச தர்மாத்மாச ந ஸம்சய: । என்பது இதனுல் ஆசீர் வாத வார்த்தையால் ஜனனம் என்று ஸ்பஷ்டம்.

7. வாக்கின் நின்றும் ஜனனம் :— குசத்வஜன் என்ற ப்ரம்மரிஷி அத்யயனம் செய்துகொண்டு இருக்கும்போது ஸ்திரீபுருஷ சேர்க்கையில்லாமல் அந்த வாக்கினின்றும் வேதவதீ ஜனித்தாள். உத்தரகாண்டம் 17-ம்ஸர்க்கம் 10-ம் ச்லோகம் ஸம்ஹிதாவாங்மயீ கந்யா நாம்நா வேதவதீ ஸ்ம்ருதா । என்று வேதத்தை அத்யயனம் செய்துகொண்டு இருந்ததால் வேத வதீ என்று சொலலப்பட்டாள். இதனுல் வாக்கில் இருந்து ஜனனம் என்றும் ஸ்பஷ்டம்.

8. கோட்டாவியினின்றும் அல்லது தும்பலினின்றும் ஜனனம்:— ப்ர்ம்மாவினுடைய தும்மலினின்றும் ஜாம்பவான் உண்டானார். பாலகாண்டம் 17-ம் ஸர்க்கம் 6-ம் ச்லோகம் வூமெவ-ூெவஉயா வரூஷொஜாஂவவா ஹூரக்ஷவஂ-ஹவஃ। ஜரூஂஹஉா ணவ ஸஹவஸாஉஉவக்ஷா௨ஜாயத। என்று ப்ரம்மா குறிப்பிட்டார். இதனல் கொட்டாவினின்றும் ஜனனம் என்று ஸ்பஷ்டம்.

9. ஆகாசத்தினின்றும் ஜனனம்:—அயோத்யாகாண்டம் 110-ம் ஸர்க்கம் 4-ம் ச்லோகம் ஶூகாஶ வூஹவொ வ்ஹாஶாஶ தொ। நிதூசுவூயஃ। என்று ஆகாசமான ப்ர்ம்மத்தினின்று ப்ர்ம்மா உண்டானார் என்றார் வஸிஷ்டர். இதினின்று ஆகாசத்தினின்றும் ஜனனம் உண்டு என்றும் ஸ்பஷ்டம்.

10. பாற்கடலினின்றும் ஜனனம்:— லக்ஷ்மி, சந்திரன், உச்சைச்ரவஸ், ஐராவதம், விஷம், கல்பகவ்ருக்ஷம்; கௌஸ்துபமணி, காமதேனு, வாருணி, அமர்தம், தந்வந்தரி, விஷம், இவ்வளவும் பாற்கடல் கடைந்தபோது வெளிவந்தவர்கள். தவிற அநேகம் கோடி அப்ஸரஸ்திரீகளும் வெளிவந்தார்கள். பாலகாண்டம் 46-ம் ஸர்க்கத்திலும் மற்ற இடங்களிலும் இருக்கிறது.

11. கர்ப்ப, தும்பத்தினின்றும் ஜனனம்:- பாலகாண்டம் 38-ம் ஸர்க்கம் 17-ம் ச்லோகம் ஸஂஉதிஜூ நஶவூாவு ஹஹ-௨ தஂஂவஂ வூஜாயத। ஷஷிஃ வஂதூஸஹஸூாணிதஂ வஹொூ ஷிங்ஸூதாஃ। என்று விஸ்வாமித்ரர் ராகவனுக்கு கதைசொல்லுகிறார். சுமதி என்பவள் கர்ப்பபிண்டத்தை உண்டுபண்ணினாள் அதினின்றும் அறுபதினாயிரம் பேர்வழிகள் வந்தார்கள் என்றார். இதனல் கர்ப்பதும்பத்தினின்று வெளிவரும் அநேகம் பிள்ளைகள் என்பதும் ஸ்பஷ்டம்.

12. கும்பத்தினின்றும் ஜனனம்:— உத்தரகாண்டம் 65-ம் ஸர்க்கம் 4-ம் சலோகம் யஜூகஂஂஹொ ஶவாஶெூஷ தெஜஃ வூணெ௨உஹாதநொ நாஃ। தஷிஂஷெஜொஉயஎ விஷூள ஸஂஹூதாவூஷிஸத்உள। என்று வருணன், மித்ரன் என்ற இவ்விருவர்களுடைய தேஜஸ்ஸுடன் கூடின அந்த கும்பத்தினின்று உத்தம தேஜஸ்ஸுடன் கூடின இரண்டு ரிஷிசரேஷ்டர்

கள் உண்டானார்கள். அகஸ்தியரும், வஸிஷ்டரும் உண்டானார்கள் (வஸிஷ்டருக்கு இது இரண்டாவது பிறப்பு) என்று இருப்பதால் கும்பத்தினின்றும் ஜனனம்.

13. கோபத்தினின்றும் ஜனனம்:— உத்தரகாண்டம் 46-ம் ஸர்க்கம் 56-ம் சலோகம் யஸ்ய நாபிஸமுத்பூதா ஹரவிதா ஜவிதாஜஹ: । கெமுாஹமிமுயஃஸ்ரீ ஜாநு ஹவஹுெ க்ராயஸ்ஸ்ஹவ: । என்று பகவானுடைய நாபியிலிருந்து ப்ரம்மா உண்டானார். கோபத்தில் இருந்து பவன் உண்டானார். இதிலிருந்து கோபத்திலிருந்து உண்டாகலாம் என்பதுஸ்திரம் நாபியினின்றும் உண்டாகும் என்றும் ஸ்திரம். (இது அகஸ்தியவாக்யம்).

14. மந்திரத்தினின்றும் ஜனனம்:—உத்தரகாண்டம் 65-ம் ஸர்க்கம் 17,18-ம் ச்லோகங்கள் ஊஷயொவிஜஹாதா நஃ மிஜெடு ஹஂ ஸஜாஹரநு । சுரணீஂதத் நிக்ஷிவ்ஜய நஂ அகு ரொ ஜவா । ஜுஹொஜெஜஹாதா நஃவ த்ஹெதொமிஜெஜஹை । சுரணஂஜய்ஜா நாயாஂ வூாஜஹஜெதொஜஹாதவாஃ । ஜய நாமி யிஸீத்ாஹ ஜஜநநா ஜநகொஹவக ॥ என்று ரிஷிகள் நிமியினுடைய தேகத்தை வரவழைத்து அதில் அரணியை வைத்து புத்ரஹேதுவுக்காக ஹோமாதிகளை செய்து மந்திரங்களைச் சொல்லி தேஜஸ்வியால் கடைந்தார்கள். அப்படிகடையும்போது உத்தம தபஸுடன் கூடினவன் உண்டானான். கடைந்ததினின்றும் வெளிவந்ததால் மிதி என்றும் உண்டானவனாதலால் ஜநகன் என்றும் பெயர்பெற்றான். இப்படி மந்திரத்தினின்றும் கடைவதினின்றும் [illegible]னம் என்பது ஸ்பஷ்டம்.

15. ஸம்பந்தத்தால் கர்ப்பம்தரித்து ஜனனம்:— இது லோகத்தில் ப்ரஸித்தம் ஸஹஜம்.

16. ஸ்பர்சனத்தினால் ஜனனம்:—காச்யர் திதிதேவியை தன்கையால் தொட்டுவிட்டு நீ ஆயிரம்வருஷம் நியமத்தில் இருந்தால இந்திரனைக் [illegible] சொல்லும் பிள்ளையை அடையுவாய் என்றார். ஆசாரம் தவறினால் ப்ரயோஜனமில்லை என்றார். கர்ப்பம் பூர்ணம் தரிகக 10-வருஷம் பாக்கி இருந்தபோது ஆசாரம் குறைந்ததால் அக்குழந்தையை இந்திரன் கொன்றுவிட்டான். இதிலிருந்தும் ஸ்பர்சனத்தினால் ஜனனம் என்பதும் ஸ்பஷ்டம்.

17. கண் ஜலத்தினின்றும் ஜனனம்:—உத்தரகாண்டத்தில் 43-ம் ஸர்க்கம் 10-ம் சலோகம் [illegible] என்று ப்ர்ம்மா யோகத்தில் இருந்த போது கண்ணினின்று கண்ணீர யொழுகியதை கையில் தரித்து சற்றுத்யானித்து விட்டுவிட அப்பொழுது அதைக்கீழே விட்டதும் ஒரு வானரம் பிறந்தது என்றூா. இதனால் கண்ஜலத்தினின்றும் ஜனனம் என்று ஸ்பஷ்டம்.

இப்படி இக்ரந்தத்தில் மந்திரத்தாலும், தேஜஸ்ஸாலும், தபஸ்ஸாலும், பராக்ரமததாலும, யோக்யதா விசேஷத்தாலும், பலவிதத்திலும் ஸ்ருஷ்டி உண்டு. ஸர்வவிதத்திலும் பிராசீனர்களான பெரியோாகள எதிலும் மஹாமேனமை உடையவர்கள் என்றும் அவர்கள் ஸ்ருஷ்டிஸதிதி ஸம்ஹாராதிகளில் கூட யோக்யதையை உடையவர்களாய் இருந்து இருக்கிறாகள். ராமாயணகாலத்தில் இல்லாதது ஒன்றும் இக்காலத்தில புதுசாகக் கண்டுபிடிக்கப்படவிலலை என்றும் குலாசாரத்தினின்றும் ஸாவமேன்மையையும் அடையலாம் என்றும் அதுகள் குறைந்தால மஹிமையுடன் கூடின புத்ராதிகள் வதம்முதல் ஏற்பட்டுவிடுகிறதென்றும் அவனவன் தன் தன் குலாசார தர்மமார்க்கத்தில இருந்தால் தான் மேன்மையயடையலாம் அதனால் எதையும் செய்யமுடியும், பகவத்க்ருபையையும் அடையமுடியும் என்றும் இக்ரந்தரீதியில் பரத்யக்ஷ ப்ரமாணமாய்த் தெரிவதால், இக்கவி ஸ்தாபிப்பதால், ஸர்வவிதத்திலும் பெரியோர்கள் பலவிதத்தில் புத்ரோத்ஸவாதி ஜனனத்தை செய்து இருக்கிறார்கள் என்பது ப்ரத்யக்ஷ ப்ரமாணமாய்த் தெரிவிததால ஜனனம் பலவிதத்திலு உண்டு என்றும்.ஸித்தாந்தம்.

---

## 8. நாலு குழந்தைகளும் நீலமேகச்யாமள வர்ணம் என்ற ஸித்தாந்தம்.

தேவதைகள் பகவானை நீர் உம்மை நாலுபாகம் செய்து கொண்டு பிறக்கவேண்டும் என்றூர்கள். அப்படி சொனனபோது நாலு [illegible]ாலுவர்ணமாய் இருக்க வேண்டுமென்றூவது இரு இருவர் ஒவ்வொரு வர்ணமாயிருக்க வேண்டுமென்றூவது நாலும்

ஒன்ருக இருக்கவேண்டுமென்ருவது ஒன்றுமே கேட்கவில்லை. விஷ்ணுவாவது நான் வர்ணபேதத்துடன் பிறக்கப்போகிறேன் என்றும் சொல்லவில்லை. அந்த விஷ்ணுவே எந்த ரூபத்துடன் இருந்தாரோ அதாவது எந்த நிறமான வர்ணத்துடன் இருந்தாரோ அதே வர்ணம் தான் நாலு குழந்தைகளுமே தவிற வேறு எதுவும் அங்கிகரிக்கத் தகுந்ததில்லை. மேலும் பிறந்த போதும் ஒரே விஷ்ணு ரூபத்திடம் இருந்து ½ பாகம் மூத்த பிள்ளையும ¼ பாகம் இரண்டாம பிள்ளையும மூன்ருவது ⅛-ம் நாலாவது ⅛ அரைக்காலுமாய ஜனித்தது இருக்க எப்படி வர்ண வித்யாஸம் சொல்வது ? நிற்க, முடிவிலும் நாலு குழந்தைகளும் சரீரம் அழியாமல் அப்படியே விஷ்ணுவாகுமாகள என்ற இடத்திலும், சயாமள வாணத்துடன விஷ்ணு ரூபியாருமா என்றும் இருப்பதாலும் வர்ணவித்யாஸம் சொல்வது எப்படி ? நிறக, மேலே கவனிப்போம். மேலும் விஷ்ணு எந்த வர்ணமோ பாயஸமும் எந்தவர்ணமோ அதே வர்ணம் தான் நாலுபேரும் என்றும் ஸித்தாந்தம். விஷ்ணுவாணத்தைக கவனிப்போம் :—

உத்தரகாண்டம் 45-ம் ஸர்க்கம் 12-ம்சலோகத்தில் விஷ்ணு வர்ணம் சொல்லப்பட்ட காலத்தில் ஸ்ரீமாநு ஜெவவவ-ஹஸ்ராஜ: வக்ஷஜாா-ணாமெொவநு: । என்றும் அதாவது தாமரைப்பூப்போல் கண்ணும், நீலமேக ச்யாமளவர்ணம் என்றதும் தவிற மேலும் அதே ஸர்க்கம் 10-ம் ச்லோகத்திலும் நீலொத்ஷல உஊவஹாஜ: கிஂஜஜ்ஜாா-ணவஜ்ஜ: । என்று நீலோத்பல புஷ்பம்போல் நீ வர்ணம் என்றும் ஸ்பஷ்டம். தவிற உத்தரகாண்டம் 6-ம்ஸர்க்கம் 66-ம் சலோகம் ஸாவண-ஒவஷெ ஸஶஹளபஹாஜ: ஸீதாம்ப ரொஹரிஃ என்பதாலும் விஷ்ணு நீலவர்ணம் என்பது ஸ்பஷ்டம். இனி ஒவ்வொருவரையும் கவனிப்போம். ஸம்க்ஷேபமான முதல் ஸர்க்கத்தில் 11-ம் சலோகத்தில் ஸஜஜொஷவிஹக்தாஜ: ஸிஹவணஃ ஷதாவவாநு । என்ற ராகவன் மனோஹரமானவர்ணம் என்ருர் நாரதர். இதையே வால்மீகியும் ஸுந்தரகாண்டத்தில் ஹநுமான வாக்கினுல் வர்ண க்கும்போதும் 35-ம் ஸர்க்கம் 16-ம் சலோகத்தில் உாஉாஹிஸந கிவெஷாஷஷஹிஹவணஃ ஷதாவ வாநு. என்று துந்துபிவாத்யம்போல் கம்பீரமான தொனியுடன்

மனோஹரமான வர்ணமுடையவர் என்றார். இதே ஹநுமான் அடுத்த ச்லோகத்தில ஸமஸ்ஸமவிபக்தாங்கோ வர்ணம் ஸ்யாமம்ஸமா ஸ்ரித: என்று நீலவர்ணம் என்றும் ஸ்நிக்தவர்ணத்திற்கு வயாக்யானம் செய்துவிட்டார். ஆதலால் நாரதவாக்யமே முதல் ப்ரமாணம். அயோத்யாகாண்டத்தில் பரதன் 83-ம் ஸர்க்கம் 8-ம் ச்லோகத்தில் ஸதம் ஸ்யாமம் மஹாபாஹும் ஸ்திரஸத்வம் த்ருடவ்ரதம் | கதா த்ரக்ஷ்யாமஹே ராமம் ஜகத: ஸோகநாஸநம் | என்று ராமன் நீலமேக சயாமளவர்ணம் என்றார். அயோத்யாகாண்டத்தில 48-ம் ஸர்க்கம் 29-ம்ச்லோகத்தில் அயோத்தியில் ஸ்திரீகள்வாக்யம் ஸம்ஹ்ருஷ்டாஸ்ய ஸ்யாமஸ்ய ஸ்மிதஜ்ஞோத்வர்ணிதம் என்று ராமனை நீலமேகச்யாமளவர்ணம் என்றார்கள். இப்படி பல இடத்தில் ராமன் நீலமேகச்யாமளம் எனபதற்கு ஆதாரம் உண்டு. பரதனைப்பற்றி அயோத்யாகாண்டத்தில் 112-ம் ஸர்க்கத்தில் 15-ம் சலோகத்தில ஸ்யாமம் நலிநபத்ராக்ஷம் மத்தஹம்ஸஸ்வரம் ஸ்வயம் | என்று ராகவன் பரதனை நீலமேசயாமளவாணம் என்றார். மேலும் அயோத்யாகாண்டம் 88-ம ஸாக்கம் 19-ம் ச்லோகம் இந்தீவரஸ்யாம: ரக்தாக்ஷ: ப்ரியதர்சந: | என்று பரதனும் ராமனை இந்தீவர புஷ்பம்போல் நீலவர்ணம் என்றார். இபபடி ராமனைபபற்றி பல உண்டு. ஆதாரம் நாரத வால்மீகி வாக்யமே ப்ரமாணமாதலால அதன்படி ராமன் நீலமேகசயாமள வர்ணம் என்பது ஸத்யம். இனி விரோதபாவத்தை கவனிப்போம். அயோத்யாகாண்டத்தில ராமன் காடுபோன போது கௌஸல்யை 61-ம் ஸ்ர்க்கம் 8-ம் சலோகத்தில் பத்மவர்ணம் ஸுகேஸாந்தம் பத்மநிஸ்வாஸமுத்தமம் | கதா த்ரக்ஷ்யாமஹே ராமம் ஸோகநாஸநம் என்று (பத்மவர்ணமுளள) தாமரைப்பூ வர்ணமுள்ள (சிவபபான) ராமனை எம்பொழுது, நான் காணுவேன் என்கிறாள். (இங்கு கவி, கௌஸல்யை சொன்னதைச சொன்னார். அப்படியிருக்க வ்யாக்யாதா பத்மவர்ணம் தாமரைப்பூ வர்ணமுள்ள ராமன் என்று இருபபதை மாற்ற வேண்டும் என்று தாமரை இலை பச்சையாதலால் அதன் வர்ணம் என்று வைத்துக்கொள் என்கிறார் பத்ம என்றால தாமரைபபூவுக்கு தான் ப்ரயோகம். இலைகருக்கிடையாது. என்பது இக்

க்ரந்தப்படி ஸ்பஷ்டம். இவரே ஸீதாவாக்யத்தை வால்மீகி சொன்ன இடத்தில் அதாவது கஷீஜ கஜெஉ வ உா நவ ண-உ என்று தங்கத்தினுடைய ஸமான வர்ணமுள்ளதாயும் தாமரைப் பூ வாஸனை உள்ளதாயும் உள்ள அவர் முகம் ஜலம் இல்லாத போது வெய்யிலினால் வதங்கின தாமரைப் புஷ்பம்போல் வாடாமல் இருக்கிறதா என்ன என்றாள். இதில் ராமன் முகம் செவப்பு வர்ணம் என்று இருக்கிறது. இங்கு வ்யாக்யாதா அவ்வளவு மனோஹரம் என்கிறார். அதாவது தங்கத்திற்கு ஸமான வர்ணம் என்ற இதற்கு அவ்வளவு மனோஹரம் என்று அர்த்தம் என்கிறார். ஹநுமான் சொன்னதை வால்மீகி சொன்னபோது ஸ-வண-உாஸ என்றார். அதாவது இருவரும் தங்ககாந்தி என்கிறார். இங்கும் வ்யாக்யாதா லக்ஷ்மணனுடைய தங்கவர்ணம் ராமனுக்கு அடித்து விட்டது, என்கிறார். இங்கு ராமன் நீலமேக ச்யாமளவர்ணம், லக்ஷ்மணனையும் ச்யாமள வர்ணமாக்கக்கூடாதா என்ற கேள்வை? நிற்க இவருக்கு லக்ஷ்மணன் தங்கவர்ணம் என்பதற்கு பதமே இல்லாதபோது ஏன் இவருக்கு ச்ரமம். மேலும் இவர் சொல்லும் மார்க்கத்தை பிறகு கவனிப்போம். வ்யாக்யாதா சில புஸ்தகங்களில் ஹநுமத்வார்த்தையிலும், யுத்த காண்டத்திலும் லக்ஷ்மணன தங்ககாந்தி உடையவன் என்று சுகன்சொல்லி இருப்பதாலும் தங்ககாந்தி என்பது தங்கவர்ணம் என்கிறார். இவர் வர்ணம் (நிறம்) என்று இருக்கும் இடத்திற்கு மனோஹரம் என்றும் காந்தி என்று இருக்கும் இடத்திற்கு வர்ணம் (நிறம்) என்றும் அர்த்தம் என்கிறார். இப்படி இவர் சொன்னால் அவதாரகட்டத்தில் நாலு குழந்தைகளும். பூரட்டாதி, உத்திரட்டாதி நக்ஷத்ரங்களைப்போல் காந்தியில் நால்வரும் இருப்பதால் காந்தி எபபொழுது வர்ணமோ அப்பொழுது நால்வரும் ஓரேவர்ணம் என்று இவர் வாக்யப்படியும் ஆகிறதலலவா! இப்படி வ்யாக்யாதாக்கள் மூலத்திற்கு விரோதமாய் பல இடங்களில் குறிப்பிடுவதால் அதனால் சாஸ்திரக்ஞர்களும் உலகத்தில் புராணிகர்களும் சொல்லுவதால் கவி ஹ்ருதயத்திற்கு விரோதமான யார் வாக்யங்களும் அங்கீகரிக்கத்தகுந்ததில்லை என்றும் நாரத வால்மீகி வாக்யமே ஸ்திரம் என்று ஸித்தாந்தம்). இது நிற்க கவி ஹ்ருதயத்தை கவனிப்போம்;—

கிஷ்கிந்தாகாண்டத்தில் ஹநுமான் 3-ம் ஸர்க்கம் 8-ம் ச்லோகத்தில் ஸெயஉவதுள ஸாவணஃாஹ ளகளப-வாம் ஸிரவாஸஸள ! என்று ராம லக்ஷ்மணர்கள் இருவரும் தங்கத்தினுடைய காந்திபோலொத்த காந்தி உடையவர்கள் என்ருர். இதில் ராகவன் காந்தி தங்கமாக ஆவதால் (காந்தியே வர்ணம் என்று வ்யாக்யான சொல்படி கவனித்தால் ராமன் மஞ்சள் வர்ணம் என்பது ஸ்திரம் ஸுந்தரகாண்டத்தில் ஸீதை ஹநுமானிடம் பேசும்போது 36-ம் ஸர்க்கம் 28-ம் சலோகத்தில் கஷிஞ தஜெ உவஜா நவண-ஃ தவ ஙாநநம் வஓவஜாநமயி ! உயாவிநா பஷ ஙதி பெபாகஜீநம் ஜருக்ஷெ வஓஸிவாதவெந ॥ என்ற இதில் ராகவன் தங்கவர்ணம் என்றும் அவர்முகம் தாமரைப்பூவாஸனை என்கிருள். இதில் ராகவன் தங்கவர்ணம் என்று ஆகிறது. இதுகளில் முதலில் சொன்ன கௌஸலயா வாக்யம் அவள் அதி துக்கத்தால் சொல்வதாய்ச் சொல்வதால் அவள் வாக்யம் ப்ரமாணம் அல்ல. (ராமன் காட்டுக்கு போகும்போது அவருக்கு வயது 25 ஆக இருக்க 17-வயது என்கிருள். அங்கும் துக்கத்தால் புலம்புவதாய் கவி வாக்யம்) இதைப்பற்றி வ்யாக்யானங்கள் ஒன்றும் ஸரியல்ல. அதாவது இதற்கு வ்யாக்யாதா பூணல் போடுவதற்கு முந்தி 8-வயது பிறகு 17-வயது என்கிருர். வால்மீகி கௌஸல்யை துக்கத்தால் புலம்புகிருள் என்றதால் இதுவும் பிசகு என்று ஸித்தாந்தம். இரண்டாவதாக ஹநுமான் சொல்வது காந்தி என்று, அதாவது தங்ககாந்திபோல் காந்தி என்றதால் காந்திவர்ணம் அல்ல. இதே ஹநுமான் ஸுந்தரகாண்டத்தில் 35-ம் ஸர்க்கத்தில் ராமனை ஙாஜம் வர்ணம் என்று குறிப்பிட்டு சொன்னதாலும் லக்ஷ்மணனையும் ஸகலத்திலும் ராமனே என்று குறிப்பிட்டதாலும் ராமலக்ஷ்மணர்கள் இருவரும் ச்யாமளவர்ணம் என்று ஸ்பஷ்டம். ஆதலால் ஸவணஃாஹ என்பது காந்திக்கே தவிற வர்ணத்திற்கு அல்ல. இதுவும் இதனுல் ப்ரமாணம் அல்ல. மூன்ருவதாக ஸீதை அதி ஸந்தோஷத்தினுல் சொன்னுள் என்று இருப்பதால் அதே ஸர்க்கத்தில வால்மீகியே சொன்னதால் (அதி துக்கத்திலும் அதி ஸந்தோஷத்திலும் அதி கோபத்திலும் சித்தம் இழந்தகாலத்திலும், கண்ட

படியும், இல்லாததெல்லாம் வாயில்வரும் என்று வால்மீகி குறிப்பிட்டு அதுகளுக்கு கௌரவம் கிடையாது என்றும் ஸ்தாபிப்பதால் ஸீதா வாக்யம் ப்ரமாணமல்ல. இவளே ராகவனை நீலமேகச்யாமளவர்ணம் என்று முந்தியும் பிந்தியும் குறிப்பிட்டு இருப்பதாலும் இந்த வார்த்தை ப்ரமாணமல்ல) ஸீதா வாக்யமும் ப்ரமாணம் அல்ல. இனி லக்ஷ்மண சத்ருக்னர்கள் வர்ணத்தை கவனிப்போம். பாலகாண்டத்தில் ஸுமதி மஹாராஜன் 48-ம் ஸர்க்கத்தில் 3-ம் ச்லோகத்தில் அச்விநாவிவ ரூபேண ஸமுபஸ்திதயௌவநௌ । அச்வனி தேவதைகளைப்போல ரூபத்தில் இருவரும் இருக்கிறார்கள் (அதாவது ராமலக்ஷ்மணர்கள்) என்றதால் இக்காரத்தீதியாய் அச்வனி தேவதைகளைபோல் இருவரும் ஒரேவர்ணம் என்று ஸ்பஷ்டம். தவிர ஸுமதி மஹாராஜன் அதே ஸர்க்கத்தில் 5-ம் ச்லோகத்தில் வராயுததரௌ வீரௌ ... ஸமாங்கேங்கிதசேஷ்டிதௌ என்று உயரம் சேஷ்டை முதலிய ஸர்வத்திலும இருவரும் ஒன்று குறிப்பிடப்பட்டபடியாலும் இருவரும் ஒரே நிறம் என்று ஸ்பஷ்டம். தவிர ஜனகமஹாராஜனும் இதே ச்லோகங்களை 50 ஸர்க்கத்தில் இதே ஸுமதி சொன்ன ச்லோகங்களையே அப்படியே தெரிவித்தபடியாலும் கண்ணாரக் கண்டவுடனேயே வர்ணம் தெரியவேண்டியிருக்க அதைமட்டும குறிப்பிடாமல ஸகலமும் ஒன்றென்று சொல்லுவதாலும் ஹநுமானும் ஸுந்தரகாண்டத்தில் ஸீதையிடம் ராமலக்ஷ்மணர்கள் அங்க அடையாளத்தை சொன்னபொது லக்ஷ்மணன் 35-ம் ஸர்க்கத்தில 22-ம ச்லோகத்தில் அநுராகேண ரூபேண குணைச்சைவ ததாவிதஃ । என்று ஸகலத்திலும் லக்ஷ்மணன் ராமனே என்று குறிப்பிட்டதாலும் ராமலக்ஷ்மணர் இருவரும் ஒரேவர்ணம் என்றே ஸ்பஷ்டம். லக்ஷ்மணனைப்பற்றி இதே ஸர்க்கத்தில் முன் ச்லோகத்திற்கு முந்தின ச்லோகத்தில் ஸ்வர்ணச்சவி: ஸ்ரீமாந் என்று சில புஸ்தகங்களில் உண்டு. பதார்த்தம் தங்ககாந்தி என்பதே. இப்படியே யுத்தகாண்டத்தில் 28-ம் ஸர்க்கம் 22-ம் ச்லோகத்தில் சுகன் ராவணனிடம் சொல்லும்போது யஸ்த்வேஷ தக்ஷிணே பார்ச்வே சுத்தஜாம்பூநதப்ரப: । என்று எந்த ராமனது வலது

பாகத்தில் இருக்கிறாரே ஒருவர் சுத்தமான (தவ்தீ என்ற ஒரு பாடமுண்டு, காய்ச்சப்பட்ட) தங்கத்தினுடைய காந்திபோலொத்த காந்தி உடையவன் என்று இருக்கிறது. இதுவும் காந்தியே தவிற வர்ணம் அல்ல. காந்தி வர்ணமாகாது. வால்மீகி கிஷ்கிந்தாகாண்டத்தில் வாலி ஸுக்ரீவர்கள் யுத்தத்தை வர்ணிக்கும்போது 12-ம் ஸர்க்கம் 19-ம் சலோகத்தில் அந்யோந்ய ஸத்ருசௌ வீரௌ உபௌ தேவாவிவாச்விநௌ । என்று வாலி ஸுக்ரீவர்கள் அச்வினீ தேவதைகளைப்போல ஒவ்வொன்றிலும் மிகவும் ஒன்றாய் இருக்கிறார்கள் என்பதும் தவிற அதே ஸர்க்கத்தில் 30-ம் சலோகத்தில் அலங்காரேண வேஷேண ப்ரமாணேந கதேந ச । த்வம் ச ஸுக்ரீவ வாலீ ச ஸத்ருசௌ ஸ்த: பரஸ்பரம் ॥ என்று ராமன் சுக்ரீவனைப்பார்த்து அலங்காரம் வேஷம் உயரம் நடைமுதலிய ஸகலத்திலும் ஒவ்வொன்றிலும் ஒன்றாய் இருக்கிறீர்கள் என்று குறிப்பிட்டார். இதில் நிறம் சொல்லவில்லை. அச்வனீ தேவதைகளைப்போல் என்றார். தவிற ஸத்ருசௌ ஸ்த: பரஸ்பரம் என்பதும் அந்யோந்ய ஸத்ருச என்பதும் பரஸ்பர ஸத்ருச என்பதும் ஹநுமான் கிஷ்கிந்தாகாண்டத்தில் 3-ம் ஸர்க்கம் 12-ம் சலோகத்தில் அந்யோந்ய ஸத்ருசௌ வீரௌ என்று ஸகலத்திலும் ராமலெக்ஷ்மணர்கள் ஒன்றாய் இருக்கிறார்கள் என்றும் குறிப்பிட்டதாலும் ராம லக்ஷ்மணர்கள் இருவரும் ஒரே வர்ணம் என்பது ஸ்பஷ்டம். தவிற வாலி சுக்ரீவர்கள் அச்வநீதேவ... களைப்போல் ஒன்றாய இருக்கிறார்கள் என்று சொல்லியிருப... ல் ராமனும் சுக்ரீவனிடம் ஸர்வத்திலும் பார்த்தேன் வித்யாஸமே தெரியவில்லை என்று குறிப்பிட்டதால இருவரும் (வாலி சுக்ரீவர்கள் ஓரேவர்ணம் என்று ஸ்பஷ்டம். வால்மீகி வாக்யத்தில் அச்வநீ தேவதைகள்போல் வாலி சுக்ரீவர்கள் இருந்தார்கள் என்று சொல்லி இருப்பதால அந்தபதத்தால் வாலி சுக்ரீவர்கள் ஓரே வர்ணம் என்று ஸ்பஷ்டம். அதே உபமானத்தை ராம லக்ஷ்மணர்களுக்கு ஸர்வத்திலும் காட்டியிருப்பதாலும் இருவரும் ஓரே வர்ணம் என்றே ஸ்பஷ்டம். நால்வரும் ஓரே பாயஸத்தில் இருந்தே ஜனனமாதலாலும் முடிவிலும் ஒனறிலேகலந்து நீல மேகச்யாமள ரூபியான விஷ்ணுவாகியதாலும் சத்ருக்னனும் நீல

மேகச்யாமள வர்ணம் என்றே ஸ்பஷ்டம். வால்மீகி நாலு குழந்தைகளும் பிறந்த இடமான பாலகாண்டம் 18-ம் ஸர்க்கத்தில் 15-ம் சலோகத்தில் [illegible] [illegible] என்றார். காந்தியால் நால்வரும் பூரட்டாதி உத்ரட்டாதி நக்ஷத்ரங்களைப்போல ஓரே தினுஸாக இருக்கிறார்கள். என்றார். ஆதலால் [illegible] என்று இருக்கிறதே காந்தி, வர்ணம் என்று வ்யாக்யானப்படி சொன்னால இந்தபதப்படி நாலும் ஒரு வர்ணம் தானே. ஆதலால காந்திவாணமே அல்ல என்று ஸபஷ்டம். சத்ருக்னன் லக்ஷ்மணனுடன் ஜனித்து இருகக லக்ஷ்மணன் ச்யாமளவர்ணம் ஆகிறபோது சத்ருக்னன் மட்டும் ஏன் வேறு வர்ணமாகவேண்டும்? வால்மீகி குறிபபிடாதபோது எப்படி சத்ருக்னன் தங்கவர்ணம் என்பது. ராம பரதர்கள் பின்னோதரர்கள். அவர்கள் நீலமேகசயாமள வாணமாயிருக்க ஏன் ஸோதரர்களான லக்ஷ்மண சத்ருகனர்களும் அதே வர்ணமாய் இருப்பதுகூடாது என்றும் கேள்வை! தவிற நாலவரும் நீலமேகச்யாமள ரூபமுள்ள பகவானிடம் இருந்து ஜனித்தார்கள் என்று வால்மீகி குறிப்பிட்டதாலும் அவர் என்ன வர்ணமோ, பாயஸத்தில் இருந்தே நால்வரும் ஜனனமானபடியாலும், அப்பாயஸம் தேவ நிர்மாணமான பாயஸமாதலால் அது என்ன வர்ணமோ, தவிற உத்தரகாண்டத்தில் ராமன் புண்யலோகம் போகும்காலத்தில மூன்று ப்ராதாக்களும் சரீரங்களை கீழேயாவது ஸரயூ நதியிலாவது ஒரு இடத்திலும் விடாமல் ராமரிடமே மறைந்துவிட ராமன் விஷ்ணுரூபியாகி நீலமேகசயாமள ரூபியாகி கடைசியில் ப்ரம்மமானஜயோதியானார் என்று வால்மீகி வர்ணித்தார். எல்லாரும் ஓரே வர்ணமாக இருக்கக்கொண்டு தான் விஷ்ணுவுக்கும் நீலமேக ச்யாமளவர்ணத்தை வால்மீகி ஸ்தாபிக்கிறார். நாரதர் வாலமீகி, வாக்யங்களே *ஸகலத்திற்கும் முதல் ப்ரமாணமாததால் இதுகளில் இல்லாவிட்டால், அந்த விஷயம் யார் ஸம்மந்தமானதோ அதைபபற்றி பல வாக்யம் இருந்தால் அதற்குள் முதல்வாக்யம் யார்வாக்யத்திற்கு கௌரவம் என்று அப்படி பரிசீலனைசெய்து சொல்வதுதான் கவி ஹ்ருதயம் என்பது ஸ்பஷ்டம். ஆகையால கவி ஹ்ருதயமான வால்மீகி, வாக்

யங்களால் நால்வரும் நீலமேக சயாமளவர்ணம் என்றே ஸித்தாந்தம்.

---

## 9. லக்ஷ்மணன் ஆதிசேஷன் அல்ல என்ற ஸித்தாந்தம்.

பாலகாண்டம் 15-ம் ஸர்க்கம் 20-ம் சலோகம் விஷ்ணோ புத்ரத்வமாகச்ச க்ருத்வாத்மாநம் சதுர்விதம் । என்று விஷ்ணுவை தேவதைகள் நீர் உம்மை நாலு பாகமாய்ச் செய்து கொண்டு பூலோகத்தில் புத்ரர்களாக தசரதனுக்கு ஜனிக்க வேண்டும் என்றார்கள். இப்படிச் சொன்னார்களே தவிர, ஆதி சேஷனுடன் பிறக்கவேண்டும் என்றும் சொல்லவில்லை. தவிர, குழந்தைகள் பிறந்தபோதும் விஷ்ணுவில பாதி ராகவனும், அரைக்கால் பரதனும், கால் லக்ஷ்மணனும், அரைக்கால் சத்ருக்னனுமாக பிறந்தார்கள் என்று வால்மீகியே வர்ணித்து இருக்கும் போது லக்ஷ்மணன் ஆதிசேஷன், பரத சத்ருக்னர்கள் சங்க சக்ரங்கள் அல்ல என்பதும் பிரத்யக்ஷம். இங்கு வியாக்யானத்தில லக்ஷ்மணன் ஆதிசேஷன் என்றார். அதுகள் ஸரியல்ல என்று வால்மீகியே ஸ்தாபிக்கிறார். தவிற, ராம ராவண முதல் நாள் யுத்தத்தில் லக்ஷ்மணன் ராவணனால் அடிபட்டு விழுந்தபோது ராவணன் லக்ஷ்மணனை தூக்கவர, அப்பொழுது சிந்திக்க முடியாத தனது விஷ்ணுபாகத்தை எண்ணினார் என்று இருக்கிறதே தவிற, ஆதிசேஷனாக எண்ணவில்லையாதலாலும் (இது எபபடி லக்ஷ்மணனுக்குவந்தது, எப்படி போனது, என்றவிஷயம் ராமாதிகளுக்கு தன்னைத் தெரியாது என்ற ஸித்தாந்தம் என்ற கட்டத்தில் இருக்கிறது) ஆதிசேஷனல்ல என்பதே ஸ்பஷ்டம். 124-ம் ச்லோகத்தில் இதே ச்லோகத்தை திருபபி சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது யுத்தகாண்டம் 59-ம் ஸர்க்கம். முந்தி குறிப்பிட்டது 113-ம் சலோகம். ஸகலத்தையும் நடந்தபடி அப்படி அப்படியே கண்டு வர்ணிக்கும் வால்மீகி இதே காண்டம் இதே ஸர்க்கம் 115-ம் சலோகத்தில் ஸமெளநம் வைஷ்ணவம் ஹாமம் ஹாநுஷம் தேஹமாஸ்திதம் । என்று வைஷ்ணவ பாகமுள்ள மனுஷ்ய தேஹத்தை உடைய லக்ஷ்மணனை ராவணன் அசைத்

தான் அசைக்க முடியவில்லை என்று வர்ணிக்குமிடத்தில் வைஷ்ணவ பாகமுள்ள லக்ஷ்மணன் என்று சொல்லப்பட்டதே தவிர, ஆதிசேஷன் என்று கவி சொல்லவில்லை. ஆதலால நடந்தபடி தெரிந்து சொல்லும் வால்மீகிக்கு, விஷ்ணு ராமனாக வந்தார் என்று சொல்லத்தெரிந்த, வால்மீகிக்கு ஆதிசேஷன் லக்ஷ்மணனாக பிறந்திருந்தால ஆதிசேஷன் லக்ஷ்மணன் என்று சொல்லத் தெரியாதா? ஸர்வமும் தெரிந்து அவர் க்ரந்தம் செய்ததால அவர் லக்ஷ்மணனை விஷ்ணுபாகமுடையவர் என்று பல யுக்தியிலும் குறிப்பிட்டுவிட்டதால் ஸர்வத்திற்கும் நாரத வால்மீகி வாக்யம் பிரமாணமாதலால் அதன்படி லக்ஷ்மணன் ஆதிசேஷன அல்ல என்று ஸ்தாபனம். பரத சத்ருக்னர்களும் சங்க சக்ரங்கள் அல்ல என்றும் ஸ்தாபனம். பரதனுக்கு விஷ்ணுவின் அரைக்கால பலம் என்றும், சத்ருக்னன் விஷ்ணுவின் அரைக்கால பலம் என்று வால்மீகி குறிப்பிட்டுவிட்டதால் புண்யலோகம் செல்லும்போதும் பரத சத்ருக்னர்கள் ராமனிடம் கலந்து விஷ்ணுவாகிவிட்டதாலும், சங்க சக்ரங்கள் பரத சத்ருக்னர்கள் அல்ல என்றும் ஸ்தாபனம். இப்படி எல்லாருக்கும் விஷ்ணுபாகம் சொன்ன வால்மீகி எப்படி ஆதிசேஷன் லக்ஷ்மணன் என்பார்? ஆதலால பிசகு என்றும் பிரமாணம். தவிர, உத்தரகாண்டத்தில் லக்ஷ்மணன் புண்யலோகமடையும் காலத்தில் யுத்தகாண்டம் 117-ம் ஸர்க்கத்தில் 22-ம் ச்லோகத்தில் [illegible] । [illegible] । என்று தான் முந்தி விஷ்ணு பாகத்தில் இருந்து ஜனித்ததால் அந்த அக்ஷரமானதாயும், ஸநாதநமானதாயும் வாஸஸ்தானம் என்று பெயருடைய தன பதத்தை ஸ்மரித்தார் என்றும் இருக்கிறது. தவிர, அதே ஸர்க்கத்தில 25-ம் ச்லோகத்தில் [illegible] । [illegible] । என்று இந்திரன், புண்யலோகம்வரும் லக்ஷ்மணனை அழைத்துக்கொண்டு தேவலோகத்தில் பிரவேசித்தான். அப்பொழுது தேவதைகள் விஷ்ணுவினுடைய கால்பாகமுடையவர் வந்துவிட்டார் என்று ஸந்தோஷித்தார்கள் என்று இருப்பதால்

லக்ஷ்மணன் ஆதிசேஷனல்ல; விஷ்ணுவின் பாகமே என்று ஸித்தாந்தம். இப்படி இருக்க உலகத்தில் யுத்தகாண்டத்தில் பல ச்ருதி கட்டத்தில் லக்ஷ்மணன் ஆதிசேஷன் என்று சொல்லப்படுகிறான் என்று கவிவாக்யத்தில் ஒரு வரி உண்டு என்று கக்ஷி உண்டு. அதுவும் பிசகு என்று தீர்மானம். ஏனெனில் நடந்ததை அப்படி அப்படியே கண்டு இக்க்ரந்தம் செய்த வால்மீகி புண்யலோகம் சென்ற இடத்தில உத்தரகாண்டத்தில் வாஸுதேவ ரூபத்தை அடைந்தார், விஷ்ணுவானார் என்று குறிப்பிட்டதாலும், விஷ்ணுவின் கால்பாகத்தில பிறந்ததாய் கவியே பிறந்த இடத்தில் காட்டியதாலும் இப்படி பல பிரமாணங்களால் விஷ்ணு பாகத்தையே ஸ்மரித்ததாக சொன்னதாலும் லக்ஷ்மணன் ஆதிசேஷன் என்பது ஒருவிதத்திலும் பொருத்தமல்ல என்ற ஸித்தாந்தம். இப்படி வால்மீகியே சொல்லிவிட்டதால் இனி வால்மீகி ஸ்வயம் வாக்யத்தில் லக்ஷ்மணன் ஆதிசேஷன் என்று சொல்லாததால் ஆதிசேஷன் என்று சொலவது பிசகு என்று இக்க்ரந்தரீதியாய் ஸித்தாந்தம். பிறந்த இடத்திலுமில்லாலும், நடுவில் ஸமயம்வந்த இடத்திலும் சொல்லாமலும், கடைசியிலும் சொல்லாமலும் ஸர்வ இடத்திலும் விஷ்ணுபாகம் என்றே எல்லாரையும் வால்மீகி ஸ்தாபித்துவிட்டதால் லக்ஷ்மணன் ஆதிசேஷனல்ல என்றும், பரத சத்ருக்னர்கள் சங்க சக்ரங்கள் அல்ல என்றும் வால்மீகி வாக்யபபடி ஸித்தாந்தம்.

---

## 10. தசரதருக்கு சாந்தை புத்ரி அல்ல என்ற ஸித்தாந்தம்.

பாலகாண்டம் 11-ம் ஸர்க்கம் 3-ம் ச்லோகம கந்யா சாஸ்ய மஹாபாகா சாந்தா பவிஷ்யதி । என்று இந்த மஹாராஜனை ரோமபாதனுக்கு சாந்தா என்ற ஒரு பெண் உண்டாகப்போகிறாள் என்று இருப்பதால் தசரத புத்ரி அல்ல என்று ஸ்தாபனம். பாலகாண்டம் 11-ம் ஸர்க்கம் 5-ம் ச்லோகத்தில் அநபத்யோஸ்மி யஜ்ஞார்த்தம் சாந்தாபர்த்தா ஸஹ த்வயா । என்று தசரதன் ரோமபாதனைப் பார்த்து ஏ! தாமாத்மாவே, பெண்ணும் பிள்ளையுமில்லாத எனக்கு வம்சவிருத்திக்காக யாகம் செய்விப்பதற்கு

சாந்தா பர்த்தாவான ரிஷ்யசிருங்கரை நீர் என்னுடன் அனுப்ப வேண்டும் என்று சொல்லும் இதில் [illegible] என்று தனக்கு பெண்ணும் இல்லை பிள்ளையுமில்லை என்றதால சாந்தை தசரத புத்ரி அல்ல என்று ஸ்பஷ்டம்.

தவிர இதே தசரதன், 7, 8 நாள் தங்கினவன் பாலகாண்டம் 11-ம் ஸர்க்கம் 18 ச்லோகம் [illegible] என்று ரோமபாத மஹாராஜனைப்பார்த்து ஏ! ராஜனே உம்முடைய புத்ரியாய் இருக்கிற சாந்தையை அவருடைய பர்த்தாவுடன் எனது நகரத்திற்கு அனுப்பவேண்டும். உத்தமகாரியம் இருக்கிறது என்றார். இதை கவனிக்க தசரதன் ரோமபாதனைப் பார்த்து உம்முடைய புத்ரியான சாந்தையை என்று குறிப்பிடுவதால் தசரதபுத்ரி அல்ல என்பது ஸ்பஷ்டம்.

பாலகாண்டம் 9-ம் ஸர்க்கம் 18-ம் ச்லோகம் [illegible] என்று ஸுமந்திரன் தசரதரைப்பார்த்து, சொல்லும் கதையில் உத்தமரான ரிஷ்யசருங்கர் பெண்களால் காட்டிலிருந்து அழைத்து வரப்படுவார். உடனே மழைபெய்யும், பிறகு ரோமபாதன் சாந்தையை அவருக்கு கொடுக்கப்போகிறான் என்றும் அந்தமாப்பிள்ளையான ரிஷ்யசருங்கர் உமக்கு பிள்ளைகளை உண்டு பண்ணப்போகிறார் என்று தேவலோகத்தில் ஸநத்குமாரர் சொன்ன கதை என்றார் ஸுமந்திரர். இதை கவனிக்க ரோமபாதன் தன் பெண்ணான சாந்தையை அவருக்குக் கொடுப்பான். மாப்பிள்ளையான அவர் என்றால் ரோமபாதனுக்கு மாப்பிள்ளையான என்று தான் அர்த்தமே தவிர தசரதனுக்கு மாப்பிள்ளையான என்று ஒரு விதத்திலும் சொல்ல நியாயம் இல்லை. இங்கு வ்யாக்யாதா [illegible] என்று மாப்பிள்ளையான ரிசயசிருங்கர் உமக்கு பிள்ளைகளை உண்டு பண்ணிவிக்கப்போகிறார் என்று இருப்பதில் தவ என்கிற பதத்தை முந்திப்போட்டுக் கொண்டு உம்முடைய மாப்பிள்ளை (தசரதன் மாப்பிள்ளை) என்கிறார் இது உசிதம் அல்ல. முன்பின் ச்லோகங்கள் போகும் வழியையும் கதையையும் கவனித்தால் இது ஸரியல்ல என்ற ஸித்தாந்தம். தசரதன், தனக்கு பிறந்த பெண்ணை ஸ்வீகாரம்

கொடுத்தான் என்கிறார்கள் சிலர். அது ஸரியல்ல. குழந்தையே இல்லாமல் இருப்பவன் எப்படி இருக்கிற பெண்ணையும் ஸ்வீகாரம் கொடுப்பான்? தவிற இந்தப்பெண் எந்தஸ்திரீயிக்கு தசரதனுக்கு பிறந்தவள்? அது ஒன்றையும் காணோமே. தவிற தசரதன் ரோமபாதனிடம் ஸக்யம் உள்ளவன், ஸம்பந்தமுள்ளவன், என்று இருப்பதால் ஸம்மந்தம் பெண்ணை ஸ்வீகாரம் கொடுத்த ஸம்பந்தம் என்கிறார்கள். இருந்தால் வால்மீகியே சொல்லியிருப்பார். தசரதன் பிள்ளையைச் சொல்லத் தெரிந்தவருக்கு அவர் பெண்ணானால் சொல்லத் தெரியாதுபோலும்? ஸம்பந்தமுள்ளவன் என்பதால் எந்த ஸம்பந்தமோ, இபபடி தசரதன் ஸீதா கல்யாணத்திற்கு முந்தியே ஜனகனிடம் ஸக்யமுள்ளவன் ஸம்பந்தமுள்ளவன் என்று இருக்கிறதே. ஜனகனிடத்தில தசரதன் எந்தபெண்கொடுத்து ஸம்பந்தம்? மூலத்தில் இலலாததைப் பற்றி வ்யவஹாரமேகூடாது. ஆதலால் இது முறையல்ல. தவிற தசரதன் பெண் என்றால் அவனுக்கு இருப்பதோ ஒரே பெண். பிள்ளையே கிடையாது என்றிருக்க அதை என் தத்துகொடுக்க வேண்டும்? உத்தரகாண்டம் 9-ம் ஸர்க்கம் 10-ம் ச்லோகத்தில் மாது: குலம் பித்ருகுலம் யத்ர சைவ ப்ரதீயதே | குலத்ரயம் ஸதா கந்யா ஸம்ஸ்தாப்ய திஷ்டதி | என்று உத்தமியான கன்னிகையை உத்தமகுலத்தில் பிறந்தவனுக்கு கொடுத்ததால் அக்கன்னிகை மாதாவின் குலத்தையும் பிதாவின் குலத்தையும் எந்த இடத்தில் தானம் செய்யப்பட்டதோ அந்த குலத்தையும் எப்பொழுதும் இருக்கும்படி செய்கிறாள் என்று இருக்க தசரதன் தனக்கு பிறந்த பெண்ணையும் ஸ்வீகாரம் கொடுத்து விட்டான் என்றால் எப்படிப் பொருந்தும்? தவிற ஸுகேது என்பவனுக்கு தாடகா என்றபெண் பிறந்ததே, தத்துகொடுத்தானா? அவனுக்கு பிள்ளைகிடையாது என்று ப்ரம்மா சொன்னவரம் அல்லவா. தசரதன் தனக்கு பிள்ளைபிறக்கும் என்ற எண்ணம்கொண்டு பெண்ணைக் கொடுத்தானா, தவிற குசநாபன் என்பவருக்கு 100 பெண்கள் இருக்க அவன் பெண்களை ஸ்வீகாரம் கொடுத்தானா, ஜனகனுக்கு இரண்டு பெண்களும் அவன் தம்பி குசத்வனுக்கு இரண்டுபெண்களும் இருக்க அவர்களை ஸ்வீகாரம் கொடுத்தா

தோபஸுந்தர்களின் பிள்ளைகள என்று ஸ்பஷ்டம். ஸுந்தோப ஸுந்தர்களின் பிள்ளைகள் மாரீசசுபாகுக்கள என்று விஸ்வாமித்ரர் வாக்யத்தில் இல்லை. இருவரும மாரீசசுபாகுக்கள் இருவரும் தாடகையிடம் பிறந்தவர்கள் என்பதற்கு வால்மீகி வாக்யத்தில ப்ரயோகம் இல்லை. ஆனால் மாரீசன்மட்டும் புத்ரன் என்று வால்மீகி சொல்லிவிட்டார். பிந்தியும் விச்வாமித்ரர் ராமனுக்கு தாடகா விருத்தம் சொன்னபோது ஜர்ஜபுத்ரனை ஸுந்தனுக்கு தாடகையை சுகேதுவான பிதா தத்தம்செய்து கொடுத்தான் என்றுரே ஒழிய இருவருக்கும் கொடுத்ததாக சொல்லவில்லை. (ஜர்ஜபுத்ரனை ஸுந்தன் வேறு ஸுந்தோபஸுந்தர்கள் வேறு) இவனிடம் இரண்டு பிள்ளைகளைபெற்றுள தாடகா என்று அதை யும் விசவாமித்ரர் சொலலவில்லை. ஆனல் தாடகையிடம் ஸுந்தனுக்கு மாரீசன் என்ற ஒருபிள்ளை பிறந்ததாக விசவாமித்ரர் சொன்னரே தவிற சுபாகுவை அவள் பிள்ளையாய்ச் சொல்லவில்லை. (நாகர எழுத்தில பம்பாயிலிருநது வெளிவந்து இருக்கும் புஸ்தகத்தில பாலகாண்டம் 20-ம் ஸர்க்கம 26-ம் ச்லோகத்தில தௌஹியக்ஷஸ்ருநூயாம ஜாதௌ தைத்ருக்ஷரோஹநௌ । என்றும் ராவீஹ்யது வஸுமாஹஷு வீயஃவந்தௌ ஸுயகூிதௌ । என்றும் ஒரு சலோகம் சொல்லப்பட்டது. அதில் முதல்வரி எல்லா புஸ்தகங்களிலும் இலலை (தவிற ப்ரக்ஷிப்த அதிகபாடம் என்றும் நாம் சொல்லவில்லை. ப்ரக்ஷிபதம் அதிகபாடம் என்று வால்மீகி செய்யவே இல்லை எல்லாம் வால்மீகி செய்ததே தவிற வேறு அல்ல) இது தசரதருடைய ப்ரலாபவார்த்தையில் வெளிவருவதால இது ப்ரமாணம் அலல. தவிற முந்தி ச்லோகத்தில் இருவர்களையும் அஸுர குலம் என்றதால இது பிசகு என்றும், தாடகை யக்ஷகுலமாதலால் பிதாவும் யக்ஷனுதலால் மாரீசனும் யக்ஷனுக இருந்து பிறகு சாபத்தால் ராக்ஷஸனுகியதால் மாரீசன் அஸுரகுலமலல சுபாகு யக்ஷனல்ல. ஆதலால தாடகியின் புத்ரனல்ல என்பது ஸ்பஷ்டம. முன்சொன்ன இந்த ஸர்க்கம் முழுமையுமே ப்ரலாபம் என்று வாலமீகிரிஷிவாக்யபடி ஏற்பட்டுவிட்டதால் இந்த ஸர்க்கத்தை வைத்துபபேசமுடியாது. விசவாமித்ரர் மேலே தாடகா ஜனனத்தை ராகவனுக்கு சொல்லும் இடத்

தில பாலகாண்டம் 25-ம் ஸர்க்கம் 7-ம் ச்லோகத்தில் ஸ ச ஸுந்தாய தத்தா ஸா ஸுந்தோபஸுந்தாவிஹாயஸாம் யஸஹ்ரீம் । கந்யாம் வீர்யயுதாம் ... யக்ஷீவாத்ரம் வ்யஜாயத ॥ ... என்று ஜர்ஜன் புத்ரனை யக்ஷனை ஸுந்தனுக்கு கல்யாணம் செய்யப்பட்டாள். பிறகு கொஞ்சகாலத்திற்கெல்லாம் அவள் மாரீசனென்கிற பிள்ளையைபெற்றாள், பிறகு அகஸ்திய சாபத்தால் ராக்ஷஸனாகும்படி சபிக்கப்பட்டவனை மாதாவும் ராக்ஷஸியாகும்படி சபிக்கப்பட்டவள் என்று விசுவாமித்ரர் சொல்லியிருக்க எப்படி மாரீச சுபாகு இருவரும் தாடகை பிள்ளைகள் என்று சொல்வது? தசரதரை ஊதி நாபவதிஜஷூநாக ॥ என்று வால்மீகியே சொல்லிவிட்டதால் ராஜா ராமனைப் பிரிகிற வியோகத்தால் சொல்லுகிறார் என்று ஸர்க்கம் முழுமையுமே புலம்பலாகச சொல்லிவிட்டதால அதற்கு பலம் இல்லை என்று ப்ரமாணம். கல்யாணம் ஸுந்தனுக்கு மட்டில்தான் செய்யபபட்டதாயும் மாரீசன் மட்டும் பிறந்ததாயும் சொன்ன விச்வாமித்ர வாக்யமும் ப்ரமாணம். (தசரதர் வாக்யத்தை ப்ரலாபமாய் கவி சொல்லிவிட்டதால் இங்கு வால்மீகி வாக்யமே முதல் ப்ரமாணம்.) தவிற ஜர்ஜபுத்ரனை ஸுந்தனை அகஸ்திய பகவான் அழித்தபோது (ஸுந்தனை அகஸ்தியர் தான் அழித்தது என்று இக்க்ரந்தத்தின் மார்க்கம். வேறு சிலர் குஸ்தி சண்டைப்போட்டு கந்தர்வனிடம் அடிப்பட்டான் என்பதெல்லாம் சிலர் அபிப்ராயம் அதுவும் ஸரியல்ல இது இக்க்ரந்தமல்ல) தாடகை கோபித்து பிள்ளையான மாரீசனுடன் எதிர்த்தாள் என்றார் விச்வாமித்ரர். சுபாகு மூத்தவனாகில் முன் சுபாகுவை பெற்றாள். பிறகு மாரீசனைபபெற்றாள் என்கலாம். முன் சொல்லாததால் மூத்தவனுமல்லன். சுந்தன் மரணத்தைச் சொன்னபோது மாரீசனுடன் தாடகை அகஸ்தியரை எதிர்த்த தாய் சொன்னதால் அவன்(சுந்தன்) செத்துவிட்டதால் பிறகு பிள்ளை இல்லை. ஆதலால் சுபாகுவையும் பெறவில்லை. ஆதலால் சுபாகு யாருடைய பிள்ளையோ தெரியாது. ஆனால் சேர்ந்து இருக்கிறார்கள் என்ற மட்டில் ஸ்திரம். மாரீசன் அகஸ்தியரால் ராக்ஷஸனாக சபிக்கப்பட்ட பிறகு ராவணனுக்கு மந்திரியாய்போய் விட்ட

தாக உத்தரகாண்டத்தில் இருப்பதால் தாடகையை ராமன் கொல்லும்போது மாரீசன் கூட இல்லை. மாரீசன் ஒருவனைத் தான் தாடகேயன் என்று சொல்லப்பட்டு இருக்கிறது வால்மீகி தாடகைக்கு பிறந்தவனுக்கு தாடகேயந் என்று குறிப்பிடுகிறார். ஆரண்யகாண்டம் 31-ம் ஸர்க்கம் 36-ம் ச்லோகத்தில் ஸ்ரீராமாயண ஸமாச்ரமம் தாடகேயஸ்ய என்று ராவணனை தாடகி பிள்ளையாதலால் தாடகேயனான மாரீசன ஆச்ரமத்தை அடைந்தான் என்று குறிப்பிட்டதால மாரீசன் மட்டிலதான் தாடகா புத்ரன் சுபாகு அவனுடன் சேர்ந்துகொண்டு இருப்பவன என்று மட்டில் தான பரமாணம என்று வால்மீகியின ஸித்தாந்தம்.

---

## 12. "ராகவனுக்கு உலகத்தில் தாடகாவதம், கரவதம், வாலிவதம் இதுகளில் சொல்லும் அபவாதங்கள் கிடையாதென்ற ஸித்தாந்தம்."

ஸாக்ஷாத் ராகவன் ஸ்வதந்திரராக தாடகாவதம் செய்ய வில்லை. குருவாகயமான விசவாமித்ர வாகயத்தாலும் செய்ய வில்லை. பிதாவான தசரதா, ராமனை விசவாமிதரரிடம் ஒப்பி விக்கும்போது இந்த விசவாமித்ரா வாக்யத்தை என் வார்த்தையாகக்கேள் எனறதால அந்த விசவாமித்ரர் தாடகாவதம் செய் என்று சொன்ன வாக்யத்தை பிதாவார்த்தை என்று எண்ணிக் கொண்டு தாடகாவதம் செய்தார். இந்த அழகை கவனிப போம்:—பாலகாண்டம் 25-ம் ஸர்க்கத்தில 10-ம் ச்லோகத்தில நஹி தே ஸ்த்ரீவதக்ருதே க்ருணா கார்யா நரோத்தம । சாதுர்வர்ண்ய ஹிதார்த்தாய கர்த்தவ்யம் ராஜஸூநுநா । ந்ருசம்ஸமந்ருசம்ஸம் வா ப்ரஜாரக்ஷணகாரணாத் । பாதகம் வா ஸதோஷம் வா கர்த்தவ்யம் ரக்ஷதா ஸதா । ராஜ்யபாரநியுக்தாநாமேஷ தர்ம ஸநாதந: । என்று விசவாமித்ரா ராகவனைப்பாரதது நீ ஸ்திரீவதத் திற்காக யோசிககவேண்டாம். ஏ! நரோத்தம, நாலுஜாதிகளுக் கும் க்ஷேமத்தை உண்டுபண்ணுவதின பொருட்டு அது எதுவாய இருந்தாலும் செய்யத்தகுந்தது. ராஜாக்கள்செயயும காரியம் தோஷத்துடன் கூட இருந்தாலும் ஸரி, தோஷமில்லாததாய் யிருந்தாலும ஸரி, ராஜயத்தை பரிக்கிறவர்கள் நாலு வர்ணங

களின் க்ஷேமத்தின்பொருட்டு குற்றவாளிகள் யாரையும்கொல்ல இது ஸநாதனமான தர்மம் என்றார். மேலும் பூமியை அழிக்க இச்சித்தமந்தரையை இந்திரன கொன்று இருககிறான். பிருகு பத்னியை விஷ்ணு கொன்று இருக்கிறார். ஆதலால் துஷ்டைகளான அனேகம் பெண்டுகள் அனேகம் உத்தம புருஷர்களால் கொல்லபபட்டு இருககிறார்கள். ஆதலால நீயும் இந்த தாடகையைக்கொல்லலாம் என்றார். இதைக்கேட்டு ராகவன் விசவாமித்ரரைப பாரத்து பாலகாண்டம் 26-ம ஸர்க்கம் 1-ம் சலோகம்
ராகவ: ப்ராஞ்ஜலிர்பூத்வா ப்ரத்யுவாச த்ருடவ்ரத: | பிதுர்வசநநிர்தேசாத் பிதுர்வசநகௌரவாத் | வசநம் கௌசிகஸ்யேதி கர்தவ்யமவிசங்கயா | அநுசிஷ்டோஸ்ம்யயோத்யாயாம் குருமத்யே மஹாத்மநா | பித்ரா தசரதேநாஹம் நாவஜ்ஞேயம் ஹி தத்வச: | ஸோஹம் பிதுர்வச: ச்ருத்வா சாஸநாத் ப்ரஹ்மவாதிந: | கரிஷ்யாமி ந ஸம்தேஹஸ் தாடகாவதமுத்தமம் || என்று ராமன் விச்வாமித்ரரைப் பார்த்து அஞ்சலிபந்தம் செய்துக்கொண்டு பிதாவின ஆக்ஞையின் நின்றும், பிதாவசனம் என்கிற கௌரவததின் நின்றும், இந்த கௌசிகருடைய வசனம் சங்கை இல்லாமல் செய்யத்தகுந்தது. அயோத்தியில் குருமத்தியில பிதாவான தசரதரால், கௌசிகருடைய வாாத்தை தள்ளத்தகுந்ததில்லை என்றதால அவர் சொன்னபடி கேட்கவேண்டும். அப்பாவினால் ஆக்ஞை செய்யபபட்டபடியால் அப்படி அவரால் சொல்லப்பட்ட அந்த பிதா ஆக்ஞையைக்கேட்டு இந்த ப்ர்ம்மவாதியான விசவாமித்ரவார்த்தையால் உத்தமமான, தாடகாவதத்தை செய்கிறேன். இதில ஸந்தேகம் இல்லை என்றார். இப்படி ராமன் தாடகாவதம் உத்தமம் என்று எதனால் சொல்லுகிறார் என்றால் பிதா வார்த்தையாலேயே தவிற விச்வாமித்ர வார்த்தையால் இல்லை. கௌசிகரான குருவார்த்தையால் தாடகாவதம் செய்தார் என்ற ஓருமதமும், பிதாவார்த்தையும் குருவார்த்தையையும் கேட்டு தாடகாவதம் செய்தார் என்கிற (தர்மாகூதம் என்ற வ்யாக்யானமும் இங்கு அடிபடுகிறது) ஏனெனில் ஸபாமத்தியில் பிதா சொன்னதை எபபொழுது குறிப்பிடுகிறாரோ அப்பொழுது பிதாவார்த்தை கேட்டுத்தான தாடகாவதம். உத்த

ம்ம் என்கிறார். இதே ராகவன் இக்க்ரந்தத்தில் பிதாவை முத லாகவும் குருவை மூன்றாவதாகவும் சொன்னபடியால் ஸபையில் பிதா ஆக்ஞை, அவர் சொன்னதை கேட்கவேண்டும் என்றாக்ஞை யாதலால, பிறப்புக்கு மூலகாரணமான அந்த பிதா ஆக்ஞையாத லால், அப்பாசொன்னால நான் ஸீதையையும் பரதனுக்குகொடுப் பேன் என்றார், உயிரையும் கொடுப்பேன் என்றார். ஆதலால் இங்கு பிதாவார்த்தை என்பது வேதத்திற்கும்,சாஸ்திரத்திற்கும் மேலொத்தது,என்று ஸ்தாபிக்கிறார். கௌஸிகவாக்யமும் தாட காவதமான ஸ்திரீவததோஷத்தை நிவாரணம் செய்யாது என் கிறார் சாஸ்திரஙகளில் ஸ்திரீவதத்தால தோஷம் உண்டு என்று ஸ்தாபனம். வால்மீகிராமாயணத்தில்·பிதா ஆகஞைசெய்து விட் டால் ஸ்திரீவத பாபம் எல்லாம் ஓடிவிடும் என்கிறார். ராகவன் பிதாவார்த்தையால் தாடகாவதமான ஸ்திரீவதம் செய்தார். பரசுராமன் மாதாவாயும் ஸ்திரீயுமானவளை பிதா ஆக்ஞையால் கொன்றார். மாதிர் ஹத்தியான பாபமாவது, ஸ்திரீஹத்தியான பாபமாவது பரசுராமர் ஸமீபத்திலகூட வரவில்லை. காரணம் வுடைய ஆக்ஞை. பிதா பரத்யக்ஷதெய்வமல்லவா. ஸமயம் வந் தால் குருவார்த்தையைத் தள்ளிவிடலாம். பிதாவாக்யம் தள் ளத்தகுந்ததல்ல என்று ராமன் ஸ்தாபிக்கிறார். வஸிஷ்டர் அயோத்யாகாண்டத்தில் ராமா! உனக்கு நான் ஞானமகொடுத்த வன், இது பரியந்தம் இக்குலத்தில் மூததபிள்ளையே ராஜய பரி பாலனம் செய்து இருப்பதால் நீ ராஜயத்தை பெற்றுக்கொள்ள ஊருக்கு வரவேண்டும் என்றார். அதுகேட்டு ராகவன் மஹ ரிஷியே! தாங்கள் எத்தனாவது பேர்வழி என்பது தங்களுக்கு கொஞ்சம் ஞாபகம் இருக்கட்டும். என் பிறப்புக்கு மூலகாரண யான பிதா, என்னைப்பெற்ற மாதா, இருவரும் பெற்றுவளர்த்து பக்குவகாலம் வந்த பிறகு முதலில் அவர்களே குருவாய் இருந்து மஹா மந்ரோபதேசம்செய்து பிறகல்லவோ தங்களிடம் ஸகல வித்தைகளையும் கற்றுக்கொள்ள அனுப்பினது. ஆதலால் (இக் க்ரந்தப்படி பிதா, மாதா, குரு, பிறகு தெய்வம் ஆதலால பிதா வாக்யத்தையும் பிறகு மாதாவாக்யத்தையும் கேட்டுவிட்டு, தாங் கள் மூன்றாவது ஆதலால் மூன்றாவதாக தங்கள் வார்த்தையைக்

கேட்பேன் என்று அந்த ராமன் சொல்லிவிட்டார். ஆதலால் எக்காலத்திலும் பேசும தெய்வமாயும் பிறப்புக்கு மூலகாரணமுமான பிதாவின் வாக்யம் தள்ளத்தகுந்ததல்ல என்று ராமன் ஸ்தாபிப்பதாலும் ராமன் அமரா கௌஸல்யை இடத்திலும் நாஸ்தி ஶக்தி: பித்ருவாக்யம் ஸமதிக்ரமிதும் ௨௨ । என்று பிதா வார்த்தையைத்தள்ள சக்தி இல்லை என்கிறார். ஆகலால் பிதா வார்த்தைக் கேட்டுத்தான் தாடகாவதம் செய்கிறாரே தவிர வேறு அல்ல. மற்றொரு அமுதையும் கவனிப்போம. தண்டகாரண்யத்தில் ராமன் ஸீதையுடன் லக்ஷ்மணனுடன் இருக்கும் போது சூர்பனகி ஸீதையை விழுங்கிவிடுவதற்காக ஓடி வரும் போது ராமன லக்ஷ்மணனைப்பார்த்து ஆரண்யகாண்டம் 20-ம் ஸர்க்கம் ராக்ஷஸீம் புருஷவ்யாக்ர விரூபயிதுமர்ஹஸி । என்று லக்ஷ்மண! இந்தராக்ஷஸியை அங்கவீனம்செய் என்றார் கொல் என்று சொல்லவில்லை. கொன்றால் ஸ்திரீஜாதி, பாபம் என்கிறார். ஸீதையை கொலைவந்தவளையே இவர் கொல்லை சொல்லவில்லை. காரணம் ஸ்திரீ என்பேற தவிரவேறல்ல தாடகா வதம் செய்ததோ பிதாவினுடைய ஆக்ஞை. விசுவாமித்ரர சொல்படி, கேட்க சொல்லிவிட்டதால அவர் தாடகையை கொல்லச் சொன்னதால அவர் பிதா வார்த்தையில் கட்டுப்பட்டு தாடகாவதம் செய்ததால் ஒரு பாபமும இல்லை. பிதா வார்த்தையில் கட்டுபபட்டு இருப்பதால், தான் ஸ்வதந்திரர் இல்லை. காட்டில்வந்து இருக்கும்போது தான், ஸ்வதந்திரராதலால் சூர்பனகியை விரூபபபடுத்து, என்றார். லக்ஷ்மணரும் விரூபப்படுத்தினரோ தவிர கொல்லவில்லை. தவிர ஸீதை காணமல் போன பிறகு ராமலெக்ஷ்மணர்கள ஸீதையை தேடிக்கொண்டு செல்லும்போது அயோமுகி என்ற ஒரு ராக்ஷஸி லக்ஷ்மணனை தூக்கிக்கொண்டு செல்ல லக்ஷ்மணன் அவளையும் கொல்லாமல் அங்கவீனம் செய்தே அனுப்புகிறார். ஸ்திரீஜாதி கொல்லக் கூடாது என்று ஸதாபனம். சாஸ்திரத்தில் துஷ்டர்களை எவர்களானாலும் துஷ்டர்கள் பெண்டுகளானாலும் கொல்லலாம் என்று சாஸ்திரத்தை விசுவாமித்ரர சொல்லியிருந்தும் பிருகு பத்னியை விஷ்ணுவும், மந்தரையை இநதிரனும் கொன்றதைச சொல்லி

யும் ராமன் கேளாமல் எது எப்படியிருந்தாலும் ஸரி. எனக்கு பிதாவார்த்தை தான் ப்ரமாணம். அவர் வார்த்தையால் எதைச செய்தாலும் அதுபாபம் அல்ல. அது ப்ரத்யக்ஷதெய்வம் என்று ஸ்தாபித்து, ராமன் பிதிராவார்த்தையால் தான் தாடகாவதம் செய்தார் என்றும அதிலேயே தாடகாவதம் உத்தமம் என்றும் சொலலி அவளை வதித்தார் என்று இருக்க அபவாதம் எப்படிவரும்? இக்க்ரந்தரீதியாய் அவ்வபவாதம் அங்கீகரிக்கத் தகுந்ததல்ல என்று ஸித்தாந்தம்.

ஸாக்ஷாத் ராகவன் கரனோடு கோரயுத்தத்தைச் செய்துக் கொண்டு இருக்கும் காலத்தில் ஆரண்யகாண்டம் 30-ம் ஸர்க்கம் 20-ம் ச்லோகம் முதல் 25 வரையில் நிர்பிபேத ஸஹஸ்ரேண
பாணாநாம் ஸமரே ஸ்வயம் । தஸ்ய பாணாந்தராத்ரக்தம் பஹு-
ஸபேநம் ஸமவாஸ்ரவத் । கிரே: ப்ரஸ்ரவணஸ்யேவ தோயதாரா
பரிஸ்ரவ: । விஹ்வல: ஸ க்ருதோ பாணை: கரோ ராமேண ஸம்-
யுகே । மத்தோ ருதிரகந்தேந தமேவாப்யத்ரவத் த்ருதம் । தமாப-
தந்தம் ஸம்ரப்தம் க்ருதாஸ்த்ரோ ருதிராப்லுதம் । அபாஸர்பத்
ப்ரதிபதம் கிஞ்சித் த்வரிதவிக்ரம: । தத: பாவகஸங்காஶம் வதாய
ஸமரே ஶரம் । கரஸ்ய ராமோ ஜக்ராஹ ப்ரஹ்மதண்டமிவாபரம் ।
ஸ தத்தத்தம் மகவதா ஸுரராஜேந தீமதா । ஸந்ததே சாபி தர்மாத்மா
முமோச ச கரம் ப்ரதி ॥ என்று ராமன் ஆயிரம் பாணங்களால் யுத்தத்தில் கரனை அடித்தார். அந்த பாணங்கள் சரீரத்தில் பொத்து இருப்பதால் அந்த பொத்து இருக்கிற இடவெளியினின்றும் நுரையுடன் கூடின ரத்தமானது ஏராளமாக ப்ரவஹித்தது. எபபடிபோல் என்றால் ப்ரசரவணம் என்ற மலையினின்றும் தாரையாக கீழேபெருகும் அருவிபோல் ப்ரவஹித்தது. ராமனால் யுத்தத்தில பாணங்களால் மிகவும் நடுங்கினவனும் ரக்தத்தினுடைய கந்தத்தினலை மதித்தவனுமான கரனவன் ராமனையே வேகமாய் எதிர்த்தோடிவந்தான். மதித்தவனும் பரபரப்புடன் கூடினவனும் ஓடிவருகிறவனும் ரக்தத்தினல் நனைந்த சரீரத்தை உடையவனும் இருக்கிற கரனை, பூட்டபபட்டு இருக்கிற அஸ்திரத்துடன் கூடினவரான ராமன் அதி வேகமான பராக்ரமத்துடன் கூடினவராய்க் கொண்டு

பூட்டப்பட்டு இருக்கிற அஸ்திரத்தால் கரனை ஓரடியை (நாகர புஸ்தகரீதியாய், இரண்டு மூன்றடிகளை) பின் அடையும்படி செய்தார். இதுதான் ச்லோகத்தினுடைய அர்த்தம். இப்படி இருக்க சிலர் இதை விட்டு ராமன், கரன் கிட்டேவந்ததும் ஓரடியைத் தான் பிந்தி வைத்தார் எனகிறார்கள். அதிவேகமான பராக்ரமத்துடன் கூடின ராமன் காலடியை பிந்திவைத்தார் என்றால் இதற்கு பராக்ரமம் என்னத்திறகு என்று கேட்டவை? எதிராளிக்குப்பயந்து பின் ஓடுபவருக்கு என்ன பராக்ரம அழகுவேண்டியிருக்கிறது? மேலும் ஙுபிதஸீ: என்று வால்மீகி ப்ரயோகித்த இடம் முழுமையுமே வால்மீகி ராமனுக்கு பௌருஷத்தை ஏற்றிப்பேசின இடத்தில தான் ப்ரயோகித்து இருக்கிறரே தவிற குறைவான இடத்தில் ப்ரயோகிக்கவேயில்லை. தவிற சிலாகித்து இருக்கும் இடங்களில் குறைவுசொல்வது கூடாதாதலாலும் இந்த இடம் தவிற, பாலகாண்டத்தில் 76-ம் ஸர்க்கத்தில் 4-ம் ச்லோகத்தில் [illegible] என்று கோபத்தை உடையவராய் சீக்ரமான பராக்ரமமுள்ள அந்த ராமன் பரசுராமனுடைய கரத்தினின்று பார்க்கவருடைய சரத்தையும் வில்லையும் க்ரஹித்தார் என்று இருக்க இந்த இடத்திலும் [illegible] என்பது பராக்ரமத்தை காட்டுவதற்கு ஏற்பட்டு இருக்கிறதே தவிற குறைவைக்காட்ட ஏற்படவில்லையாதலாலும் கரனையே ஓரடியை பின்னடையும்படி செய்தார் என்பதே ப்ரத்யக்ஷப்ரமாணம். கரவதம் ஆனதும் வால்மீகி ராமன் எப்படிபோல கரவதம் செய்தார் என்றால் ச்வேதாரண்யத்தில் பரமசிவன் அந்தகாஸுரனை வதம் செய்ததுபோல் என்று சொலலியிருக்க இப்படி ச்லாகிக்கும் கவி, காலடியைப் பிந்திபோட்டார் என்று எப்படிசொலலுவார் என்று கேள்வை? தவிற [illegible] என்றபதம் இக்ரந்தத்தில் பல இடங்களில் பிரயோகிக்கப்பட்டு இருக்கிறது. சில இடங்களில் கவி எப்படி அதன் அர்த்தத்தை ப்ரகணங்களில் காட்டியிருக்கிறர் என்பதையும் கவனிபபோம். அதாவது ஸுந்தரகாண்டம் 10-ம் ஸர்க்கம் 12-ம் ச்லோகம் [illegible]

வசு ! என்று ஹநுமான் ராவணன் படுத்துக்கொண்டு தூங்குவதைக்கண்டு அவன் தேஜஸ்ஸில் மிகவும் நடுங்கினவராய்க் கொண்டு ஹநுமான் பின்நகர்ந்தார என்றூர் கவி. யுத்தகாண்டம் 97-ம் ஸர்க்கம் 20-ம் ச்லோகத்தில ஃவ ரஸவ-ஃக ய நூஃ ஃா நு ஃ நிவவா த ஃஃா ஃ ! என்று ஸுக்ரீவனுல அறையபபட்ட யானையானது ஒரு தனுஸ் நீளம் பின் நகர்ந்து விழுந்து செத்து விட்டது என்றூர் கவி.

உத்தரகாண்டம் 37-ம் ஸர்ககம் 64-ம் சலோகம் ஃவ ரஸவ-ஃக ய நூஃ ஃாந ஃ நிஷதொ நூ வ நிஷ நூ ! என்று கார்த்தவீர்யார்ஜஜுனன கதையால் பரமித்த ராவணன் ஒருவில நீளம் பின் நகர்ந்து நடுஙகினுா என்று இருககிறது. இப்படி சில ப்ரமாணங்கள். இதுகளில எல்லாம் கவனித்தால பயந்து பின் நகர்ந்தான் என்றே குறிப்பிடப்பட்டது. இந்த பின் நகர்ந்த இடங்களில பௌருஷ சலாகன ஸம்பந்தமான பதப்ரயோகமே கிடையாது. ஆனுல் கரவதகட்டத்தில கிஃநிக ஃவரி தவி க ஃ: ! என்று கவி குறிபபிடுவதாலும் அந்தகாஸுரவதத்தை உபமானம் சொல்வதாலும், இது சலாக்கனத்தைக் காட்டி பௌருஷத்தை ஸ்தாபிப்பதால் இப்படியே பரசுராம காவபங்க கட்டத்திலும் பௌருஷலக்ஷணத்தை பதத்தில் காட்டியதாலும் கரனையே பின்னடையும்படி செய்தார் என்றே கவியின் ஸித்தாந்தம் (தவிற பூஷண வ்யாக்யாதாவும் கரனையே இரண்டு மூன்றடியை பின்னடையும்படிசெய்தார் என்றும் ஃவ ரஸவ-ஃக என்ற பதத்திறகு எதிராளியை பின்னடையும்படி செய்கிறதென்றர்த்தம் என்றும் எழுதியும் இருக்கிறூர். தவிற ஃவ ரஸவ-ஃக என்பது ணிஜநத்தில் வரும் என்று ஃஷணம் என்ற வ்யாக்யாதா வர்ணித்திருக்கிறூர். இது பம்பாய குஜராத்திபிரஸ்ஸில் இருந்து வெளிவந்த நாகர புஸ்தகத்தில குறிபபிட்டிருக்கிறது. (வேண்டுபவர்கள் அதிலும் பார்த்துக்கொள்ளலாம்) கவிவாக்யமே ஸர்வத்திற்கும் ப்ரமாணமாதலால் பௌருஷசலாக்கனத்தாலும் கையில் இருந்த அஸ்திரத்தால் கரனை பின்னடையும்படி செய்து. வேறு ஒரு பாணத்தால் கரனை அடித்ததாய் கவியின் ப்ரயோகமும் இருப்பதால் ராமன் காலடியை பிந்திபோட்டார் என்பது பிசகு

என்றும் ஸித்தாந்தம். தவிர வயாகர்ணுதி ஒரு சாஸ்திரத்திற்கும ராமாயணம் கட்டுப்படாது என்பது ஸத்யம். அயோத்தியா பட்டணம், இருக்கிறபோது சூலீக், இருந்தது, என்று எப்படி பதப்பிரயோகம செய்தார் என்று கேள்வை? எந்த இடமும் கவி வயாக்யத்தால ப்ரகரணத்தை ஒத்து அர்த்தம் சொல்ல வேண்டும். இந்த இடத்தில ராம பௌருஷத்தை ச்லாகித்த இடமாதலால ராமன் காலை பிந்திப்போட்டார் என்பது சுத்த பிசகு என்றும் ஸித்தாந்தம். தவிர லக்ஷ்மணன் இந்திரஜித்தை வதிக்கும்போது ராம பௌருஷத்தைப் பற்றி குறிபபிட்டு என் அண்ணுவான ராமனுடைய பௌருஷத்திற்கு ஸமானமாய் மற்றொருவன் இல்லாமல் இருப்பது உண்மையாய் இருக்குமேயானல் ஏ! அஸ்திரமே, நீ இந்திரஜித்தைக் கொன்றுவா என்று சொல்ல அது கொன்றிருக்க எதிரியான கரனைகொல்ல முடியாமல ராமன் பின்னடைந்தான், பிறகு கொன்றுன் என்றுல இந்த ராமனுக்கு பௌருஷத்தில மற்றொருவன் எதிர இல்லாதவன் என்பது எபபடி பொருந்தும்? ஆதலால் கவி எங்கு எங்கு எப்படி எபபடி பதங்களை பௌருஷததிலேயே ப்ரயோகித்து இருக்கிருரே அங்கு அங்கு அபபடிததான சொல்லித் தீரவேண்டும் எனறும ஸித்தாந்தம். மேலும் தேவதைகள் கரவதமானதும் ராம பௌருஷத்தை சலாகிக்கிருர்களே, சலாகிககலாமா? காலை பின்போட்டவனை எப்படி சலாகிபபது. தவிர இவர்பலம் என்ன பலம், அதி அத்புதமாய் இருக்கிறதே இவர் விஷ்ணுவைபபோல் விளங்குகிருர் என்கிருர்களே எபபடி? தவிர வாலமீகியே கரவதமானதும், அவன் அடிபட்டதை வர்ணிககும்போது ருத்ரனுல் அந்தகாஸுரவதம் போலும் இநதிர வஜ்ரத்தால் வ்ருத்ர வதம் போலும் நுரையினுல நமுசிவதம போலும் இடியினுல வலனவதம போலும் கரன் விழுந்தான், ராமனுல கொல்லப்பட்டான் எனது இபபடி பௌருஷத்தை சலாகித்து இருக்க எப்படி ராமன காலைப பிந்திப்போட்டார் என்பது? யுத்தத்தில காலை பின்போட்டவன சலாகிக்கத் தகுநதவனு? அவன் பௌருஷம் கொண்டாடத்தகுந்ததா? தவிர ஸ்வாஸ்வ-உக் என்ற பதமானது எதிரிக்கு பயந்து பின்னடையும் இடத்திற்கு தான் ப்ர

யோகிக்கவேண்டியது. இங்கு கவி ராமனை மிகவும் வேகமுள்ள பௌருஷமுள்ள ராமன் என்று பலத்தை ச்லாகித்து இருப்ப தால் ஸவாஸவ-ஐஸ் என்றபதம் கரனுக்குப் போய்விட்டது என் பது ப்ரத்யக்ஷம். பௌருஷ பதப்ரயோகம் இல்லாமல் இருந்து இருந்தால் ராமனுக்கு ஏற்படும் அபபடியில்லாமல் ராமனுடைய பௌருஷத்தை கரவதத்தில் வால்மீகியும் தேவதைகளும் ரொம் பவும் சலாகித்து விட்டதால் பல மஹத்தான வதங்களையும் உபமானம் காட்டி விட்டதால ஸவாஸவ-ஐஸ் என்பது கரனுக்கே தவிற ராமனுக்கு அல்ல என்பது ப்ரத்யக்ஷம்.

தவிற உலகத்தில் இநத இடததில கரன் கிட்டே ஓடிவந் ததும் அவன் ரத்தமானது தன் பேரில படாமல் இருக்கும்படி ராமன் ஓர் அடி பின்நகர்ந்தார் என்பது ஒருகூஷி. யுத்தகளத்தில் இருவர் யுத்தம் செய்யும்போது ஒருவர் ரத்தம் ஒருவர்பேரில படத்தான் படும் இதில ஸந்தேகமேயில்லை. ஆதலால் இதுவும் சரியல்ல தவிற மலையிலிருந்து பெருகும் மலையருவி எதிர்த் தடிக்காது என்பதும் ஸ்திரம். மேலும், யுத்தத்தில் முன்வைத்த காலை பின்வைக்கக்கூடாது என்ற தர்மத்தை ஒரு சுத்தவீரன் மீறுவானு? அப்படி தர்மத்தை மீறி காலடியை பின்போட்ட இவரை தர்மாத்மா என்று எபபடி கவி சொன்னுர் என்றும் கேள்வி? யுத்தத்தில் முன்வைத்த காலை பின்வைக்கலாமென்று ஆதாரமுண்டா? அபபடி இருந்தால் உத்தர ராமசரிதம் எழு தின பவபூதி ஏன் குறைவு 'சொலலுகிறுர்? வால்மீகி ராமாயண மானது ஒன்றையும் அங்கீகரிக்காது. ஸகலரும் தங்கள் புத்தி சாலித்தனத்தை காட்டுகிறுர்களே தவிற வேறு அல்ல. பவபூதி ராமனிடத்தில் சொனன மூன்று தோஷங்களையும் வால்மீகியே கண்டித்துவிட்டார். ஆதலால் அந்தநத க்ரந்தத்திறகு அதுவே ப்ரமாணம். அப்படி இருக்குமானுல் ராமன் காலடியை கரயுத் தத்தில் பின்போட்டார் என்ற அபவாதத்தை உலகில சொல்லு வார்களா! காலடி பின்போடுவது அதர்மமாதலால அவர்போட் டதாக வால்மீகி சொல்லாததால, சொலலி ராமனுக்கு அபவா தத்தை உண்டு பண்ணிவைக்கக் கூடாதாதலால் இந்த அர்த்தம் பொருத்தமில்லை பிசகு என்று ஸித்தாந்தம். தவிற அபவாதம்

உள்ளவனுக்கு நரகமாதலாலும் இந்த அபவாதத்தை கல்பிப்பது உசிதம் அல்ல என்றும் ஸித்தாந்தம். மற்றொரு கக்ஷியில் கரன் கிட்டவந்து விட்டதால் அவனை அடிக்க! இடவெளியில்லாமல் அதற்காக பின் நகர்ந்தார் என்பது. அதையும் வால்மீகி சொல்லாததால் இல்லாததைச்சொல்லி அதை ஸ்திரப்படுத்த கஷ்டப்படுவதும் உசிதமல்ல. ஆதலால் இதுவும் பூர்வபக்ஷம் எதற்காக நகர்ந்தாலும் அதாமம் அதாமம்தானே. ஆதலால இதுவும் ஸரியல்லஎன்று ஸித்தாந்தம். விஷயத்தை கவனிக்கும்போது ராமன் கரனையே பின்னடையச்செய்தார் என்பதே பிரத்யக்ஷ பிரமாணமாதலால் இக்க்ரந்தரீதியாய் ராமன் கரனிடம் காலடியை பிந்தி போட்டார் என்ற அபவாதம் அங்கீகரிக்க தகுந்ததல்ல என்று கவி வாக்யத்தால் ஸித்தாந்தம்.

வாலிவதத்தில் வால்மீகி வாக்ய ரீதியாய் வாலியாவது அவன் போட்டுக்கொண்டு இருக்கும மாலையாவது எதிராளிபாதி பலத்தையாவது முழு பலத்தையாவது இழுக்கும் யோக்யதை உண்டு என்று வால்மீகி சொல்லாததாலும் சுத்த க்ஷத்ரியர்கள் வேட்டையிலும் மிருகங்களையும் நேரிடவேதான் அடிக்கவேண்டுமாதலாலும் வாலி எதிரில்நின்றால் ராமனை வாலி சரணாகதிசெய்து விட்டால் அவனை ரக்ஷிக்கவேண்டியிருக்கும் என்று ராமன் வாலிக்கு மறைந்தார் என்று வால்மீகி சொல்லாததாலும், வால்மீகி, ராமன் வாலியையடிக்கும்போது மறைந்துக கொண்டிருந்தார் என்று அவர் தன் வாக்கில, ஒரு ஸ்லோகத்திலாவது இக்க்ரந்தத்தில் சொல்லாததாலும, வாலி எதிரில் நின்றால், அவனை ரக்ஷிக்கவேண்டியிருக்கும அதற்காக மறைந்தார் என்றால் எதிரில நின்றால சரணாகதிக்கு வந்துவிடுவான் அதுகூடாது என்று மறைந்தார் என்றால, எதிராளி சரணாகதிக்கு வரக்கூடாதென்று எண்ணமுள்ள இவருக்கு சரணாகத ரக்ஷகன், ஸ்வதர்மத்தை விடாதவன என்ற பெயரே போய்விடும் ஆதலாலும், வாலியை அழிப்பதாய் எப்பொழுது பிரதிக்ஞைசெய்து விட்டாரோ அவர் ஒருநாளும் அவனை ரக்ஷிக்கமாட்டார் என்றும், ஸத்யத்தை மீறக் கூடாதாதலாலும், சுக்ரீவன் வாலியுடன் எதிர்த்துக் களைத்து விட, உடனே ராகவன் அவனுடன் சண்டை போடுவதற்காகவே

கொண்டுவந்த சூர்யகாந்தியை நிகர்த்த பாணங்களைக் கொண்டு எதிர்க்க ராமனுடன் சண்டை போடுவதற்காக ஸ்வர்ணமயமான மாலை போட்டுக்கொண்டு வந்த வாலி ராமனது வில் நாணோசைகேட்டு ராகவனை எதிர்த்து ராமன்பேரில் மரங்களையும் பயங்கரமான மலைகளையும் ப்ரயோகிக்க அவ்வளவையும் ராமன் கணுக் குறுகிய பாணங்களால் சேதித்துவிட உடனே வாலியானவன் தாடகையைப்போல், கரனைப்போல், மன்மதனைபபோல் ராமனைக் கொல்லுவதற்காக எதிர்த்துவர அப்படிவரும் அவனை உத்தமமான ஒரு பாணத்தால அடித்துவிட அடிபட்டதால் சித்தம் இழந்து, மாரில் இருக்கும் மாலை உயிரைமட்டும் ரக்ஷிக்கும்யோக்யதை உடையதாதலால் அதனால் உயிருடன் இருந்துகொண்டு வாயில் வந்தபடி இல்லாததை எல்லாம் சொல்லி புலம்பினான். ராமன் நீ ஸ்வதர்மத்தை விட்டதால் நான் உன்னை யுத்ததில எதிர்த்தே கொன்றேன். உன்னைக்கொன்று நான் தர்மத்தை ஸ்தாபித்தேன் என்று சொன்ன ராம வாக்யம் கேட்ட வாலியானவன் குற்றத்தை நன்றாய் தெரிந்துகொண்டவனாய் பாணம் ஹ்ருதயத்தை பிளந்து விட்டதால் சித்தம் இழந்து நான் பல விதமாய் உம்மை தூஷித்துவிட்டேன், மன்னிக்கவேண்டும் என்றுசொல்லி மாலையை ஸுக்ரீவனுக்குக்கொடுத்து வீரஸ்வர்க்கத்தை அடைந்தான். இப்படி வால்மீகி எதிரியின் தேஜஸ்ஸை அபஹரிக்கும் அஸ்திரமுடைய ராமன், வாலியை எதிர்த்தே அடித்தார் என்று ஸித்தாந்தம் செய்து இருப்பதால் ராமன் வாலியை மறைந்தடிக்கவே இல்லை என்று ஸித்தாந்தம (இந்த வாலிவத விருத்தாந்தத்திறகாக தர்மஸ்தாபனமான வாலிவத ஸித்தாந்தம் என்று ஒருபாகம் பிந்தி ஸவிஸ்தாரமாய ராமனுக்கும் வாலிக்கும் ப்ரத்யக்ஷ யுத்தமே நடந்தது என்று ஸித்தாந்தம் செய்து இருப்பதால் அதில் இதை பார்த்துககொள்ளலாம்.)

இப்படி வால்மீகி தாடகாவதத்திலும் கரவதத்திலும் வாலிவதத்திலும் தோஷத்தைச் சொல்லாமல் இருக்கும் போது மற்ற க்ரந்தங்களிலும் உலகத்திலும் சொல்லும் அபவாதங்கள் ஒரு விதத்திலும் அங்கீகரிக்கத் தகுந்ததில்லை என்றும் ராமவாக்கில் உத்தரகாண்டத்தில் ஸீதா த்யாககட்டத்தில் தம்பிகளை ராமன்

பார்த்து என்ன சொன்னார் என்றால் 54-ம் ஸர்க்கத்தில் 14-ம் ச்லோகத்தில் அகீர்த்திர்யஸ்ய கீயேத லோகே பூதஸ்ய கஸ்யசித் । பதத்யேவாதமாந் லோகாந் யாவச்சப்த: ப்ரகீர்த்யதே । என்று எவனுக்கு அபவாதமானது எது பரியந்தம் லோகத்தில் விளங்குகிறதோ அதுபரியந்தம் அவன் அதமமான லோகங்களை அடைகிறான் என்கிறார். இப்படிச்சொல்லி அபவாதத்திற்காக ஸீதையை உடனே விட்டுவிட்டார். அக்னிப்பிரவேசம் செய்து வந்த ஸீதைக்கு அபவாதம் சொன்ன ஜனங்கள் (வண்ணான் சொன்னானென்பது வால்மீகி வாக்யம் அல்ல) ராமன் ஸ்திரீயைக் கொன்றான், கரவரத்தில், சூரன், காலைப் பிந்திப்போட்டான், வீரன், வாலிவதத்தில் மறைந்துக் கொண்டடித்தான் என்ற தோஷத்தை மட்டும் அவர்களுக்கு சொல்லத்தெரியவில்லை. போலும்? அவர்கள் சொல்லியிருந்தால கவி ஸீதைக்கு அபவாதம் வந்ததை சொன்னவர் சொல்லாமல்விடுவாரா? அப்படியே நடந்தபடிசொல்லும் கவி, அதுகளெல்லாம் ஸரியே என்றார் என்றால் அப்பொழுது அந்தஜனங்களுக்கு அபவாதம் சொல்லதெரியாமல்போனாலும இக்காலத்தில் அபவாதம் சொல்லும் ஜனங்களுக்காவது ராமன் நரகத்தை அடையவேண்டு மல்லவா. க்ரந்தத்தை கவனித்தால் கவி எபபடி ராமனை அனுபவிக்கிறார். எப்படி தோஷமில்லாதவராய்ச சொல்லியிருக்கிறார், தோஷம் இல்லாத விக்ரஹமாய் இருக்கக்கொண்டல்லவோ அந்த ராம ரூபமானது அதேசரீரத்துடன் தம்பிகளுடனும் அப்படியே பிரம்மமாக மறைந்தது. அதனுடையசரித்திரத்தில வால்மீகி ஆகாசத்திற்கு ஆகாசமே உபமானமென்றும் ஸமுத்திரத்திற்கு ஸமுத்திரமே உபமானமென்றும் ராம ராவண யுத்தத்திற்கு அதுவே உபமானமென்றும் ஸ்ரீமத் ராமாயணத்திற்கு ஸ்ரீமத் ராமாயணமே உபமானமாகக் காட்டி விட்டதால அந்த அந்த க்ரந்தத்திற்கு அதுவே ப்ரமாண மாதாலால் வால்மீகி வாக்யபபடி இம்மூன்றிலும் ராகவனுக்குத்தோஷம் கிடையாது என்று ஸித்தாந்தம்.

---

## 13. கங்கை விஷ்ணுபாதத்தில் இருந்து பெருகும்போதே சிவன் தலையில் விழவில்லை என்ற ஸித்தாந்தம்.

*பாலகாண்டம் 35-ம் ஸர்க்கம் 15-ம் ச்லோகம் 𑌨𑌾𑌮𑍍𑌨𑌾 𑌮𑌨𑍋𑌰𑌮𑌾 𑌨𑌾𑌮 𑌪𑌤𑍍𑌨𑍀 𑌹𑌿𑌮𑌵𑌤𑌃 𑌪𑍍𑌰𑌿𑌯𑌾 । 𑌤𑌸𑍍𑌯𑌾𑌂 𑌗𑌂𑌗𑍇𑌯𑌮𑌭𑌵𑌜𑍍 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌾 𑌹𑌿𑌮𑌵𑌤𑌸𑍍𑌸𑍁𑌤𑌾 ॥ என்று கங்கை ஹிமவானென பர்வதராஜனது பத்தினியான மனோரமா என்பவளுக்கு மூத்தபெண், இரண்டாவது புத்ரி உமாதேவி. இந்த விஷயத்தை விச்வாமித்ரர் ராமனுக்குச் சொல்லுகிறார். (அதாவது கங்கையின் விருத்தாந்தத்தைக்கேட்ட ராமனுக்கு சொன்னது) இதனால் கங்கை பர்வதராஜன் புத்ரி என்று ப்ரமாணம். பிறகு இந்த கங்கையை பாலகாண்டம் 35-ம் ஸர்க்கம் 17-ம் ச்லோகம் 𑌅𑌥 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌾𑌂 𑌸𑍁𑌰𑌾𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑍇 𑌦𑍇𑌵𑌤𑌾𑌰𑍍𑌥𑌚𑌿𑌕𑍀𑌰𑍍𑌷𑌯𑌾 । 𑌶𑍈𑌲𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌵𑌰𑌯𑌾𑌮𑌾𑌸𑍁𑌃 𑌗𑌂𑌗𑌾𑌂 𑌤𑍍𑌰𑌿𑌪𑌥𑌗𑌾𑌂 𑌨𑌦𑍀𑌂 । 𑌦𑌦𑍌 𑌧𑌰𑍍𑌮𑍇𑌣 𑌹𑌿𑌮𑌵𑌾𑌂𑌸𑍍𑌤𑌨𑌯𑌾𑌂 𑌲𑍋𑌕𑌪𑌾𑌵𑌨𑍀𑌂 । 𑌸𑍍𑌵𑌚𑍍𑌛𑌨𑍍𑌦𑌪𑌥𑌗𑌾𑌂 𑌗𑌂𑌗𑌾𑌂 𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌹𑌿𑌤𑌕𑌾𑌮𑍍𑌯𑌯𑌾 । 𑌪𑍍𑌰𑌤𑌿𑌗𑍃𑌹𑍍𑌯 𑌤𑌤𑍋 𑌦𑍇𑌵𑌾𑌃 𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌹𑌿𑌤𑌕𑌾𑌰𑌿𑌣𑌃 । 𑌗𑌂𑌗𑌾𑌮𑌾𑌦𑌾𑌯 𑌤𑍇 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍 𑌕𑍃𑌤𑌾𑌰𑍍𑌥𑍇𑌨𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 । என்று தேவதைகள் எல்லாரும் ஹிமவானுடைய மூத்த பெண்ணான அந்தக் கங்கையை தேவகாரியத்தை உத்தேசித்து மூன்று இடங்களில் செல்லப்போகிற நதியான கங்கையை லோகத்தை பாவனம் செய்யப்பட்ட அந்த கங்கையை மூன்று லோகத்திற்கும் க்ஷேமத்தை உண்டுபண்ணுவதற்காக ஜலரூபியாய் இஷ்டபடி ஸஞ்சரிக்கும் அவளை கொடுத்தார். பிறகு தேவலோகம் சென்று அவள் நதியாய் ஆகாசத்தில் ஸஞ்சரித்துக் கொண்டு இருந்தாள் எனறும் விச்வாமித்ரர் சொன்னார். பிறகு இப்படி யிருக்க பகீரதமஹாராஜன் ஸாகரர்கள் உத்தமலோகம் அடைவதற்காக கங்கையை பூலோகம் கொண்டுவந்து பாதாளம் கொண்டுபோய் ஸகரபுத்ரர்களை கடைத்தேற்றுவதற்காக தபஸ் செய்தான். கங்கையைசெல்லும்படி சொல்லி பிர்மா அனுக்ரஹம் செய்து பிர்மா பகீரதனிடம் நீ பரமசிவத்தை பிரார்த்தித்தால் ஆகாசத்தில் இருந்து அதிவேகத்துடன் விழும் கங்கையை பூமி தாங்கமுடியாததால அவர் தாங்கி பிறகு அனுகூலம் செய்வார் என்று சொல்ல அவனும் அங்கீகரித்து அவருக்காக தபஸ் செய்ய*

பரமேச்வரன் அங்கீகரித்து அவள்வரும் இடத்தில் இவர் இருக்க உடனே கங்கை பரம கர்வத்துடன் அவர் தலையில் விழுந்தாள். பாலகாண்டம் 43-ம் ஸர்க்கம் 6-ம் சலோகத்தில் ககநாச்சங்கரசிரஸ்ததோ தரணிமாச்ரிதா । என்று ஆகாசத்திலிருந்து சிவன் சிரஸில் விழுந்தாள், அதை அவர் தாங்கினார் என்றார். இந்த சலோகப்படி ஆகாசத்தில் இருந்து கங்கை விழுந்தாள் என்று ஸித்தாந்தம். விஷ்ணுபாதத்தில் இருந்து விழும்போது சிவன் தாங்கினார் என்பதே இக்கிரந்த ரீதியாய் கிடையாது. அயோத்யாகாண்டத்தில் 56-ம் ஸர்க்கம் 25-ம் சலோகத்தில் வால்மீகியின் ஸ்வயமானவாக்யம். ராமன் காட்டுக்குவரும்போது கங்கைக் கரையை அடைந்தார். அது எப்படிப்பட்ட கங்கை என்று வர்ணிக்கிறார் என்றால விஷ்ணுபாதச்யுதாம் திவ்யாமபாபாம் பாபநாசிநீம் । தாம் சங்கரஜடாஜூடாத் ப்ரஷ்டாம் ஸாகரதேஜஸா । ஸமுத்ரமஹிஷீம் கங்காம் ஸாரஸக்ரௌஞ்சநாதிதாம் । ஆஸஸாத மஹாபாஹு: ச்ருங்கிபேரபுரம் ப்ரதி ॥ என்று விஷ்ணுபாதத்தில் இருந்தும் நழுவினதாயும் திவ்யமானதாயும் பாபம் இல்லாததாயும் பாபத்தைப போக்கடிக்கக் கூடியதாயும் சங்கரன்ஜடையினின்றும் நழுவினதாயும் ஸமுத்ரத்தின் தேஜஸ்ஸுடன் கூடினதாயும் ஸமுத்ரராஜனுக்கு மஹிஷியாயும் உள்ள கங்கையின்கரையை அடைந்தார்என்றார் வால்மீகி. இதில் விஷ்ணு பாதத்தில் இருந்துநழுவினதாயும் என்பது இது எந்தகாலமோ, சங்கரரான பரமசிவன் தலையில் விழுந்தகாலம் எதுவோ ஒன்றுக் கொன்று ஸம்பந்தமே இல்லையே. இப்படி இருக்க எப்படி விஷ்ணுபாதத்தில் இருந்து பெருகினபோதே சிவன் தலையில் விழுந்தது என்று சொல்லமுடியும்? தவிற முதலில் கங்கையானவள் விஷ்ணுபாதத்திலிருந்தே உண்டாகி வியத்கங்கையாக ஆகாசத்தில் தேவலோகத்தில் நதிரூபமாய் ஸஞ்சரித்துக் கொண்டு இருந்தாள். ஹிமவான் அவளை தனக்கு பெண்ணாக வரவேண்டும் என்று பிரார்த்திக்க அவள் பெண்ணாக பிறந்தாள். பிறகு தேவதைகள் லோகக்ஷேமத்திற்காக நதிரூபியான அவளை மூன்றுலோக க்ஷேமத்திற்காக தரவேண்டும் என்று கேட்க அவரும் ஸந்தோஷித்து கொடுத்தார். அவர்களும் பெற்றுக்

கொண்டு சென்றார்கள் கொஞ்சகாலத்திற்கு பிறகு பகீரதன் ப்ரார்த்திக்க பரமசிவன் ஆகாசத்தில் இருந்துவிழுந்த கங்கையை பூமிதேவிக்காகவும் பகீரதன் ப்ரார்த்தனைக்காகவும் தாங்கினார். அவருக்கு தாங்கவேண்டும் என்று ப்ரார்த்தனையே கிடையாது. பக்தஸம்ரக்ஷணைக்காக தாங்கினதே தவிற வேறு யாதொன்றுமே இல்லை. அது பரம சுத்தமானது ஸாக்ஷாத் பரமேச்வரனிடம் இருந்து நழுவினது. பகீரதனுக்காக நழுவினது. பரமசிவனை பரமேச்வரனால் பிந்து ஸிரஸில விடபபட்டது. இது பவித்ரம் என்று ஸர்வதேவர்கள் முதலிய ஸகலரும் அதில் ஸ்நானம் செய்தார்கள். அப்புண்ணிய நதியான கங்கை செல்லும்போது சாபம் அடைந்து இருந்த அனேகருடைய சாபத்தை முழுமையும் போக்கி ஸகலருக்கும் உத்தமலோகத்தை அளித்துக் கொண்டு பாதாளம்சென்று ஸாகரர்களையும் புண்யலோகம் அனுப்பி பிறகு ஸமுத்ரத்தை அடைந்தது என்றார். இதிலிருந்து இக்கவி வாக்யப்படி கங்கை விஷ்ணு பாதத்தில் இருந்து பெருகுகிறபோதே சிவன் சிரஸில் விழுந்தாள் என்பது இல்லை என்று ஸித்தாந்தம்.

## 14. இந்திரன் அகல்யையை காமத்திற்காக அடையவில்லை என்ற ஸித்தாந்தம்.

பாலகாண்டம் 48-ம் ஸர்க்கம் 17-ம் ச்லோகம் முதல் 22-ம் ச்லோகம் வரை தஸ்யாந்தரம் விதித்வா து ஸஹஸ்ராக்ஷ: ஶசீபதி: । முநிவேஷதரோ(அ)ஹல்யாம் இதம் வசநமப்ரவீத் । ருதுகாலம் ப்ரதீக்ஷந்தே நார்த்திந: ஸுஸமாஹிதே । ஸங்கமம் த்வஹமிச்சாமி த்வயா ஸஹ ஸுமத்யமே । முநிவேஷம் ஸஹஸ்ராக்ஷம் விஜ்ஞாய ரகுநந்தந । மதிம் சகார துர்மேதா தேவராஜகுதூஹலாத் । அதாப்ரவீத் ஸுரஶ்ரேஷ்டம் க்ருதார்த்தேநாந்தராத்மநா । க்ருதார்த்தாஸ்மி ஸுரஶ்ரேஷ்ட கச்ச ஶீக்ரமித: ப்ரபோ । ஆத்மாநம் மாம் ச தேவேஶ ஸர்வதா ரக்ஷ கௌதமாத் । இந்த்ரஸ்து ப்ரஹஸந் வாக்யம் அஹல்யாமிதமப்ரவீத் । ஸுஶ்ரோணி பரிதுஷ்டோ(அ)ஸ்மி கமிஷ்யாமி யதாகதம் ॥ என்று ஆயிரங்கண்களை முன்ன காலமுதல் உடையவனை இந்திரன் ரிஷி இல்லாதகாலத்தில் முனியான கௌதம

வேஷத்துடன் அகலயையை அடைந்து அகல்யைப் பார்த்து இந்த வாக்யத்தைச்சொன்னான். இச்சையுள்ளவர்கள் ருதுகாலத்தை எதிர்பார்க்கப்பட்டார்கள். நான் உன்னிடம் சேர்க்கையை இச்சிக்கிறேன் என்று சொல்ல அப்பொழுது ரிஷி வேஷத்தில் உள்ள அவனை ஆயிரங்கண்ணனை இந்திரன் என்றும் தெரிந்து கொண்டு கெட்டவளான அவள் தேவராஜா கிடைத்தான் என்று குதூஹலத்தால அவனைச் சேர்ந்தாள். பிறகு இந்திரன் நான் ஸந்தோஷித்தேன் என்றாள் அவளும் அவனைப்பார்த்து கிருதார்த்தையாகி விட்டேன். நீர் இப்பொழுதே சீக்ரமாய்ச் சென்றுவிடும் உம்மையும் என்னையும் ரக்ஷித்துக்கொள்ளும் என்று இப்படிச் சொல்ல இந்திரன் மந்தஹாஸம் செய்து சென்று வருகிறேன் என்று புறப்பட்டான் என்று இப்படி விசுவாமித்ரர் ராமனுக்குச் சொன்னார். இதனால் லோகத்திலும் மற்றவர்கள் அபிப்ராயத்திலும் இந்திரன் காமத்திற்காக இச்சைப்பட்டு அஹல்யையிடம் வந்தான் என்பது.

பாலகாண்டம் 48-ம் ஸர்க்கம் 26-ம் ச்லோகம் [illegible] ॥ என்று வந்தவரான கௌதமர், நடுங்கினவராய் இருக்கிறவனும் சோபிக்காத முகத்துடன் கூடினவனையும் முனிவேஷத்துடன் இருக்கிறவனையும் கெட்டவிருத்தியுடன் கூடினவனுமான இந்திரனைப்பார்த்துக் கோபத்துடன் இப்படிச் சொன்னார். நீ என்னுடைய ரூபத்தை எடுத்துக் கொண்டவனல்லவா நீ பலனில்லாதவனாகக் கடவாய் என்று சபித்தார். உடனே அவனுடைய அங்கங்கள் விழுந்து விட்டதுகள். என்று இப்படி விசுவாமித்ரர் ராமனுக்குச் சொன்னார். இதனாலும் காமத்திற்காக வந்தான் என்பது.

உத்தரகாண்டம் 34-ம் ஸர்க்கம் 35-ம் ச்லோகம் [illegible] । என்று ப்ர்ம்மா இந்

திரனைப் பார்த்து என்னால் அகல்யை யானவள் கௌதமருக்குக் கொடுக்கப்பட்டபிறகு கோபத்தினாலே காமத்தை உடைய உனாலே அவள் அடையப்பட்டாள். என்று பிர்மா சொன்னதாக அகஸ்திய வாக்யம்.

உத்தரகாண்டம் 34-ம் ஸர்க்கம் 37-ம ச்லோகம் முதல 42-ம சலோகம் வரை மதா³ஶ்ரமே நைவம் க்ருதம் பாபஸாஹஸமித³ம் । யஸ்மாந்மே த⁴ர்ஷிதா பத்நீ த்வயா வாஸவ நிர்ப⁴யம் । தஸ்மாத்த்வம் ஸமரே ராஜஞ் ஶத்ருஹஸ்தம் க³மிஷ்யஸி । அயம் து பா⁴வோ து³ர்பு³த்³தே⁴ யஸ்த்வயேஹ ப்ரவர்தித: । மாநுஷேஷ்வபி லோகேஷு ப⁴விஷ்யதி ந ஸம்ஶய: । தத்ராத⁴ர்ம: ஸுப³லவாந் ஸமுத்தா²ஸ்யதி யோ ஹி ஸ: । தத்ரார்த⁴ம் தஸ்ய ய: கர்தா த்வய்யர்த⁴ம் நிபதிஷ்யதி । ந ச தே ஸ்தா²வரம் ஸ்தா²நம் ப⁴விஷ்யதி ந ஸம்ஶய: । ஶாஸ்தேநாயஶ்ச யோ ஹ்யந்யஸ்த்வயேஹ ப்ரவர்தித: । யஶ்ச யஶ்ச ஸுரேந்த்³ர: ஸ்யாத்³த்⁴ருவ: ஸ ந ப⁴விஷ்யதி । என்று கௌதமர் இந்திரனைப பார்த்து மிகவும் கோபத்தை அடைந்தவராய்க்கொண்டு எந்த வைபோகத்தினால நீ என் பத்தினியை அடைந்தாயோ அந்த வைபோகம் உனக்கு அழியட்டும் பயமில்லாமல உன்னால் என் பத்னி அடையப்பட்டதால அதனால் யுத்தத்தில் சத்ரு கரத்தில் நீ கட்டுப் படக்கடவாய். நீ பலன் இலலாதவனாகி இது முதல் ஆட்டின் அங்கத்தையும் அடையக்கடவாய். இந்த கெட்ட புத்தி உனக்கு வந்து நீ பிரவர்த்தித்ததினால் இந்த விபரீதமான சித்த விருத்தியானது மனுஷயலோகத்திலும் உண்டாகபபோகிறது. இதில் ஸம்சயமில்லை. பூலோகத்தில இந்த அதர்மத்தை எவன செய்கிறானோ அந்த பாபத்தில பாதி அவனுக்கும் பாதி உனக்குமவரட்டும் என்றார். இதில் பரதாராபஹரணம் செய்யபபட்டவனுக்கு நரகமாதலால விபரீதமுண்டாகி யாதொன்றையும் அடையமுடியாமல் தபிக்கவேண்டும் என்றார். மேலும் உனக்கு ஸ்திரமான ஸதானமானது இலலாமல் போகட்டும. இந்த அதாம காரியத்தால நீ இதில் ப்ரவிருத்தித்ததால ஒவவொருஇந்திரனும் சாசவதமாய் இருக்கமாட்டான் என்று இப்படி கௌதமர் சபித்தார். (கௌதமர் இந்திரனை ஆயிரம் ஸ்திரீ அங்கங்களை அடையக்

கடவாய் என்றும, பிறகு அதுகள் உனக்குமட்டும் அங்கங்களாயும, மற்றவர்களுக்கு கண்களாயும் இருக்கட்டும் என்று சொன்னர் என்பது வால்மீகி ராமாயணம் அல்ல.) அகல்யையை அடைவதற்கு வெகு காலமுந்தியே இந்திரனுக்கு ஆயிரம் கண்கள் உண்டு என்றார். அகல்யை யடையவரும்போது ஆயிரம் கண்ணான் வந்தான என்று வந்த ரிஷிவேஷமுள்ளவனை ஆயிரம் கண்ணனை இந்திரன என்று தெரிந்துகொண்டு அவள் இந்திரனை அடைந்தாள் என்பதால் ஏற்கனவே உண்டு என்றார் கவி. சில இடங்களையும் குறிப்பிடுகிறார். இந்திரன் விருத்தி ராஸுரவதத்திலும் திதிதேவி ஸப்தமருத்துகளை உண்டுபண்ணின காலத்திலும், விச்வாமித்ரர் வடக்கு திக்கில் தபஸுக்கு சென்ற காலத்திலும், பரசுராமன லோகத்தில ஜனித்தகாலத்திலும், மருத்து மஹாராஜ யாக காலத்திலும், இந்திரனுக்கு ஆயிரம் கண்கள் உண்டு என்றார் வால்மீகி இக்க்ரந்த ரீதியை கவனித்தால இந்திரனுக்கு ஜனன கால முதலே ஆயிரம் கண்ணன் என்றும ஸித்தாந்தம். இது பிர்மா இந்திரனுக்குச சொன்னதை அகஸ்தியர் ராமனுக்குச சொன்னர். இது அகஸ்திய வாக்யம்.

பாலகாண்டம 51-ம் ஸர்க்கம் 4-ம் சலோகம் முதல 7-வரை அபிதே முநிஶார்தூல மம மாதா யஶஸ்விநீ। தர்ஶிதா ராஜபுத்ராய தபோதீர்கமுபாகதா। அபி ராமே மஹாதேஜா மம மாதா யஶஸ்விநீ॥ வந்யைருபாஹரத் பூஜாம் பூஜார்ஹே ஸர்வதேஹிநாம்। அபிராமாய கதிதம் யதாவ்ருத்தம் புராதநம்। மம மாது மஹாதேஜா தைவேந துரநுஷ்டிதம்। அபி கௌஶிக பத்ரம் தே குருணா மம ஸங்கதா। மம மாதா முநிஶ்ரேஷ்ட ராமஸந்தர்ஶநாதித:। அபி மே குருணா ராம: பூஜித: குஶிகாத்மஜ। என்று சதாநந்தர் விசுவாமித்ரரைப் பார்த்து உத்தமா! தீர்க்கமான தபஸை உடையவளான என் மாதாவானவள் உம்மால் ராமனின் பொருட்டு காட்டப்பட்டாளா? என் அம்மாவானவள் வனத்தில் உண்டான வஸ்துக்களைக்கொண்டு ஸகலராலும் பூஜிக்கத் தகுந்த ராமனை பூஜித்தாளா? ரொம்பவும் பழையதாயும் எப்படி நடந்ததோ அப்படியே என் அம்மாவுக்கு இந்திரனோடு ஏற்பட்ட விபரீதத்தை சொன்னீரா? என் மாதா, விமோசனத்தை ராம

தர்சனத்தால் அடைந்து என் பிதாவுடன் சேர்க்கையை அடைந்தாரா? என் பிதாவினால் ராமன் பூஜிக்கப்பட்டாரா? என்று இப்படி சதாநந்தர் விச்வாமித்ரரைக் கேட்டார். (இப்படி சதாநந்தர் விச்வாமித்ரரை கேட்டதை வால்மீகி சொன்னார்) இப்பொழுது இதனாலும் இந்திரன் அகல்யை அடைந்தது ஸ்திரம என்று தெரிகிறது இப்பொழுது முன் சொன்னது களால இந்திரன் அகல்யையை அடைந்தான், காமத்திற்காக அடைந்தான் என்றும தெரிகிறது. இனி இந்திரன் அகல்யையை காமத்திற்காக அடையவே இல்லை என்பதை கவனிப்போம் :—

இந்திரனானவன் அகல்யா தேவியைப பார்த்து நான உன்னை அடையவந்து இருக்கிறேன் என்று சொனனவுடன தேவராஜன் என்ற குதூஹலததால அந்த கெட்டவளான அகலயை அடைந்தாள அவனை என்றார விசவாமித்ரர். இப்படியே உத்தரகாண்டத்தில இக்ஷ்வாகு என்றவனுடைய பிள்ளையாயும் அஸுர வேளையில பிறந்து அஸுரனாய் ஏற்பட்டவனான தண்டகன என்பவன சுக்ராசார்யார் ஆச்ரமத்தில் அவருடைய புத்ரியான அரஜை என்பவளைக் கண்டு தன்னை அடைவதற்காக கேட்க அவள் நான் உன குருபுத்ரி, வேண்டுமானால் பிதாவைக் கேளும் என்று சொல்ல உடனே அதை லக்ஷ்யம் செய்யாமல் அவளை பலாத்காரமாய் அப்பொழுது அவன் ஸ்வீகரித்தான் என்றார் அகஸ்தியர். (இது ராமனுக்கு தண்டகாரண்யம் உண்டானதை சொன்ன கதையில் இருக்கிறது.) இக்கதையில அயோக்யனான கெட்டவனான தண்டகன் அவளை பலாத்காரமாய் அடைந்தான் என்றார். இங்கு கெட்டவன் தண்டகன என்றார். சுக்ராசசாரியார் புத்ரி அரஜா தேவியை தண்டகன் நெருஙகுகிறபோது அவள் என்னை பலாத்காரமாய் தொடாதேயும் நான் கன்யை பிதாவுக்கு வசமாய் இருக்கிறவள் என்று தடுத்தும் பலாத்காரமாய் அவன் அடைந்தான் என்றார அகஸ்தியர். விசவாமித்ரர் அகலயையை இவள் கெட்டவள் என்றார். ஏனெனில் இந்திரன் வந்ததும் அரஜா தடுத்ததுபோல் தொடாதே என்று சொல்லாமலும், தேவராஜா கிடைத்தான் என்று கெட்டவளான அவள் அவனை அடைந்து, அதுவும் அலலாமல உம்மால் சுகத்தை

அடைந்தேன். ஸந்தோஷித்தேன. நீர் உம்மையும் என்னை யும் காத்துக்கொண்டு செலலும் என்றதால் அகல்யை கெட்ட வள் என்றே ஸ்தாபிததார். முதலில சொன்னது போராது என்று விசவாமிதரா மேலும கௌதமா அகல்யையும் சபித்து விட்டு சென்றார் என்று சொலலும்போது மறுபடி பாலகாண்டம் 48-ம் ஸாக்கத்தில் 33-ம சலோகத்தில ஸாபெச-கூாச ஹாதெஜா கௌதமெச ச-ஷ்டசாரிணீம் । என்று அகல்யையான துஷ்ட சரித்திரத்தை உடையவளை சபித்துவிட்டு கௌதமா ஹிமவத் சிகரத்தை அடைந்தார் என்றார். விசவாமித்ரா இந்திரனை கெட்டவன் என்று சொல்லாமல அகலயைக் கெட்டவள் என்றார். ஏனெனறால யார் தபஸ் செய்தாலும் அந்த தபஸை கெடுப்பது தேவாகள் ஸகலருக்கும ஸ்வதர்மமே. இவர் விஷயத்தை விச்வாமித்ரர் நன்றாய் அறிந்துகொண்டவர். தேவதைகளோ, தேவேந்திரனோ, மற்றவா தபஸை கெடுக்கவேண்டிய காரணம் என்னவெனில் ; அநேக காலம் தபஸ செய்து உத்தம பதவியை இந்திராதிகள அடைந்து இருககிறாகள். யாகாதிகளைச செயது அடைந்து இருக்கிறார்கள். ஆதலால் இதரர்கள் செய்யும் தபஸானது இந்திராதிகள் செய்திருக்கும் தபஸுக்குமேல ஏறி விடுமேயாகில அவர்கள் ஸ்தானமானது சலிக்கிறது. உடனே அவர்கள் தங்கள் ஸதானத்தைக் காபபாற்றிக்கொள்வதற்காக தபஸ் செய்கிறவர் தபஸை எத்தனை விதத்தில் கெடுக்கலாமோ அத்தனை விதத்திலும் கலைபபாாகள். மேலும் எந்த ஒரு விஷ யததை உத்தேசித்து தபஸ் செய்கிறார்களோ அதற்கு அவர்கள் தகுந்தவர்களா என்றும் பலவிதத்திலும் பரீக்ஷிப்பார்கள். இது இந்திராதி ஸர்வ தேவதைகளுக்கும் ஸ்வதர்மம். ஆதலால் இந்திரன் அடைந்தது அவனுக்கு ஸ்வதர்மம் என்றே விசவா மித்ரர் அவனிடம் தோஷமில்லாமல பேசுகிறா. தவிர விச்வா மித்ரர் பிராம்மணன் ஆவதற்காக தபஸ் செய்தாரே தவிர ஒருவ னுடைய பதவிக்காக இல்லை. அப்படியிருக்க மேற்கு திக்கில் ஆயிரவருஷம் விச்வாமித்ரர் தபஸ்செய்ய, தபஸ் விருத்தியடைந்த தால் இந்திரன் உடனே மேனகை என்ற தேவதாஸியை அனுப்பி இவர் தபஸை கலைத்துவா என்றான். அபபொழுது அந்த

மேனகையானவள் அவா தபஸ் செய்யப்பட்ட இடம் வநத போது அவர் பிரேமை அடைந்து பத்து வருஷம் அவளுடன் இருந்தார். அதனுல் ஆயிர வருஷ தபஸ் போய்விட்டது. பிறகு அந்த திக்கை விட்டு விட்டு வடககு திக்கை அடைந்து அங்கு ஆயிரம் வருஷம் தபஸ் செய்ய அதனுலும் சிரமம் அடைந்து அபபொழுதும் அவர் தபஸை கலேபபதற்காக ரம்பையை அனுப்பினுன். இது இந்திரன் காரியம் என்று தெரிந்து அவர் கோபித்துக்கொண்டு எதரில நிற்கும் ரம்பையைப் பார்த்து நீ கல்லாகக்கடவாய் என்று சபித்துவிட உடனே அதுகாலபரியநதம் செய்து இருந்த ஆயிர வருஷ தபஸும் போய்விட்டது. பிறகு விசவாமித்ரர் அந்த திக்கை விட்டு கிழக்கு திக்கை அடைந்தார். இப்படி இந்திரன் தன் தபஸை கலேத்தவன் என்றறிந்தவர் விசவாமித்ரா ஆதலால் அவர் இந்திரன் பேரில் குறறம சொலலாமல் இந்திரன் செய்தது ஞாயம் என்றே விச்வாமித்ரா குறிப்பிட்டார். (இதுவும் தேவ காரியம்.)

ஆரணியகாண்டம் 11-ம ஸாக்கம் 5-ம் ச்லோகம் ராமன் தண்டகாரணிய ரிஷிகளுக்கு அனுக்ரஹம் செய்துவிட்டு மேலும் போகும்போது ஒரு யோசனே நீளத்துடன் இருக்கும் தடாகத்தையும, அதிலிருந்து உண்டாகிற உத்தம வாத்ய சப்தங்களே யும் கேட்டு அத்யாச்சர்யததையும் அடைந்து தர்மபிருதர் என்ற ரிஷியைப் பார்த்து இந்த விசேஷம் என்ன என்று கேட்க அவர் இந்த குளமானது மாண்டகர்ணி என்ற ரிஷியினுல் நிர்மாணம் செய்யபபட்டது. அற்புதமான தபஸை அவரும் அடைந்து விட்டதால் அவர் தபஸை அழிப்பதற்காக தேவதைகளால் அனுப்பபபட்டு ஐந்து அப்ஸரஸ்கள் அவ்ரிடம் வர அவர் அவர்களுடன ஸுகமாய் இருப்பதற்காக இந்த தடாகத்தை உண்டுபண்ணி தான் யௌவனத்தையும் அடைந்து அவர்களுடன் ரமித்துக்கொண்டு இருக்கிறுர். தேவதைகளுடைய காரிய ஸித்திக்காக அவர்கள் இவரை அடைந்து விளங்குகிறுர்கள். அவாகளுடைய ஸங்கீதாதிகளும மறற வாதய கோஷங்களும் கேட்கிறது என்று இப்படி சொன்னுாகள். இங்கு இப்படி

தேவர்கள் எத்தனையோ வழிகளை செய்து தங்களை காப்பாற்றிக் கொள்வதற்காக தபஸை அழிப்பார்கள். இது தேவகாரியம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆதலால இதை ஸ்வதாமம் என்று எண்ணியிருப்பதாலேயே விசுவாமித்ரர் அகல்யையை திரஸ்கரித்தாரே தவிர இந்திரனை திரஸகரிக்கவில்லை என்பது பிரத்யக்ஷம்.

தவிர இந்திரன் 100 யாகம் செய்ய ஆரம்பித்த ஸகரமஹாராஜன் யாகத்தை கெடுத்துவிடுவதற்காக மாறுவேஷத்தில வந்து அசுவமேத குதிரை கொண்டுபோய் பாதாள லோகத்தில விட்டுவிட்டு ஸகரனை அறுபதினாயிரம் பிள்ளைகளை இழக்கும்படி செய்தான். (இதுவும் தேவகாரியம்.)

தவிர இநதிரன் ஒரு ருஷி உக்ரமான தபஸ் செய்ய அவர் தபஸை அழிப்பதற்காக ஒரு அற்புதமான யுத்தவீரன வேஷம் போட்டுக்கொண்டு வந்து ஒா அற்புத கத்தியை அவரிடம் கொடுத்துவிட்டு நான் வந்து கேட்கிறபோது கொடும் என்று சொலலிக் கொடுததுவிட்டுப போனான். அந்த ரிஷி அந்த கத்தியை எடுத்துக்கொண்டுபோய் காய கிழஙகு கொண்டுவரப போனார். அந்த கத்தி நன்றாய் வெட்டுவதைக கண்டு அதில் ஒரு ஆஸ்தை அடைந்து வெட்டும் உத்தியோகத்தை வஹித்து ஸகல மரங்களையும் அழித்தார். இதனால உண்டான மஹாபாபத்தினால் அவர் தபஸும் ஒழிந்து அந்த ரிஷி நரகத்தை அடைந்தார். (இதுவும் தேவகாரியம்.)

தவிர இந்திரன் அம்பரீஷ மஹாராஜன் 100-வது யாகம் செய்யும்போது அவனுடைய யாக பசுவை இந்திரன் கொண்டு போய்விட்டான். இதுவும் தேவகாரியம்.

தவிர இந்திரன், விச்வாமித்திரர் ஆயிரவருஷம் தவம் செய்துவிட்டு சாப்பிடப்போக அபபொழுது இந்திரன் பிராம்மண வேஷத்துடன் வந்து பசியென்று யாசித்தான். விச்வாமித்திரர் அந்த பிராம்மணனை ஒன்றுமே சொல்லாமல் அந்த அன்னத்தை அப்படியே கொடுத்துவிட்டார். கொடுக்காவிட்டாலும் அவரை எதையாவது சொலலிவிட்டாலும் பிராம்மணனை

நிந்தித்த பாவம் ஆதலாலும், தபஸும் போய்விடுமென்று ஒன்றும் சொல்லாமல் அப்படியே கொடுத்துவிட்டார். (இதுவும் தேவகாரியம்).

இந்திரன் காசயபரான தன் பிதாவுக்கு இரண்டாவது பத்னியான—திதி தேவியானவள இந்திரனை அழிப்பதற்காக பர்த்தா சொன்னதான கடோரமான ஆயிரவருஷ தபஸை ஆசாரத்துடன் செய்துகொண்டு இருந்தபோது இந்திரன் தனக்கு அவள் சிறிய தாயாராதலால் கைங்கர்யம் செய்துகொண்டு இருகக அவள் ஆசாரம் தவறிவிட, பர்த்தாவும் ஆசாரம் தவறக் கூடாது எனறு சொலலியிருகக அவள் தவறிவிட உடனே ரொமப சின்ன ரூபம்கொண்டு அவள் கர்பபத்தில் பிரவேசித்து அங்கு இருந்த குழந்தையை ஏழு துண்டமாய் சேதித்து அதற்கு ஸப்தமருததுககள் என்று பெயரிடடான. (இதுவும் தேவ காரியம்).

இபபடி இந்திரன் ஸகல விதத்திலேயும் தன்னைக் காபபாற்றிககொள்ளவும் தேவாகளைக் கார்க்கவும் எத்தனை உபாயம் உண்டோ அவ்வளவு உபாயத்திலும தபஸை கெடுப்பான். அப்படியே கௌதமா அபார தபஸை செய்துவிட்டதால் அவர் தபஸை அழிககவேண்டும் அதற்கு என்ன உபாயம் என்று பல விதத்திலும் யோசித்து பலதிலும் முடியாமல் போய்விட்டதால், உடனே எற்கனவே அகல்யை இசசித்தவளானபடியால அவளிடம் சென்றால அவள் உடனே அடைவள் அவளை அடைந்துவிட அது கௌதமருக்குத தெரிந்தால்தான் அவர் உடனே கோபித்து சபிப்பார். நம்மையோ அழித்துவிட முடியாது. ஏனென்றால் அமிர்த பானம் செய்து இருப்பதால் சாவு கிடையாது. ஆதலால் இந்திரியத்தை ஜயிக்காமல் கோபித்து சபித்துவிட்டால் உடனே அனேக காலம்செய்த தபஸ் அழிந்து விடுமாதலால் நாம் அவளை அடையுவோம் என்று அதற்காகவே அகல்யை இந்திரன் அடைய வந்தான் என்ற இவ்விஷயத்தை அறிந்து இருப்பவராகையாலேயே இந்திரனிடம் விச்வாமித்திரர் தோஷம் சொல்லவில்லை. அவன் தன ஸ்வதர்மத்தில் இருக்கிறான என்றார். தவிர இன்னம கவனிபபோம. அகல்யையை

அடைந்த இந்திரன் இச்சையுள்ளவர்கள் ருதுகாலத்தை எதிர் பார்க்கமாட்டார்கள் என்றான். உடனே அவள் இவனை அடைந்தாள். அடைந்தவன் ஸர்வயோக்யதை உள்ளவன் நினைத்த ரூபத்தையும் எடுக்க முடிந்தவன் பலவித மாயைகளுடன் கூடினவன் அவளை யடைந்ததும் ஆகாச வழியாய் ஏன் மறைந்து விடக்கூடாது? ஏன் வாசல்வழியாய் வந்து சாபத்தை அடைய வேண்டும்? இருக்கட்டும்; இதே இந்திரன் வாலி பிறந்த கதையில் அற்புத ரூபமுள்ள ஓர் ஸ்திரீயை இவன் கண்டுவிட அவள் அப்பொழுதுதான் உண்டானவள். அவளிடத்தில் அவன் நெருங்குவதற்குள் அவளுடைய அற்புத ரூபத்தால் இவனுடைய வீர்யம் நழுவி வாலி பிறந்தான் என்று இருக்கிறதே. அகல்யை ரொம்ப ரூபமுள்ளவள் என்று பரஸித்தமல்லவா! இந்திரன் அவளை அனுபவித்திருந்தும் ஏன் இவளுக்கு புத்திர ப்ராப்தி இல்லை எனில், அதற்கு வர்ணிக்கிறார். இவன் அவளிடம் காமத்தை இச்சித்து வந்தவனில்லையாதலாலும் அவளைக் கெடுத்தது ரிஷிக்குத் தெரிந்தால்தான் கோபித்து சபிப்பார். சபித்தால் தபஸை க்ரஹிக்கலாம் என்றே அவர் வருகிறகாலபரியந்தம் உள்ளே இருந்துவிட்டு அவர் வரும்ஸமயம் இவனும் வெளியே வந்து அப்பொழுதும் மறையாமல் எதிரில் நின்றான். காரியம் குத்ஸிதமாதலால் பயந்தான். தனக்கு எவ்விதத்திலும் தபஸை அழிப்பது என்பது ஸ்வதர்மமாயிருந்தும் எதிரில் ரிஷி ரூபத்துடனே நின்றால், அப்பொழுதுதான் சபிப்பார் - தபஸை க்ரஹிக்கலாம் என்று நிற்க அவர் சபித்தும் அவர் தபஸு அழிந்தது.

பாலகாண்டம் 49-ம் ஸர்க்கம் 2-ம் ச்லோகத்தில் இந்திரன் தேவதைகளைப் பார்த்து குறிப்பிடுகிறான குர்வதா தபஸோ விக்நம் கௌதமஸ்ய மஹாத்மந: । க்ரோதமுத்பாத்ய ஹி மயா ஸுரகார்யமிதம் க்ருதம் । அபலோஸ்மி க்ருதஸ்தேந க்ரோதாத் ஸா ச நிராக்ருதா । ஶாபமோக்ஷேண மஹதா தபோஸ்யாபஹ்ருதம் மயா । என்று கௌதமர் தபஸை அழிக்கச் சென்றேன். என்றால் தேவகாரியமானது செய்யப்பட்டது. கோபத்தை அடைந்த அவரால் நான் பலனில்லாதவனாக செய்யப்பட்டேன் என்றான்.

அதை அங்கீகரித்து அவனுக்கு ரிஷி வாக்கியத்தின்படி ஆட்டின அங்கத்தைக் கொடுத்தார்கள் என்று க்ரந்தம். இப்படி இந்திரன ஆகல்யையிடம் பிரவேசித்ததை தேவகாரியம் என்று கருதியே விச்வாமித்ரர் இந்திரனிடம் தோஷம் சொல்லாமலேயே அகல்யையை திரஸ்கரித்தார். ஆதலால் அகல்யை பேரிலதான் தோஷம் என்றும் ஸித்தாந்தம். எக்காரியத்தைச் செய்தாவது இந்திராதிகள் தங்களுக்கு அனுகூலத்தையும், தங்களைக் காத்துக்கொள்ளுவார்கள் என்று ஸ்பஷ்டமாகிறது. தவிற அகல்யையின் புத்ரரான சதாநந்தர் வாக்யத்தைக் கவனித்தாலும் ஊஹித்தால் தன மாதாவினபேரில் தோஷாரோபணம் செய்கிறார். இவள இஷ்டபபடாவிட்டால அவன் எப்படியடைய முடியும் குற்றவாளி இவளே என்கிறார். தேவராஜா கிடைத்தான் என்று குதூஹலத்தால மனதை அவனிடம் விட்டாள் என்றதால் இவள குற்றவாளி என்றார். ஸுந்தர காண்டத்தில் தேவியான ஸீதையானவள் உத்தமியாதலால ராவணன் தன்னிடத்தில் கண்டபடி பேசினகாலத்தில் நான் உன்னை எரித்துவிடுவேன் ஏன் விட்டு இருக்கிறேனென்றால் என் பர்த்தாவின் ஆக்ஞை இல்லை என்றாள். இப்படி பதிவரதைக்கு உத்தம மஹிமையிருக்கும்போது இவள் தடுக்காமல தேவராஜா என்று இந்திரனிடம் இன்ப பிரேமை கொண்டதால் குற்றம் இவள் பேரிலேயே என்றும் ஸ்தாபித்தார். தவிற கௌதமர் அகல்யையை சபித்தபோதும் நீ வந்தவனை தெரிந்துகொண்டு அடைந்தபடியால் நீ மற்ற எந்த பூதத்திற்கும் தெரியாமல் இருக்கவேண்டும். உனக்கு மட்டும் உன்னை நன்றாய்த் தெரியவேண்டும். காற்றைக் குடித்துக்கொண்டு சாம்பலில் படுத்துக்கொண்டு இருக்கவேண்டும். எப்பொழுது ராமன் இங்கு வருவரோ அப்பொழுது உனக்கு ஸ்வரூபம் வரட்டும். நீ அவரைப் பூஜித்துவிட்டு பிறகு என்னை அடையலாம் என்றார். கௌதமரும், அவள் தெரிந்துகொண்டு அடைந்தவள் என்றே குறிப்பிட்டார். உத்தரகாண்டத்தில் பிர்ம்மா இந்திரனைப் பார்த்து சொன்ன இடத்தில தன் பெண்ணை அடைந்தான் என்ற கோபத்தால் சொல்லுகிறார். தவிற கௌதம சாபம் இந்திரனுக்கு சத்ரு கரத்தில் கட்டுப்

படுவாய் என்று சபித்ததால அதை அனுபவித்த இந்திரனுக்கு ஞாபகபபடுத்தின இடத்தில் குறிப்பிட்டார். தவிற அந்த இடத்தில வர்ணிக்குமபோது அகல்யை கௌதமரிடம் உம்மு டைய ரூபம் கொண்ட இந்திரனுல் நான ஏமாற்றபபட்டேன என்றுள். இதில் கௌதமர் சபித்தபோதும் கவனித்தால் குற்றம் அகல்யை பேரிலேயே ஸ்தாபிக்கப்பட்டதால குற்றவாளி அகல்யை என்றே ஸ்தாபனம். தவிற உத்தர காண்டத்தில் அகல்யையை சபித்தபோது உன்னைப்போல் ரூபவதிகள் அநேகர் உண்டாகிவிடட்டும் என்றும் குறிப்பிட்டார். இக்கதையால் உத்தர காண்டத்தில பிர்மா, புத்ரி நிமித்தமாய் பேசும் அவ்வள வுமே புத்ரியைக கெடுத்தான் என்ற கோபத்தால் என்று ஸ்பஷ்ட மாய் இருக்கிறது. பிரமா தேவகாரியங்கள் முழுமையும் தெரிந் தவராய் இருக்க கோபத்தால் அவர் அந்த விஷயத்தில் கொஞ் சமும் வெளிபபடுத்தாமல அகல்யையிடம குற்றமே இல்லாமல் பேசுவதால் அபபொழுது பிர்ம்மா சொன்னதை சொல்லும் அகஸ்திய வாக்யம் பிரமாணமா? விசவாமித்ர வாக்யம் பிரமா ணமா? என்பதை கவனித்தால பிர்ம்மா வால்மீகிக்கு கிரந்தம் எழுதச்சொல்லியிருந்தாலும் நடந்ததை கவி சொல்லுவதால் குற்றம் எஙகு இருந்தாலும் வெளிப்படுத்த வேண்டியது ஸ்வதாமமாதலாலும, முந்தியே அகல்யா இந்திராதிகளுக்கு பரஸ் பரம் இருக்கும் ப்ரேமை தெரிந்திருந்தும் பிரம்மா வேறும் என்றே அகல்யையை கௌதமருக்குக் கொடுத்தேன்என்று குறிப் பிட்டதாலும், பிரம்மா புத்ரிக்கு பரிந்து பேசுகிறதாகவே இக் க்ரந்தத்தில் ஸ்பஷ்டம். கௌதமர் அகல்யையிடம் ஸ்பஷ்ட மாய் தேவேந்திரன் என்று தெரிந்து அனுபவித்தவள் என்றே கோபித்து சபித்து இருக்க அதையும் புத்ரியாதலாலும் அந்த தோஷஙகளை மறைககவேண்டிய தன் ஸ்வதர்மத்தால் மறைத்துப் பேசுகிருர் என்றே ஸ்பஷ்டம். தவிற இக்கதை நடந்ததை நடந்துகொண்டு இருந்தபோது பிர்ம்மா நேரிட பார்த்துக் கொண்டு இருககவில்லை. பார்த்து இருந்தால இந்திரனை தடுத்து இருக்கமாட்டாரா? தெய்வ, கதி, தடுக்கவும் முடியாதது. ஆதலால இவர் பரிந்து பேசுகிருர் என்றும் ஸ்பஷ்டம். இந்திர

ளுல் உமது ரூபத்தினுல் நான் திகைக்கப்பட்டேன். காமகாரத்தினுல் இல்லை என்று அகல்யை கௌதமரிடத்தில சொன்னதாய் பிர்ம்மா சொல்லுகிருர். இது ஸ்திரீகளின ஸாஹஸகர்மா என்பதும் ஸ்பஷ்டம். இவளே இந்திரனிடம் ஸந்தோஷப்பட்டேன் உம்மையும என்னையும் காத்துககொண்டு சென்று வாரும் என்றவள் ஏமாற்றப்பட்டேன் என்ருல் எப்படி நிஜமாகும்? ஆதலால் இது ஸ்திரீ ஸாஹஸ க்ருத்யம் என்ருர். வாலமீகி அகல்யையின் சாப விமோசனத்தை வர்ணிக்கும்போது அந்த சாபம் அவளுக்கு கௌதமா கொடுததது நியாயமே என்றபிபபிராயப் படுவதால பிர்ம்மா அனுக்ரஹத்தால கரநதம வாணிககும் வால்மீகி ஸகலத்தையும் தெரிவிக்க கடமையுடையவராதலால் குற்றமுடையவள அகலயைதான என்றும ஸ்தாபித்து, இந்திரனும தன ஸ்வதாமத்தில இருநதவனே என்றும் அகலயையிடம் இந்திரன் காமகாரமாக வரவில்லை என்றும் ஸ்தாபித்தார் ஆதலால இநதிரன அகலயையை காமத்திற்காக அடையவில்லை என்று ஸித்தாந்தம்.

---

15. அதிகோப காலத்திலும் அதிஸந்தோஷகாலத்திலும் அதி துக்க காலத்திலும் சித்தம் இழந்த காலத்திலும் வரக் கூடிய எந்த வாக்கியங்களுக்கும் மதிப்பு கிடையாது என்றும், இக்காலங்களில் இல்லாததையும் கூட சொல்லி எவர்களாயிருந்தாலும் பேத்துவார்கள் என்று ஸித்தாந்தம்.

தசரதர் விசவாமித்ரர் வந்ததும் தாங்கள பெரியவர்கள் எதைக் கேட்டாலும் கொடுபபோம் என்ருர். மேலும நீா பூஜிக்கத் தகுந்தவா என்றதும் அவர், பிள்ளையைக் கொடும் என்ருர். இது காதில பட்டவுடன் தசரதர் மனமுடைநதுவிட்டார் என்று வால்மீகி வர்ணித்தார். மனமுடைந்த அவர் விசவாமித்ரரைப் பார்த்து நீர் பிள்ளையைப் பெற்றுக்கொண்டு போக உமக்கு யோக்யதை இல்லை என்று இபபடிப் புலம்பினுர். என்று வால்மீகி மேலும் ராஜா இபபடிப புலம்பினுர் என்ருர். இதை அதி

துக்கத்தில் சொன்னார் என்றார். தவிற கவி, ராமன் காடுபோன போது உத்தம ஸ்திரீகளால் சந்தனாதிகள் பூசப்பட்டு பல கட்டில்களில் படுத்து உத்தம ஸ்திரீகளால் விசிறப்பட்ட ராமன் என்று தசரதர் வர்ணிக்கிறார். இல்லாததை இவர் அதி துக்கத்தால சொல்லுவதால இவர் புலம்புகிறார் என்றார். ஆதலால் அதி துக்கத்தில இல்லாததெல்லாம் வரும் என்று விஷத்தாத்பர்யம். அதிஸந்தோஷத்தில் பரதன் ஹனுமானைப் பார்த்து நீர் எனக்கு அண்ணா வந்த விஷயத்தைச் சொன்னதால் உமக்கு பல கிராமங்களையும் பட்டு பீதாம்பரங்களையும் கொடுக்கிறேன என்றும் சொல்லி அற்புத ரூபமுள்ளவர்களாயுள்ள 16 கன்னிகைகளை உமக்கு பத்னிகளாய்க் கொடுக்கிறேன் என்றார். கொடுத்தாரா என்றால் இல்லை. ஏனெனில் இதை அவர் அதிக ஸந்தோஷத்தில் சொன்னதாய் குறிப்பிட்டதால் நைஷ்டிக பிர்ம்மசாரியானவருக்கு 16 பத்னிகளா எப்படி—? ஆதலால கவி அதி ஸந்தோஷத்தில எதையும சொல்லுவார்கள் என்றார். ஸீதை தன் நலல சித்தத்துடன இருந்தபோது என் மனஸார மற்றவரைத் தொடமாட்டேன் என்றவள இந்திரஜித்து வதத்திற்கு பிறகு புத்ர துக்கத்தால் ராவணன் ஸீதையைக் கொல்ல வந்தபோது நான் ஹநுமானபேரில் ஏறிக்கொண்டுபோய் இருந்தால் ராமனையடைந்து ஸுகமாய இருப்பேனே என்றாள். இவ்வித இடத்தில் அவள் சித்தம இழந்து புலம்புகிறாள் என்றார் கவி. சித்தம் இழந்ததால் ஹநுமானைத் தொடலாமா கூடாதா என்ற வ்யவஸ்தையற்று இல்லாததை நடக்கப்போகாததைச் சொல்லுகிறாள் என்றார். முன்பின் விரோதமாய் பேசுகிறாள் என்றார். ஆதலால் சித்தம் இழந்தபோது இல்லாததெல்லாம, வரும், யாரும் எதையும் சொலலுவார்கள் என்றார். ஸீதை மற்றொரு இடத்தில் அதிதுக்கத்தில் பிராணனைவிட எண்ணின போது ராமனை நினைத்து நான் உம்மைப்பற்றி என்ன எண்ணுகிறேன என்றால் நான் இதோ பிராணனை விட்டுவிடப் போவதால நீர் இனிமேல் நீண்ட கண்களுடன் கூடின பெண்களுடன ரமித்துக்கொண்டு பரம ஸுகத்துடன இருக்கப்போகிறீர் என்று எண்ணுகிறேன் என்றாள். இவளே மற்றொரு இடத்தில்

தன்னைத் தவிற யாரையும் ராமன் ஸ்மரித்ததில்லை என்றார். வால்மீகியும் வேறு யாரும் கிடையாது என்றும் குறிப்பிட்டு இருக்கிறார். இவள் அதி துக்கத்தால, இவள் ஒருத்தியே ராமனுக்கு பத்னியாய் இருக்க அநேகருடன் ஸுகமாய் இருக்கப் போகிறீர் என்ற இலலாததை அதிதுக்கத்தில சொல்லுகிறாள் என்றார் கவி. ஆதலாலும் அதிதுக்கத்தில் இல்லாததும் வரும் என்றும் ஸித்தாந்தம். அதிதுக்கத்திஞல் சித்தம் இழந்து கௌஸல்யை நீலமேசயாமளனை ராமனை தங்கவர்ணம் என்று இல்லாததைச் சொல்லுகிறாள். குழந்தை ராமனுக்கு 25 வயது காடு போகும் போது ஆயிருகக இவள வயது 17 என்று புலம்புகிறாள். ஆதலால் அதிதுக்கததிலும் சித்தம் இழந்தபோதும் இல்லாதவெல்லாம் வரும என்றார் கவி. இபபடி எத்தனையோ விஷயங்களை கவி காட்டியிருக்கிறார்.

இபபடியே வாலி அடிபட்டதும் சிததம் இழந்தான் என்று வாலமீகி சொன்னதால் ஸர்வ குணஙகளுடன் கூட இருக்கும ராமனை குணங்கள் விட்டவன என்றும் உத்தமனயிருக்கும் அவனை அதர்மிஷ்டன் என்றும் நேறிட அடித்து இருந்தும் அவனை மறைந்தடித்தான் என்றும மஹா புருஷனை ராமனை, சடன், மூர்கஙன, பொய் சொலலுபவன் க்ஷுத்ரன் என்றும் இப்படி இல்லாததை எலலாம் சிததம இழந்ததால் வாலி சொன்னை என்று நாரதரும் வாலமீகியும் குறிப்பிட்டதால் சித்தம் இழந்தபோது இலலாததும் வரும் என்றார் கவி. வஸிஷ்டர் அதிகோபத்தை அடைந்து ஸீதைக்கு பட்டாபிஷேகம் செய்யப் போகிறேன் என்கிறார். நடக்காததை, இக்காந்தம் பட்டாபிஷேகம் ஆனபிறகு கவி பண்ணினதால் ஸர்வமும் அறிந்தவரான வால்மீகி வஸிஷடர் நடக்காததைச் சொல்லுகிறார் என்று வஸிஷ்டா கோபத்தில நடககாததை பேசினர், புலம்பினர் என்றார். ஆதலால அதி கோபத்தில இல்லாததும் வரும் என்றார் கவி. இபபடியே ராமன், ராவணன் ஸீதையைக் கொண்டுபோனபோது கோபத்தை வரவழைத்துக்கொண்டு ஸர்வ லோகஸம்ஹாரம செய்கிறேன் எனறு கர்ஜித்தார். வால்மீகி நடக்காததை இவா சொலலுவதால அதிகோபகாலத்தில் எதை

யும் இல்லாத்தை நடக்காததை யாரும் சொல்லுவார்கள் என்ருர் கவி. ஆதலால முன்சொன்ன காலங்களில யார் சொல்லி இருந்தாலும் அவ்வாக்கியங்களுக்கு மதிப்பு கிடையாது என்று ஸித்தாந்தம். தவிற அந்த இடஙகளில வால்மீகி வாககியத்தில் இந்த நாலுகாலங்களில ஒனறு இருந்தாலதான அங்கீகார மேதவிற அது மறறவாகள வாக்கியததில் இருந்தால அது கவி வாக்யத்திறகு விரோதமாய் இருந்துவிட்டால் அடிபட்டு விடலாமாதலால நாரத வால்மீகி வாக்யம்தான் இககிரந்ததிறகு பிரமாணம என்றும ஸித்தாந்தம. ஆதலால் முன் நாலு காலஙகளில் சொலலியிருக்கும் வாக்கியஙகள ராமாயணத்தில் எததனேயோ இடங்களில் பல வாக்கியஙகளில் உண்டு, சில சொலப இடங்களேமட்டும முக்கியமாய்க் காட்டினேம். ஆதலால இக்காலங்களில் வந்தவாககியஙகளுக்கு யாதொரு கௌரவமும கிடையாதெனறு வாலமீகியின் ஸித்தாந்தம.

---

## 16. புத்தியில் ஒன்றுபட்டுவிட்டால் அது உடனே மேல் ஓட்டம் ஓடுமே தவிற மஹா வித்வானுனுலும் உடனே அதை மாற்றிக்கொள்ள முடியாதென்ற ஸித்தாந்தம்.

ஸாக்ஷாத் வாலமீகி பகவான் நாரதரால தனக்கு ஸம்க்ஷேப மாய் ராமாயணத்தை தெரிந்துகொண்டு அது பிரமத்தின் சரித்ர மாதலால் அதே ஞாபகத்துடன் தமஸா நதிக்கு ஸ்னானத்திற்கு சென்ருர். அப்படிச் சென்றபோது நதிக்கரையில எதிரில் தென்பட்ட ஆணும் பெண்ணுமான பக்ஷிகளேயும் வேடனேயும் கண்டதும் காணும்போது ஏற்கனவே ராமாயணத்தின் ஞாபகத்துடன் செல்லும் அவர் இதையும் காணும ஸமயம் ஆண்பக்ஷி அடிபட பெண்பக்ஷி கலங்க எதிரில் வேடன் நிற்க உள்ளே எண்ணும் கதையில ராமன் ராவணனேக் கொனறுவிட ராவணன் கீழே விழுந்துவிட மேலே மங்தோதரி விழுநது கதற எதிரில் வேடன் நிற்க அந்த ஸமயம் அவர் அறியாமல் பிரமாவின் ஆக்ஞையால் அவர் வாக்கில ௭ா_நிஷாத ப்ரதிஷ்டாம்த்வமகம: ஶாஶ்வதீஸ்ஸமா: । யத் க்ரௌஞ்சமிதுனா தேகமவதீ: காமமோஹிதம் । என்ற ச்லோகம்

வெளிவந்தது. வந்ததும் தன் வாக்கில் என்ன வந்தது என்றறிய முடியாமல அந்த ச்லோகத்தில் பதம் எப்படி பிரிகிறது என் பதை கவனியாதவராய் ஊா்நிஷாத என்ற ஒரே பதத்தை ஊா, நிஷாத, என்று இரண்டாய்ப் பிரித்துக்கொண்டார். ஆதலால் அர்த்தமும் விபரீதமாகப்போய் கவலையும் உண்டாகிவிட்டது. புத்திக்கு ஓடும் குணமுதலால் தபபாகப்பட்டதும் அதை நினைத்து நினைத்து அதாவது வேடனை சபித்தேனே! சபித் தேனே என்று அதே குழபபத்தை அடைகிறுரே தவிற பதம் இரண்டையும் ஒன்ருகச சேர்த்துக்கொண்டு கவனித்தவரே இலலை. காரணம் புத்திககு ஓடும குணம் என்றும அதை தனக்கு அடக்கிக்கொள்ள முடியவில்லை என்றும நிரூபிக்கிறுர். பிந்தி அவர் ஒவவொரு இடத்திலும காட்டியிருக்கும் அழகையும் கவனிபபோம்.

பாலகாண்டம் 40-ம் ஸர்க்கம் 20-ம் சலோகத்தில் தெதம் ஹயஹரம் ஜ்ஞாத்வா க்ரோதபர்யாகுலேக்ஷணாः! என்று ஸகர மஹாராஜ புத்ராகள் கபிலவாஸுதேவமூர்த்தியே தங்கள் குதிரையை திருடிய திருடன் எனறு எண்ணிக்கொண்டு கோபத் துடன் கூடி அவரை நில என்று கத்திக்கொண்டு ஆயுதங் களுடன் எதிாத்தோடி வந்தார்கள். அவர் அவர்களை ஹுங்காரத்தால் பஸ்மமாக்கிவிட்டார். இங்கு அவாகள் குதிரையை கண்டதும் அது அவர் சமீபத்தில் மேய்ந்துகொண்டு இருந்ததாலும் அவரைத் திருடன் என்று எண்ணினர்களே தவிற அவர் ரிஷி என்று எண்ணவில்லை. எண்ணுவதற்கும் இட மிலலை. காரணம தேடாத இடமும் பாக்கியில்லாமல் போன பிறகு கண்டதும் உண்டான ஸந்தோஷத்தால் அவர் பக்கத் தில் கண்டதும் அவர் திருடன் என்று புத்தியில் பட்டது. புத்தியில் ஒன்று பட்டதும் அதற்கு உடனே ஓடும் குணமாத லால் அப்பொழுது தங்கள் புத்தியில் பட்டது ஸரியா, தப்பா என்று அறியவே முடியாமல் உடனே திருடன் என்று எண்ணி விட்டாகள். அதை மாற்றிக்கொள்ள வேறு இடமும் இல்லா ததால் 'கோபத்துடன அவரை எதிாத்து எலலாரும் அழிந்து விடடார்கள் ஆதலால புத்திக்கு ஓடும் குணம் என்றும் புத்தி

யில் ஒன்று பட்டால் அப்பொழுது பட்டது ஸரியா தப்பா என்று அறியும் குணம் எந்த வித்வானுன புத்திக்கும் கிடையா தென்றும், அது ஓடும் வேகம் ஓடி முடிந்தபிறகுதான், மாற்றிக் கொள்ள ஸாவகாசம் இருந்தால், மாற்றிக்கொள்ள இடமும் இருந்தால் மாறுமே தவிற இல்லையானுல நல்லதானுலும் கெட்டதானுலும் அதை ஒன்றும் செய்யமுடியாதென்றும் ஸித்தாந்தம்.

பாலகாண்டம் 43-ம் ஸாக்கம் 7-ம் ச்லோகம் தஸ்ராவலெ வ நஂஜ்ஞாகவாகு ஜஷ்வ ஹஹவாநுஹா: என்று பரமசிவன அந்த கங்காதேவி இந்த சஙகரரையும் நமது ஜலவேகத்தில அடித்துக் கொண்டு பாதாளம் கொண்டுபோய்விடுவோம் என்ற கர்வத்துடன் வரும் அவள் புத்தியை அறிந்து அவளை தன் ஜடையில் அடக்கினுா. அந்த கங்கை தாம் இவரை ஜலத்தினுல அடக்க எண்ணினுளே தவிற இவர் யார், இவர் மஹிமை என்ன என்று எண்ணுமல் அவரையும நமது வேகத்தால் அடக்குவோம் என்று புத்தியில அவளுக்கு படடதால் அவள் அவர் ஜடையில் இருந்த இடம் தெரியாமல் அடஙகிவிட்டாள். கங்காதேவி புத்தியில இவரை அடித்துககொண்டு போகவேண்டும் என்று பட்டதால் அதுமேல் ஓட்டம் ஓடினதே தவிற புத்தியில பட்டது ஸரியா தப்பா என்று அவள் புத்திக்கும் படவில்லை என்று இங்கு குறிப்பிடப்படுகிறது.

பாலகாண்டம் 48-ம் ஸர்க்கம் 20-ம் ச்லோகம் உதிஂ, உகாரா உஜயொ ஜெவராஜ கூதஹலாக I என்று தேவராஜா என்ற குதூஹலத்தால் இந்திரனை அகல்யை அடைந்தாள். அவன் புத்தியில் இபபடிபட்ட புத்தியை அவள் நழுவவிட்டதால் கெட்டாள் என்று குறிப்பிடப்படுகிறது. இதை உபமானமாய் விச்வாமித்ரர் சதானந்தரிடம் சொன்னபோதும் அகல்யை எபபடி போய் கௌதமரை அடைந்தாள் என்று சொனனுர் எனில் ரேணுகாதேவி திரும்ப பார்க்கவரை அடைந்ததுபோல் என்ருர். இங்கும் ரேணுகை நிழலிடம் என்ன இது இப்படி ஒரு ரூபமோ என்று எண்ணினுள். அத்துடன் அவள் தர்மம் குறைந்தது. அவளும் புத்தியை நழுவவிட்டாள். இருவரும் புத்தியை நழுவ

விட்டவர்கள். அகல்யைக்கும் ரேணுகைக்கும் வித்யாஸம் என்னவெனில அகலயை இந்திரனை அடைந்தவள், இசசித்தவள் ரேணுகை அடையாதவள். இப்படி உண்டா? எண்ணினவளையும், தொடுகினறவளையும் உபமானம் எதுமட்டும் கொடுத்தாரெனில திரும்பி பர்த்தாவை அடைந்ததற்குமட்டும் கொடுக்கப்பட்டதெனறு ஸித்தாந்தம். அந்த அழகை ஸீதையும் குறிப்பிடுகிறா. நான் புத்தியாலும், காரியத்தாலும், மனஸாலும் மற்றவிதத்தாலும் நான் யாரையும ஸ்மரிககாமல் இருபபது உண்மையானால இவவக்னி எனக்கு குளிர்ந்து இருக்கட்டும் எனறாள். அபபடியே அக்னி குளிர்ந்து இருக்கிறது எனறும் குறிபபிடுகிறார். இங்கு அகல்யையின் புததியில் இந்திரன் கிடைததான எனறு பட்டுவிடடதால் மேமேல ஓடும் குணமாதலால ஓடி தடுததுக்கொள்ள முடியாததாய் கெட்டுவிட்டது என்றா.

பாலகாண்டம் 53-ம ஸ்ர்ககம் 9-ம் சலோகததில [Grantha] என்று விசவாமித்ரா வஸிஷ்டரைப் பாரத்து மனறடி இது, இந்த பசுவானது ரதனம். ராஜாககள் ரத்னத்தை அபஹரிபபவர்கள் ஆதலால் இது ராஜாவான என்னுடையது. இதை நீா எனக்குக கொடும் எனறா. புததியால் இபபசுவை தான அடைய வேண்டும் என்று பட்டது. அந்த புத்திபோனவழியில சென்று மனககஷ்டததை அடைந்தார். அந்த புத்தியை திரும்பக் கொள்ளமுடியாதவராய் ஆகிவிட்டார். அதனால புத்திக்கு ஓடும்குணம் என்றும் அபபொழுது அதைத் திருப்ப முடியாது என்றும் ஸ்தாபிககபபடுகிறது.

பாலகாண்டம் 57-ம் ஸாக்கம் 12-ம சலோகம் [Grantha] என்று திருசங்கு மஹாராஜனுக்கு சரீரத்துடனேயே ஸ்வர்க்கம் செல்லவேண்டும் என்று புத்தியில் பட்டது. அதனால் குருவை கலந்தும் அவர் யாகம் செய்தாலும் பலிக்காது நடக்காது என்று அவர் சொல்லியும் கேட்கவில்லை. தன் புத்தியால் அவன் பிறகும ஆலோசிக்காதவனாய் அந்த

புத்தியில்பட்டதை அப்படியே அது போகும்வழியில விட்டுவிட்டானே தவிற புத்தியில் பட்டது ஸரியா தப்பா என்று விசாரிக்காதவனாய் சண்டாளாதி சாபத்தையும் அடைந்து ஸ்வர்க்க லோகமும் அடையாதவனாய் அந்தரத்தை அடைந்தான. ஆதலால புத்திக்கு ஓடும குணம் என்னும் ஸ்தாபிக்கிறார்.

அயோதயா காண்டம் 4-ம் ஸர்க்கம் 19-ம் ஸ்லோகம்: ராஜா ஹி ...... என்று ராமனுக்கு பட்டாபிஷேகத்தை ராமனிடம் சொலலும்போது ராமா நான் ஆகாசத்தில் விபரீதங்களான உத்பாதஙகளைக் கண்டேன். அதன பலன் ராஜாவுக்கு மரணம், அல்லது மரணத்திற்கு ஸமானமான துக்கம் என்பது ஸத்யம் என்றார். அப்படி உறபாத பலனை அறிந்தும் ராஜா ஏன் பட்டாபிஷேகம் செய்ய எண்ணுகிறாரெனில் தனக்கு வயதாகிவிட்டதாலும் முகயம் தன் தேஹத்தை விட்டு பிராணன் போவதற்குள் ராமனைப் பட்டாபி ராமனாக பார்க்கவேண்டும என்று எண்ணியதால் அதை செய்ய எண்ணினா. புத்தியில் ஒன்று பட்டால அது மேல ஓட்டம் ஓடும் குணம் எனபதையும விபரீத பலனை அறிந்தாலும் புத்திக்கு ஓர் மங்களத்தை அடைய எண்ணிவிட்டால அதை அது மாறறிக்கொளளாது எனறும் குறிப்பிடப்படுகிறது.

அயோத்யா காண்டம 64-ம ஸர்க்கம் 15-ம் ஸ்லோகம் ...... என்று தசரதர் நான் யானை என்று எண்ணி என்றால ரிஷி குமாரன் கொல்லப் பட்டான் என்றான் புத்தியில யானை ஜலம குடிக்கும்போது கட கட வென்று சபதம் கேட்குமாதலால குடத்திற்குள் ஜலம் செல்லும்போதும் அப்படியே சப்தம் கேட்டதால் இராத்ரிகாலமாதலால இருட்டில் சப்தத்தை கேட்டதும் புத்தியில யானை ஜலம் குடிப்பதாய்ப் பட்டதால யானை என்று எண்ணி பாணத்தால் ரிஷிகுமாரனை யடித்துவிட்டார். புத்தியில் யானை என்று பட்டதால அடித்துவிட்டார். புத்திக்கு ஓடும் குணமாதலால் புத்தியின் ஓட்டத்தால் வேறு ஒன்றும் எண்ண முடியவதில்லை. ஆதலால் இங்கும புத்தியின் குணம் ஸ்தாபிக்கப்பட்டது. அந்த புத்தியின் ஓடின குணத்தால் மேல் அதை கவனிக்கவும் இடம்

இல்லாமல் போய்விட்டதால் ராஜன் சாபத்தையும் அடைந்து விட்டார். ஆதலால் எவனுக்கும் அந்த ஸமயம் புத்தியின் ஸ்வபாவத்தை எவனாலும் மாற்ற முடியாதென்று ஸித்தாந்தம்.

ஆரண்யகாண்டம் 43-ம் ஸர்க்கம் 23-ம் ச்லோகம்: மோஹித ஏவ ராமோபி ஸீதயா பரிசோதித: । என்று கவியானவர் ராமனும் அந்த மான் ரூபத்தில் மோஹித்தார் என்றார். புத்தியில் மாரீசனை அந்த தங்க மானை மாயமானை உண்மையான மான் என்றே எண்ணிவிட்டார். புத்தியில் ஒன்றுபட்டால் அது மேல் ஓட்டம் ஓடும் என்பதை கவி இங்கு காட்டினார். மான் என்று ஏற்பட்டதால் ராமன் மேலே ஸீதையை பிரிந்தார் என்றும் ஸ்பஷ்டம்.

கிஷ்கிந்தா காண்டம் 9-ம் ஸர்க்கம் 20-ம் ச்லோகம்: சுஹ்ருத்பி: ஸுக்ரீவ இதி விஜ்ஞாய ... என்று ஸுக்ரீவன் ராமனிடம் சொல்லும்போது, அங்கு ஏற்பட்ட அடையாளங்களினாலே அண்ணாவான வாலி செத்துவிட்டதாக புத்தியில் பட்டதால் நான் குகையை ஓர் பாறையால் மூடிவிட்டு ஊரை நாடி வந்தேன் என்றான். புத்தியில் வாலி செத்துவிட்டதாய்ப் பட்டதால் இருக்கிறான் என்று எண்ண இடம் இல்லாமல் போய்விட்டது. புத்திக்கு ஓடும் குணமாதலால் மேல் அவனுக்காக கர்மாக்களையும் செய்தான். ஆதலால் இங்கும் புத்திக்கு ஓடும் குணம் என்றும் புத்தியில் ஒன்றுபட்ட அந்தஸமயம் அதை ஒருவராலும் ஒருவிதத்திலும் தடுக்கமுடியாது என்று இங்கும் குறிப்பிடப்படுகிறது.

ஸுந்தரகாண்டம் 10-ம் ஸர்க்கம் 54-ம் ச்லோகம்: ... என்று கவி, ஹநுமான் மந்தோதரியைகண்டு அவளுக்கு இருந்த ரூபத்தால் ஸீதையோ என்று எண்ணினார் என்றார். இப்படி ஹநுமானுடைய புத்தியில் மந்தோதரி, ஸீதையாய்ப்பட உடனே புத்திக்கு ஓடும் குணமாதலால் அந்த குணப்படி ஹநுமான் தான் ஸீதையைக் கண்டதாக எண்ணி குதிக்கிறார், விளையாடுகிறார், தூணில்

எறுகிறார். வாலை முத்தமிடுகிறார். இவ்வளவுக்கும் பிறகு ராமன் பத்னி ராவணனை பக்கத்தில் இருப்பாரா. நான் எண்ணினது பிசகு அல்லவா என்று பிறகு புத்தியை மாற்றிக்கொள்கிறார். அந்த ஸமயத்தில் அந்த ஓடும் புத்தியை மாற்ற எந்த மஹா வித்வானுக்கும் கிடையாது என்று கவி ஸ்தாபிக்கிறார்.

உத்தரகாண்டம் 67-ம் ஸர்க்கம் 35-ம் சலோகம்: ஐயா ரோஷவஸீகேதநயமிஹம் வ்யாஹ்ருதம்வச: என்று வஸிஷ்டர் கல்மாஷபாத ராஜனைப் பார்த்து எனக்கு புத்தியில் நீயே எனக்கு அபராதம் செய்துவிட்டதாக என் புத்தியில் பட்டதால் நான் உன்னை சபித்துவிட்டேன். நான் இப்பொழுது இது உன் காரியம் அல்ல என்றும் ஓர் ராக்ஷஸன் உன்னை வஞ்சிக்கவே இப்படிச் செய்தான் என்றும் அறிந்தேன் என்றார். ஞாதாவான வஸிஷ்டருக்கும் ஓடும் குணமுள்ள புத்தியை தடுத்துக்கொள்ள முடியவில்லை என்றும் எவனுக்கும் அந்த ஸமயம் புத்தியை அடக்கிக் கொண்டுவர முடியாது என்றும் புத்திக்கு ஓடும் குணம் என்றும் குறிப்பிடப்படுகிறது.

இப்படி கவியானவர் பலர் விஷயங்களிலும் காட்டி அது தனக்கும் உண்டு என்றும் காட்டி இப்படி புத்தியின் ஸ்வபாவ குணத்தையும் காட்டி, அது ஓடும் குணமுடையதாதலால் எவனும் அதை அந்த ஸமயம் தடுத்து புத்தியால அந்த ஸமயம் பட்டது ஸரியா அல்லது பிசகுதானா என்று அறிய சக்தி கிடையாது என்று குறிப்பிட்டார். புத்திக்கு ஓடும் குணமாதலால அந்த ஸமயம் ஸரி தப்பு என்பதை விசாரிக்கும் யோக்யதை கிடையாதென்றும் ஸித்தாந்தம்.

---

17. ஸ்ரீராமாதிகள் 12 வயதிலும் ஸீதாதிகள் 6 வயதிலும் காம ஸுகாதி போகங்களை அனுபவித்துக்கொண்டு இருந்தார்கள் என்ற ஸித்தாந்தம்.

*வால்மீகி பகவான ஸீதாதிகளுக்கு 6 வயதிலேயும் ராமாதிகளுக்கு 12 வயதிலேயும் காமாதி போகங்களை அனுபவிக்கும் காலம் அவர்களுக்கு வந்துவிட்டது என்று நிரூபிக்கிறார். இவ் விஷயத்தை ஆங்காங்கு குறிப்பிடும் இடத்தைக் கவனிப்போம். மேலும் இவவிஷயத்தில் வ்யாக்யாதாக்களும் உலகத்தில் மற்ற இதரர்களும் கவனியாமல் சொலலும விஷயங்களையும் கவனிப்போம். ஆறுவயதில் பெண்கள் ருதுவாவதும் 12 வயதில் பிள்ளைகளுக்கு போககாலம் எனபது பொருத்தமலல. அப்பொழுது அவர்கள் பல விளையாட்டுகளை விளையாடிக்கொண்டிருந்தார்கள் என்கிறாகள். ஏனெனில் அந்த வயது போககாலம் அலல என்று ஒரு நிர்மானத்தை வைத்துக்கொண்டு சொல்லுகிறாகள் கவி இந்த அபிப்ராயத்தைக் கண்டிக்கிறார். அதை கவனிப்போம்.*

*பாலகாண்டம் 18-ம் ஸர்க்கம் 36-ம் ச்லோகம்:* ஃயமாஜா உபாஈயமெதுஷாஂதாரகிலாஂஆாதி । *என்று கவியானவர் தசரதர் குழந்தைகளுக்கு கல்யாணம் செய்ய எண்ணினார் என்கிறார். மேலே கவி பாலகாண்டம் 77-ம் ஸாக்கம் 16-ம் ச்லோகம்:* ரெசிரெஉ-ஷி_தாஸ வ-ஶா ஸ_த-ஶூரஸிஸஷி_தாஈஷஃ *என்றார். அந்த குழந்தைக்கான பெண் குழந்தைகள் தங்கள் தங்கள் பர்த்தாக்களுடன ஏகாந்தத்தில தனித்தனியாய் இருந்துகொண்டு ஸந்தோஷத்துடன் ரமித்துக்கொண்டு இருந்தார்கள் என்றார். ஆதலால் போகத்தை அனுபவித்துக்கொண்டிருக்கிறார் என்று ஸ்தாபிக்கிறார். (வால்மீகி வாக்கியம்).*

*அயோத்யா காண்டம் 118-ம ஸர்க்கம் 33-ம் ச்லோகம்:* வ_திஸஂயொ_ம ஸ-ஷுஸஂ வயொதூஷூா_த-ஶெவி_தா । ஷிஂ_தாஉஷூ ம௨ஹூ௰ெநா வி_தா_நாமாஜீவாய_நஃ । *என்று ஸீதை அனஸூயா தேவியைபபாாத்து எனக்கு பதியுடன் சேர்க்கையையடையும் படியான காலம் வந்தது கண்டு என் பிதா ரொம்ப கவலைப்பட்டார் என்றாள். (இது ஸீதா வாக்யம்)*

பாலகாண்டம் 66-ம் ஸர்க்கம் ஜனகன் விசுவாமித்ரரைப் பார்த்து சொன்னபோது நான் யாகம் செய்வதற்காக பூமியை உழுதேன. அப்பொழுது பூமியில் இருந்து இவள் (ஸீதை) வெளிவந்தாள். பிறகு இவள் விருத்தியடைந்தாள். அந்த கன்னிகையை ராஜாககள் வரித்தார்கள். நான், அவள் வீாயத்தால் அடையக் கூடியவள என்று வில்லை வளைக்கச சொன்னேன. அவர் கள் கோபித்து ஒரு வருஷம் யுத்தம செய்தார்கள். நான் தப ஸால தேவதைகளை ஆராதிதது பலத்தையடைந்து அவாகளை ஜயித்தேன. அவர்கள் பிறகு சென்றுவிட்டாாகள் என்றார். (இது ஜனக வாக்யம்.) இதில் ராஜாக்கள் வ ரி த் த ா ா க ள் என்றதால பெண் பெரியவளாக இருக்கவேண்டும் என ற ஒரு கக்ஷி. ஒரு ஸ்திரீயை வரிக்கவேண்டுமானல பக்குவமடையும் காலம் என்பதுதான் பிரமாணம். அதாவது 14 வயது பாிபநதம் சொல்லவேண்டும் என்கிறார்கள்.

அயோததியா காண்டம் 118-ம ஸர்க்கத்தில் ஸீதை அனஸூயா தேவியைப பாாத்து தன கலயாண கதையைச் சொன்னபோது, நான பிறந்தேன். என்னை என்மாதாவிடம் பிதா கொடுததார். என பிதா எனனைக்கண்டு பாத்தாவுடன் சேர்க்கையடையும் காலம் வநதது கண்டு மொமப கவலைபபாட் டார் என்றாள். அதற்காக, எனககாக ஸ்வயம்வரம் வைக்க எண் ணினார். அப்பொழுது வருணன அவாிடம் ஓர் வில்லைக்கொணடு வந்து கொடுத்தார். அதை நாணேறிடுபவருக்கு பெண் கொடுப் பதாய் என் பிதா சொன்னார். ராஜாக்கள் வரித்தார்கள் என் பிதா வில்லை வைத்துவிட எல்லாரும் விலகிவிட்டார்கள். பிறகு வெகு காலத்திற்கு பிறகு ராமன் அதாவது ஸுதீர்க்கஸ்ய காலஸ்ய என்று அதாவது தீர்க்கமான காலம் ஆனதும் ராமன் வந்தார். வில்லை நாணேறிட்டு என்னைக் கல்யாணம் செய்து கொண்டார் என்றாள். (இது ஸீதா வாக்யம்).

இது நிற்க முதலில் வயதின் நிர்ணயத்தைக் கவனிப்போம். தசரதரிடம் விச்வாமித்ரர் ராமனைக் கேட்கும்போது அவரைப் பார்த்து தசரதன் பாலகாண்டம் 20-ம் ஸர்க்கம் 2-ம் ச்லோகத் தில்: ஊநஷோடசவர்ஷோமே ராமோ ராஜீவலோசந: । நயுத்த

யொமூ்தாஉவூ் வயஹ்ாசிவஊஹஸாக்ஷவொஃ। என்று ஏ மஹர்ஷே நீர் சொல்லும்படி மாரீசாதிகளுடன் யுத்தம் செய்யும் யோக்யதை இவனுக்கு இல்லை இவனுக்கு கொஞ்சம் குறைந்த பதினாறு பிராயம் என்றார். இதில் 12 வயதுதான் ஸ்தாபிக்கிறார். இதை அறியாமல் ஒரு வயது அல்லது இரண்டு வயது குறைக்கவேண்டும் அதிகம் கூடாது ஊநம் என்றால் பதினாறுக்கு குறைசசல் என்று அர்த்தம். ஆதலால் ரொம்பக் குறைச்சல் என்பதல்ல என்ற ஒரு கக்ஷி.

ராமன் காடு போகும்போது கௌஸல்யையை துக்கித்தாள். அப்பொழுது அவள் ராகவனைப பார்த்து அயோத்யா காண்டம் 21-ம் ஸர்க்கம 45-ம சலோகம் ஊஸவஷ உவஷஶாணி தவஜ॥ தவூ் ஸாவவ। என்று நீ பிறந்து பதினேழு வயதல்லவா என்றாள். இதில் காடு போகும்போது 17-வயஸு என்று ஸ்பஷ்டம். (கௌஸல்யா வாக்யம்.)

ஆரண்யகாண்டம 47-ம் ஸர்க்கம் 4-ம் சலோகம் ஸீதை ராமனிடம் பேசும்போது உஷிக்ஷா ஸாஉ ஸவஊ வக்ஷ்ாகூணாం நிவெஸநெ। ஹுஂஜாநாం ஊநுஷொநு ஹொஹாநு ஸவகாஉவஊஜிநீ। தத்ஸ்ூ யொஉவெஷ ஸாஜாஉஂதூயதவூஹுஃ। என்று நான் பனிரெண்டு வருஷகாலம் ஸர்வமனுஷ்ய போகங்களை அனுபவித்துக்கொண்டு அயோத்தியில் இருந்தேன். பதிமூன்றாம் வருஷத்தில ராஜா ஆலோசித்தார் என்றாள். இதில் கலியாணம் ஆகி 12-வருஷம் இருந்தாள என்பது ஸ்திரம். மேலும் சொல்லும்போது அதே ஸர்க்கம் 11-ம் ச்லோகத்தில் உஉஹதஶா உஹா தெஜா வயவஶாவஹுவிஂஸகஃ। அஷ்ாஉஸஹிவஷஶாணி உஉஜநிஹ ணூ்தெ என்று காடு போகும்போது பர்த்தாவுக்கு 25-வயது என்றும் தான் பிறந்து 18-வயதில் காடு சென்றதாயும் குறிப்பிட்டாள். முந்தி இவள் கல்யாணமாகி பனிரெண்டு வருஷம் அயோத்தியில் இருந்ததால் குறிப்பிட்டதாலும் பிறந்த பதினெட்டு வயதில் காடு சென்றதால் கல்யாணத்தின்போது ஆறு வயதுதான் என்பது ஸத்யம்.

ஆரணியகாண்டம் 38ம் ஸர்க்கம் 6-ம் சலோகத்தில் ஊாஜொ ஊாஉஸவஷெஶாயஉகூதாஹ்ூ ஸாவவஃ। என்று ராவணனைப்

பார்த்து மாரீசன் ராமனுக்கு பனிரெண்டு வயதில் நான விஸ்வாமித்ராச்ரமத்தில் அடிபட்டேன் என்றான். (இது மாரீச வாக்யம)

இனி விஷயததை கவனிபபோம.

வாலமீகி தசரதரை புததிரயை இழநது புலமபுவதாய் வ்ருயிக உநா: என்று குறிபபிட்டதாலும தசரத வாக்யம் ப்ரயோசனம் இல்லை எனறுா. கௌஸலயையும அவனும புத்திரயிழந்து புலம்புவதாய் குறிப்பிட்டதாலும் அதுவும ஸரியலல என்கிறா கவி. இஙகு வயாகயாதாககள, பூணல் போடும்போது ...டாவது வயது அதை சோத்துக்கொள் எனபதை பிசகு எனறு கவி கண்டிருக்கிறார். ஒருவர் புத்திர இழந்து புலம்பும்போது அதறகுமதிப்பே கிடையாது எனறு ஸ்தாபிக்கிறார். ஸீதா வாக்யததையும மாரீச வாக்யத்தையும கவி புலம்புவதாய இந்த கட்டததில சொலலாததால் அதுவே கவி வாக்யப்படி பிரமாணம். இககிரந்த ரீதியில் கல்யாணத்தின்போது ஆறு வயது என்று பிரமாணம் மறுமுறந்தியே காட்டபபட்டது. ராமனுக்கு விச்வாமித்திரா ஙகேட்ட போது 12-வயது பிறகு ஊரில இருந்தது 12-வருஷம். பிறகு 25-வயதில் பட்டாபிஷேகததிற்கு யோசனை. கலயாணத்தில ராமாதிகளுக்கு 12 வயது என்பதும் ஸீதாதிகளுக்கு 6 வயது என்பதும ஸ்திரம். கௌஸல்யை வாக்யபபடி ராமன் காடு போகும்போது 17 வயதானல் கலயாணம் ஆகி 12 வருஷம் ஊரில இருந்தால ராமனுககு கலயாணமாகும்போது 5 வயது என்பது ஸத்யம். ஸீதைக்கு 6-வயது என்பது அல்லவா? இதுஉண்மையானுல், ஸீதை காடு புறபபடும்போது, தன் பாத்தாவுக்கு 25 வயது என்றும் தனக்கு 18 வயது என்றும் இருவருக்கும் 7 வயது குறைவைச் சொலலியிருக்க இது எப்படி? ஆகலால் இதுவும் ஸரியல்ல. சிலர் ஸீதை பிறக்கும்போது மூன்று வயது குழந்தையாய் பாவாடை கட்டிக்கொண்டு வந்தாள் என்கிறார்கள. இதுவும்பிசகுஎன்கிறார். அதாவது.கவி வாம்ஸுகுண்டித ஸவாங்கீம் என்று உடம்பில் ஒவ்வொரு அங்கத்திலும் ஏராளம் மண்ஒட்டிக்கொண்டிருக்க பிறந்த குழந்தையாய்வந்தாள் என்று இருக்களபபடிப்பொருந்தும்? ஆதலால் இக்க்ரந்தப்படி ஸீதையை

ராமனைவிட வயதானவளாய் சொல்ல முடியாது. ஆதலால இதுவும் ஸரியல்ல.

இக்கரந்தத்தில் வால்மீகி ராமாதிகளையும் ஸீதாதிகளையும் எப்படி குறிப்பிட்டுக் காட்டுகிறார் எனில் இவர்கள் பாயஸத்தினால் புதராதிகள் ஆவர்பக்ஷித்தவர்களாதலால் ஸீதை பூமியில இருந்து ஜனனமாதலால லக்ஷ்மி அம்சம் நாலு பெண்ணுமாதலால விஷ்ணு அம்சம் இந்த பிள்ளைகளுமாதலால இந்த புத்ரர்கள் 12 வயதில போகத்தை அடையுமா பெண்கள 6 வயதில் ருதுஆவார்களா எனபதை தீர்மானிக்க இந்த சாஸ்திரங்கள் உதவாது என்றும் இது சுகல சுரோணிதத்தில் பிறந்தவர்களுக்குத் தானே தவிற மற்றவர்களுககு கிடையாது, இவர்கள் அபபடி ஜனனமிலலாததால இவர்களை இந்த சட்டம் பாதிக்காது என்றும காட்டி அயோத்தியா காண்டத்தில் முதல் ஸாக்கத்தில ' நஉகாறுவபஶா நஃஶ: என்றார். ராமன் காலத்தில கட்டுப்படாத தூரீஷ புருஷன என்று இபபடியும் நிர்ணயித்து இருப்பதால இந்த பகுததறிவைக்கொண்டு பேசுவது உசிதம் அலல எனறும ஸித்தாந்தம். அதிலேயே ஸீதை தன் கலியாணகதையை அனஸூயைக்கு சொன்னபோது எனக்கு பதியோடு சேருமகாலம வந்தது கண்டு என் பிதா ரொம்ப கவலைபபட்டார என்று சொன்னது ஸத்யம் என்றும் ராமாதிகள் வித்தியாப்பியாஸம் செய்து ஊருக்கு வந்ததும் தசரதா அந்த 12 பிராயத்திலேயே அவர்களுக்கு கல்யாணத்திற்கு யத்னம் செய்தார் என்று கவியும ஸ்தாபித்துக் காட்டினதாலும் கவியே மேலும் பாலகாண்டத்திலும் குறிப்பிடுகிறா. தவிற ஸீதை என்னை ராஜாக்கள் வரித்தார்கள் பிதா வில்லைக் காட்டினார். அவர்கள் வில்லை நாணேற்ற முடியவில்லை. ஸஃதீவஃவஸ ... காறுவஸ என்ற ரொம்பகாலத்திற்கு அப்புறம் ராமன் வந்தா என்று சொன்னாளே என்பதை வைத்துககொண்டு ஸீதைக்கு வயதாகிவிட்டது ருதுகால பரியந்தம், பதினான்கு வயது பரியந்தம் ஆகிவிட்டது. அப்பொழுதுதான் ராஜாக்கள் வரிப்பார்கள். என்று சிலர் சொலலு கிறார். இதையும் கவி அடியோடு கண்டிக்கிறார். இந்த தீர்க்க காலம் என்ற பதம் இக்க்ரந்தத்தில் பல இடத்தில் ப்ரயோகம்

உண்டு. இப்பதம் இக்க்ரந்ததநில் நாழிகை கணக்குக்கும் நாள் கணக்குக்கும் மாஸக்கணக்குக்கும் வருஷக் கணக்குக்கும் ப்ர யோகிக்கப்பட்டு இருக்கிறது. ஆதலால இந்த பதம் வயதுக்குப் பேசவே முடியாது. இது வயவஸ்தை இல்லாத பதம். அதாவது கொஞ்சகாலம ஆனதென்பது. அதாவது நாள் கணக்கே தவிற மிஞ்சினல் மாஸக் கணக்கே தவிற வருஷத்திறகு உள்ளடக்கமே தவிற ஒரு நாளும மேலல்ல என்று ஸித்தாந்தம். ஆதலால கவி வாக்கியததிற்கும அவர் அபிப்ராயத்திற்கு விரோதமான எவர்கள் வாகயத்திற்கும் கௌரவம் கிடையாது என்று ஸத்யம். வால்மீகி பகவான் பிர்மமா அனுக்ரஹத்தால் ஸர்வமும் அறிநது வர்ணிப்பவர் என்ன சொல்லுகிறுர் எனில கல்யாணமாகி ஊருக்கு வநததுபட பாலகாண்டம் 77-ம ஸர்க்கத்தில் ஆறு வயது பெண்கள் தங்கள் தங்கள் பர்த்தாககளுடன் ஏகாநதத் தில் இருந்துகொண்டு ரமித்துககொண்டிருந்தாாகள் என்றும் குறிபபிட்டுவிட்டதால் யுகதியாதிகள ஒன்றும பரயோஜன மில்லையாதலால பகுத்தறிவுககு இக்க்ரந்தம் ஏற்பட்டதல்ல. ஆதலால அதை அனுபவித்தாலதான் தெரியுமாதலால் அனுக்ர ஹத்தால் அறிந்து வாணிக்கும் வால்மீகி 6 வயதில பெண் களும் 12 வயதில் பிளளைகளும் காம போகாதிகளை அனுப வித்துக்கொண்டு இருந்தாாகள் என்று குறிப்பிட்டுவிட்டதால அவர் வாக்யபபடி இதுதான் ஸத்யம் என்றும் ஸித்தாந்தம்.

---

உ

ஸ்ரீராமஜெயம்.

# அயோத்யா காண்டம்

---

## 18. ஸ்ரீராமன் ஏகதார வ்ருதத்துடன் கூடினவர் என்ற ஸித்தாந்தம்.

உலகத்தில சிலர் அபிப்ராயம் ராமன் பலபத்னியுடன் கூட இருந்தார் என்றும் பல பத்னிகளுடன் இருந்தால் அதற்கு கெடுதல இல்லை என்றும் இபபடி சில வியாக்யானஙகளும் அபிப்ராயப்படுவதால் அது அல்ல. ராமன் ஏகதார விருதமுள்ளவனே என்று வால்மீகி சொல்லும் வாக்யத்தையும் அவர், பல பத்னி என்று குறிப்பிடும் வாக்யங்களை பூர்வபக்ஷம் செய்யும் அழகையும் தன் தன் வாக்யங்களில் முன் பின் விரோதம் இல்லாமல் அவர் போகும் அழகையும் கவனிப்போம்.—

1. அயோத்யா காண்டம் 8-ம் ஸர்க்கம் 12-ம் ச்லோகம் ஹ்ருஷ்டா: கலு பவிஷ்யந்தி ராமஸ்ய பரமா: ஸ்த்ரிய: | அப்ரஹ்ருஷ்டா பவிஷ்யந்தி ஸ்நுஷாஸ்தே பரதக்ஷயே | என்று கூனி யானவள் கைகயீயைப் பார்த்து ராமனுக்கு பட்டாபிஷேகமானுல் ராமனுடைய உத்தம ஸ்திரீகள் ஸந்தோஷத்தை அடைவார்கள் உன்னுடைய நாட்டுப் பெண்கள் பரதனுடைய நாசத்தில் கவலைப் படுவார்கள் என்ருள். (இது கூனி வாக்யம்).

2. ஸுந்தர காண்டம் 28-ம் ஸர்க்கம் 12-ம் ச்லோகம் பிதுர்நிதேஶம் நியமேந க்ருத்வா வநாந்நிவ்ருத்தஶ்சரிதவ்ரதஶ்ச | ஸ்த்ரீபிஸ்து மந்யே விபுலேக்ஷணாபிஸ்ஸம்ரம்ஸ்யஸே வீதபய: க்ருதார்த்த: | என்று ஸீதையானவள் தற்கொலைசெய்துகொள்ளும் போது ராகவனை ஸ்மரித்துக்கொண்டு சொல்லுகிருள். ஏ நாதா பிதாவினுடைய ஆக்ஞையை நியமத்துடன் முடித்து வனத்தில இருந்து திரும்பி உத்தம விருதத்துடன் கூடினவராய்கொண்டு நீர் என்னிடத்தில் இருக்கிற பயத்தை விட்டுவிட்டு நீண்ட கண்

களுடன்கூட விளங்கிவரும் பெண்களுடன் பரம சுகத்தில் இருக்கப் போகிறீர் என்று நான் எண்ணுகிறேன் என்றாள். (இது ஸீதாவாக்கியம்).

3. அயோத்யாகாண்டம் 42-ம் ஸர்க்கம் 15-ம் ச்லோகம். யஸ்ஸுகேஷூபதாநேஷு சேதே சந்தநரூஷித: । வீஜ்யமாநோ மஹார்ஹாபி: ஸ்த்ரீபி: மம ஸுதோத்தம: ॥ என்று ராமன் காடு போனதும் தசரதர் ராமனை நினைத்து சொல்லுகிறார். என் பிள்ளையான உத்தமனான அந்த ராமன் உத்தம ஸ்திரீஜாதிகளால் சந்தனம் பூசப்பட்டு விசிறி முதலானதுகளால் உபசரிக்கப்பட்டு சுகத்திற்கு இருப்பிடமான ரமணீயமான படுக்கைகளில் படுத்த அந்த ராமன் இப்பொழுது மரத்தடியை அண்டியிருக்கிறான் நிச்சயம் என்கிறார். (இது தசரதவாக்யம்).

4. யுத்தகாண்டம் 21-ம் ஸர்க்கம் 3-ம் ச்லோகம் ஸஹஸ்ரை: வரநாரீணாம் [illegible] அநேகதா । என்று உத்தம ஸ்திரீகளுடைய புஜங்களால் அனேகம் தடவை ராமனுடைய கையானது தடவிக் கொடுக்கப்பட்டு இருக்கிறது என்றார். (இது வால்மீகிவாக்யம்.)

5. உத்தர காண்டம் 103-ம் ஸர்க்கம் 30-ம் ச்லோகம் அந்த:புரஸ்ய ஸர்வஸ்ய: குமாராணாம் [illegible] । காஞ்சநீம் மம பத்நீம் ச தீக்ஷார்ஹாம் யஜ்ஞகர்மணி । என்று லக்ஷ்மணனைப் பார்த்து பரதனை முன்னிட்டுக்கொண்டு நீ முந்திசெல் அப்படி செல்லும்போது எனது மாதாவர்க்கங்களையும் ஸகல குமாரர்களுடனும் அந்தப்புர ஸ்திரீஜாதிகளுடனும் யாகத்திற்காக தீக்ஷையுடன் இருக்கிற என்னுடைய ஸ்வர்ணமயமான பத்னியுடன் நீ முந்தி செல் என்றார். (ராம வாக்யம்).

இப்படி உள்ள இந்த வாக்யங்களைக்கொண்டு ராமனுக்கு பல பத்னி என்கிறார்கள். இதற்கு உள்ள கௌரவம் எந்த மட்டும் என்று கவனிப்போம்.

கூனியானவள் கைகயியிடம் வந்து அவளிடம் ராமனது பட்டாபிஷேகத்தை கலைப்பதற்காக பேசினபோது சொன்னாள். கூனி பேசசை எடுக்கும்போதே அவளை திரஸ்கரித்தார் வால்மீகி. அது என்னவென்றால் அயோத்யாகாண்டம் 7-ம்

ஸர்க்கம 13-ம ச்லோகம் [Grantha text] என்று பாபத்தை காட்டுகிற அவள் கோபததால் எரிக்கிறவள்போல் விளங்கி வேகமாய் ஓடி படுத்துக்கொண்டு இருக்கும் கைகயீயை அடைந்து இதைப பேசினுள் என்றார் கவி. கவி இவளை பாபி என்றா. தவிர அதே ஸர்க்கம் 16-ம் ச்லோகத்தில மறுபடி திருப்பி [Grantha text] என்றார். பாவத்தைக் காட்டும் அவளாலே பரம துக்கத்தை அடைந்தவளாய் கூனியைக் கேட்கிருள் என்றார். இதிலும் பாபத்தைக்காட்டும் அவளாலே என்றார் இவள் பாபி யானதால தசரதரையும் பாபி என்கிருள் வால்மீகி தசரதரை உத்தம தர்மிஷடனை, ஸத்யஸந்தன், என்று தசரத குணங்களை வர்ணித்து இருக்க இவள தசரதரைப்பற்றி அயோத்யா காண்டம் 7-ம ஸர்க்கம் 24-ம் சலோகத்தில [Grantha text] என்று உன பர்த்தா வாய்வார்த்தையில தார்மிகன், மறைககப்பட்டு இருக்கிற அபபிரியத்தை செயபவன் அது மற்ற வருககுத் தெரியாது. வெளிக்கு பிரிய வசனமாய் பேசுகிறவன். கருரகாமாவை உடையவன. இபபடிப்பட்டவரை உன் சுத்த பாவததால நீ தெரிந்துகொள்ளவில்லை. என்று இபபடி தூஷித்தாள. இப்பொழுது மந்தரையான கூனிவாக்யம் நிஜமா? எபபடி? கெட்டவர்கள் குணம் எதிராளியை கெட்டவர்களாக சொலலுவார்கள் எனகிறா கவி. சூர்ப்பனகி ராமனிடம் வருமபோது சூாபபனகியை வாலமீகி கிழவி என்றா. அந்த கிழவி யானவள் ஸீதையைக கிழவி என்றாள். சுந்தரகாண்டத்தில் பொய் சொலலபபட்டவர்களான ராக்ஷஸர்களில ஒருவரான ப்ரஹஸ்தன ஹநுமானைபபார்த்து பொய் சொல்லாதே. பொய் சொன்னல் உன் தலை போதும் என்றான். இப்படி கெட்டவர்கள் தன் கெடட குணத்தை எதிராளிகளிடத்தில் ஆரோபணம் செய்வாாகள் என்றார் கவி. ஆதலால் கெட்டவளான கூனியான வள் தசரதனை கெட்டவன என்றாள். ராமனுக்கு பட்டாபிஷேக மானல அவனுடைய உத்தம ஸ்திரீகள் ஸந்தோஷபபடுவார்கள். உன் நாட்டுப்பெண்கள் பரதநாசத்தில கவலைப்படுவார்கள் என்

ருள். இவள் முக்ய எண்ணம் ராமஹிம்ஸை என்று ராமனுக்கு ஹிம்ஸையை செய்கிறவளானதால அதற்காக எப்படி கைகயீ மனஸை கலக்கலாமோ அப்படி பேசுகிறாள். இல்லாததை சொல்லுகிறாள். தன் ஸ்வபாவப்படி பேசுகிறாள். இவள் பட்டணம் அலங்காரம் செய்யப்படுவதை தன்னைப்போல வேலைக்காரியிடமே கேட்கிறாள். பேசுகிறவளும் கைகேயீக்கு வேலைக்காரி என்று வால்மீகி வர்ணித்தார். ஒருவனுக்கு பட்டாபிஷேகமானால் அந்த மூத்த ராஜ குமாரன பத்னிகளுக்கு அதிக ஸந்தோஷம் என்பதல்ல. ஏனென்றால் அவர்களுக்கு என்றைக்கு ஆனாலும் ஒருநாள் பட்டாபிஷேகம உண்டு. அன்றைய தினம் ஸந்தோஷம் உண்டு என்பது நிச்சயம். ஆனால வேலைக்காரிகள், அவர்களுக்குத் தான் எஜமானுக்குப் பட்டாபிஷேகமானால் அந்த வேலைக்காரிகளுக்குத்தான பரம ஸந்தோஷம். ஏனெனில் அவர்கள் சாச்வதமல்ல. பெண்ணாவது பிள்ளைக்கு கல்யாணமானால் அந்த கல்யாணம் செய்யப்பட்ட குழந்தைகளுக்கு அநேகம் வேலைக்கார வேலைக்காரிகளைக் கொடுத்துவிடுவதால அவர்கள் ஸ்திரமில்லாததாலும் இந்த கூனியும் கைகயீதேவி கல்யாண காலத்தில் கேகய ராஜனால் கொடுக்கப்பட்டுவந்தவளாதலாலும், அவர்கள் குற்றம் செய்துவிட்டால் அவர்கள் வேலையில் இருந்து நீக்கப்பட்டுவிடலாமாதலாலும், பிரியமில்லாவிட்டால அவர்களை விலக்கிவிடலாமாதலால் அவர்கள் சாச்வதமல்ல. ஆதலால் வேலைக்காரிகளுக்குத்தான் அதிக ஸந்தோஷம். ஆதலால் கூனியும் வேலைக்காரியாதலால், இவள் இப்பொழுது ராமபட்டாபிஷேகத்தை கலக்கும் காரணமே, வேலைக்காரியான தனக்கு, இப்பொழுது ராஜ பத்னியாய் இருக்கும் கைகயீயால் கொடுக்கப்பட்டு இருக்கும் ஸுகம் நாளைக்கு ராமனுக்கு பட்டாபிஷேகம் ஆகிவிட்டால் கைகயீக்கு ராஜ்ய வைபோகம் குறைந்தால் நமக்கும் இப்பொழுது இருக்கும் வைபோகம் குறைந்துவிடுமே என்று ஆத்ம ஸுகத்தை அபேக்ஷித்தே கூனி கலக்கிறாள் என்று வால்மீகியே வர்ணித்ததாலும் ராமபட்டாபிஷேகமானால் ராமனுடைய வேலைக்கார ஸ்திரீகள் ஸந்தோஷப்படுவார்கள். ஜலோக்ஷாஃ கிருஹத்தில் தீர்த்தம் தெளித்து வீடு சுத்தம் செய்கிறவர்கள். உனது

வேலைக்காரிகள் கலைப்படுவார்கள் பரதநாசத்தில் என்றாள். கெட்டவள் எதையும் பேசுவள் என்றதால் கூனி வாக்யம் அங்கீகரிக்கத் தகுந்ததல்ல என்று ஸ்திரப்படுவதால அவள் வாக்யம் தள்ளத்தகுந்தது என்று ஸித்தாந்தம.

ஸீதாதேவியானவள் மஹா கவலையடைந்து ராமனை அது காலபரியந்தம் அடையாததால உண்டான அதி கவலையால் நீர் நான் இதோ பிராணனை விட்டுவிடப்போவதால நீண்ட கண்களுடன் கூடின பெண்களுடன் பரம ஸந்தோஷத்துடன் இருக்கப் போகிறீர் என்று எண்ணுகிறேன் என்ற ஸீதாவாக்யத்தை வால்மீகி துக்கத்தால ஊ_ீவஜெஷிபஹ-யாவிருவ ஸவஷா நாரா உ_ஸரஞ் । என்று அதி துக்கததால புலம்புகிறாள் என்று சொல்லிவிட்டதால இது அங்கீகரிக்கத் தகுந்ததில்லை என்று ஸ்பஷ்டம. ஆதலால ஸீதாவாக்யமும் தள்ள தகுந்தது என்று ஸித்தாந்தம

தசரதர் ராமன் காடு போனதும உண்டான துக்கததின் ஆத்திரததால் புலமபுகிறா என்று வால்மீகி வர்ணிப்பதால் எப்படிபோல என்றால், ஸீதை தன நாதனுக்கு தான ஒரு பத்னி தானென்று தெரிந்து இருந்தும அதி துக்கத்தால் எப்படி இல்லா ததைச் சொல்லுகிறாளோ அப்படியே தசரதரும் பிள்ளையைப பிரிந்த அதி துக்கத்தால் அயோத்யா காண்டம் 42-ம் ஸர்க்கம் 13-ம ச்லோகத்தில விஷுாவஊ உ-வொ_த-ஃ ஸ ரயாவ-த உந ஸஙந என்று பிள்ளையை ஸ்மரித்துககொண்டு ராஜா புலம்பினார் என்று முநியும் அதே ஸர்க்கம் 22-ம் ச்லோகத்தில் ஊதெவம விஷுவந ராஜா ஜநளவெநா ஸிஸம்வரு_தஃ । என்று இப்படி ஜனங்களால சூழப்பட்டு இருக்கும ராஜா இப்படி புலம்பினார் என்று வால்மீகி குறிபபிட்டதாலும் தசரதன் வார்த்தையும் அங்கீகரிக்கத்தகுநததில்லை என்ற ஸித்தாந்தம்.

வால்மீகியானவர் உத்தம ஸ்திரீ ஜாதிகளுடைய கரங்களால் தடவிக்கொடுக்கபபட்ட அநத கையை ராமன் தலைக்கு உயரமாக வைத்துக்கொண்டார் என்றார். உத்தம ஸ்திரீஜாதிகளுடைய கரங்களால என்ற கவி வாக்யம் ஸரியே. இவரை, ஸீதை தவிர எநத ஸ்திரீஜாதியும ராமனை ஸ்பரிசித்ததே கிடையாது. இதை

வால்மீகி மேலே அதே ஸர்க்கத்தில் வர்ணிக்கும்போது 5-ம் சலோகத்தில் ஶயநே நோத்தமாங்கேந ஸீதயா ஶோபிதம் புரா என்று கவியே வேறு எண்ணம் கொள்ளாமல் இருக்கும்படி ஏற்கனவே அந்த ஹஸ்தமானது சிவப்பு சந்தனத்தினாலே சயனத்தில ஸீதாதேவியால் பூசபபட்டு விளஙகிவரும் ஹஸ்தம் என்கிறார். இககவியே உத்தரகாண்டத்தில 111-ம் ஸாககததில் 8-ம் ச்லோகத்தில ந ஸீதாயா: பராம் பார்யாம் வவ்ரே ஸ ரகுநந்தன: என்று ஸீதையைத் தவிர அந்த ரகுநந்தனன் வேறு பாரயையை வரிககவே இல்லை என்று குறிப்பிடடதால இபபடி சொல்லியிருப்பவர் முன் சொன்னதற்கு எந்த பாவத்தில் சொலலி இருக்கிறார் என்பதை கவனிக்கவேண்டும் வேறு ஒருத்தியையும் பத்னியாய் வரிககாததினாலேயே ஒவவொரு யாகத்திற்கும் தஙகத்தினால் செய்யப்பட்ட ஸீதா பிம்பத்தை வைத்துக்கொண்டு யாகம் செய்ததாக கவி நிர்ணயித்ததால் வேறு யாரையுமே வரிக்கவில்லை எனறு ஸ்தாபித்ததால் பல ஸ்திரீகளால தடவிக்கொடுக்கப்பட்டகை என்ற வாணைக்கு என்ன அர்த்தம் என்றால் வேலைக்கார ஸ்திரீகள் முதல் எந்த ஸ்திரீகளும் நியமமாக ஏகதார விரதமுள்ளவர்களை ஸ்நாநகாலத்திலும் ஏகாந்தமாய் இருக்கும் காலத்திலும் உபசாரணைக்காகவோ மற்றதற்காகவோ தொடுவது என்பதே கூடாதாதலாலும் தொடுவது ஏகதார விருதமுள்ளவனுக்கு அந்த பத்னி ஒருவள் தான தொடலாம். ஆதலால் இங்கு பதப்பிரயோகம் வால்மீகி வாக்யத்தை ஒரு இடத்திலும் புலம்பலாகச் சொல்லாததாலும் அவர் நேரிட நடந்ததைக் கண்டு சொல்லுவதாலும் அவர் வாக்யத்தில் தப்பு கிடையாது என்று பிர்மமா வாக்கியமாதலால் பல பெண்டுகளுடைய கரங்களால் என்பது ராமன் எத்தனை வயது உடையவராலும் தாயாருக்கு பிள்ளை பிள்ளையேயாதலால் மாதுர் வர்க்கங்களான 353 தாய்மார்களான உத்தம ஸ்திரீஜாதிகளுடைய கரங்களால் குழந்தையாதலால் கட்டிக்கொள்ளப்பட்டும் தடவிக்கொடுக்கபபட்டும் உள்ள அந்தகையை ராமன் தலைக்கு உயரமாய்க்கொண்டார் என்ற இந்த விஷயத்தை கவி வர்ணிப்பதால் அது வாஸ்தவமே. ஆதலால் கவி இங்கு சொன்னது ஸரி

என்றே ஸித்தாந்தம். இங்கு அவதாரம் ராமாவதாரமாதலால் முந்தின ஜன்மாவில் ஸ்ரீதேவி பூதேவியால ஆலிங்கனம் செய்யப்பட்டமை என்பது இந்த அவதாரத்தில சொல்லுவது பொருத்தமல்ல. அதைச சொல்லுவதானால் கவியே சொல்லி இருப்பரே. கவி எப்பொழுது வேறு ஸ்திரீயை வரிக்கவில்லை என்றோ இந்த ஜன்மாவைபபறறி பேசும்போது பூர்வ ஜன்ம விருததாநதம் பேசுவதே விருத்தமாதலால கவி சொன்னது ஸரியே என்று ஸித்தாந்தம்.

ராகவன லக்ஷ்மணனைபபார்த்து யாகசாலைக்கு எல்லோரை யும அழைததுக்கொணடுபோ என்று சொல்லும இடத்தில் குழந்தைகளையும, அந்தபபுர ஸ்திரீ ஜாதிகளையும், மாதாவர்க் கங்களையும அழைததுக கொணடுபோ. அததுடன நான யாகத் துக்கு தீக்ஷையுடன இருபபதால எனது பதனியான வைதேஹியை தயாகம செய்யபபடடுவிட்டதால ஏகதாரவிரதனான நான் ஸவர்ணததால செயதுவைத்து இருக்கும இநத ஸவர்ண ஸீதா பிம்பமாயும எனனுடைய யக்ஞ காமாவுக்கு எனனுடன நிறைந்தக் காக செய்யபபட்டு இருக்கிறதுமான இநத பிமபததையும எடுத் துககொண்டுபோ என்றார். இங்கு குழந்தைகள் யாரு? அநதப்புர ஸ்திரீகள யாரு என்றால, லக்ஷ்மண பரத சத்ருக்னருடைய குழந் தைகள, அவர்களுடைய ஸதிரீகள் தவிற மாதாவர்க்கங்கள், தவிற ஸ்வர்ண பிமபமான இவர்களுடன செல் என்றதால் இது வும ஸரியே ஆதலால இக்க்ரந்த ரீதியால் வால்மீகி வாக்யத் திலும், நாரத வாக்யத்திலும் ராமனுக்கு பல பத்னி என்று சொல்லப்படாததாலும், வால்மீகி ராமன் ஏகதார விருதத் துடன் கூடினவன் என்று ஸ்தாபித்துவிட்டதாலும மற்ற யார் வாக்யங்களும் அங்கீகரிக்கத் தகுந்ததில்லையாதலால கவி வாக்யங் களுக்கு விரோதங்களான வியாக்யானங்கள் அங்கீகரிக்கத் தகுந்த தில்லை என்றும் ஸ்ரீராமன் ஏகதார வ்ருதத்துடன கூடினவன் தான் என்றும் ஸித்தாந்தம்.

---

## 19. ஸ்ரீராமன், ஸீதை, சுக்ரீவன் இம்மூவரும் ஒரு இடத்தும் பொய் சொல்லவில்லை என்ற ஸித்தாந்தம்.

பாலகாண்டம் 1-ம் ஸர்க்கம் 12-ம் ச்லோகம் [Grantha verse] என்று நாரதர் வால்மீகியைப் பார்த்து ராமன் தர்மத்தை அறிந்தவன், ஸத்திய ஸந்தன், பிரஜைகளுக்கு ஹிதம் செய்யப்பட்டவன் என்றிப்பதாலும் இதுவும் பாலகாண்டம் 3-ம் ஸர்க்கம் 5-ம் ச்லோகம் [Grantha verse] என்று வால்மீகி சொல்லுகிறார். ஸத்யஸந்தனை ராமனால் செய்யப்பட்ட ஸர்வத்தையும் பார்த்தார் என்று இருப்பதாலும் கிஷ்கிந்தாகாண்டம் 7-ம் ஸர்க்கம் 22-ம் ச்லோகம் ராகவன் ஸுக்ரீவனைப்பார்த்து [Grantha verse] என்று நான் முந்தி ஒரு ஸமயத்திலும் பொய்யே சொன்னதில்லை என்று ராமன் சொல்லி இருப்பதாலும் அயோத்யா காண்டம் 18-ம் ஸர்க்கம் 30-ம் ச்லோகம் [Grantha verse] என்று கைகயீயைப் பார்த்து ராகவன் அம்மா, அப்பா மனதில் உள்ளதை நான் கட்டாயம் செய்வேன் அதை நீர் சொல்லும் செய்வேனோ என்று ஸந்தேகம் வேண்டாம் நான் கட்டாயம் செய்வேன் ராமனுக்கு சொல்லு இரண்டில்லை என்று இப்படி சொன்னதாலும், ஆரண்யகாண்டம் 17-ம் ஸர்க்கம் 15-ம் ச்லோகத்தில் [Grantha verse] என்று ராகவன் சூர்ப்பணகியைப் பார்த்து ஒருக்காலும் ராமனுக்கு பொய்யில் ஸம்மதமில்லை என்று ராமன் சொன்னதாலும் ஆரண்யகாண்டம் 4-ம் ஸர்க்கம் 4-ம் ச்லோகம் [Grantha verse] என்றும் ஸீதை ராகவனைப் பார்த்து உம்மிடத்தில் பொய் இல்லை என்றும் சொல்லி 8-ம் ச்லோகத்தில் [Grantha verse] என்று ஸத்ய ஸந்தன் என்றும் குறிப்பிட்டு இருப்பதாலும் இன்னும் பல இடங்களில் இப்படி இருப்பதாலும் ராமன் ஸத்திய ஸந்தன், ஒருக்காலும் பொய்சொன்னவர் அல்ல என்பது ஸத்யம். தவிர ராமன் தண்டகாரணியத்தில் மஹர்ஷிகளிடத்தில் ராக்ஷஸர்களை அழிப்பதாய பிரதிக்ஞை செய்து இருக்க, ஸீதையானவள் எதற்காக

ராக்ஷஸர்களை அழிக்கவேண்டும் என்று கேட்டகாலத்தில் ரிஷிகள் ராக்ஷஸர்களிடம் இருந்து தங்களைக் காக்கவேண்டும் என்று கேட்டதால் நான் காப்பாற்றுவதாய்ச் சொன்னேன. நான ஸதயத்தை விடமாட்டேன் என் ஸத்யத்தை காபபாற்றுவதற்கு உன்னைவிட்டாலும் விடுவேன் என்றார். இப்படி ஸத்யத்தை விடமாட்டேன் என்றார். வாலியிடத்திலும் ஸத்திய ஸந்தனான நான எபபடி என் ஸத்யத்தை விடுவேன் என்றார். இபபடி பல விதங்களாலும் ராமன் ஸத்ய ஸந்தன் என்பது பிரமாணம்.

அயோதயாகாண்டம் 40-ம் ஸர்க்கம் 47-ம் சலோகத்தில் நாஶ்ரௌஷமிதிராஜா உபாலப்தோபி வக்ஷ்யஸி । சிரம் துக்கஸ்ய பாபிஷ்டமிதிராமஸ் தமப்ரவீத் ॥ என்று சுமந்திரரைப் பார்த்து ராமன் நீர ஊருக்குப போனபிறகு பிதா உமமை நான ரதத்தை நிறுததச்சொனனேனே நீர் ஏன் நிறுததவிலலை என்று கேடடால நீர் சொன்னது நன்றாய் காது கேட்டது என்று சொல்லி ஏன் நிறுத்தவிலலை என்றால துக்கத்திற்கு இடம கொடுப்பது ஸஹிக்கமுடியாததாலால காது கேட்டும நிறுத்தவிலலை என்று சொலலும் என்றார். இதுதான் சலோகத்தின் தாத்பர்யம. இப்படி இருக்க உலகத்தில் இதற்கு அர்த்தம என்ன சொலலுகிறார்கள என்றால பிதா கேட்டால நீர் சொன்னது காது கேட்கவில்லை என்று சொலலும துக்கததுக்கு இடம்கொடுபபது ஸஹிக்கமுடியாது என்று சொல்லும் என்று சொன்னதாகச சொலலி ராமன் காது கேட்டு இருந்தும் சுமந்திரனிடம் காது கேட்கவில்லை என்று அப்பாவிடம் பொய் சொலலச சொன்னதாக உலகததில சொலலுகிறார்கள். இவர பொய்சொன்னாலென்ன சுமந்திரனை பொய்சொல்லச் சொன்னாலென்ன. இப படி சொல்வது நியாயமா என்றால் ஆபதது ஸமயத்தில பொய் சொல்லலாம். இது தர்ம சாஸ்திரம் என்கிறார்கள். (இந்த தர்ம சாஸ்திரம் யாருக்கு என்பதுமட்டில கொஞ்சம ஞாபகத்தில் வேண்டும் என்று ஞாபகப்படுத்துகிறோம) ஆதலால இது பொய்யாகாது. என்று சொல்லுகிறார்கள.

அடுத்தபடியாக ராமபத்னியான ஸீதையானவள ஸுந்தர காண்டத்தில் சிம்சுபா மரத்தடியில் விளங்கும்போது ஹநுமான

ஸீதையிடம் மோதிரம் கொடுத்து சூடாமணியை பெற்றுக் கொண்ட பிறகு ஹநுமான் ராவணனை பார்க்கவேண்டும் என்று எண்ணி பெரிய பயங்கரமான ரூபத்துடன் கூடி அசோக வனத்தை அழிக்க அப்பொழுது ராக்ஷஸிகள் எல்லோரும் சப்தம் கேட்டு ஹநுமானைப் பார்த்து பயந்து ஸீதையிடம் வந்து ஸீதே உன்னால் இவனிடம் பேசப்பட்டதே இதோ அசோக வனத்தை அழிக்கிறானே இவன் யார் எதற்காக வந்து இருக்கிறான்? உன்னால் இவனுடன் என்ன பேசப்பட்டது என்று இப்படிக் கேட்டார்கள்.

அது எவ்வாறு என்றால் ஸுந்தர காண்டம் 42-ம் ஸர்க்கம் 6-ம் ச்லோகம் கோயம் கஸ்ய குதோவாயம் கிந்நிமித்தமிஹாகத: । கதம் த்வயா ஸஹாநேந ஸம்வாத: க்ருத இத்யுத । ஆசக்ஷ்வ நோ விசாலாக்ஷி மாபூத்தே ஸுபகே பயம் । ஸம்வாதமஸிதாபாங்கி த்வயா கிம் க்ருதவாநயம் । என்று ராக்ஷஸிகள் கேட்டார்கள். அதைக்கேட்டு ஸீதையானவள் 42-ம் ஸர்க்கம் 8-ம் ச்லோகம் ரக்ஷஸாம் பீமரூபாணாம் விஜ்ஞாநே மம கா கதி: । யூயமேவாபிஜாநீத யோயம் யத்வா கரிஷ்யதி । அஹிரேவ ஹ்யஹே: பாதாந் விஜாநாதி ந ஸம்சய: । அஹமப்யஸ்ய பீதாஸ்மி நைநம் ஜாநாமி கோந்வயம் । வேத்மி ராக்ஷஸமேவைநம் காமரூபிணமாகதம் । என்று ஸீதையானவள் அவர்களைப் பார்த்து பயங்கர ரூபமுள்ள ராக்ஷஸர்களுடைய கதி எனக்கு எப்படித்தெரியும் அவன் யார் என்று உங்களுக்குத்தான் தெரியும், பாம்பின் கால் பாம்பிற்கே தெரியும் நானும் இவனைக்கண்டு பயப்படுகிறேன். இவனை எனக்குத் தெரியாது. நினைத்த ரூபத்தை எடுக்கும் இவனை ராக்ஷஸன் என்றே எண்ணுகிறேன் என்றாள். இப்படி ஸீதை சொன்னது இது பொய்தான் என்றும் ஆனால் அவள் சொன்னது பொய் அல்ல ஏனென்றால், கல்யாண காலத்தில் புளுகலாம், ஸம்பந்த காலத்தில் புளுகலாம், பிராணன் போகும்போது புளுகலாம், பணம் திருட்டுப்போகும்போது புளுகலாம், மித்திரனுக்காக புளுகலாம் என்று தர்ம சாஸ்திரம். ஆதலால் இது பொய்யல்ல என்கிறார்கள்.

அடுத்தபடியாக ராம மித்ரனை ஸுக்ரீவனை ராமன் அடைவதற்கு முந்தி சுக்ரீவனை அடையும் என்று சொன்ன கபந்தன ராமா அந்த ஸுக்ரீவன் ஸத்யஸந்தோ ஹ்ரீமாந் ஸுக்ரீவ: த்ருதிமாந் மதிமாந் மஹாந் என்று அவன் ஸத்யஸந்தன் அபார பலமுள்ளவன். உத்தமகாந்தியுள்ளவன். அபார தைரியமுள்ளவன என்று ஸுக்ரீவனை ஸத்தியஸந்தன என்று சொன்னான். அதுகேட்டு அவரும் ஸுக்ரீவனை அடைந்து சிநேகம் செய்து கொண்டபிறகு கிஷ்கிந்தா காண்டம் 6-ம் ஸர்க்கம் 24-ம் சலோகத்தில த்வாம் ஸ கஸ்ய ச க்ஷி: ஸஹாயம் கரிஷ்யதி என்று சுக்ரீவனைப்பார்த்து ஸீதையைக் கொண்டுபோன ராக்ஷஸன் எவ்விடத்தில் வஸிக்கிறான் என்று கேட்டு மேலும் அதே ஸர்க்க கடைசி ச்லோகத்தில 26-ம சலோகத்தில ஸ்வயம் ஸ்திதோ யத்ர ... ம்ருதம் ப்ரியதமாம் வைதேஹீம் மம! என்று நீ இப்பொழுதே அந்த ராவணன் இருப்பிடத்தைச் சொல்லு அவனை யமனிருப்பிடத்திற்கு அனுப்புகிறேன் என்று சொன்ன ராகவனைப்பார்த்து ஸுக்ரீவன் கிஷ்கிந்தா காண்டம் 7-ம் ஸர்க்கம் 1-ம சலோகத்தில் ந ஜாநே நிலயம் தஸ்ய ஸர்வதா பாபரக்ஷஸ:। ஸாமர்த்யம் விக்ரமம் வாபி தௌஷ்குலேயஸ்ய வா குலம் என்று எனக்கு அவன் இருப்பிடம் கொஞ்சம்கூட தெரியாதென்றும் அவன் பராக்ரமம் யோக்யதை குலம் முதலிய ஒன்றுமே எனக்குத் தெரியாதென்றான். இப்படி சொன்ன இதே ஸுக்ரீவன் 41-ம் ஸர்க்கம் 26-ம் சலோகத்தில ஸ ஹி தேஶஸ்து வத்யஸ்ய ராவணஸ்ய துராத்மந: ராக்ஷஸாதிபதேர்வாஸ: ஸஹஸ்ராக்ஷஸமத்யுதே:! என்று ஸுக்ரீவன தெற்கு திக்கில் ஸீதையைத் தேடச் செல்லுகிறவர்களிடத்தில மஹேந்திரமான மலையில் இருந்து 100 யோசனையிருக்கிறது லங்காபட்டணம். அது ராவண இருப்பிடம அங்கு நன்றாய்த் தேடுங்கள் என்றான். இப்படி இங்கு சொன்ன ஸுக்ரீவன், இராமன கேட்டபோது தெரியாது என்றானே அதனால சொன்னது பொய்தான் என்று அபிப்ராயம். ஏனென்றால் அதற்கு என்ன சொல்லுகிறார்கள் என்றால் சிலர் இவருக்கு ராவண இருப்பிடத்தை இப்பொழுது சொல்லிவிட்டால இவர் ராவணனைக கொன்றுவிட்டு ஸீதையை அழைத்துக்கொண்டு

போய்விட்டால நமக்கு வாலி வதத்தை செய்யாமல போய்விடப் போகிருரே என்று பொய் சொன்னர் என்றும் தவிற மற்றும் சிலர் இப்பொழுது ராவண இருபபிடத்தைச் சொன்னால் உடனே ராமன ராவணனை எதிரததுவிட்டால, வாலி ராவணனுக்கு ஸநேகிதனுதலால் ராமன அவவிருவரோடும சண்டை போடவேண்டியிருககுமே, கொலல முடியுமோ முடியாதோ அவர்களை என்று பயந்து வாலி இவனைக்கொன்றுவிட்டால் எனன செய்வது என்று சுக்ரீவன பொய்சொன்ஞன் என்றும் வாலி ராவணன மித்ரனுதலால வாலி ராவணனை ஸீதையை விட்டு விடு எனருல விட்டுவிடுவன். அபபொழுது ராமன ஸீதையை அழைத்துபபோய்விட்டாலும் தன காரியம ஆகாது எனறும் தவிற தான் தனது நாலு மந்திரிகள் தவிற தனக்கு வேறு யாருமில்லாததாலும் இபபொழுதே ராவணன் இருப்பிடத்தைச சொல்லிவிட்டால இவா ராவணனை எதிர்தநுவிட்டால் அவன் ஏராளமான ஸேனைகளை உடையவன். அறபுதமான வரப பிரஸாத முள்ளவன். அபபடியிருகக இவர் பலமோ நமக்குத் தெரியாது. நம்மிடம் இவர் ஸ்நேகம் செய்துகொண்டு இருப்பதால் நம்மையும் மித்ரனுதலால் ராவணனுடன் சண்டைககு அனுகூலமாய் வா என்ருல நான் அனுகூலமாய் எபபடிச செலவது? நான், இந்த ரிஷிமதஙகரால வாலி வரககூடாது என்று சபிக்கப்பட்டு இருக்கிற எலலைககுள் இருப்பதால வாலி தினம் சில வீரர்களை எல்லைக்கு வெளியில் இருந்து கர்ஜித்து நம்மைக் கொன்றுவரும்படி அவர்களை அனுப்புகிருன். நான் அவர்களை ஓயாமல் சண்டையில் கொன்றுவருகிறேன். இந்த ஆத்திரத்திஞல் நான் எலலையைவிட்டு வெளிவந்தால் அவன் உடனே வருவான். நானே அவன எனககு முன்பிறந்த வியாஜத்துடன் இருபபதால் நான் அவனைக் கொலல இடமிலலை. இப்படி இருக்க நான் எப்படி இவருடன் கூட ஸகாயமாய்க் கிளம்பமுடியும் என்று எண்ணியும் என்னை வாலி எதிரத்தால இவர் அவனை எதிர்க்க வேண்டியிருக்குமே. இவர் பலம் எபபடி என்று நமக்குத் தெரியாததால நாம் என்ன செய்வது. ஆகையால் இத்தனை ச்ரமத்திற்கும், நாம் தெரியாதென்று சொல்லிவிடுவோம் என்று

பொய் சொன்னான். மித்ரனுக்காக புளுகலாம் என்று நியாயம் ஆதலால் பொய் சொன்னான் என்கிறார்கள். மேலும் இவர் நமக்கு வாலி வதம் செய்கிறேன் என்றார். நானோ இவருக்கு ஸீதையை தேடிக் கொடுக்கிறேன் என்று பிரதிக்ஞை செய்தேன். இவர் இப்பொழுது ராவண இருப்பிடத்தை கேட்பதால் இருப்பிடத்தைச் சொன்னதும் அவர் ராவணனைக்கொன்று தானாகவே ஸீதையை அழைத்துக்கொண்டுபோய்விட்டால் நான் இவருக்கு ஸீதையை தேடிக கொடுக்கிறேன் என்று சொன்ன என் பிரதிக்ஞை வியர்த்தமாகுமே. அவர் சொல்லியபடி நமக்கு வாலிவதம் செய்துவிடுகிறார். நான் அவருக்கு ஸீதையைத் தேடிக்கொடுப்பதாக சொன்னது வியர்த்தமல்லவா? ராவணன் இருப்பிடத்தைச் சொன்னால் தானே இத்தனை கஷ்டமாகையால சொல்லாமல் இருப்போம் என்று சுக்ரீவன் பொய் சொன்னான் என்கிறார்கள்.

இப்படி உலகத்தில சொல்வதாலும், இப்படி சிலதுகளை வியாக்யாதாக்களும சொல்லியிருப்பதாலும் மூலத்திற்கு மேல வியாக்யானத்திற்கு பலம இல்லையாதலாலும் வால்மீகி ராமாயணத்தை வேதஙகளோ, சாஸ்திரங்களோ, மற்ற எதுகளோ ஒன்றுமே கட்டுப்படுத்த முடியாதாதலாலும, இது வேதமாதலாலும், இது ஸ்வதந்திர க்ரந்தமாதலாலும் இந்த கவியான வால்மீகி பகவான் இம்மூவரும் ஒருஇடத்திலும் பொய் சொல்லவே இல்லை என்றும் ஸர்வ ரகஸ்யமும தெரிந்து இவர் கரந்தம் செய்ததால முன்சொன்ன ஸகல ஆக்ஷேபங்களும பிசகு என்றும் ஸுக்ரீவன ஸத்யத்தையே சொன்னான் என்றும் இம்மூவர்களும் ஸத்யத்தையே சொன்னார்கள என்று எப்படி கவி ஸ்தாபித்து இருக்கிறாரோ அந்த அழகையும முன்சொன்னவைகளை எப்படி பூர்வ பக்ஷம் செய்கிறார் என்ற அழகையும் கவனிப்போம் :—

அயோத்யா காண்டத்தில் ஸ்ரீராகவன் சுமந்திரனைப்பார்த்து என்ன சொன்னார் என்றால் '— மந்திரியே பிதாவான மஹாராஜா உம்மை என ரதத்தை நிறுத்தவில்லைஎன்று கேட்டால் "நீர் நிறுத்தசொன்னது காது கேட்கவில்லையா என்ன" என்று சொல்லும்.

ஆனால் காது கேட்டிருந்தால் ஏன் நிறுத்தவில்லை என்றால் துக்கத்திற்கு இடம் கொடுப்பது ஸஹிக்க முடியாதது என்று நிறுத்தவில்லை என்று சொல்லும் என்றார். பிதா சொன்னதை ராமன் கேட்டுவிட்டுத் தான் மந்திரிக்குச் சொல்லுகிறார். தவிர பிதா ரதத்தை நிறுத்தும் என்று சொல்ல அதையும் ராமன் கேட்டுவிட்டு வருகிற பிதாவையும் கண்டுவிட்டு அவர் சப்தத்தையும் கேட்டுவிட்டு ஓட்டும் ஓட்டும் என்றார். இவரோ சற்று முந்தியும் வேகமாய் ஓட்டும் என்று சொன்னவர் இப்போது மறுபடியும் சொன்னார். ஏன் சொன்னாரென்றால் அதையும் வால்மீகி வர்ணிக்கிறார். அதாவது ராஜா நிறுத்தும் ரதத்தை என்று சொல்ல ராமன் ஓட்டும் என்கிறார் இதைக் கேட்டு யாருவார்த்தையை கேட்பது என்று [illegible] என்று தாமஸங்கடப்பட உடனே ராகவன், அப்பா கேட்டால் நீ நிறுத்தச்சொன்னது காது கேட்டு துக்கத்திற்கு இடம் கொடுப்பது ஸஹிக்கமுடியாது அதனால் ஓட்டினேன் என்று சொல்லும் என்றார். அவரும் அப்படியே என்று ரதத்தை இன்னும் வேகமாய் ஓட்டினார் என்பதுதான் கவிஹ்ருதயம். முதலில் குறிப்பிட்டபடி ஸத்யஸந்தனை ராமனை பொய் சொன்னானென்ன? மந்திரியை காது கேட்கவில்லை என்று பொய் சொல்லும் என்று சொன்னாலென்ன? ஆதலாலும் ஸரியல்ல. தவிர இந்த ராமன் இப்படி மந்திரியிடம் சொல்லியிருந்தால் மந்திரி இதை ஒத்துக் கொண்டு இருப்பாரா? அவர் தன்மையை கவனிப்போம் ராமன் படகில் இறங்கினபிறகு சுமந்திரன் ராமனை விட்டுப்பிரிய இஷ்டம் இல்லாமல் ராமனைப் பார்த்து என்ன சொன்னார் என்றால் அயோத்யா காண்டம் 52-ம் ஸர்க்கம 45-ம் சலோகத்தில் [illegible]

[illegible]

[illegible] என்று ராமனைப்பார்த்து ராமா நான் உன் அம்மாவுக்கு என்ன சொல்லுவேன? உன் மாதா என்னை குழந்தை ராமன் எங்கே என்று கேட்டால் நான் அவனுடைய மாமா வீட்டில் கொண்டுபோய்விட்டு இருக்கிறேன். நீர் கவலைபடவேண்டாம் என்று நான் பொய் சொல்லுவேனா? இவருக்கு ஆபத்து

யடைய வந்தேன் என்று சொல்ல அப்பொழுது ராகவன் அந்த சூர்ப்பனகியைப்பார்த்து ஆரண்யகாண்டம் 18-ம் ஸர்க்கம் 2-ம் சலோகத்தில் [illegible] என்று ராகவன் சூர்ப்ப னகியைப் பார்த்து நான பத்னியுடன் கூடினவராயிருக்கிறேன். உன்னைப்போலொத்தவர்கள் ஸ பத்னியுடன் இருக்கமுடியாது. ஆதலால் என் தம்பி இருக்கிறான். அவன் பத்னியுடன் கூடின வனாய் பண்ணப்படவில்லை. பத்னி வேண்டும் என்று ஆசை உடையவன். உனககு அவன் ஸமானமான பர்த்தா எனறு இப்படி சொல்லி அனுப்பினார். இதைப பார்த்தால் இவா பொய் சொல்லவில்லையா? தம்பிக்கு கலயாணம் ஆகவில்லையா? தவிர லக்ஷ்மணன் பத்னி வேண்டும் என்று ஆசையுடையவனாய் இருக்கிறானா? இவா சூாப்பனகியை ரொமப அழகுள்ளவள் போல் பேசுகிறாரே. முதலில சூாப்பனகி ராமனிடம் வரும் போது வாலமீகி பரம கிழவியான விகார ரூபமுள்ளவள், உத்தம ரூபமுள்ள ராமனிடம் வநதாள் என்று சொல்லியிருக்க இதில் யார் வாாத்தை நிஜம? இஙகு வால்மீகி வர்ணிக்கிறார். இப்படி சொல்லி சூர்ப்பனகியை ராமன் அனுப்பிவிட அப்பொழுது லக்ஷ்மணனும் அழகாகப்பேசி அவளைத் திருப்பிவிட அவள் ராம னிடம்வநது ஸீதையைக்கொல்லவந்தபோது ராகவன் லெக்ஷ்மண னைப்பார்தது ஸௌமித்ரே ஆரண்ய காண்டம் 18-ம் ஸர்க்கம்19-ம் ச்லோகத்தில் [illegible] என்று கெட்டவர்களோடு பரிஹாஸம் செய்யகூடாது எனகிறார். தான் செய்ததும் பரிஹாஸம், அவர் செய்ததும் பரி ஹாஸம் என்றும் காட்டி நான் பரிஹஸித்ததில் உனக்கு ஆபத் தும் இல்லை, க்ஷேமமும் இல்லை. நீ பரிஹஸித்ததில் ஸீதைக்கு ஆபத்துவிட்டதே என்றார். பேசசேபரிஹாஸம் என்கிறார். சூர்ப்ப

னகியிடம் ராமன் பேச ஆரம்பிக்கும்போது மந்தஹாஸம் செய்து பரிஹாஸம் செய்கிறவராய் ஸாமர்த்தியமாய் பேசுகிறார் என்றே கவி வர்ணித்தாலும் அத்தனையும் பரிஹாஸமாதலால் அவர் வாக்யங்களுக்கே மதிப்பு இல்லை என்றே கவி ஸ்பஷ்டமாக்கினார். தவிர லெக்ஷ்மணன் தன்னிடம் பேசின சூர்ப்பனகியிடம் ஏ விசாலாக்ஷி என்கிறாரே; ராமனும் விசாலாக்ஷி என்கிறாரே; வால்மீகி சூர்ப்பனகியை விரூபாக்ஷி என்றாரே எது நிஜம்? தவிர லெக்ஷ்மணன் சூர்ப்பனகியிடம் நீ ராமரிடமே செல்லு ராமரிடம் இருக்கும் ஸீதை ரொம்ப கிழவி; நீ மறுபடி போனால் அவா அவளை விட்டுவிடுவார் என்கிறார். ஸீதை கிழவியா? வால்மீகி ஸீதையை நல்ல பால்யம் என்று வர்ணித்து இருக்கிறாரே எப்படி இங்கு ஸகலத்திற்கும் வால்மீகி வாகயமே ப்ரமாணமாதலால் அதன்படி ஆரண்யகாண்டம் 18ம் ஸர்க்கம் 13ம் சலோகத்தில உநூதெதஅஉஷயூம் வறிஹாவாவிவக்ஷணா । என்று பரிஹாஸமான வாக்யம் என்று கவி சொல்லிவிட்டதால் முன் சொன்ன ஸகலமும் பூர்வபக்ஷம் ஆதலால் பரிஹாஸ காலததில் சொன்ன வார்த்தைக்கும் மதிப்பிலலை என்று ஸ்தாபிக்கிறார் வால்மீகி ஆதலால் இங்கும் ராமன் பொய் சொலலவில்லை என்று ஸ்தாபனம். தவிற ராமன் சூர்ப்பனகியிடம் எனக்கு பொய்யில் ஸம்மதமே இல்லை என்றார். இதை ஒத்து கவியும் பரிஹஸித்தார் என்றார். ஆதலால் பொய் சொல்லவில்லை என்று ஸத்யம்.

மேலும் ராகவன் காடு வரும்போது ஜனங்கள் எல்லோரும் கூடவர அவர்கள் கூடவந்தால் காடு நாடாகிவிடுமே அப்பொழுது காட்டில் இருக்கிறேன் என்றது பொய்யாகி விடுமே ஆதலால இந்த ஜனங்களை ஏமாற்ற வேண்டும் (ஏமாற்றுவது பொய்யல்லஎன்று ஸ்தாபிக்கிறா கவி) என்று எண்ணி கூடவரும் அவ்வளவு பேரையும் இருட்டிவிட்டது படுங்கள் நாளை போகலாம் என்று சொல்ல ஜனங்கள் படுத்துத் தூங்கிவிட அர்த்த ராத்திரி வேளையில் எல்லாரும் தூங்குவது கண்டு மந்திரியைக் கூப்பிட்டு ரதத்தை ஊர் நோக்கிப் போனது போல் ஓட்டிவிடு, கொஞ்சதூரம் விட்டு பிறகு ரத்தை ரதச்சுவடு கீழே படாமல் ஓட்

டிக்கொண்டு பௌரஜனங்கள் ரதசக்ரவடைகளைக் கண்டு ராமன் ஊருக்குப் போய்விட்டார் என்று எல்லாரும் ஊரைநோக்கிக் கிளம்புவார்களே பிறகு கொஞ்சதூரம் சென்றதும் ரதசாரதி மறைத்ததும் நம் எல்லோரையும் ராமன் ஏமாற்றிவிட்டானே ஏனென்றால் கூடச்சென்றால் காடு நாடாகிவிடுமல்லவோ! அதற்காகவல்லவோ அவன் ஏமாற்றிவிட்டான் என்று, நாம் ஏமாறியதாகவே அவர்கள் சொல்லவேண்டும், ஏனெனில் அதற்காகவே ரதசாரதியே பதியும்படி ரதம் ஓட்டச்சொல்லி பிறகு சுவடு படாமல் மறைத்துக்கொண்டுவா சொன்னார் இப்படி ராமன் ஸத்யத்தைக் காப்பதில் அவ்வளவு தீவிரமாய் ஒருபாவம் அறியாப் பொய்சொல்லுவார் என்று யோசிக்கவேண்டும். தம்பி பரதன் பாதுகைகளை வாங்கிக்கொண்டு போனபிறகு ஒருநாள் ராமன் லக்ஷ்மணனைப் பார்த்து தம்பியே நமது இருப்பிடம் பட்டணத்து ஜனங்களுக்குத் தெரிந்துவிட்டதால் இனி அடிக்கடி வருவார்கள் பிறகு இங்கே தங்கிவிட்டால் காடு நாடாகிவிடும். அப்பொழுது நாம் காட்டில் இருக்கிறோம் என்று சொன்ன ஸங்கல்பம் பங்கமாவதால் நாம் வேறு இடத்திற்கு சென்றுவிடுவோம் என்று சொல்லி வேறு இடம் சென்றதாகப் ப்ரயோகம். இப்படி ஸத்யபாலனக் காரியத்தில் இவ்வளவு தீவிரமாய் விளங்குபவர் விளையாட்டுக்குக்கூட பொய் சொன்னதில்லை என்றவர், மந்திரியை எப்படி பொய்சொல்லச் சொல்வார் ஆதலால் இது ஸத்யம் அல்ல என்று ஸ்தாபனம்.

ராம பத்னியான ஸீதையிடம் ராக்ஷஸிகள் உம்மால் இவனிடம் பேசப்பட்டதே இவன் யார் எங்கே வந்திருக்கிறான் என்று கேட்டதற்கு ஸீதை தெரியாது என்று சொன்னதாக அனுஷ்டானம். மித்ரனுக்காகப் பொய் சொன்னாள். தனக்கு இன்னும் ஆபத்து வராமல் இருப்பதற்காகவும் பொய் சொன்னதாகச்சொல்வது வழக்கம். அதை வால்மீகி ஸத்யமாக என்கிறார். அதாவது ராக்ஷஸிகள் இவன் யார் உம்மால் இவனிடம் பேசப்பட்டதே என்று கேட்டதற்கு ஸீதை நான் இவனிடம் பேசவே இல்லை என்ற இது வாஸ்தவம். ஏனென்றால் ஸீதை ஹநுமானிடம் ரொம்ப குட்டையான சின்ன ரூபத்துடன் இருக்கும் போதும் பயங்கரமான உக்ர ரூபமான விச்வரூபத்துடன் இருக்

என்பது ஒருவிததிலும் அங்கீகரிக்கத் தகுந்ததில்லை என்பது ஸ்பஷ்டம். மித்ரனுக்கு என்ன ஆபத்து வருமோ என்று பொய் சொன்னதாகச் சொல்லுவார்கள். அதற்கும் கவி என்ன சொல்லுகிறார் என்றால் ஸீதை ஹநுமானுடைய விசுவரூபத்தை கண்டுயிருப்பதாலும் அவர் என்னை எவனும் கொல்லமுடியாது என்று சொல்லி இருப்பதாலும் ஸீதை அவரை மஹாவீரனு யிருப்பதால மித்ரனுக்காக பொய் சொன்னாள் என்பதும் பொருத்தமல்ல என்பது ஸ்பஷ்டம். தனக்கு ஆபத்து வந்து விடுமோ என்று பொய் சொன்னாள் என்றால் அதுவும் இல்லை. ஏனென்றால் ராவணன் தனக்கு ஒருவருஷ பரியந்தம் ஸாவகாசம் கொடுத்து இருப்பதாலும் தவிர முதலநாள் இராத்திரி காலத்தில ராவணன வந்து பேசிவிட்டு இரண்டு மாஸம் ஸாவகாசம் கொடுத்துப்போய் இருப்பதாலும் ராக்ஷஸர்களிடம் தன்னைக் கொன்றுவிடும்படி ராவணன சொல்லவில்லை என்று அவள் நன்றாய்த் தெரிந்துகொண்டு இருப்பதாலும் ஸத்யத்தில் இருந்து விட்டால எந்த ஆபத்தில இருந்தும் தப்பிக்கொள்ளலாம் என்று அறிந்தவளாதலால ஸத்யத்தையே ஸீதை சொன்னாளே தவிற பொய் சொல்லவே இல்லையென்று ஸ்தாபனம்.

ஸுக்ரீவன், ராகவன தன்னிடம் ராவண இருப்பிடத்தைச் சொல்லு இப்பொழுதே ராவணனைக் கொன்றுவிடுகிறேன் என்ற போது தனக்கு அவனைப்பற்றி தெரியாது என்றான். அவன் குலகோத்திரம் தெரியாது; அவன் இருப்பிடம் தெரியாது என்றான். இது ஸத்யமே. சிலா ராவணனை வாலி ஒருதடவை கட்டியிருக்க அப்பொழுது வாலியும் ராவணனும் ஸ்நேகம்செய்து கொள்ள பிறகு ராவணன் ஒருமாஸ பரியந்தம் கிஷ்கிந்தையில் இருந்திருந்தான் என்று இருக்க ஸுக்ரீவனுக்கு நன்றாய் ராவணனை தெரிந்திருக்கவேண்டும் என்று ஒரு கக்ஷி. க்ரந்தத்தில் ராவணன் கிஷ்கிந்தையில் இருந்திருக்கலாம். ஸுக்ரீவன் அவனைப்பற்றி விசாரித்தான். அவன் விஷயங்களை தெரிந்திருக்கிறான் என்பதற்கு மூலம் ஆதாரம் இல்லாதபோது அவன் கிஷ்கிந்தையில் இருந்ததால் சுக்ரீவனுக்கு தெரிந்திருக்கவேண்டும் என்று ஊஹிப்பது இக்க்ரந்த மார்க்கமல்ல. தவிற சுக்ரீவன்

வேலைக்காரனைப்போல இருக்கிறனென்றதால் அவன் இதைப் பற்றி கவனிக்கவேண்டிய பிரஸகதியே இல்லை. ஆதலால இது வும் ஸரியல்ல. எதுவும் இஷ்டம் இருந்தாலதானே கவனிக் கலாம். கவி இதுகளை எல்லாம் சொல்லாதபோது மூலத்தில எது உள்ளதோ அதுதான் பிரதானம். சுக்ரீவன் சொன்னது எப்படி ஸத்யம் என்றல் சுக்ரீவன் ராமனிடம் தனக்கு இராவண இருப்பிடம் தெரியாதென்றனே, தெரியாதா எனில தெரிந்தால் இந்த சுக்ரீவன் நாலு திக்குகளுக்கும் ஸேனைகளை விடவேண்டிய திலலையே. தவிர தெற்கு திக்கு போகிற வானரர்களிடத்தில் மஹேந்திர பர்வதத்தில்இருந்து (100) யோசனையில் இருக்கிறது. அது லங்காபட்டணம் ராவண இருப்பிடம் அங்கு நனறய் தேடுங்கள் என்றனே என்ற, வாலி சுக்ரீவனை திக்குகளில் விரட்டும்போதுதான் இடங்களை ஓடும்போது பார்த்து இருக் கிறன். அதற்கு முந்தி தெரியாது. தவிர அங்கு தேடச் சொல்லிவிட்டதால் அது இராவண இருப்பிடம் என்பது இவனுக் குத்தெரியும் என்பது ஸ்பஷ்டம் இஙகு ராமா சுகரீவனை எனன கேட்டார் எனில் ராவணன் இருப்பிடத்தைச சொல்லு இபபொ ழுதே அவனைக் கொன்றுவிடுகிறேன் என்று சொல்லிவிட்டதால் இவர் அவனைக் கொல்லுவதறகு அவன் எங்கு இருக்கிறனே நான் இப்பொழுது அவன் எஙகே இருக்கிறன் என்று தெரிந்து கொண்டு பிறகலலவோ நான் இவருககுச் சொல்லவேண்டும். அதுவும கொல்லுகிறேன என்கிறவனுககு நிச்சயமான இடமல்ல வா சொல்லவேண்டும் நிசசயமான இடமோ தனக்குத் தெரியாது அதை மேலே குறிப்பிடுகிறன். நாலு திக்குகளிலேயும் ஸீதை யைத் தேடவிடும்போது ராவணன் இருப்பிடத்தை தெரிந்து கொண்டு வாருங்கள் என்று ஒவ்வொரு திக்கு செல்லுகிறவர்க ளிடத்திலும் இவன் குறிப்பிட்டு சொலலுவதால் இவனுக்கு அந்த ஸமயம் இவன் கொல்லுகிறேன் என்பதற்கு இருப்பிடம் எப்படிச் சொல்லமுடியும்? தனக்கு அவன் அந்த ஸமயம் எங்கு இருக்கிறன் என்பது ஸந்தேகத்தில் இருப்பதாலும் தான் ராமனுக்கு நிச்சயம் சொல்ல முடியாது என்று தீர்மானித்து தனக்கு தெரியாதென்று சொன்னனே தவிர வேறு இல்லவே

வாலி வதத்தைச செய்யாமல் ஸீதையை அழைத்துக்கொண்டு போய்விட்டால் என்ன செய்கிறதென்ற எண்ணத்தால் சுக்ரீவன் பொய் சொன்னன் என்பதை வால்மீகி கண்டிக்கிருர். ராமனும் சுக்ரீவனும் ஸ்நேகம் செய்யும்போது துரோகம் உண்டாகாமல இருக்கும்பொருட்டு அக்னிஸக்யமான ஸ்நேகத்தைச் செய்து இருக்க சுக்ரீவன் தனக்கு ராமன் துரோகம் செய்துவிடுவனே என்று எண்ணி பொய் சொன்னன் என்பது மேலும் பிசகு. தவிற அதைச சொன்னல் ஏன் இப்படி சொல்லக்கூடாது? அதாவது நம்மை சுக்ரீவன் வாலி வதம் செய்யச சொல்லுகிருன் வாலி வதம் செய்து இவனுக்கு நாம் அகண்ட ராஜயத்தைக் கொடுத்துவிட்டால் இவன் நமக்கு ஸீதையை தேடிக்கொடுக் காமல் இருந்துவிட்டால் என்ன செய்வது என்ற எண்ணத்தை ராமன் ஏன் கொள்ளக்கூடாது? தவிற தன்னை எதிர்த்துவிட் டால் என்ன செய்வது என்று ஏன் எண்ணக்கூடாது? இதையும் சொல்லலாமே. ராமன், ஸீதையை சுக்ரீவன் தேடிக்கொடுக் காமல் இருந்துவிட்டால் தானே தேடிக்கொள்ளுகிருா. தானே ராவணனைக் கொன்று கொள்ளுகிருர் என்ருல் இவனும் ராமன் இல்லாமல் ஹநுமான் மூலம் வாலி வதம செய்துகொள்ளமுடி யும். அப்படியானல் ஏன் இவ்வளவு காலம் செய்துகொள்ள வில்லை என்ருல் ஹநுமானை ஸ்துதித்தால் அவன் பலம் அவருக்கு ஞாபகம் வந்துவிடும் என்பது வெகுகாலம் சுக்ரீவன் மறந்து இருந்ததாய் சொலலி பிறகு ஹநுமானை ஸீதையைத் தேடச் சொல்லுகிறபோது சுக்ரீவனுக்கு ஞாபகம் வந்துவிட்டதாய் குறிப் பிடப்பட்டு இருக்கிறது. தவிற சுக்ரீவன் வாலிககுமேல் மஹா பலிஷ்டன். பிர்மம தேஜஸ் உள்ளவன். வாலிக்கு க்ஷத்ரிய தேஜஸ் என்பது ஸ்பஷ்டம் இதற்காக பயந்தே இந்திரன் இந்த சுக்ரீவன்போல் உளள பலிஷ்டாகள் இருக்கலாம் என்று மாரில் உள்ள பரியந்தம் உயிரை ரெக்ஷிக்கும் யோக்யதை உள்ள மாலையை சுக்ரீவனல் வாலிக்கு நாசம் வராமல் இருக்கும் பொருட்டு போட்டான் என்று க்ரந்தம். ஆதலால் வாலியை சுக்ரீவனே கொன்றுவிடுவன். தான் அவனைக் கொல்ல தர்மம் இடம் கொடுக்கவில்லை என்று ஸ்திரப்படுத்தி இருக்கிருன். ராமன்

மிருகம் பக்ஷி ஸர்வத்திற்கும் ராஜாவாதலால் ராமன் குற்றவாளி யான வாலியை வதம் செய்யவேண்டிய கடமை உடையவனாத லால் ராமனைக்கொண்டு வதிக்கச் சொன்னான். அது தாமம் என்று ஸ்தாபித்தான். அதையும் கவி ஸபஷ்டமாய் வாணித்து இருககிறார். இப்பொழுது பேசுவது இத்தனையும் கவி சொல் லாதபோது யுக்தியாய் பல கதைகளை சொல்லிக்கொண்டு அதற்கு பதில்களை பேசிக்கொண்டு போவதில் பாபத்தை தவிற வேறு ஒன்றும் இல்லை. கவி சொல்லாததில் விசாரணையே உதவாது. இருக்கிறதைபற்றி மட்டில் பேசசு பேசவேண்டுமாதலால் ப்ர கரணத்தை கவனிப்போம். சுக்ரீவன், துரோகம் செய்வான் என்று ராமன் என்று எண்ணினான். அதற்காக பொய் சொன்னான் என்பதும் பொருத்தம் இல்லை.

தவிற சுகரீவன், ராவணனும் வாலியும் ஸ்நேகிதனாதலால், ராமனை எதிர்த்துவிட்டால் என்னசெய்வதென்றால்(இது வால்மீகி சொல்லவில்லை. நமது யுக்தியாதலாலேயே இது பூாவபக்ஷம்) இதே ராமன் வாலியைக் கொன்றபிறகு வாலிக்கு மித்ரனான ராவணன் வாலிக்காக பரிந்துகொண்டுவரவே இல்லை. வரவும்மாட் டான் என்றார் கவி. ராவணன வாலியை மதிக்கவே இல்லை. ராவணன் வாலியைக் காட்டிலும் மஹா பலிஷ்டனாதலால் விஷ்ணு பாதிபலமுள்ள ராமனே ராவணனால் அடிபட்டு கஷ்டப்படுகிறார் என்று இருக்கிறது. இவவிருவரும் (வாலியும் ராவணனும்) செய்துகொண்ட அக்னிஸக்யமான ஸ்நேஹமே ஸரியான ஸ்நேக மல்ல. ஸமயத்தை அனுஸரித்து வாலியிடம் மஹா வீரனான ராவணன் நம்மிடம் ஸ்நேகம் செய்யவேண்டும் எனகிறான். இவ னிடம் மாட்டேன் என்று சொல்லிவிட்டால இவன் மஹா வரப்ர ஸாதமுள்ளவன். இவனிடம் சகதியாயுதம், சூலாயுதம், பிர்ம்ம சக்தி, சந்திரஹாஸம இப்படிப்பட்ட ஆயுதங்கள் இருக்கின்றன. ஆதலால் எந்த வேளை எப்படியிருக்குமோ என்று பீதியால் வாலி யும், ராவணன நம்மை இவன் இப்பொழுது கட்டினானே இந்த வேளையில் தந்திரமாய செல்லவேண்டும் என்று, எப்படி ராவணன் ஸுபார்சுவனான பக்ஷிராஜனிடமிருந்து தந்திரமாய்ச் சென் றானோ அபபடிஸமயத்தை அனுஸரிக்கவேண்டும்என்ற எண்ணத்

தால் ராவணனும் ஸ்நேகம் செய்துகொண்டார்கள், என்றும் இது ஸமமான ஸ்நேகம் அல்லவென்று வால்மீகி சொல்லுவதாலும் ராம ஸுக்ரீவ ஸ்நேகத்தை வால்மீகி ஸமமான ஸ்நேகம் என்று குறிப்பிடுவதாலும், வாலியைக் காட்டிலும் பிர்ம்ம தேஜஸ் உள்ள ராவணன எல்லாவிதத்திலும் பலிஷ்டனுதலாலும், ராவணன், கார்த்தவீர்யார்ச்சுனன, வாலி, சவேதத்வீபத்தில் உள்ள பெண்கள் இவர்களிடததில் கர்வததினுல் கட்டுப்பட்டானே தவிற வேறு அல்ல. மஹாபலிஷ்டனே அவன் கர்வம் அடைந்துவிட்டால் அல்ப பலிஷ்டர்கள்கூட அவனை அவமானபபடுத்திவிடுவார்கள் என்று இக்ரந்தத்தில கவி வர்ணித்து இருப்பதாலும் முன்சொன்ன பேர்களில ஒருவருக்காவது ராவணனை ஜயிக்க யோக்யதை கிடையாது எனறு வர்ணிப்பதாலும் இக்ரந்தரீதியாய் கவனிக்க ராமன் இந்த ராவணன் வாலி முதலிய ஸகலரையுமே அழித்துவிட யோக்யதை உண்டு என்றும், ஸீதை காணுமல் போனபோது ஸர்வ லோகததையும் அழித்துவிடுகிறேன் என்று ராமன் கர்ஜித்த போது லோகம் நடுங்கினதாக வால்மீகி வர்ணித்தாலும், மூன்று லோகத்திலும் ராமனுக்குமேல் பலிஷ்டன் இல்லை என்று ராமன் காகாஸுர வருத்தாநதத்தில் ஸ்தாபித்துவிட்டதாலும் சுக்ரீவன், வாலி ராவணன் சேர்ந்துவிட்டால் என்ன செய்வது என்று எண்ணினுன் என்பது இதரர்கள் யுக்தியாதலால் அதற்கு இந்த யுக்தியால் அந்த யுக்தி பூர்வபக்ஷம். சுக்ரீவன் எண்ணினுன் இப்படி என்று ஸர்வமும் தெரிந்த கவி சொல்லாதபோது நாம் இல்லாததைபபற்றி பேசுவதே பிசகு என்று பூர்வபக்ஷம் செய்கிறோம். தவிற சுகரீவனுக்கு ராமன பலம் கொஞ்சம்கூட தெரியாமல இருக்கும்போது, ராவண பலமும் சுக்ரீவனுக்குத் தெரியாமலிருக்கும்போது வாலி ராவணர்கள் ஒன்று சேர்ந்துகொண்டு ராமனைக் கொனறுவிட்டால எனன செய்வதென்று சுக்ரீவன் எண்ணினுன் என்பது சுத்த பிசகு எதிரியின் பலம் தெரியாமல் ஒன்றையுமே எண்ணக்கூடாதலாலும் இதனுலும் பூர்வபக்ஷம் ஆகிறது.

தவிற வாலி ராவணனை ஸீதையை விட்டுவிடு என்றுல் விட்டுவிடுவன். அப்பொழுது நாம் ஸீதையை கொடுக்கிறோம் என்ற

சொன்ன வார்த்தை வியர்த்தமாகுமென்று எண்ணினுன் என்ருல் (இதுவும் க்ரந்தம் அல்ல சுக்ரீவன் எண்ணுதவதை எண்ணினுன் என்ற யுக்தி. கவி சொல்லாதபோது இதுவும் பிசகு) வால்மீகி வாக்யப்படி வாலியைக்காட்டிலும் ராவணன் மஹா பலிஷ்டன் ஆதலாலும் விடமாட்டான். மேலும், ஒரு ஸ்திரீயைக் கொண்டு போனவன் தன்உயிர் உள்ளமட்டும் விடமாட்டான் எனறு தீர்மா னம் சுக்ரீவனுக்கு உண்டு. ராவணன் ராமனிடம் தீர்க்க வைரம் உண்டாவதற்காக, ராமனுல் அடிபடுவதற்காக, ஸீதையைக் கொண்டுபோயிருக்க, அவன் வாலி வார்த்தைக்காக விடுவன் ஸீதையை என்பது பிசகு என்று ஸித்தாந்தம் ஏனென்ருல் தன் பத்னி ருமாதேவியை வாலி விடாமல் இருப்பதினுலேயே இப்படி எண்ணினுன் என்பதும் ஸ்பஷ்டம். ஆதலால் ஸீதையை நாமே கொடுக்கலாம் ராகவனுக்கு எனற தீர்மானம். தவிற முதலில் வாலி வதம் செய்தபிறகே ஸீதையை சுக்ரீவனைத் தேடச்சொல் வது என்று ராமன் தீர்மானமே தவிற முந்தி எனற எண்ணமே இல்லை. பாபியான வாலியால் சுக்ரீவன் வெளிவர முடியாமல் இருக்கிருன் என்று கபந்தன் மூலம் அறிந்து இருந்தும் ராமன் அதற்கு தானே முந்தி வாலியையழிப்பதாய் பிரதிக்ஞை செய்து இருக்க சுக்ரீவன் பிசகாக எண்ணினுன் என்பது ஒருவிதத்திலும் பொருத்தமல்ல என்று ஸித்தாந்தம். சுக்ரீவன் ராமனிடம் விஷ யம் ஒன்றும் சொல்லாததற்கு முந்தியே அவர் அவனை கொல்லு வதாய்ச் சொன்னதால் இதுவும் சுக்ரீவனுக்குத் தெரியும். அத னுலேயே நீர் கவலைப்படவேண்டாம். ஸீதை எங்கு இருந்தா லும் நான் தேடிக்கொடுப்பேன் என்கிருன். வாலி தன்னைக் கொல்ல தயாராக இருப்பதால் வெளிகிளம்ப முடியாததலால் அதற்காகவே சுக்ரீவன் ராமனிடம் தன் ஸர்வ கதையும் சொன் னதும் ராமன் உடனே இப்பொழுதே கொல்லுகிறேன் என்ப தாலும் அது ப்ரத்யக்ஷமே. ஆதலால் சுக்ரீவன் பொய் சொன் ஞன் என்பது ஸரியல்ல. தவிற ராவணனைப் பற்றின விஷயமே இந்த சுக்ரீவனுக்குத் தெரியாதபோது இவன் பலவிதமாய் எண்ணினுன் என்பதே. பிசகு. ஆதலால் இக்ரந்த ரீதியாய் மித்ரனுக்காக பொய் சொல்லலாம் என்று இக்ரந்தமில்லையாத

லாலும் இக்க்ரந்தத்தில் பொய்சொல்லவே கூடாது என்று பிரமாணமாதலாலும் சுக்ரீவனை ஸத்யஸந்தன் என்று வால்மீகி ஸ்தாபித்து இருப்பதாலும் சுக்ரீவனும் பொய் சொல்லவே இல்லை என்று வால்மீகி வாக்ய ரீதியாய் ஸ்தாபனம்.

---

## 20. குஹன், சபரி இவர்கள் சண்டாள ஜாதி அல்ல என்ற ஸித்தாந்தம்.

பாலகாண்டம் 58-ம் ஸர்க்கம் 9-ம் ச்லோகம் [Grantha text] என்று வஸிஷ்ட புத்ராதிகள் ராஜாவான திரிசங்கு தங்களை அலக்ஷ்யம் செய்து கடோமாக சொன்ன வார்த்தையைக் கேட்டு அவனை சபித்துவிட்டார்கள். அவனை சண்டாளனாகும்படி சபித்தார்கள். இவர்கள் சண்டாள ஜாதி அன்றைய தினமே உண்டு என்று ஸ்தாபித்தார்கள். இவனை ஜாதி சண்டாளனாகவே சபித்தார்களே தவிற கர்ம சண்டாள னாகும்படி சபிக்கவில்லை. இவர்கள் சபித்துவிட திரிசங்கு மஹா ராஜன் சுந்தர ரூபமுள்ளவன், உத்தம தேஜஸ் உள்ளவன், நல்ல சிகப்பான ராஜலக்ஷண சின்னங்களுடன் கூடின சரீரமுள் ளவன், மந்திரி முதலிய ஸகலராலும் சூழ்ந்து இருக்கப்பட்டவன் இராத்திரி முடிந்ததும் சண்டாளத்வத்தை அடைந்துவிட்டான். அவனைப்பற்றி வால்மீகி [Grantha text] என்று வர்ணிக் கிறார். எப்படியானான் அந்த ராஜன் என்றால், இடுப்பில் நீல நிறமுள்ள வஸ்திரம் கட்டிக்கொண்டவனாயும், சரீரம் நீலவர்ண முள்ளவனாயும், அவிழ்ந்துவிடப்பட்ட தலைமயிர்களுடன் கூடின வனாயும், எலும்புமாலை பூண்டவனாயும், எலும்புமயமான ஆபர ணங்கள் பூண்டவனாயும் ஆனான். இவனைக்கண்டதும் ஸகல மந்திரிகளும், மற்ற கூடவந்த ஸகல ஜனங்களும் சண்டாள

ரூபியான அவனை விட்டுவிட்டு ஓடிவிட்டார்கள். இதிலிருந்து சண்டாளனை வர்ஜிக்கவேண்டும் என்று ஸ்பஷ்டம் சண்டாளத்வமான சாபத்தைக் கொடுத்தார்கள் என்றால் சண்டாளன் என்று உண்டு அதனுடைய பாவம் சண்டாளத்வம். அந்த சண்டாளன் என்பவன் எப்படி இருப்பான் என்றும ஸ்திரப்படுத்தி ரூபலக்ஷணத்தையும வர்ணித்து சண்டாளனை வர்ஜிக்கவேண்டும் என்று வால்மீகி ஸ்திரப்படுத்தினார்.

பாலகாண்டம் 58-ம ஸர்க்கம 13-ம் ச்லோகம் க்ஷத்ரியோ யாஜகோயஸ்ய சண்டாலஸ்ய விசேஷத: | கதம்ஸதஸி போக்தாரோ ஹவிஸ்தஸ்ய ஸுரர்ஷய: | ப்ராஹ்மணா வா, மஹாத்மானோ புக்த்வா சண்டாலபோஜனம் | கதம்ஸ்வர்கம் கமிஷ்யந்தி விஸ்வாமித்ரேண பாலிதா: | என்று இப்பொழுது நடத்தும் யாகத்தை செய்கிறவனோ க்ஷத்ரியன். அதிலும் சண்டாளனுக்கு செய்துவைக்கிறான். இப்படியிருக்க ஸதஸில ஹவிஸ்ஸை தேவர்கள், ரிஷிகள், எப்படி ஸ்வீகரிப்பார்கள். மஹாத்மாக்களான பிராம்மணர்களும், அந்த சண்டாள போஜனத்தையும புஜித்துவிட்டு எப்படி விச்வாமித்ரரால் பரிபாலிக்கப்பட்டு ஸ்வர்க்கமடையப் போகிறார்கள் என்றார்கள். இதிலிருந்து சண்டாள போஜனம் கூடாது என்றும், யாகங்களில் சண்டாளன் எஜமானனானால தேவர்கள் முதலிய ஸகலரும் ஹவிப்பாகம் வாங்கவரமாட்டார்கள் என்றும் பிர்ம்மணனும் அந்த சண்டாள அன்னத்தைச் சாப்பிட்டால் அவனுக்கும் ஸ்வர்க்கம் கிடையாது என்று ஸ்திரப்படுத்தினார்கள். பாலகாண்டம் 60-ம் ஸர்க்கம் 11-ம் சலோகம் ஆஹ்வானம் ததர்ஹாபாயம் ஸர்வேஷ்வேவ தா: | நாஹாகமன் தாஸ்தத்ர தா ஹாபாயம் ஸர்வேஷ்வேவ தா: | என்று விசவாமித்ரர் யாகத்திற்கும் ஸர்வ தேவதைகளையும் ஆவாஹனம் செய்தார். யாகத்திற்காக கூபபிட்டும் ஒரு தேவதையாவது வரவில்லை என்று வர்ணித்தார் வால்மீகி. சண்டாளன் யாகம் செய்தால் ஒரு தேவதைகளும் வரமாட்டாாகள் என்றார் கவி. உலகம் திரஸ்கரிப்பவனை தேவர்களும் திரஸ்கரிப்பார்கள் என்றார் கவி. திரிசங்கு ராஜனை மந்திரி பிரதானிகள்கூட பட்டணத்து ஜனங்கள் எலலாரும் சண்டாளன்

என்று வர்ஜ்ஜித்ததால், தேவர்களும் வர்ஜஜித்தார்கள் என்ருர் கவி.

அதே ஸர்க்கம் 16, 17, 18-ம் ச்லோகம் [illegible] என்று பிடிவாதத்தால் விச்வாமித்ரர் திரிசங்குவுக்கு யாகம் செய்துவைக்க தேவர்கள் வாராததால அதுபரியந்தம் தான் செய்திருநத தபோமஹிமை யால் சண்டாளஞன திரிசங்குவை ஸ்வர்க்கலோகம் அனுப்பிஞர். அங்கு இந்த சண்டாளஞன திரிசங்குவைக்கண்ட தேவேந்திரன் தேவர்கள் மத்தியில் குருசாபமான சண்டாளத்வத்தை யடைந்த மூடா இங்கு இருந்து தலைகீழாய் பூமியில் விழு என் ருஞ்ஞை செய்துவிட்டான். உடனே திரிசங்கு அங்கிருந்து தலைகீழாக விழுந்தான். விழும்போது ஏ விசவாமித்ரா என்று கதரிக்கொண்டே விழுந்தான் என்ருர் வால்மீகி. க்ருதயுகமான முதல் யுகத்திலேயே சண்டாளஞன திரிசங்கு சரீரத்தோடு ஸ்வர்க்கம் செல்லுவதற்கு வெகு பாடுபட்டான். முதலில் க்ஷத்ரி யஞன திரிசங்கு அந்த மாதா வயறறில் பிறநத சரீரத்துடன் போக இசசித்தான். முடியாது அபபடிசசெல்ல என்ருர்கள். அப்பெரியோர்களை திரஸ்கரித்து சண்டாள சாபத்தையும் அடைநது ஸ்வர்க்கமடைய எத்தனையோ விபரீதங்களைச் செய்து அதுகளான யாகாதிகளையும் செய்து அதஞலும் பலிக்காமல் மற் ருெருவர் தபவில ஸ்வர்ககம் அடைந்ததும், அங்கு இருந்து க்ஷணத்திலேயே தலைகீழாய் தள்ளப்பட்டான். இம்மே பெரியோர் கள் செய்த யாகமும் வியாததமாகி அந்த யாகத்தை செய்வித்த ரிஷிகளும் பதிதர்களாகி சில பிராம்மணர்களை கெடுத்ததும் விச்வாமித்ரர் அதுபரியந்தம் செய்து இருந்த தபஸூம் ஒழிந் ததும்தான் மிச்சமாய் ஏற்பட்டது. ஆதலால் சாஸ்திரத்தை மீறி, தர்மத்தை மீறி செய்யும் காரியங்களை திரிசங்கு மஹாராஜா செய்ததால் அது பலிக்காமல் போய் அவனுக்கு ஸ்வரூபமும்

ஒழிந்து தலைகீழாய் விழும் கதியும் ஏற்பட்டது. நாலு ஜாதிக்கு மேல் ஐந்தாவது ஜாதியான சண்டாளன், இப்படி கர்மாவை, யாகம் செய்யவும், யார் செய்வது என்ற முறையில்லாமல் தலை கீழாய் ஆரம்பித்தால அவனுக்கு தலைகீழாகவே இருக்கும்படி ஏற்பட்டது என்றார் வால்மீகி. அவனவன் தன் ஜாதி க்ரமத்தில் இருந்து தன்தன் ஸ்வகர்மாவில் இருந்தால்தான் அவனவன் ஒழுங்காக புண்யலோகமடைவான் என்றார்.

பிறகு தலைகீழாய் வரும் அவனை அப்படியே அந்தரத்தில் நிற்கவைத்தார். பிறகு விசவாமித்ரர் அவனைச்சுற்றி தேவதைகளை இருக்கும்படி சிருஷ்டித்தார். வேறு இந்திரனை உண்டாக்குகிறேன் என்றாரம்பித்தார். உடனே தேவதைகள் நீர் செய்யும் காரியம் ஸரியல்ல. குருசாபமான சண்டாளத்வ சாபத்தை அடைந்து இருக்கும் இந்த மூடன் சரீரத்துடன் ஸ்வர்க்கம் செல்ல அர்ஹன் அல்லன் என்று குறிபபிட உடனே விச்வாமித்ரர் நான் அவனுக்கு ஸ்வர்க்கம் செல்லும்படி செய்கிறேன் என்று பிரதிஞ்ஞை செய்துவிட்டேன் என் சபதத்தை எப்படி விடுவேன் என்று சொல்ல அவர்கள் நீ உண்டுபண்ணின வஸ்த்துக்கள் எல்லாம் இருக்கட்டும் அவனும் அப்படியே மேல்லோகமும் இல்லாமல் கீழ் பூலோகமும் இல்லாமல், அநதரத்தில் இருக்கட்டும். அவன் தலைகீழாய் ஸ்வாக்கத்தில இருந்து வரும்போது அந்த பாதி வழியில் அவனை அப்படியே நில் என்று நிற்கவைத்து இருக்கிறீரே அந்த அவன் இருக்கிற இடம் உமக்காக அது ஒரு ஸ்வர்க்கமாகட்டும். அந்த அந்தரலோகத்தில் அவன் ஒரு நக்ஷத்திரம்போல் விளங்கட்டும். உண்டுபண்ணினதுகளும் அவனுக்கு துணையாய் இருக்கட்டும். ஆனால அவன்மட்டும் 60-ம் ஸர்க்கம் 32-ம் ச்லோகம் 𑌅𑌵𑌾𑌕𑍍𑌶𑌿𑌰𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌶𑌙𑍍𑌕𑍁𑌸𑍍𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍍𑌵𑌮𑌰𑌸𑌨𑍍𑌨𑌿𑌭𑌃 தலை கீழாகவே தேவதைப்போல் இருக்கட்டும் என்று சொல்லி தேவர்கள் தெரிவித்து சென்றுவிட்டாாகள். பிறகு விச்வாமித்ரரும் 61-ம் ஸர்ககம் 2-ம் ச்லோகம் என்னுடைய தபஸுக்கு மஹா விக்னம் வந்தது. நான் வேறு திக்கு போவேன் என்று புறப்பட்டார். இவர் தபஸுக்குச் செல்லும்போது முதலில் தெற்கு திக்கில் சென்றதால் செய்த ஸர்வ தபஸும் அடிக்கடி ஒழிந்தது

என்று ஸ்பஷ்டம். மேலும் ராஜாவின் கதி தலைகீழாய் எக்காலமும் தொங்கும்படியாயும், மேலலோகமான ஸ்வர்க்கமும் இல்லாமல், பூலோகமும் இல்லாமல, தலை நேரவும் இருக்கமுடியாமல அந்தர லோகமான ஒரு லோகத்தில தலைகீழே தொங்கும் ஒரு கதியானது ஏறபட்டது. திரிசங்குவான ஒரு மஹாராஜனுக்கு கதி, இப்படி சாபத்தை மீறியதால், தர்மத்தை மீறியதால், அனுஷ்டானததிற்கு விரோதம் செய்ததால, பெரியோர்களை அலக்ஷ்யம் செய்ததால் இந்த கதியும் தேவர்களுடனும் சேர முடியாமல் தேவலோகத்தை, ஸ்வர்க்கத்தை எக்காலத்திலும் பார்க்கமுடியாமலும் தனியான புதிதாக கற்பிக்கப்பட்ட ஒரு லோகத்தில் தேவாகளுடனும் சேரமுடியாமல் பூலோகமனுஷ்யாளுடனும் சேரமுடியாமல் கண்டவர்கள் பரிதாபப்படும்படி ஒரு பெரிய மஹாராஜனுக்கு இப்படி ஏற்பட்டதே, அவன் ஹரிச்சந்திரனுக்கு பிதாவல்லவோ என்று பலரும் எண்ணும்படி ஏற்பட்டது என்றும் அதனால் அவனவன் தன் தன் ஸ்வதர்மத்தில் இருக்கவேண்டும் என்றும் வால்மீகி ஸ்தாபிக்கிறார்.

வால்மீகி உத்தரகாண்டத்தில் ராமன் ராஜயபரிபாலனம் செய்யும்போது ஒரு பிராம்மண புத்ரன் மரணமடைந்துவிட என்ன காரணம் என்று விசாரிக்கும்போது ஒன்றும் தெரியாமல் இருக்க நாரதபகவான் வந்து சேர்ந்து ஏ! ராஜனே சட்டத்தை மீறியதால் உண்டான அனாத்தம் என்றார். நீர் அல்ல. உமது ராஜயத்தில் அதர்மம் உண்டாகிவிட்டது அதை ஒழித்தால் சரியாகும் என்றார். நீர் ஸப்த த்வீபாதிபதி. ஆதலால் சீக்ரத்தில் இதை கண்டுபிடித்தது தண்டனைசெயயும் என்றா. இக்ரந்தப்படி சட்டம் என்னவென்றால், முதல் யுகமான கிருத யுகத்தில் பிராம்மணன் மட்டும் தபஸ் செய்யவேண்டும் மற்ற எவனும் செய்யக்கூடாது செய்தால் குற்றவாளி தண்டிக்கத் தகுந்தவன். இரண்டாம்யுகமான திரேதாயுகததில் பிராம்மண க்ஷத்ரியன் மட்டும் செய்யவேண்டும். மற்றவன் செய்தால் தண்டத்திற்குத் தகுந்தவன். மூனறாவதான, த்வாபர யுகத்தில் பிராம்மண க்ஷத்ரிய வைச்யர்கள் மட்டில் செய்யவேண்டும். மற்றவன் செய்தால் தண்டிக்கத் தகுந்தவன். நான்காவதான கலியுகத்தில்

பிராம்மண க்ஷத்ரிய வைச்யன் சூத்ரன் தபஸ் செய்யலாம் என்று இப்படி சட்டம் இருக்க இச்சட்டத்தை மீறி ஒரு சூத்ரன் இந்த யுகத்தில் தபஸ் செய்வதால அவன் தண்டிக்கத் தகுந்தவன். அவன் கலியுகத்தில் செய்தால் தன் கடமையைச செய்தவனாவன். அவன் இந்த யுகததில் செய்யததகாதவனாதலால் இம் மரணம் உண்டானது. ஆதலால இபபொழுதே அந்த அதாமத்தைப் போக்கவேண்டுமாதலால இப்பொழுதே குற்றவாளியைக் கண்டுபிடித்து தண்டிக்கவேண்டும் என்று சொலலி நாரதர் சென்றுவிட்டார். பிறகு ராகவன் புஷ்பகவிமானத்தில் ஏறிக் கொண்டு ஸஞ்சரித்துக்கொண்டுவா அப்பொழுது தெற்கேயுள்ள விந்தமலைக்கு ஸமீபமான சைவல பர்வதத்தினுடைய வடக்கு பாகத்தில் ஒரு அற்புதமான குளக்கரையில தலை கிழாய்த் தொங்கிக்கொண்டு தபஸ் செய்யும் ஓர் தபஸியைக் கண்டார். உத்ரகாண்டம் 86-ம் ஸர்ககம் 16-ம் ச்லோகம் கஸ்யாம் யோந்யாம் தபோவ்ருத்3த4 வர்தஸே த்3ருட4விக்ரம। கௌதூஹலாத் த்வாம் ப்ருச்சா2மி ராமோ தா3ஸரதி2ர் ஹ்யஹம்॥ என்று தபஸில விருத்தனே. நீர் எந்த யோனியில ஜனித்தவா நான் குதூஹலததில கேட்கிறேன் என்றும் சொல்லி மேலும நீர் ஸ்வர்ககததிற்காகவா அல்லது ஏதாவது வரத்திற்காகவா தபஸ் செய்கிறீர்? விஷயம் என்ன. நம்மை தாசரதி கேட்கிறரே என்று நாம் அதர்மத்தைச செய்கிறோமே என்று பொய்சொல்லிவிடாமல் உண்மையைச சொல்லும் என்றார். உத்தரகாண்டம் 87-ம் ஸர்க்கம் 2-ம் சலோகம் ஸூத்3ரயோந்யாம் ப்ரஸூதோ(அ)ஸ்மி தப உக்3ரம் ஸமாஸ்தி2த:। தே3வத்வம் ப்ரார்த2யே ராம ஸஸரீரோ மஹாயஸ:॥ ந மித்2யாஹம் வதே3 ராஜந் தே3வலோகஜிகீ3ஷயா। ஸூத்3ரம் மாம் வித்3தி4 காகுத்ஸ்த2 ஸம்பூ3கம் நாம நாமத:॥ பா4ஷதஸ் தஸ்ய ஸூத்3ரஸ்ய க2ட்3க3ம் ஸுருசிரப்ரப4ம்। நிஷ்க்ருஷ்ய கோஸாத்3 விமலம் ஸிரஸ் சிச்சே2த3 ராக4வ:॥ தஸ்மிந் ஸூத்3ரே ஹதே தே3வா: ஸேந்த்3ரா: ஸாக்3நிபுரோக3மா:। ஸாது4 ஸாத்4விதி காகுத்ஸ்த2ம் ப்ரஸஸம்ஸுர் முஹுர் முஹு:॥ என்று அவன ராகவனைப்பார்த்து நான் சூத்ர யோனியில ஜனித்தவன் சம்புகன் என்ற பெயருள்ளவன் இந்த சரீரத்துடனே ஸ்வர்க்கம் அடையவேண்டுமென்று அதற்காக நான்

தபஸ் செய்கிறேன். நான் பொய் சொல்லவில்லை. இந்த உக்ர தபஸை செய்யப்பட்ட என்னை சூத்ரன் என்று தெரிந்து கொள்ளும் என்றான். இப்படி சொன்னதும் ராமன் அற்புத மான தனனுடைய கத்தியைக்கொண்டு அவனை சிரஸைச் சேதித் தார். இதைக்கண்டதும ஸகல இந்திராதி தேவர்களும் மிகவும் நல்லது நல்லது என்றார்கள். அடிக்கடி ராகவனைக் கொண்டாடி னார்கள். புஷ்பங்களை வர்ஷித்தார்கள். மேலும், ஸ்ரீமத்ராமாயண உத்தரகாண்டம் ஸர்க்கம் ... ... ... ... என்று தேவர்கள் ராகவனைப் பார்த்து இது தேவகார்யம் நீ இதைச் செய்தீர். உமக்கு வேண்டுமானால் வரம கேட்டுக் கொள்ளும். இந்த சூத்ரன் சட்டத்தையும் மீறி இந்த யுகத்தில தபஸ் செய்ததால ஸ்வர்ககம் அடையமாட்டான் என்று சொல்ல உடனே ராகவன ஸந்தோஷித்து செத்த குழந்தை பிழைக்க வேண்டும் என்று கேட்க உடனே தேவதைகள் 87-ம் ஸர்க்கம் 15-ம் ச்லோகம் ... ... ... ... என்று ராகவனைப் பார்த்து நீர் எந்த முகூர்த்தத்தில் இவனைக் கொன்றீரோ அப்பொழுதே அக்குழந்தை ஜீவனுடன் கூடியதாய் விட்டது என்று சொல்லி நீர் மஙகளமாய் சென்றுவாரும் என்று அனுப்பிவிட்டார்கள். ஆதலால எவனும் ஸத்யத்தையும், தர்மத் தையும் மீறக்கூடாது. மீறினால் அவன் தண்டிக்கத் தகுந்தவன் என்று வால்மீகி ஸ்தாபித்தார. திரிசங்கு மஹாராஜனும் சரீரத் துடன் சண்டாள ரூபத்துடனும அதர்மத்தை செய்து ஸ்வர்க் கம் செல்லப்பார்த்தான். சூத்ரனான ஜம்புகனான இவனும் அதர் மத்தை செய்து செல்லப்பார்த்தான். இரண்டும் தெய்வ ஸம்மத மில்லையாதலால இருவரும அதோகதியானார்கள் என்று வால்மீகி வர்ணித்தார். இப்படி இக்க்ரந்தம் இருக்க குஹன் நிஷாத ஜாதி யில் ஜனித்து இருக்க அவன் எப்படி சண்டாளன். இப்பொழுது இருக்கும் இந்த அமரத்தை வைத்துக்கொண்டா, உற்பத்தி கண்டுபிடிக்கமுடியும்? இதுகள் பிரமாணத்திற்கு வராது. அதை யும் தபபு என்று வால்மீகி கண்டிக்கிறார். சூர்யவம்சத்தில்

பிறந்த திரிசங்குவை மந்திரி ஜனங்கள் முதலிய ஸகலரும் த்யாகம் செய்த கதையை ராமன் விசவாமித்ரரிடம் கேட்டுக்கொண்டவர் த்ரிசங்குவை தியாகம் செய்யவேண்டியது உத்தம தர்மம் என்று அங்கிகரித்து இருக்கும் ராமன் தன் ராஜயத்தில் அந்த யுகத்தில் தபஸ் செய்யக்கூடாத சூத்ரனால அதாமம் வந்தபோது அவனைக் கொன்று தர்மத்தை ஸ்தாபித்த ராமன சண்டாளனானல் குஹனை எப்படிக் காட்டிக்கொள்வார். அவன் சண்டாளனானல் அவனை விலக்கவேண்டுமே திரிசங்குவை விட்டு எல்லாருமம ஓடிவிட்டார்கள் எனறல்லவா பிரமாணம். இக்கிரந்த ரீதியில் குடுத்தன ஸ்திரீ ஜாதி, ஒருவன் பதனி, வீட்டுக்கு விலகினால் அவள் சண்டாள ஸ்திரீ என்றும் குறிப்பிட்டு சண்டாளனுக்கு எவ்வளவு விலகவேண்டுமோ அவ்வளவு தூரம் அவளைக்கண்டு விலக வேண்டும் என்றும், அவள் புருஷனும அவளைப் பார்க்கவே கூடாது என்றும், அவளுக்கு தூரம என்றே பெயர் எனறும், அது கிட்ட அல்ல என்றும் சட்டம் இருக்கிறது. அப்படி விலக வேண்டியதாலதான் திரிசங்கு மஹாராஜனைச சேர்ந்த அததனை பேர்களும் அவனை விட்டு ஓடிவிட்டார்கள். குஹன் சண்டாளனாகில் ராகவன் அவனைக்கண்டு ஓடியே போயிருககவேண்டுமே தர்மங்களை காப்பாற்ற கங்கணம் கட்டிக்கொண்டு இருக்கும் ராமன் தன்னை ராஜ குமாரனை மனுஷ்யனாய் எண்ணிக்கொண்டு இருப்பதால் ஸத்யத்தை காக்கவந்த ராமன், சபர ஜாதியோ, நிஷாத ஜாதியோ இதுகள் சண்டாள*ஜாதி இல்லையாதலாலேயே அக்னி ஹோத்ராதி கர்மங்களை செய்யும ராமன் குஹனை கட்டிக்கொண்டார் என்று வால்மீகி விதித்து இருககிறார். தவிர அதர்மங்களைச செய்யும்போது தெய்வமும் விலகத்தான் விலகும். தன்னால் அவனும் உண்டுபண்ணபபட்டவனல்லவா என்று குற்றம் செய்யும்போது பிள்ளையானாலும் தெய்வம் எண்ணவே எண்ணாது. ஏனென்றால் அவனை உண்டுபண்ணி இப்படி இரு என்றுஞ்ஞை செய்து இருக்க அவன் மீறினால் அவனை தண்டனை செய்யாமல் எப்படி இருக்கும். அவனை விட்டு விலகத்தான் விலகும். அவன் தர்மத்தை ஸத்யத்தைமீறுமல் தன்னை உபாஸித்தால் அந்த பகவான் அவனை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்

கிருர். பகவானுல் விதிக்கப்பட்ட சட்டத்தை மீறினதால் மஹாராஜாவான திரிசங்குவும சம்புகனுன சூத்ரனும் கதியில்லாதவர்களானுர்கள். அதோகதியும் அடைந்தார்கள். ஆதலால் ராமன் கிராதஜாதியான குஹனை எப்படித் தொடுவன். தவிற இக்கிரந்த ரீதியாய், கிராதஜாதி பபலவஜாதி, சகாள் என்ற ஜாதி, யவனுள் என்ற ஜாதி, காம்போஜ ஜாதி, சபர ஜாதி, மிலேச்ச ஜாதி இப்படிப்பட்ட இத்தனை ஜாதிகளும் காமதேனு சரீரத்தில் இருந்து வெளிப்படுத்தினதாய் இருக்க இவாகள் சண்டாளஜாதியாளுல் வஸிஷ்டர் காமதேனுவையே விலககிவிடுவாரே. இவர்கள் இவ்வளவுபேரும் சண்டாளர்களுமலல அதனுடைய பேதமுமலல. ஸ்ருஷ்டியிலேயே இபபடி ஸ்ருஷ்டி என்று இக்கிரந்த ஸித்தாந்தம். ஒரு ஜாதி, மற்ருெரு ஜாதியுடன் சேர்ந்து பிறந்த ஜாதி சண்டாள ஜாதி, என்கிற ஒனறையும் வால்மீகி அங்கீகரிக்க இல்லை. இக்க்ரந்தப்படி முன்சொனன காமதேனுவிடம் இருந்து வெளிவந்ததாய் விதித்தாலும், ஸிருஷ்டிகாலத்திலேயே ஸர்வஜாதிகளையும் உண்டுபண்ணினதாய் பல இடத்திலும் வால்மீகியே குறிபபிட்டு இருப்பதாலும், நான்கு ஜாதிக்கு மேல் ஐந்தாவது ஜாதி சண்டாள ஜாதி எனறும குறிபபிட்டுக் காட்டி ஸ்தாபித்து இருக்கிருா. தவிற இக்க்ரந்தத்தில் குரங்கு ஜாதியிலும் நான்கு ஜாதி இருக்கிறது என்றும். நகைகளுக்கு உள்ள ரத்னங்களில் நான்கு ஜாதி உண்டு என்றும. ஜலத்தில் ஆண் அலை பெண் அலை என்று உண்டு என்றும். மிருகங்களில் இன்ன மிருகங்களில இன்னதை பிராம்மணனும் மற்ற ஜாதிகளும் தொடக்கூடாது எனறும் இப்படி இருபபதால் ராமன் இவ்வளவு ஜாதி குலதர்மங்களையும் தெரிந்துகொண்டு இருபபவர் குஹன் சண்டாள ஜாதியில்லாததினுலேயே அவனை ஆலிங்கனம் செய்துகொண்டார். அபபடியே சபரி, மதங்க மஹரிஷிக்கு பரிசாரகம் செய்துகொண்டு இருந்தவள். பிர்ம்ம ரிஷி மதங்கர், இவள் சண்டாளஸ்திரீ ஜாதியாய் இருப்பாளேயாகில் அநேக சிஷ்யருடன் கூடியவர் இவளை பரிசாரகம் செய்ய இடம் கொடுக்கவே மாட்டார். இவள் இருந்தால் கர்மாக்கள் கெட்டுவிடுமே. இக்க்ரந்த ரீதியாய் இவளை சபரி என்றவளை சண்

டாளஜாதி என்று ச்லோகமே இல்லை யாதலாலும் சபரஜாதி யாதலாலேயே சபரி என்று பெயர் என்பதும புஸ்தகத்தில் இல்லாததினாலேயும் இவளும் சண்டாளஸ்திரீ அல்ல என்றும் ஸித்தாந்தம் வால்மீகி மூலத்தைக் காட்டிலும் வயாக்கியானங் களுக்கு கௌரவம கிடையாது என்று ஸித்தாந்தம். வால்மீகி மற்றொரு அழகு ஒன்று காட்டுகிறார். ஆரணிய காண்டத்தில ஸீதாதேவி ராவணனைப் பார்த்து 56-ம் ஸர்க்கத்தில் 18-ம் சலோகத்தில் நசக்ரயஜ்ஞஸ்ய ஸ்வாவெதிஸ்ஸூ ஹோம்ஸம்ஸிதா । ஸிஜாதிஸம்த்ரு வக்தாய ஸம்ஸாவை நாவஸதிக்ஷம் ॥ என்று உன் வதத்திற்கும உன் அந்தபபுர வதத்திற்கும் நீ என்னைக் கொண்டு வந்து இருக்கிறாய். உனக்கு அழிகிறகாலம் வந்து இருக்கிற தென்று சொல்லிவிட்டு பிறகு என்னை நெருங்க முடியாது, எப்படிபோல் என்றால் யாகமத்தியத்தில் அக்னியில் ஆகுதி செய்யும்படி சுருக், சருவம், முதலியதுகளுடன் கூடிக்கொண்ட தாயும் பிராமமணனால் மந்திர பூதமாயும் விளங்கும் யாகவேதி யானது எப்படி சண்டாளனால் கிட்டே நெருங்க முடியாததோ நெருங்கினால் எபபடி அழிககப்படுவனோ அப்படி நீ அழிவாய் என்றாள். இதையே பிந்தியும பேசினாள். அதாவது சுந்தர காண்டத்தில் நீ என்னிடம் கண்டபடி பேசுவதால் நான் உன்னை ஸஸ்ஸவாஹ தெஜஸா என் தேஜஸ்ஸால் எறித்துவிடுவேன், வன விட்டு இருக்கிறேன் என்றால் பர்த்தாவின் ஆக்ஞைஇல்லாத தாலும் உன்னை யழிப்பதாய் என் பர்த்தா சபதம் செய்து இருபபதாலும் அதற்காகவே உன்னை விட்டு இருக்கிறேன் என்றாள். இதையே ஸுந்தரகாண்டத்தில் ஹநுமான் ராவண னுக்கு புத்திசொனனபோது ஸீதாயாः தெஜஸாதூஹாம்ராமகொபை ஸ்ச்ஸீஸிதாம் ॥ என்று ராமனுடைய கோபமாகிற ஸீதையின் தேஜஸ்ஸால் எறிக்கப்பட்டு இருக்கிறாய் என்றார். இதையே மந் தோதரியும் நீர் ஸீதையின் பதிவிரதா தேஜஸ்ஸால் எறிக்கப் பட்டுவிட்டீர் என்றாள். இபபடி உத்தமிகளுடைய மஹிமையும் வர்ணிக்கப்பட்டது. இப்படி சண்டாளஜாதி என்ற ஒரு ஜாதி உண்டுஎன்றும் அதில்இந்தரீதியில் கர்மசண்டாளர் என்று ஒன்று உண்டு என்று இக்க்ரந்தம் சொல்லாததாலும் திரிசங்கு, ஜாதி

சண்டாளனுக ஆனதாலும அவன வர்ஜிக்கப்பட்டதாலும் சண்டாள ஜாதிக்கு விலகிவிட வேண்டும் என்றும் வாலமீகி வாக்ய மாதலாலும் இப்பொழுதுள்ள இந்த அமராதிகளை வைத்துக்கொண்டு வால்மீகி இககரந்தம் செய்யவில்லையாதலாலும் வேதாதிகளுக்கே அதீதமான இக்க்ரந்தத்தை அமரம் முதலிய நிகண்டுகள் அசைக்கமுடியாதலாலும், குஹ சபரிகள் சண்டாள ஜாதி இல்லையாதலாலேயே குஹனை ராமன ஆலிங்கனம் செய்துகொண்டும் சபரியை மதங்கர் பரிசாரகியாய் வைத்துககொண்டதும், சபரி கொடுத்த பலாதிகளை (எச்சல் செய்துவைத்து இருந்ததாய் வாலமீகம் அல்ல) ராமர் பெற்றுக்கொண்டதும் தர்மமே என்று கவி ஸித்தாந்தம் செய்வதால் குஹ சபரிகள் சண்டாள ஜாதி அல்ல என்ற ஸித்தாந்தம். மேலும், சபரி யோகிகள் அடைந்த கதியை அடைந்தாள் என்றும் கவி சொல்லியிருக்க சண்டாளஜாதி திரிசங்குவுக்கும், சூத்ர ஜாதி சம்புகனுக்கும் உத்தமலோகம் கிடையாது எனறு கவி குறிப்பிட்டு இருக்க சபரி சண்டாள ஜாதியானல எப்படி வரும்? கவி அவளை சண்டாளியாய் குறிப்பிடாததால் உத்தம லோகத்தை அடைந்தாள் என்று ஸ்தாபித்தார். ஆதலால் குஹ, சபரி முதலியவர்கள் சண்டாள ஜாதி அல்ல என்றும் வால்மீகியின் ஸித்தாந்தம்.

---

## 21. குணத்தில் பிள்ளைகள பிதாவையும், பெண்கள மாதாவையும் அனுஸரிப்பார்கள் என்ற ஸித்தாந்தம்.

வால்மீகி பகவான் ராகவனை பித்ருணைஸ் ஸமாயுக்த: என்று குணங்களில் தசரதனுக்கு உபமானமாய் இருக்கிறார் என்றார். இதையே ஸுமந்திரனும் குறிபபிடுகிறார். அயோத்யா காண்டம் 35-ம் ஸர்க்கம் 26-ம சலோகம் ஸத்யஸ்சாத்ர ப்ரவாதோயம் லௌகிக: ப்ரதிபாதி மா। பிதூந் ஸமநுஜாயந்தே நரா மாதரமங்கநா: என்று மனுஷ்யாகளான பிளளைகள் பிதாக்களை அனுஸரிக்கிறார்கள், பெண்கள் அம்மாவை அவலம்பிப்பார்கள் என்கிற இந்த லௌகிகமான இந்த லோகவாக்யம் இப்பொழுது ஸத்யமாகி விட்டது. அதை உபமானம் சொன்னபோது கைகயீ மாதா கைகயீயின் பிதாவைக் கொல்ல யோசித்தாள். அந்த அம்மாவின் குணத்தை அவலம்பித்து இப்பொழுது இவளும் பர்த்தாவான ராஜனை கொல்ல ஆரம்பித்தாள் என்று குறிப்பிட்டார். இதையே பரதனும் கேகயப்பட்டணத்தில் இருந்து வந்ததும் அவள், ராமன் காடுபோனதும் தசரதன் புண்யலோகம் சென்றது மான விஷயத்தை சொன்னதும் அவளைபபார்தது ஏ பர்த்தாவைக்கொன்றவளே என்று திரஸ்கரித்து 9-ம் ச்லோகம் நத்வமச்வபதே: கந்யா தர்மராஜஸ்ய தீமத: என்று அச்வபதி ராஜனின் புத்ரியல்ல. நீ உன் அம்மாவை அனுஸரித்தவள் நீ ராக்ஷஸீ என்றார். இப்படி பரதனாலும் அம்மாவை அவலம்பித்தவர் என்று காட்டப்பட்டது. பரதனும் அம்மாவை பெண்கள் அவலம்பித்தார்கள் என்றார். ஸ்ரீராகவனும் ஆரண்ய காண்டத்தில் 10-ம் ஸர்க்கம் 2-ம் சலோகம் ஹிதமுக்தம் த்வயா தேவி ஸ்நிக்தயா ஸத்ருசம் வச:। குலம் வ்யபதிசந்த்யா ச தர்மஜ்ஞே ஜநகாத்மஜே। என்று ஸீதையைப் பார்த்து உன்னால் அபிமானத்தினாலும், பிரியத்தாலும் குலத்தை வெளிப்படுத்தும் உன்னால் ஹிதமானது சொல்லப்பட்டது, என்று சொல்லி மேலும் அதே ஸர்க்கத்தில் 22-ம் ச்லோகத்தில் ஸத்ருசம் சாநுரூபம் ச குலஸ்ய தவ சோபநே। என்று எனது குலத்திற்கு தகுந்தபடியும் அதாவது மாதா பூமிதேவியாதலால் அந்த அப்பாவின் பொறுமையான குணத்தை அவலம்பித்து ராக்ஷஸர்களை கொல்லவேண்டாம்

என்று சொன்னதை குறிப்பிட்டார். இப்படி பெண்கள் மாதா வின் குணத்தை அவலம்பிப்பார்கள் என்றூ. பாலகாண்டத்தில் 17-ம் ஸர்க்கத்தில வானரர்கள் உத்பத்தி சொன்ன இடத்தில அவர்கள் (வானராகள) மாதாவை அவலம்பிக்காமல் 18-ம் ச்லோ கத்தில் யஸ்ய்ஜெவஸ்ய யஞ்ச-வைஂவெஷாயஸ்ஸு வஸாகுஃஃ। என்று எந்த எந்த தேவதையான பிதாவுக்கு எந்த எந்த பலமோ எந்த எந்த தன்மையோ அத்துடன் பிறந்தார்கள் என்றூர். தவிற உத்தர காண்டத்தில் வேதவதியானவள் தன் மாதா அக்னிபபிரவேசம செய்ததால் மாதாவின் தன்மையை அனுஸரித்து அக்னிபபிரவேசம் செய்தாள் என்று அகஸ்தியர் சொன்னதாய் சொன்னூர். அயோதயா காண்டம் 2-ம் ஸர்க்கம் 11-ம் சலோகம ஈநஜாதொஹிஸாஂஸவெஷமஷணெஜெஷ்ஷொஸஃஜஃ। என்று தசரதர் என் பிள்ளையான ஜயேஷ்டனை ராமன் எல்லா குணங்களேயும அனுஸரிததவனுய் இருக்கிறுன் என்றூர். இப்படி பிள்ளை தகப்பனேயே அனுஸரிக்கும் என்று குறிப்பிடப்பட்டது. இப்படி வால்மீகி புத்ராகள பிதாக்களேயே அவலம்பிப்பார்கள் என்றும், பெண்கள் மாதாக்களேயே அவலம் பிப்பார்கள் என்றும ஸ்தாபித்தார். ஆரண்ய காண்டத்தில் லக்ஷ்மணன் 16-ம் ஸர்க்கம் 34-ம் சலோகம் நவிதுஂஈநவதஂ தெஸாதகஂ ஷிவஷாஜதி। வஸ்ராதொரொகவு வாஷொயஂஸஸ தெநாநஸ்யாகூதஃ। என்று இரண்டு பாதம உள்ளவர்களான ஜனங்கள் பிதாவை அனுஸரிக்கமாட்டார்கள் அம்மாவை அனு ஸரிப்பார்கள் என்கிற லோக பிரஸித்தியை பரதன் மாற்றி விட்டான் என்றூர். இதில் மனுஷ்யர்களே மாதாவை அனுஸரிப் பார்கள் என்றூர். அதை பரதன் மாற்றினுன். அதாவது மாதா கெட்ட குணத்தை அவலம்பிக்காமல் பிதாவை அவலம்பித்தான் எனறூர். இதில அதாவது லக்ஷ்மணன் சொன்னதில பொது வாக ஷிவஷாஃ என்று பொதுவாக மனுஷ்யர்கள என்று இருக் கிறது. இது பெண்டுகளுக்கும், புருஷாகளுக்கும்பெயர். இரண்டும் ஒருநாளும் மாதாவை அனுஸரிககாது ஏனென்றூல லெக்ஷ் மணன் சொன்னதிலேயே அவர் சொனனது உண்மையாஞல் பாதனும் மாதாவை அனுஸரிக்கவேண்டும. அப்படியில்லாமல

அவன் அந்யதாவாக விரோதமாக அபபாவை அனுஸரித்தான் என்று குறிப்பிட்டதால பிள்ளைகள் பிதாவையே அனுஸரிப்பார்கள் என்றும், பெண்கள் மாதாக்களையே அனுஸரிப்பார்கள என்றும் ஸித்தாந்தம். ரிஷிகள் ராக்ஷஸிகளிடம் பிள்ளை உண்டு பண்ணியிருக்கும இடங்களில கவனித்தால பூர்ண ஸந்தியாகால வேளையில ஆவிர்ப்பவித்து இருப்பதாலும் அவ்வளவு பேர்களையும் மாதாகுலமான ராக்ஷஸி குலமாகச செய்யப்பட்டு இருக்கிறது. அந்த மாதாவின குணமும் ஏற்பட்டது உதாரணம் ராவணாதிகள். இதில விபீஷணன் கலப்பல்ல தவிற விபீஷணனை விச்ரவஸஸ, பிறப்புக்கு முந்தியே தன குலம் என்றும் குறிப்பிட்டு தன குணங்களும் அவனுக்கு உண்டு எனறும் காட்டி தாமாத்மா என்றும் நிரூபித்தார். ஆதலால் விபீஷணன் குலம். ராக்ஷஸகுலம் அல்ல. விச்ரவஸ்ஸின குலம் என்று ஸ்தாபிக்கப் பட்டு இருக்கிறது. ராவண கும்பகர்ணாதிகள் கேசஸியின் குலம் சுமாலி என்ற ராக்ஷஸன ராக்ஷஸகுலம விருத்தியடையவே ஸந்தியா காலவேளையில கேகஸியை விச்ரவஸ்ஸிடம அனுப்பினதலாலும் அவனுடைய குணத்துடனும் கூடியவாகள் என்றும் ஸ்தாபனம. மேலும் உத்தரகாண்டத்தில 3-ம் ஸர்க்கத்தில் அகஸ்தியர் ராகவனிடம் குபேரன் ஜனனத்தை சொன்ன இடத்தில 6-ம் சலோகத்தில் ஜநயாஊாவெயஉ-ஜூஸ்வெ-ஃ ஸஹம ணெய-த் । என்று பிதாவான பிர்ம்மரிஷியான விச்ரவஸ்ஸின் குணங்களுடன உண்டானார் என்று இருப்பதால் பிதாவையே பிள்ளை அனுஸரிப்பான் என்பது. தவிற பால காண்டம 34-ம் ஸர்க்கத்தில் விசுவாமித்ரர் ராமனுக்கு கதை சொன்னதில ஸோமதா எனகிற கந்தர்வி சூளி என்ற மஹர்ஷியிடத்தில் தாங்கள எனக்கு பிர்ம்ம ஸம்பந்தமான தபஸ்ஸுடன கூடின பிள்ளையைக்கொடுக்கவேண்டும் என்றுகேட்க, அவர் அப்படியே கொடுக்க அது பிர்ம்ம ஸம்பந்தமான தபஸ்ஸுடன்கூடி பிதாவைப்போல் இருந்தது. பிதாவை அவலம்பித்தார் அந்த பிர்ம்மதத்தர் என்று இருப்பதால் பிள்ளைகள் பிதாவையே அவலம்பிப்பார்கள் என்பதும, பெண்கள் மாதாக்களையே அவலம்பிப்பாகள் என்பதும் வால்மீகியின் ஸித்தாந்தம். வால்மீகியும் அவர் வாக்

யத்தால் ராமாதிகள் நால்வரையும் பிதா குணத்தை அவலம்பித்ததாய் சொல்லியிருப்பதாலும் பிள்ளைகள் பிதாவையே அனுஸரிப்பார்கள் என்றும், பெண்கள் மாதாக்களையே அனுஸரிப்பார்கள் என்றும் ஸித்தாந்தம்.

---

## 22. கைகயீதேவி கல்யாண காலத்தில் தசரதன் கைகயீக்கு ராஜ்யத்தை சுல்கம் வைக்கவில்லை என்ற ஸித்தாந்தம்.

1. அயோத்யா காண்டம் 1-ம ஸர்க்கம் 47-ம் ச்லோகம் ஸமாநிநாயமெஜிநாஃ ஹு யாநாநுஹு ஷிவீவதீநு। நதஂகெகய ராஜாநஂஜநகஂவா நராயிவஃ। என்று தசரதன் நாலுபக்கங்களின் நின்றும் பிரதான ராஜாக்களை எல்லாம் வரவழைத்தார். ஆனால் ஜனகனையும், கேகய மஹாராஜனையும் வரவழைக்கவில்லை. ஏனென்றால் இதனால் கைகயீ கலயாணம செய்யும்போது சுல்கம் வைக்கக்கொண்டு இப்பொழுது ராம பட்டாபிஷேகத்தை செய்வதால் கேகயன் தடுப்பனே என்பதாலும், இப்பொழுது ஜனகன் சம்பந்தியாய் போய்விட்டதாலும், முந்தி ராஜ்யத்தை சுலகம் வைத்தபோது ஜனகன் சாக்ஷியாய் இருந்தானென்றும் அதற்காக இந்த இரண்டுபேரும் வேண்டாம் என்று கூப்பிடவில்லை என்று லோக வதந்தி.

2. அயோத்யா காண்டம் 4-ம் ஸர்க்கம் 25-ம் ச்லோகத்தில் விவெஹாஷிதஹு ஹாரெதாயாவஜெவவஹாஜிதஃ। தாவஜெவாஷிஷெகஸ்ஹெவஹாவுகாமெராஃஜெதாஃஃ। என்று எவ்வளவுக்குள் பரதன் இநத இடத்தை நாடி வரவில்லையோ அவவளவுக்குள் உனக்கு பிராப்தமாய் இருக்கிற இந்த ராஜயத்தைப் பெற்றுக்கொள் என்று தசரதன் ராமனைப் பார்த்துச் சொல்லிவிட்டதால் இதனால் சிலர் சுலகம உண்டு என்பது பிரமாணம் என்கிறார்கள்.

3. அயோத்யா காண்டம் 107-ம் ஸர்க்கம் 17-ம் ச்லோகம் க்ஷஂராஜாஹரத ஹவஷயஂ நராணாஂ வநாநாஃஹஃவிராஜ ராடீஃஜாஂ। என்று ராமன் பரதனைப்பார்த்து அப்பா சொன்னபடி ஜனங்களுக்கு நீ ராஜாவாயிரு நான் மிருகங்களுக்கு

ராஜாவாயிருக்கிறேன் என்று ராமன் சொன்னதால் இதனாலும் சுல்கம் உண்டு என்கிருர்கள்.

4. பாலகாண்டம் ஸம்க்ஷேபமான முதல் ஸர்க்கத்தில் 39-ம் சலோகத்தில் நந்திக்ராமெகரோத் ராஜ்யம் ராமாகமநகாங்க்ஷயா । என்று ராமன் வரவை எதிர்பார்த்துக்கொண்டு பரதன் நந்திக்கிராமத்தில இருந்துகொண்டு ராஜயத்தைக் கார்த்து வந்தான் என்றதால் இதிலிருந்து சுலகம் உண்டு என்று ஸ்பஷ்டம் என்கிருர்கள்.

5. அயோத்யா காண்டம் 107-ம் ஸர்க்கம் 3-ம் ச்லோகம் புரா ப்ராத: பிதா ந: ஸ மாதரம் தே ஸமுத்வஹந் । மாதாமஹே ஸமாச்ரௌஷீத் ராஜ்யசுல்கமநுத்தமம் । என்று ராமன் பரதனைப பார்த்து உன் அம்மாவினுடைய கலயாண காலத்தில் அப்பா ராஜயததை சுல்கம் வைததார் என்று கேள்வை என்று ராமன் சொன்னதால் சுல்கம் உண்டு என்று ஸ்பஷ்டம் என்கிருர்கள்.

6. அயோத்யா காண்டம் 96-ம் ஸாக்கததில் 26-ம் ச்லோகம் அத்ய புத்ர ஹதாம் ஸம்க்யே கைகேயீம் ராஜ்யகாமுகாம் । என்று ராஜயகாமையான இந்த கைகேயியானவள் யுத்தத்தில் பிள்ளையை இழந்து யானையினுல் முறிக்கபபட்ட மரம்போல் ஆகட்டும். அவளையும் அவள் பந்துக்களையும் கொல்லுகிறேன் என்ற லக்ஷ்மணன் வார்த்தையால் சுல்கம உண்டு அதனால் ராஜ்ய காமி-என்றுா என்பது.

7. ஆரண்யகாண்டம் 2-ம் ஸர்க்கம் 25-ம் ச்லோகம் ராஜ்யகாமே மம க்ரோதோ பரதே யோ பபூவ ஹ । என்று ராஜ்யத்தில் இச்சை உடையவனை அந்த பரதனிடத்தில் முந்தி உண்டான அந்த கோபத்தை இப்பொழுது விராதன்பேரில் விடுகிறேன் என்ருர். இதில் பரதனை ராஜயகாமன் என்ருர் லக்ஷ்மணன். ஆதலால் இதிலிருந்து சுல்கம் உண்டு என்கிருர்கள்.

8. அயோத்யா காண்டம் 82-ம் ஸர்க்கம் 7-ம் ச்லோகம் பித்ரா ப்ராத்ரா ச தே தத்தம் ராஜ்யம் நிஹதகண்டகம் । தத் ஸமஸ்த்ரீஷு த்வம் ப்ரத்ய ராஜ்யேவாபிஷேசய । என்று வந்த வஸிஷ்ட

வார்த்தையால் அதாவது தர்மத்தை ஆசரிக்கிறவராய்க்கொண்டு பிதா ஸ்வர்க்கம அடைந்தார். உனக்கு ராஜயத்தை கொடுத்து விட்டுச் சென்றுவிட்டார். ஸத்யஸந்தனை ராமச்சந்திரனும் தர்மத்தை அனுஸரித்து காடு சென்றுவிட்டார். ஆதலால் பிதாவின் ஆக்ஞையைத் தள்ளாமல் அபபாவினாலும், அண்ணாவினாலும் கொடுக்கபபட்ட ராஜயத்தை மந்திரிகளுடன் கூடிக் கொண்டு சீக்கிரமாய் அபிஷேகம் செய்துகொள் என்ற வஸிஷ்ட வாக்யத்தாலும் சிலர் சுல்கம் உண்டு என்கிறார்கள்.

9. ஆரண்யகாண்டம் 16-ம் ஸாக்கம் 37-ம் சலோகம் நதேஂபாஜய௱ஊாதாதமஹி௩தவ௱ாகயஂ௨'ந। தாவிக்ஷாகநாய வ௱ஹாதவ௱கயாஂக௱௱। என்று ராமன் லக்ஷ்மணனைப் பார்த்து நடு அம்மாவான கைகயியை தூஷிக்காதே. இன்னும் இக்ஷ்வாகு நாதனை பரதன் கதையைச சொல்லு என்பதால் சுல்கம் இருக்கக்கொண்டுதான் ராமன் பரதனை இக்ஷ்வாகுநாதன் என்றார். இதனால சுல்கம் உண்டு என்றாகிறது.

10. யுத்தகாண்டம் 128-ம் ஸர்க்கம் 17-ம் ச்லோகம் ஸஂமத௱ஹாஃ ஶ்ரீஊாநுராஜ௱ாமீ௩தைகூலெயஂஹவெக। வ௱பாஹாத வஸ௱யாஂஸவ௩ாஂ ஸுவிஜாஂரவா௱நஂ௨நஃ। என்று பூமி முழுமை யும் பரிபாலிக்கிற இவனுக்கு ராஜயத்தில பத்தாசை இருக்கிறதா பார். இருந்தால அவன புத்தியை அறிந்துகொண்டு வந்துவிடு என்றார். அவன் பணத்தாசை உள்ளவன். ஆதலாலும் சுல்கம் உண்டு என்றும் காட்டுகிறார் என்கிறார்கள்.

11. யுத்தகாண்டம் 128-ம் ஸர்க்கம் 32-ம் ச்லோகம் வாஃகெதவ௱ஹூரத௱பாஸஞஂ வெவஸ௱ஙாஂ। என் பதில இருந்து பாதுகைகளை முன்னிட்டுக்கொண்டு பூமியை பரிபாலிக்கிறான் என்றதில் இருந்து சுல்கம். ஆதலால் பரிபாலிக் கிறான் என்பது என்கிறார்கள்.

உத்தரகாண்டம் 13-ம்ஸர்க்கம் 12-ம் ச்லோகம் ஞுயெ௩ணஹி வா௱ாபாெந௱ாகவயொய௱ா வஙிவாஜிதா। என்று சத்ருக்னன் சொன்னதில் இருந்து இந்த மூத்தவனை இநத பரதனால் பரிபா

லிக்கப்பட்டது என்றார். சுல்கம் உள்ளபடியால் என்று ஸ்பஷ்டம் என்கிறார்கள்.

12. கிஷ்கிந்தா காண்டம் 18-ம் ஸர்க்கம் 7-ம் ச்லோகம் தாம்பாலயதி தர்மாத்மா பரத꞉ ஸத்யவாக்ருஜு꞉। என்று வாலியிடம் சொன்னது ஸத்யஸந்தனான பரதன் அயோத்தியை பரிபாலிக்கிறான் என்றார். சுல்கப்படி பரிபாலிக்கிறான் என்று ஸ்பஷ்டம் ஆதலால் சுல்கம் உண்டு என்று உலகத்தில் சொல்லுகிறார்கள்.

முன்சொன்னவைகளால் கைகயீயை கல்யாணம் செய்யும் காலத்தில் தசரதன் ராஜ்யத்தை சுல்கம் வைத்தார் என்கிறது. மஹரிஷி வால்மீகி சுல்கம் இல்லை என்று ஸ்தாபிப்பதால் சுல்கம் இல்லை என்று ஸ்தாபனம். எப்படி ஸ்தாபிக்கிறார் என்ற அழகை கவனிப்போம்.—

தசரதன் ராமபட்டாபிஷேகத்தை உத்தேசித்து பல தேசங்களில் இருந்து ராஜாக்களை வரவழைத்தார். ஆனால், தசரதர் கேகய ராஜனையும், ஜனகனையும் வரவழைக்கவில்லை என்பதால் சுல்கம் உண்டு என்று சொல்ல இடமில்லை. கைகயீயை கல்யாணம் செய்யும்போது அந்த கைகயீக்கு பிறக்கும் பிள்ளைக்கு பட்டம் என்று சொன்னதாலும், அப்பொழுது ஜனகனை ஸாக்ஷி வைத்து இருந்ததாலும் இப்பொழுது ராமபட்டாபிஷேகம் என்று தெரிந்தால் இருவரும் சண்டைக்கு வருவார்களோ என்று தசரதன் இருவரையும் வரவழைக்கவில்லை என்று சிலர் அபிப்பிராயம். அதை வால்மீகி கண்டிக்கிறார். கைகயீயை கல்யாணம் செய்யும்போது தசரதன் சுல்கம் வைத்தார் என்பது ரிஷியின் அபிப்ராயம் இல்லையாதலாலும், தசரதனை உத்தம ஸத்யஸந்தனாய் இவர் பேசியிருப்பதாலும் ஸத்யஸந்தன் ஒரு நாளும் ஸத்யத்தை மீறமாட்டானாதலாலும் சுல்கம் வைக்கவில்லை என்கிறார் ரிஷிக்கு அபிப்ராயம் இல்லாதபோது மற்ற யார் வாக்யமும் பிரயோசனமில்லை என்பது ஸ்பஷ்டம். தவிற தசரதன் சுல்கம் வைத்ததாக சொல்லும்படியான கதையை கவனித்தாலும் கைகயீக்கு சுல்கம் என்பதே தவிற அவள் பிள்ளைக்கு

[illegible] என்று இந்த மைந்தத்விவிதர்களில ஒருவரிடமாவது தேவாஸுர, யக்ஷ, கந்தர்வ உரக, பக்ஷி முதலிய எவாகளும் யுத்தம செய்யமுடியாது. இவாகள் அசவினீ புத்ரர்கள். இவர்களை யுததத்தில ஜெயிபபவர்கள் எவர்களையும் நான் பார்க்கிறேனில்லை.பிதா மஹ வரத்தால் மதித்து இருப்பவர்கள் அமிர்தபானம் செய்தவர்கள். அச்வனீ தேவதைகளை திருப்தி செய்விப்பதற்காக பிர்ம்மதேவன் இவவிருவர்களுக்கும் எவராலும் எககாலததிலும் கொலலமுடியாத வரத்தை கொடுத்து இருக்கிறார்.இவர்கள் கோபததை அடைந்தால் ரதகஜதுரகபதாதி வர்க்கங்களுடன் கூடின லங்கையை அழிக்க சக்தி உள்ளவர்கள் என்றார் ஹநுமான. இவர்களுக்கும் ராமன மரியாதைசெய்தாா என்று இருக்கிறது இவர்களும் மஹாபலிஷடர்கள் என்று ஸித்தாந்தம். இக்க்ரந்தரீதியில இந்த எட்டுபேர்களும வாலியைக்காட்டிலும் மஹாபலிஷ்டர்கள் எனறு கவியின் அபிப்ராயம். இப்படி இவ்வெட்டுப்பேர்களும் அளவிடமுடியாத பலமுள்ளவர்கள் என்றும் பிரதயக்ஷம். வாலிககு ஸ்வயம் பலம் மட்டுமென்றே இக்க்ரந்தம். மாலை உயிரை ரக்ஷிககிற மாலையாய் இருக்ககொண்டு அதனாலதான் யுத்தத்தில் எல்லாரிடத்திலும் பிழைத்து வருகிறான் என்றும் இல்லாவிட்டால் இவன் யாராரிடம் யுத்தம் செய்திருக்கிறானோ அவர்கள் அத்தனை பேர்களும் இவனை இருந்த இடம் தெரியாமல் செய்யும் யோக்யதை உடையவர்கள் எனபது பிரத்யக்ஷம். ஆனால் மேல் குறிப்பிட்டவர்களில் 100 யோசனைதூரம் இருந்த லங்கையைத் தாண்ட முடியாமல் 40, 50, 60 யோசனைகள்தான் தாண்ட முடியும் என்று அவர்கள் வாயினாலே சொன்னவர்கள்கூட இருக்கிறார்களே! இவர்கள் வாலியைககாட்டிலும் பலிஷ்டர்களானன்றால எல்லாரும் முந்தியே ஸமுத்ரக்கரையில மஹா துக்கத்தை அடைந்து சுக்ரீவனிடம் இருக்கும் பயத்தால் ஸர்வ தேகபலத்தையும் இழந்துவிட்டதால்

அந்த பலக்குறைவை அடைந்து இருந்ததால் அதனுல் சொல்லப் பட்ட வாக்யங்கள் பிரமாணங்களுக்கு வராதுஎன்று ஸித்தாந்தம்.

இப்படி 8 பேர்கள் பலத்தையும் வாலி பலத்தையும் அங்கதன், நீலன், கஜன், கவாக்ஷன், கந்தமாதனன், சுஷேணன், சதவலி இப்படி ராமாயணத்தில எவவளவுபேர் வானரர்களில் பலிஷ்டர்கள் என்று சொல்லியிருக்கிறதோ அத்தனைபேர்கள் பலத்தையும் ஆதிமுதல் பராமர்சித்து ராக்ஷஸாகளில் இதே மாதிரி ஒவ்வொரு பலிஷ்டர்கள் பலத்தையும் பராமர்சித்து வரிசைக்கிரமமாய் ஒவ்வொரு சலோகமாய் ஒவவொருவனையும் ஸப்தகாண்டத்திலும் பராமர்சித்து பார்த்து வானரர்கள் பல விஷயத்தை வெளிப்படுத்தியிருககிறது. மற்ற விஷயங்கள் பின் மற்ெருரு புஸ்தகத்தில வரும். இபபொழுது அசசிடப்படும் இப்புஸ்தகத்தில் இன்னும் சில ஸித்தாந்தங்கள் பாக்கி இருப்ப தால் அதுகளும் அடுத்த புஸ்தகத்தில் வெளியாகும்.

ஆத்யந்தம் பராமர்சித்ததில் கவியானவர் இவ்வெட்டுப்பேர் களை வாலிக்குமேல் பலிஷ்டர்களாய் ஸ்தாபிக்கிருர். எப்படிப் போல் என்ருல் இந்திரனுக்குமேல் மஹாபலிஷ்டர்கள் தேவர் களில் இருந்தும் அவனுக்கு ஒரு ராஜத்வமான ஒரு மரியாதைக் காக எப்படி கௌரவம் கொடுக்கிருர்களோ அப்படி வாலிக்கு மரியாதையை அனுஸரித்து இவ்வெட்டுப்பேர்களும் கட்டுப் பட்டவர்கள் என்பது கவியின் ஸித்தாந்தம். இவ்வெட்டுப் பேர்களுக்கு அடுத்தவன் வாலி, பிறகு அங்கதன், பிறகு சுஷேணன், பிறகு சதவலி. இப்படி பல கிரமங்கள் இருக்கிறது. இங்கு இவ்வெட்டு பேர்களை வால்மீகி அதிமேன்மையாயும் காட்டியதால் அதைக் குறிபபிடப்பட்டது. ஆதலால இவ்வெட்டுப்பேர்களும் வாலிககுமேல பலிஷ்டர்கள் என்று கவியின் ஸித்தாந்தம்.

---

## 26. மாயாவி, துந்துபி ஸம்பந்தமான கதாநிர்ணயம்.

கிஷ்கிந்தாகாண்டம 9-ம் ஸர்க்கம் 5-ம் சலோகம் ஊயாவீ நாஊதெஜஸ்வீவ௵வ-ஜொ ஓ-ா௦ஓ-ஹெஸ-தஃ। தெநத்ஸஊஹ வைஶ௦ஷ்ரீகூதம் விஶ-த௦வ-ஶா। என்று சுக்ரீவன் சொன்னதையும் கிஷ்கிந்தா காண்டம் 10-ம ஸர்ககம் 22-ம் சலோகம் ஸ௵ஓயிகூாத-தம் ஶதர௦விகரஜூ௦ ஓ-ஹெஸ-த௦। என்ற வாலி வார்த்தையையும் கவனிக்க ஒனறுக்கொனறு ஒத்து இருக்கிறது. ஆனல் துநதுபிக்கு பிள்ளை மாயாவி அல்ல. உததர காண்டம் 12-ம் ஸர்க்கம் 12-ம் சலோகம் வ-துஆய௦ ஊஊவஸ௦ ஹாய-ஊயா௦ ஸ௦ஸஹ௵வஹ। ஊயாவீவ-யஊஸாத ஓ-௦ ஓ-ஹீஸ்ஓநம்தஶஃ॥ என்று ராவணன் கலயாண காலததில் மயன் ராவணனைப்பாாத்து எனக்கு ஹேமை என்கிற தேவதாஸியான எனக்கு பிர்ம்மாவினல் பத்னியாகக் கொடுககப்பட்ட அவளிடத்தில நான் 500 வருஷம் ஸ-கத்தில இருகக எனக்கு அவளிடம் மூன்று குழந்தைகள் பிறந்தன. அதில மூத்தவனுக்கு மாயாவி என்றும், இளையவனுககு துந்துபி எனறும, மூன்ருவது பெண்ணுக்கு மந்தோதரி எனறு பெயர் என்ருன். இது முன் சொன்னதற்கு விரோதம். மேலும் 9-ம ஸாக்கத்தில உள்ளபடி சுக்ரீவ வார்த்தையின்படி துந்துபிக்கு புத்ரனல்லன். மயபுத்ரனே. வாலி சுகரீவாகள் இருவருக்கும் மாயாவியார் பிள்ளை என்று தெரியாது என்பதே ஸ்பஷ்டம. இது நிற்க 9-ம் ஸர்க்கத்தில் சுக்ரீவன் (ராமனுக்கு கதை சொல்லுகிருன்.) அந்த மாயாவி கோட்டை வாசலில் கர்ஜ்ஜிக்க வாலி அதுகேட்டு சண்டைக்கு கிளம்பினன். நானும் கூடக் கிளம்பினேன்; இருவர் வருவது கண்டு அவன் ஓடினன். இருவரும் தொடாந்து வந்ததால அபபொழுது அவன ஒரு குஹையில புகுநதான. வாலியும் பிரவேசிக்க நானும் கூடப் பிரவேசிக்க, அபபொழுது வாலி நான் உள்ளே வரககூடாது என்று பிரமாணம் செய்துவிட்டுச் சென்ருன். ஒரு வருஷம் ஆக, மேலும சிலகாலம் ஆக பிறகு குஹையிலிருநது நுரையுடனகூட ரததவெள்ளம் வெளிவர அண்ணவைக் காணவில்லை. அதனல மரணமடைந்தான் என்று ஒரு பாறையால் குஹையை மூடிவிட்டு பட்டணம் வந்து இந்த

துக்கத்தை வெளிப்படுத்தமுடியாமல் இருகக பிரஜைகளும், மந்திரிகளும் விஷயத்தை தெரிந்துகொண்டு எனக்கு பலாத்கார மாய ராஜ்ய பட்டாபிஷேகம் செய்தார்கள். நான் பரிபாலித் துக்கொண்டிருக்க வாலி வந்துவிட அவனுக்கு நடந்தபடி சொல் லியும் அவன் என்னை அடித்து விரட்ட நான் அவன் வரக்கூடாத மதங்கர் சாபத்துடன் கூடின இந்த இடத்தில் இருக்கிறேன் என்று சுகரீவன் ராமனுக்கு கதை சொன்னான். இந்த 9-ம் ஸாக்கத்தில இப்படிச் சொன்ன இவனே கிஷ்கிந்தாகாண்டம் 46ம் ஸர்க்கத்தில இந்தக் கதையையே சொல்லும் காலத்தில துந்துபி என்கிறவன வந்தான். அவன கர்ஜஜித்தான. வாலி இதுகேட்டு யுத்தத்திற்கு கிளம்ப நானும் கிளம்பினேன். அப்பொழுது ஓடி துந்துபி மலைப்பர்வத குஹையில் புகுந்தான். வாலியும் புகுந் தான். நான் அவன் ஆக்ஞையால் நிற்க வெளியில இருந்த எனக்கு ஒரு வருஷமானது. அதன்பிறகும் சிலகாலமானது. பிறகும் வாலியைக் காணவில்லை. ரெத்த வெள்ளம் வெளிவர மேலும் சில அடையாளங்களாலும் அவன் மரணமடைந்தான் என்று ஊர் வநதேன். பட்டணத்து ஜனங்களும் மந்திரிகளும் பலாத்காரமாய் பட்டாபிஷேகம் செய்தார்கள். பிறகு வாலி வர நான் நமஸ்கரித்தும் என்னை விரட்டினான். அதனால் நான் வாலி வரக்கூடாத இடத்தில் இருக்கிறேன் என்றான். இது நிற்க கிஷ்கிந்தா காண்டம் 11-ம் ஸர்க்கத்தில் ராமன், வாலி ஏன் இங்கு வரக்கூடாது? என்று கேட்டபோது துந்துபி என்பவன் கோட்டை வாசல் வந்து கர்ஜ்ஜிக்கும்போது வாலி கோட்டை வாசலிலேயே சண்டைபோட்டு அவனை அடித்து கோட்டை வாசலில் இருந்து அவனை வீசி எறிய அது அங்கிருந்து ஒரு யோசனை தூரத்தில் இருந்த மதங்கரிஷி ஆச்ரமத்தில் விழுந்தது. அவர் வாலியை குற்றம் செய்தவனென்று ஞானத்தால் அறிந்து வாலியானவன் என ஆச்ரமத்தைச் சுற்றி ஒரு யோசனை தூரம் வரக்கூடாது; வந்தால் அவன் தலை வெட்டிக் கட்டும் என்றும், வாலியைச சேர்ந்தவர்கள் இவ்வனத்தில் யார் இருந் தாலும அவர்கள் எல்லாரும் இன்று இரவுக்குள் இந்த எல்லையை விட்டு எங்கேயாவது ஓடிவிடட்டும். இல்லாவிட்டால் அவர்கள்

கல்லாய்ப் போய்விடுவார்கள் என்று சபித்தார். நான் ஜனன முதல் அவனுக்கு சத்ருவாதலால் அவனுக்கும் எனக்கும் பிராதா என்பது வியாஜமே தவிற வேறு அல்ல. ஆதலால் தான் அவர் சாபம் என்னைப் பிடிக்கவில்லை என்று இப்படிக் கதை சொன்னான். இதே சுக்ரீவன் கிஷ்கிந்தா காண்டம் 2-ம் ஸர்க்கத்தில் ராமலக்ஷ்மணர்கள் ரிசயமூகத்தை நாடிவருவதைக் கண்டு ஸுக்ரீவன் அவர்கள் தேஜஸ்ஸால பயந்து ஓட அப்பொழுது ஹநுமான் ஊ௵யோயம் ஹிரிவரஃ ஷயம்நெஹாஷிவாஷிநஃ ॥ என்று இது மலயபர்வதம். இங்கு வாலியால் பயமில்லை. வாலி அனுப்ப வந்தவர்களோ என்று எண்ணவேண்டாம். வாலியைச் சேர்ந்தவாளும் வரக்கூடாது. ஆதலால் யோசிக்கவேண்டாம் என்றார். இப்பொழுது மலையம், ரிச்யமூகம் இரண்டும் அந்த மதங்கர் சபித்து இருக்கும் எல்லைக்குள் இருக்கிறது என்பது பிரத்யக்ஷம். கபந்த வார்த்தையில ரிச்யமூகத்தில் இருக்கிறான் சுக்ரீவன் என்ற வாக்யத்தால் ஸ்பஷ்டம். இபபொழுது இதுகளில் ஒன்றுக்கொன்று விரோதம். இதுகளில் நிர்ணயம் எபபடி என்றால் மாயாவி என்பவன் மயபுத்ரன் தான்; மூத்தவன் தான் என்பதும் ஸ்பஷ்டம். மாயாவி தான் குஹையில் யுத்தம் செய்தது கிஷ்கிந்தா காண்டம் 46-ம் ஸர்க்கத்தில் துந்துபி என்றான் ஸுக்ரீவன. அது ஞாயமில்லை. 46-ம் ஸர்க்கத்திலும் சொல்லப்பட்டவனும் மாயாவியே. ஏனென்றால் துந்துபி யுத்தம் குஹையில் நடந்ததாய் இல்லை. கோட்டை வாசலில்தான் நடந்தது என்பது ஸத்யம். 46-ம் ஸர்க்கப்படி மலயபர்வத குஹையில் நடந்ததென்றால், இங்கு வாலி மாயாவியை விரட்டவில்லை. இங்கு எல்லைக்குள் இருக்கும் மலையில் குஹையில் புகுந்தானென்றால் முந்தியே துந்துபியை அடித்து சரீரத்தை மதங்கர் எல்லையில் எறிந்து இருப்பதால் சபித்த எல்லைக்குள் இருக்கும் மலயத்தின் குஹையில் மாயாவியை வாலி விரட்டவில்லை என்பது ஸத்யம். தவிற அந்த மலய குஹைக்குள் என்றால் அங்கு இருந்து ஒரு யோசனை தூரத்தில் சரீரத்தை எறிந்தான் என்று சொல்லவேண்டும். குஹைக்குள் இருந்து எறிந்தானா? அப்படி எறிந்து இருந்தால் குஹை வாசலில் காவலாய் இருந்த சுக்ரீவன்

குஹையை மூடிச்சென்று இருக்க அந்த சரீரம் அதைத் தள்ளிக்கொண்டு வெளிவந்ததா? வந்து ஆச்ரமத்தை அழித்ததா? மதங்கர் சபித்தாரா? இதனால் துந்துபி யுத்தம் குஹையில் என்று எபபடி சொல்லமுடியும்? ஏனென்றால் துந்துபியை அடித்து ஒரு யோசனை தூரத்தில் எறிந்து இருந்தால் இந்த மதங்கர் எல்லையையே தாண்டி துந்துபி சரீரம் வெகுதூரம் சென்று விழும். அப்பொழுது மதங்கர் சபிக்கவே ஞாயமில்லை. தவிறவும் சரீரத்தை விட்டெரிந்தால் இது நேரிட ஒரு யோசனை உயரச் சென்று அந்த குஹை வாசலிலேயே விழுமே தவிற மதங்காசசிரமம் அழியவே காரணமில்லை. அப்பொழுதும் சாபம் கொடுக்கவே இடம் இல்லை என்றும் ஸ்பஷ்டம். இது நிற்க மாயாவி யுத்தம் முநதியா? துந்துபி யுத்தம் முந்தியா? என்றால் துந்துபி யுத்தம் முந்தியாயிருந்தால்தான் மதங்கர் சபிக்கவும் பிறகு வாலி சுக்ரீவர்களுக்கு விரோதம் உண்டாக சாபம் இருந்த இடத்திற்கு சுக்ரீவன் போக அனுகூலமாதலால் முதலில் துந்துபி யுத்தம் கோட்டை வாசலில்தான் நடந்தது. பிறகு மாயாவி யுத்தம் குஹையில் நடந்தது என்பதே ஸ்பஷ்டம். ஆதலால் இவ்விஷயங்களை கவனிக்கிற காலத்தில் ரிஷியின் அபிப்பிராயபபடி சுக்ரீவன் மாயாவி எப்படி இருப்பன், துந்துபி எப்படி இருப்பன் என்ற வித்தியாசம் தெரியாதவன் என்று தோன்றலாம். அல்ல நன்றாகத் தெரியும். சுக்ரீவன் துந்துபியை எருமைக்கடா ரூபத்துடன் வந்தான் என்கிறான். மாயாவியை ராக்ஷஸன் என்றே குறிப்பிட்டுவிட்டான். ஆனால் இருவரும் யார் புத்ரர்கள் என்பதும், இருவரும் என்ன ஸம்பந்தம் என்ன என்பது தெரியாது என்பதும ஸ்பஷ்டம். தவிற இவர்கள் ஸம்பந்தம் தெரியாதென்பது எப்படித் தெரிகிறதென்றால வாலிக்கும் மாயாவிக்கும் விரோதம் ஸ்திரீ நிமித்தம் என்று கேள்வை என்றான். இன்னாருக்கு இன்ன பெயர் தெரியாது என்றும் ஸ்பஷ்டமாகிறது. வாலிக்கும் தெரியாதென்றும் ஸ்பஷ்டம். ஆனால் இக்கிரந்தத்தில யார் யார் எதை எதை எபபடி எபபடிச் சொன்னார்களோ அப்படியே வர்ணிக்கவேண்டியதே கவியின் கடமை. இவ்விடத்தில் வியாக்யானங்கள் பலவிதமாய் இருக்

கிறது. ஆதலால் இதைக் குறிப்பிட்டோம். ஒருவா மலய பர்வதத்திற்கே ரிசயமூகம என்று பெயர் என்கிருர். மற்ருெருவர் ரிசயமூகத்தின் ஒரு கொடிமுடி மலயம் என்கிருர். இதற்கு சலோகத்தில ஆதாரம இலலே. வால்மீகி இரண்டும் தனி மலேகள் அது இரண்டும் மதங்கர் சபித்து இருககும் எல்லேக்குள் இருக்கிறது மலயம் வேறு; ரிசயம் வேறு என்கிருர். ரிசயமூகத்தை விட்டு ஹநுமான் மலயத்திற்கு சென்ருர் என்று இருப்பதால் இரண்டும் ஒனறல்ல என்பதும் ஸ்பஷ்டம். தவிற இக்கிரந்த ரீதியாய் மாயாவி துந்துபி இருவரும் மயன் புத்ரர்கள்தான் என்றே ஸித்தாந்தம்.

---

27. வாலி போட்டுக்கொண்டு இருக்கும் காஞ்சனமாலேக் காவது, வாலிக்காவது எதிராளி பாதி பலத்தையாவது, முழு பலத்தையாவது இழுக்கும் யோக்யதை கிடையாது என்ற ஸித்தாந்தம்.

முதலில் மாலே எத்தனே என்று கவனிப்போம்.

1. கிஷ்கிந்தா காண்டம் 11-ம் ஸர்க்கம் 39-ம் ச்லோகம் [illegible] । [illegible] । என்று (சுக்ரீவன் ராமனுக்கு சொல்லிய கதையில் துந்துபி விருத்தாந்தத்தில் உள்ளது) வாலியானவன் சண்டைக்கு துந்துபியுடன் புறப்பட்டபோது யுத்தத்தின்பொருட்டு பிதாவான இந்திரனல் கொடுக்கப்பட்ட மாலேயைப் போட்டுக்கொண்டு புறப்பட்டான். (இது சுக்ரீவன் சொன்னது)

2. உத்தரகாண்டம் 43-ம் ஸர்க்கம் 40-ம் ச்லோகம் [illegible] । [illegible] । என்று (அகஸ்தியர் ராமனுக்கு சொல்லும், வாலி, சுக்ரீவர்கள் ஜனன கட்டத்தில் உள்ளது.) வானரர்களுக்கு எஜமானனை வாலிக்கு அழிவில்

லாததாயும், உத்தம குணத்துடன கூடின தங்கமயமான மாலைக் கொடுத்து இந்திரன் சென்றான். (இது அகஸ்தியர் வாக்யம்.)

3. கிஷ்கிந்தா காண்டம் 23-ம ஸர்க்கம 28-ம் சலோகம் யாஉத்ராஜெவஊாஜெ நதவ தஷெ நவஸ்ய ரெ। என்று (இது வாலி மரணாநந்தரம் தாரை வாலியைபபார்த்துச சொன்னது) யுத்ததகில சந்தோஷபபட்ட தேவராஜனால் கொடுக்கப்பட்டது என்றான். (இது தாரா வாக்யம்.)

4. கிஷ்கிநதா காண்டம் 22-ம் ஸர்க்கம் 16-ம் சலோகம் ஊஶாஂஉஶாமஶாயஷ் திவ்யாஂ ஸுஹ்ரீவகாஂவநீஂ। உஹாராஸ்ரீஷி தாஹவ்யாஂ ஸஂவ ஜஹ்யாநுகெஶயி। என்று (இது வாலி சுக்ரீவனைப்பார்த்துச் சொன்னது) ஏ சுக்ரீவ இந்த ஸ்வர்ண மயமான மாலையை நீ பெற்றுக்கொள். செத்தப்பிறகு சரீரத்தில இது இருந்தால் இதன் மஹிமை போய்விடும் என்றான். (இது வாலி வாக்யம்.)

5. யுத்தகாண்டம் 28-ம ஸாக்கம் 32-ம் சலோகம் யமொஷ்ஷாகாஞநீஶாமா மொஹெதஸதவஷ்ரா। காஞாஜெவஉநஷ்யாணாஂ யஸ்யாஂமக்ஷ்ீ வஜிஷ்தா। என்று இந்த தங்கமயமான மாலையிடத்தில் உத்தம மஹிமை விளங்குவதால் இது தேவ மனுஷ்யர்களால் இசசிகக்த் தகுந்தது. இதை ராமன் வாலியைக் கொன்றுவிட்டு ஸுக்ரீவனுக்கு கொடுத்தார் என்றான். (இது சுக வாக்யம்.)

6. கிஷ்கிந்தா காண்டம் 17-ம் ஸர்க்கம் 5-ம் ச்லோகம் ஸகஉத்தாவஊாஶாமாகாஂவநீ வஜஹஷ்தா। உயாஹரிஶ வவ்ஸ்வ்வாணாஂதெஜஸ்ஷ்யஂஉஸா। என்று இது வாலி வதம் ஆனதும், அவன் மார்பில் இருக்கும மாலையின் மஹிமையை வால்மீகி ஸர்வமும் தெரிந்து கிரந்தம் பண்ணினதால் அதையும் வர்ணிக்கிறார்.) இந்திரனால் கொடுக்கப்பட்ட ஸ்வர்ணமயமான அந்த மாலை அடிபட்ட அந்த வாலியினுடைய பிராணன்கள் என்ன தேஜஸ், என்ன ராஜய ஸ்ரீ என்ன இதுகளை தரித்துக் கொண்டு இருந்தது. (இது வால்மீகி வாக்யம்.)

இத்தனை மாலைகளும் ஒரே மாலையைப்பற்றினதே தவிற வெவ்வேறு மாலை அல்ல. இதுதான வாலி போட்டுக்கொண்டு இருக்கும் மாலை இந்த மாலையைப்பற்றி யாவருக்கு எப்படி எப்படி தெரிந்ததோ அபபடி அப்படி மூந்தி சொல்லப்பட்டு இருககிறது. இதில் மூந்தி ஆறுபேர் சொல்லப்பட்டு இருக்கிறது. மாலையைப்பற்றி முன்சொன்ன ஆறுபேர்களில் ஆருவதான வால்மீகிக்கு தவிற மற்ற ஒருவருககாவது மாலையினுடைய அத னிடத்தில இருக்கும் ரூபம் எனன? அதாவது அதன் மஹிமை என்ன என்பது ஒருவருக்காவது தெரியாது எனறு ஸ்பஷ்டம். இப்படி இருக்க இதில் ஐந்துபேர் மாலை விருத்தாந்தம் சொல்லி யிருக்க யார் வாக்யத்திலாவது இந்த மாலை சண்டைக்கு வந்தவ னுடைய பாதி பலத்தையோ அல்லது முழு பலத்தையோ இழுத்துவிடும் யோக்யதையை உடையது என்பதற்கு ஆதாரம் இருக்கிறதா? ஒருவர் வாக்யத்திலாவது இல்லாதபோது எப்படி சொல்வது? இது நிற்க கிஷ்கிந்தா காண்டத்தில் 11-ம் ச்லோ கத்தில் துநதுபி சண்டைக்கு வந்தபோது அந்த மாலையைப் போட்டுக்கொண்டு வாலி சண்டைக்கு வந்தான். அப்பொழுது சண்டை நடக்கும்போது 44-ம் சலோகத்தில கஹீஜஹஸ-ஸொ யா-ஸெ மஹுஸுஜ நூஹவஜ்ருவயஜத। ஷ்ராவாஊவீஸ ஷ்ரயெயஜஹு வபிக்ஷீண௦வராக ஷெஜ:॥ என்று துந்துபியும் வாலியும் சண்டை போடும்போது இந்திரபுத்ரனை வாலி விருத்தியடைந்தான். சண்டைபோடும் வியாபாரம், பலம், மனோதைர்யம் இதுகளால் துந்துபி குறைந்தான் எனறு இருக்கிறது. (இது ஸுக்ரீவன் ராமனுக்குச சொல்லும் கதை.) பிறகு துந்துபியை வாலி கொன்ருன் என்று கதை. இதனால் வாலியின் மாலை துந்துபி பலத்தை இழுத்துவிட்டது என்று வியாக்யாதாக்களும், உலகத் தாரும் சொல்லுகிருர்கள். தவிற வாலி, சுக்ரீவனிடம் இரண் டாந்தடவை சண்டைக்கு வந்தபோது வாலி மாலை போட்டுக் கொண்டு வந்தான். முதல்தடவை வந்தபோது மாலை இல்லை. முதல்தடவை வந்தபோது பலம் ஏறினது என்று இல்லை. இரண்டாந்தடவை வாலி, சுக்ரீவனுடன் சண்டை போடும்போது போட்டுக்கொண்டு வந்தான். சண்டைநடக்கும்போது கிஷ்கிந்தா

காண்டம் 16-ம் ஸர்க்கம் 27-ம் ச்லோகத்தில் தலெதாவயஉத வாஷீ தஃபெஷவீயஉவஸஊஙி தஃ। வஸஂயஉவஃஸெதூாஊஹாவீயஉஃ வஸ ஷீ வஃ வஙிஹீயஸெத। என்று வால்மீகி வர்ணிக்கிறார். வாலி பல வீர்யத்தால் விருத்தியடைந்தான். மஹா வீர்யவானான சுக்ரீவன் சூர்யபுத்ரன் குறைந்தான் என்றார். (இந்த ஸுக்ரீவன் மஹா துக்கபபட்டு அதனால் முழுமையும் பலக்குறைவு அடைந்து இருக்கிறான். மேலும் துக்கம் வந்தால் பலம முதலியவை போய்விடும் என்று இவரே குறிப்பிட்டு இருப்பதால் தான் களைத்த சுக்ரீவனையும் பலிஷ்டன் களைத்தான் என்றார்.) இதனாலும் மாலை இருக்கிறதாக உலகத்தாரும் வியாக்யானங்களும் அபிப்பிராயப்படுகிறார்கள். (இப்பொழுது இதில் இருந்து மாலை போட்டு இருக்கும்போது தான் விருத்தியடைவதை சொல்லுவதால் ஸ்வயமாக வாலிகது இந்த வரம் கிடையாது என்று ஸ்தாபனம்.) இந்த சலோகத்தை வர்ணிக்கிற வால்மீகியே இதை கண்டித்து பேசுகிறார். மாலையின் உண்மையான யோக்யதையை மேலே குறிபபிடுகிறார். மாலைக்கு இபபடி இழுக்கும் யோக்யதையே கிடையாது. இப்படிப்பட்ட மாலை எப்பொழுதுமே கிடையாது என்கிறார். இதைக் கவனிப்போம். வாஸ்தவத்தில் அந்த மாலைக்கு அந்த யோக்யதை இருந்தால் வால்மீகியே என்ன சொல்லுகிறா கவனிப்போம். இரண்டாம் யுத்தத்தில் வாலி விருத்தியடைந்தான், ஸுக்ரீவன் குறைந்தான் என்ற ச்லோகத்திற்கு அடுத்த சலோகம் என்னவென்றால் வாஷீ நாஹஹ்ரஉவஉஷூ வஸஷீ வொஊஂஉவிகூஊஃ। வாலியினால் கர்வம் அடக்கப்பட்டவனாய் சுக்ரீவன் பலஹீனனானான். இதற்கு அடுத்த ச்லோகத்தில் மரங்கள் மலைகளைக்கொண்டு லாகவயுத்தம் செய்தான். அப்பொழுது அவ்விருவர்களுக்கும் நடக்கும் சண்டையானது விருத்ராஸுரனுக்கும் இந்திரனுக்கும் நடந்த யுத்தம் போல் இருந்தது என்று கவி வர்ணிக்கிறார். முதலில் பலஹீனனான சுக்ரீவன் என்று சொன்னாரே. மாலைக்கு வியாக்யானப்படியும், உலக வதந்தியாயும், எதிராளி முழு பலத்தையோ, பாதியையோ இழுக்கும் யோக்யதை இருக்கும் பக்ஷத்தில் சுக்ரீவன் பலஹீனனானான் என்றபோது இழுத்துவிட்டதாய்

வைத்துக்கொள்வோம். அடுத்த வரியில் லாகவ யுத்தம் செய்தான் சுக்ரீவன் என்றார். பிறகு அந்த யுத்தம் விருதானுக்கும் இந்திரனுக்கும் நடந்த யுத்தம்போல் இருந்தது என்றால் இது பொய்யலலவா? சுக்ரீவன் பலம் முழுமையும் போய்விட்டதே ஏது பலம் சுக்ரீவனுக்கு என்று கேள்வை? ஆதலால மாலை பலத்தை இழுக்கிறது என்பது பொய். ஆதலால இந்த சலோகத்திற்கு பலத்தால வாலி விருத்தியடைந்தது வாஸ்தவம். ஆனால மாலை இழுக்கிறதென்பதல்ல. உண்மையிலமாலைக்கு எதிராளியின் பலத்தை இழுக்கும் யோக்யதை இருந்திருந்தால மாலை யாரிடம் இருந்தாலும் எதிரி பலத்தை இழுக்கவேண்டியதல்லவா? எப்படி போல என்றால் குபேரனுடைய விமானம் எஜமானன் எங்கு செலல எண்ணுகிறானே அங்கு செல்லும்படியான விமானம் குபேரனிடம் இருந்து ராவணனிடம் சென்றபிறகு இந்த ரகஸியம் ராவணனுககு தெரியாதிருநது இருந்தும ராவணனுக்கும் அது அவன் நினைதத இடத்திறகு சென றதுபோலும், ராமனிடம் வந்தபிறகு ராமன நினைத்த இடததிற்கு சென்றது போலும், உண்மையில மாலைக்கு யோக்யதை இருந்தால் சுக்ரீவன் மாலையுடன் கும்பகர்ணனிடம் யுத்தம செய்து இருக்க அந்த மாலை கும்பகர்ணன பலத்தை இழுக்க இல்லையாதலால் மாலை எதிரி பலத்தை இழுககிறதென்பது பொய என்று ஸிததாந்தம். மாலைக்கு உயிரை ரக்ஷிக்கும் தனமை (இது மேலே வரும் கவனிப்போம்) இருபபதால, ஒவவொரு அஸுரன் அல்லது மறறவன வாலியை அடிக்கும ஒவவொரு அடியும் அவன் உயிரை வாங்கக்கூடியது அநத அடி உயிரை வாங்கும்போது மாரில இருககும மாலை உடனே உயிரை ரக்ஷித்துவிடுவதால் சண்டை போடுபவன நமது அடி இவன் உயிரை வாங்கவில்லையே அடி பலமலலவா! எதனால இவன உயிர போகாமல் இருக்கிறது? விஷயம் தெரிகிறபரியநதம சண்டைபோட்டு பிரயோசனம இல்லை என்று ஒவவொருவனும் பாதி சண்டையில் இப்படி எண்ணி சண்டையில் உதஸாகம இலலாமல் போய்விடுவதால உடனே வாலி, பலம் முதலியதுகளில விருத்தியடைந்து எதிராளியைக் கொல்லுகிறானே தவிற வேறு ஒன்றும் அல்ல என்று

ஸ்பஷ்டமாய் வால்மீகி தெரிவிப்பதால் மாலைக்கு உயிரை ரக்ஷிக்கும் யோக்யதையே தவிர, எதிரி பாதி பலத்தையோ முழுபலத்தையோ இழுக்கும் யோக்யதை கிடையாது என்பது ஸ்பஷ்டம். இதை கவி உத்ஸாஹம் உள்ளவன்தான் ஜயிப்பன் என்கிறார். உத்ஸாஹோ பலவாநார்ய நாஸ்த்யுத்ஸாஹாத்பரம் பலம்। என்று லக்ஷ்மணரும், ராமரும, வால்மீகியும் பல இடத்திலும் குறிப்பிட்டு இருப்பதாலும், வாலி எல்லோரையும் ஜயித்தானே தவிர மாலை இல்லாவிட்டால் வாலி ஜயிப்பது துர்லபமே என்கிறார். சுக்ரீவன் இரண்டாம யுத்தத்தில மாலையுடன் கூடிய வாலியை பரம கோபத்துடன் தான் துக்கத்தால் பலக்குறைவு அடைந்து இருந்தும் ஒரு ஸாலமரத்தை பிடுங்கிக்கொண்டு ஓங்கி அடிக்க, அடிபட்டு வாலி நடுநடுஙகினான் என்றும் கவி வர்ணித்து இருக்கிறார். ஆதலால இநத சலோகத்திற்கே வாலியை எதிர்க்கும் எதிரி அடிக்கும் அடி வாலி உயிரை வாங்குகிறதாயிருந்தும் அடியால் உயிர் போகாததால் உண்டான கவலையால் உத்ஸாஹம் தானாக குறைய அதனால் விருத்தியடைகிறான் வாலி என்றே கவி ஸ்தாபிக்கிறார்.

இப்பொழுது விஷயத்தை கவனித்தால் வால்மீகி வாக்யம் ஸர்வத்திற்கும் ஆதாரமாதலால் அவர் மற்ற விஷயங்களை கண்டிப்பதையும் கவனிப்போம். சுக்ரீவன் சொன்னதில் இருந்துமட்டும் அந்த மாலையின ஸர்வ உண்மையும் வெளியாகிவிட்டதாக சொல்லமுடியாது. மாலையை இந்திரன் கொடுத்த இடத்தில் உத்தம மஹிமையுடன் கூடினது என்றானே தவிற இன்ன குணமுடையது என்று அகஸ்தியரும்கூட சொல்லாததால் அதுவும் பிரயோசனமில்லை. தாரை, யுத்ததகில் ஸந்தோஷப்பட்டு கொடுத்தது என்றால் எந்த யுத்தம என்று ஒன்றும் இல்லை. இது உண்மையானால் பிறந்த காலத்தில் கொடுத்ததாக அகஸ்தியர் சொன்னாரே அது நிஜமா? தாரா வாக்யம் நிஜமா? வால்மீகி, இவள் வாலி அடிபட்டு விழுந்து இருக்கும்போது புலம்புகிறாள் எனறு வர்ணித்ததால் இவர் மாலையின் உண்மையான மஹிமையை அறிந்து வர்ணித்து இருப்பதால் இவள் சொன்னது பிசகாதலாலும் பிரலாபிக்கிறபோது சொன்னதா

லும் இவள் வார்த்தை அங்கீகரிக்கத் தகுந்ததில்லை என்றார். வாலி வாக்யத்தில் அவன் போட்டுக்கொண்டு இருக்கும் மாலையின் மஹிமை அவனுக்கே தெரியாது என்கிறார். ஆனல் அதில் ஏதோ மஹிமை உண்டு என்றமட்டில்தான் தெரிந்துகொண்டு இருக்கிறான். ஏனென்றால் வாலி சுக்ரீவனைப் பார்த்து சொல்லும்போது நான் இறந்தபிறகு இந்த மாலை என் சரீரத்தில் இருக்குமேயானல் இதன் மஹிமை போய்விடும் ஆதலால் நான் இப்பொழுதே கொடுக்கிறேன் பெற்றுக்கொள் எனறு சொல்லி சுக்ரீவனுக்கு கொடுக்கிறான் என்று கவி சொல்லுவதாலும் இது ஸரியல்ல. ஏனென்றால் வால்மீகி மாலையின மஹிமையை அறிந்து அது எவன் சரீரததில் இருந்தாலும் அது மார்பில் உள்ளமட்டும் உயிர் போகாது என்ற மஹிமையுடன்கூட இருக்கும்போது (அதையும் அது மேலே செய்து இருக்கிறது. அதைக் கண்டுதான வால்மீகி இப்படி வர்ணிக்கிறார்.) வாலி செத்தபிறகு இருந்தால அதன் மஹிமை போய்விடும் என்கிறானே அது மார்பில் உள்ளபரியந்தம்தான் உயிர் போகாதே அப்படியிருக்க இவன் செத்தபிறகு இது இருந்தால் இதன் மஹிமை போய்விடும் என்றபடியால் இவனுக்கு இவன மாலையின் மஹிமை தெரியாது என்று கவி குறிப்பிடுவதாலும் இவன் வாக்யமும் பிரயோசனமில்லை என்பது ஸ்பஷ்டம். சுகன் வாக்யத்தில் மாலையின் காந்தியைக் கண்டு இவன் வர்ணிககிறான். தவிற சுகன் வாலியைக் கொன்று ராமன் இந்த மாலையை சுக்ரீவனுக்கு கொடுத்தான் என்கிறான். சுகனுக்கு, வாலி சுக்ரீவனுக்கு கொடுத்தானு ராமன் கொடுத்தானு என்பது தெரியாது என்று நன்றாய்த் தெரிகிறது. தவிற சுகன் சொன்னதில் மாலை மஹிமை இன்னது என்று வர்ணிக்காததாலும் சுகன் வாக்யமும் பிரயோசனமில்லை என்பது ஸ்பஷ்டம். இப்பொழுது மூந்தி சொன்ன ஐந்து பேர்களில் ஒருவராவது எதிராளி பாதி பலத்தையோ முழு பலத்தையோ இழுக்கும் மாலை இது என்று குறிப்பிடாதபோது எவ்விதத்தில் மாலை இழுக்கிறது என்று சொல்லமுடியும்?

இந்த மாலை யோக்யதையை வால்மீகி என்ன சொல்லுகிறார் என்று கவனிபபோம்:—கிஷ்கிந்தா காண்டம் 17-ம் ஸர்க்கம்

5-ம் சலோகம் ஶக்ரதத்தா வரா மாலா காஞ்சநீ வஜ்ரபூஷிதா। ததார ஹரிமுக்யஸ்ய ப்ராணாந் தேஜ: ஶ்ரியம் ச ஸா। என்று ராமன் வாலியை பாணத்தால் அடித்துவிட அடிபட்டதும் வாலி கீழே விழுந்து உடனே அவன் உயிர் போகவேண்டியதா யிருக்க ஏன் போகவில்லை என்றால் ராமன பாணம் மார்பை பிளந்துவிட உடனே அந்த மாலை மார்பில இருபபதால அதற்கு மார்பில் உள்ளமட்டும பிராணன்கள் என்ன தேஜஸ் என்ன ராஜய ஸ்ரீ என்ன இதுகளைமட்டும காக்கக்கூடிய யோக்யதை உடைய தாதலால ராமபாணம் மார்பை பிளந்ததும அவனுடைய பஞ்ச பிராணன்களையும் இந்திரனுக்கும் பிள்ளையாதலால் அவன் தேஜஸ் இந்த வாலிக்கு இருபபதால அந்த தேஜஸையும எந்த ராஜ யத்தை பரிபாலிக்கிறானோ அந்த ராஜய ஸ்ரீ அந்த ராஜனுடைய மார்பில் வஸிப்பதாய் இககிரந்தமாதலால அதையும் அந்த மாலை தரித்தது. அந்த மாலை தரித்ததால்தான் அந்த பாணம் அந்த மாலையை வாலி சுக்ரீவனுக்கு கழற்றிக்கொடுக்கிற பரியந் தம் பேசாமல் இருந்து கழற்றி சுக்ரீவனுககு கொடுததது‌ம் அவன் உயிரை வாங்கிவிட்டது என்று மேலே பிரயோகமாத லால் நடந்ததை அபபடியே கண்டு சொல்லும் வால்மீகி சொன்னதே ஸத்யம். உமது வாக்யத்தில் தப்பு கிடையாது என்று பிர்ம்மதேவ அனுக்ரஹமாதலாலும் வால்மீகி சொன் னதே ஸத்யம் என்று ஸ்தாபனம். மற்றும் ஒரு விஷயம் கவ னிப்போம். இந்திரன் வாலிக்கு மாலை கொடுத்தானே உண்மை யில் இதற்கு எதிரியின் பலத்தை இழுக்க யோக்யதை இருக்கும் பக்ஷத்தில இதை இந்திரன் எப்படி மற்றவனுக்குக் கொடுப்பன்? பிள்ளைக்கு கொடுப்போம என்று கொடுத்துவிட்டான் என்றால் இவன்பாடு ஆபத்தில் இருக்கும்போது எப்படி பிள்ளைக்கு கொடுப்பன்? அதிலும் எதிராளி பாதி பலத்தையோ முழு பலத்தையோ இழுக்கும் வரமுள்ள மாலையாய் இருந்தால் ஒருக் காலும் எவனுக்கும் இந்திரன கொடுக்கமாட்டான். இந்த மாலை இந்திரனுககும் ஏது? இது எப்பொழுது சிருஷ்டிக்கப் பட்டது? யாரால சிருஷ்டிக்கபபட்டது என்றால் ஒன்றும் பதில் கிடையாது. இபபடி எதிராளி பாதி பலத்தையோ, முழு

பலத்தையோ இழுக்கும் மாலை இன்றும் இல்லை என்றும் இல்லை என்பது ஸத்யம் என்கிறார் வால்மீகி. எப்பொழுது வாலி இழுப்பதாயும் சொல்லவில்லையோ வாலிக்கும், எதிரி பாதி பலத்தையோ முழு பலத்தையோ இழுக்கும் வரம் பரமசிவத்தால கிடைத்தது என்பதும, முன நடநது இருக்கும் சண்டைகளில் பலத்தை வாலி இழுத்ததாய் இலலையாதலால் இக்கதையே பொய் என்றும் ஸித்தாந்தம். இபபடிபபட்ட மாலை இந்திரனிடம் இருக்கும் பக்ஷத்தில இந்திரனை கௌதமர் சபித்தபோது நீ பூலோகத்தில வநது என பத்னியை அடைந்ததால இந்த பூலோக சத்ருகரத்தில கட்டுபபடககடவாய் என்று சபித்து இருகக அவன் அதனுல் இந்திரஜித்தினிடம் கட்டுபபட்டதாயும் இருகக இவனிடம எதிராளி பாதி பலத்தையோ முழு பலத்தையோ இழுககும் யோக்யதை உள்ள மாலை இருக்கும்போது அவன் எபபடி கட்டுப்பட்டான்? அந்த பிரம்ம ரிஷி சாபம் எப்படி பலித்தது என்றும் கேள்வை? அபபொழுது மாலை இல்லை பிந்திதான் வந்தது எனறுல் விருததிராஸுரனிடம் இந்திரன் யுத்தத்திற்கு சென[illegible] உத்தரகாண்டத்தில இருக்கிறதே அப்பொழுது விருததிராஸுரனுககு பயந்து இந்திரன் தாமரை தண்டில் ஒளிந்துகொண்டு இருந்தான் என்று இருக்கிறதே இவனிடம் அந்த மாலை இருக்க அவன் ஏன் ஒளியவேண்டும் எனறு கேள்வை? அப்பொழுதும் மாலை இல்லை பிந்திதான் வந்தது என்றுல ஏப்படி அங்கீகரிக்கமுடியும்? இருக்கட்டும் இவனுக்கு என்று தினம் வாலி பிறந்தானே அன்றுதான அகப்பட்டது. தான் மரணம் இலலாதவனுதலால பிள்ளைக்கு உடனே கொடுத்துவிட்டான எனறுல் மாலைக்கு மஹிமை உண்டு. (இவன பாடு தினம் ஆபததில் இருக்க இவன் எப்படி கொடுப்பன்) அப்பொழுதாவது உண்டா என்று கவனிப்போம். மாலைக்கு மஹிமை உண்டு என்றுல் அது யாரிடத்தில இருந்தாலும் மஹிமை உண்டல்லவா! இநத மாலை வாலி உயிரை ரெக்ஷிபபதற்காக உயிரை ரெக்ஷிக்கும் மாலையை இந்திரன் கொடுத்து இருக்க அதனுல் இது யுததத்தின் பொருட்டு ஏற்பட்டதாயுமிருக்க இவன் (இந்த வாலி) கோலபன் என்ற கந்தர்வனிடத்தில்

யுத்தம் 16 வருஷம் இரவு பகல ஓயாமல் செய்து கோலபனைக் கொனருன். கிஷகிந்த காண்டம் 22-ம் ஸர்க்கம் 28-ம் சலோகத்தில யேந நக்தம் ச திவஸம் ஸம்வத்ஸராந் ஸஹஸ்ரம் பரிவத்ஸராந்। மஹிஷோ துந்துபிர் நாம ... நிபாதித:। எனறு இப்படி சொல்லப்பட்டு இருகக எதிராளி பாதி பலத்தையோ முழு பலத்தையோ இழுக்கும் மாலையுடன் கூடின வாலியானவன கோலப பலத்தை இழுக்க 16 வருஷமாய்விட்டதா என்று கேள்வை? இதனுல இந்த வரம் மாலைக்கு இலலையென்று ஸ்பஷ்டம். அபபடி அந்த யுத்தத்தின் போது வாலியிடம் அந்த மாலை இலலையென்முல் கிஷ்கிந்தா காண்டம் 9-ம் ஸர்க்கததில் 16-ம் ச்லோகம் வாலி குஹையில் மாயாவியிடம் ஸம்வத்ஸரம் ... என்று ஒருவருஷ பரியந்தமும் மேலும் சண்டை போட்டானே. அபபொழு அவன் பலத்தை இழுக்க ஒருவருஷமானதா என்று கேள்வை? இதனுலும் மாலைக்கு அந்த யோக்யதை இல்லை என்று ஸ்பஷ்டம். இந்த யுத்தத்தின்போதும் மாலை இலலை என்று சொன்னுல் மாலையே யுத்தத்தின் பொருட்டே கொடுக்கப்பட்டு இருக்க, மாலை இலலாமல் இவன எபபடி வருவன? துந்துபியிடம் வரும் போது மாலையைப் போட்டுககொண்டு வந்தான் என்று இருக்கிறதே. ஏதோ மஹிமை உண்டு என்று தெரிந்து இருந்தும் மாலையை போடாமல் வந்தான் என்முல் எப்படி பொருந்தும்? யுத்தத்தின்பொருட்டு கொடுக்கப்பட்டதாய் இருக்கிறதே. வாலி சுகரீவனுடன் முதல் யுத்தம் செய்யவந்தபோது சுக்ரீவன் பட்டு இருக்கும துக்கத்தின் தன்மையை அறிந்து இருப்பவனுதலால் இவனை அடிக்க இப்பொழுது மாலை என்னத்திற்கு என்று அலக்ஷ்யமாய் போட்டுவரவில்லை. இரண்டாம் யுத்தத்தில ராமன் வந்து இருப்பது கேட்டு ராமனிடம் சண்டை போடுவதற்காகவே போட்டுவந்தான். சண்டையும ராமனிடம் போட்டான் என்பதும் ஸ்பஷ்டம். துந்துபி என்பவன் கொஞ்ச நாழிகை யுத்தம் செய்தானே எதிராளி பலத்தை யிழுப்பதற்கு அந்த கொஞ்ச நாழிகை வேண்டுமா? இப்பொழுது மாலை இல்லையென்று

சொல்லமுடியாது. போட்டுககொண்டு வந்தான் என்று இருக்கிறது. இதை இழுக்கிறது என்றால் இல்லை என்று ஏற்கனவே சொல்லப்பட்டது. துந்துபி குறைந்தது வாலி மாலையின் மஹிமை அல்ல என்று ஏற்கனவே காட்டப்பட்டது. இதை கவனித்தால யார் யார எததனை எததனை காலம் சண்டை போடுகிறார்களோ அததனை காலம செல்லும். எதிரி பலத்தை இழுப்பதறகு என்றால் இந்த வரம இருந்தென்ன? இல்லாமல் போனாலென்ன? மற்றொரு விஷயம் வாலி மரணம அடையும்போது தன் மாலையை சுக்ரீவனுக்குக் கொடுத்தான. அந்த மாலையைப் போட்டுக்கொண்டு சுக்ரீவன் கும்பகர்ணனுடன் யுத்தம் செய்ய அப்பொழுது கும்பகர்ணன ஒரு பாறையால் சுக்ரீவனை அடித்துவிட்டு சுக்ரீவனை தூக்கிக்கொண்டு போய்விட்டதாக யுத்தகாண்டம் 67-ம் ஸர்க்கத்தில 69-ம சலோகத்தில ஸஜஹாரைவைதாரஹுதவொஷீபசம் ஸகுஹாகனிபாயஸி வாநரேம்ஷ்டு । ஜஹாரஹவாதீ உஹிவ ஹூஹுபயோநிஸொஜேவஜதி வ வம்ஸஃ என்று அபார பலமுள்ளவனான அந்த ஸுக்ரீவனை, கும்பகர்ணன் பிரசண்டமான காற்றானது மேகத்தைக் கொண்டுபோனால் எப்படியோ அப்படி கொண்டுபோனான் என்று வர்ணிக்கப்பட்டு இருக்க அந்த இந்திரன கொடுத்த மாலைக்கு எதிரி பாதி பலத்தையோ முழு பலததையோ இழுக்க யோக்யதை இருந்தால் கும்பகர்ணன் சுகரீவனை அடித்துக் கொண்டுபோக முடியுமா? ஆதலால் இந்த யோகயதை உள்ள மாலையே கிடையாது என்று ஸித்தாந்தம். சண்டைககு ஒருவனிடம் சென்றதும் எதிரி பலம் வருமா? சண்டை சண்டை போடப்போட வருமா? சண்டை முடிந்ததும் வருமா என்று கேள்வை? சண்டைக்கு சென்றதும் வந்துவிடுமா என்றால் உபமானமாக 16 வருஷம் கோலபனிடம் சண்டை செய்தானே; ஒருவருஷம் மாயாவியிடம் சண்டை செய்தானே; அப்பொழுது சண்டைக்கு போனவுடன் பலம வரும் என்றால் அங்கு 16 வருஷ சண்டையும் மாயாவி யுத்தத்தில ஒரு வருஷ சண்டையுமில்லையே. சண்டை செய்யச் செய்ய வரும் என்றால் அது எப்படி? பாதியில் என்றால் அப்பொழுது கோலபனிடம் 16 வருஷத்திற்கு 8 வருஷம்

பாதி போனால வாலி 1½-பங்கு பலம் உள்ளவனாக ஆகிவிடும் போது பாக்கி 8 வருஷம் யுத்தம் ஏது? அபபடியே 6 மாத யுத்தம மாயாவியிடம் இருந்தால அப்பொழுதும் 1½ பங்கு பலம் வாலிக்கு வருமபோது பாக்கி 6 மாதம சண்டை ஏது? இதனால் சண்டை போடப்போட பலம் வரும் என்பது சரியல்ல. சண்டை முடிவில் எதிரி பலம் வரும் என்றால இந்த மாலை இருநது என்ன உபயோகம்? ஆதலால் எதிரியின் பாதி பலத்தையோ, முழு பலத்தையோ இழுக்கும் யோக்யதை உடைய மாலையே கிடையாது என்று ஸித்தாநதம. எதிராளியின் தேஜஸ்ஸை அடியோடு அபஹரிக்கும் தெஜப்பிரபம என்ற அஸதிரதலை விசவாமித்ரரிடம் இருந்து ராமன் அடைந்து இருகக அதாவது பால காண்டம் 27-ம் ஸாக்கததில 19-ம் ச்லோகம் வொரும் தெஜஃ வஹம் நாஉவரொதெஜொவ கஷணம்। என்ற அஸதிரத்தை உபதேசித்தார் என்று இருக்க அவன் மாலை இவர் பலத்தை இழுத்தது என்றால் இது எந்தமட்டும் நிஜம் என்கிறார் கவி. ஆதலால் எதிரி பலத்தை இழுக்கும் சக்தி அந்த மாலைக்கு கிடையாது என்று ஸ்பஷ்டம். மேலும் வால்மீகி, விச்வாமித்திரர் ராமனுக்கு பலாதிபலா மந்திரோபதேசம் செய்து இருப்பதால் இம்மந்திரம உபதேசமானவனை எவனும் ஜயிக்க முடியாதென்றும் மூன்று லோகத்திலும் அவனுக்குமேல் எவனும பலசாலி கிடையாது என்று குறிபபிட்டு இருப்பதாலும் அது உண்மை என்று காகாஸுரன் மூன்று லோகத்தில ஓடியும அவனை யாருமே ரக்ஷிக்க முடியாமல்போனதாலும் பரசுராம பூரண பலத்தை ராமன் ஆகாஷித்து இருக்க வாலியோ வாலி மாலையோ ராம பலத்தை இழுக்கும் என்றால இது எவ்விதத்தில் பொருந்தும். இது பிசகு என்றும் வால்மீகி குறிப்பிடுவதால் வாலிக்கும் அவன் மாலைக்கும் எதிரியின் பலம் பாதியையோ அல்லது முழுமையுமோ இழுக்க முடியாது என்றும் ஸித்தாந்தம. மூலததிறகு விரோதமான வியாக்யானங்கள் அங்கீகரிக்கத் தகுந்ததில்லை. (தவிற 32 வருஷம் கோலபனிடம் என்றும் 2 வருஷம் மாயாவியிடம் என்றும் வைத்துக் கொள்ளவேண்டும் என்றொரு கக்ஷி. அதையும் வால்மீகி கண்டிக்

கிறார். நடந்தபடி பார்த்து கிரந்தத்தில் வர்ணிப்பதால் கோலபனிடம் 16 வருஷம் என்றும் மாயாவியிடம் ஒரு வருஷமும்தான் யுத்தம் என்றே ஸித்தாந்தம்) இதில புராணங்கள் ஒன்றும் அங்கீகரிக்கத் தகுந்ததில்லை. ஒவவொன்றும எழுதின காலம் வேறு; யுகம் வேறு; கிரந்த கர்த்தாக்கள் வேறு. அந்தந்த கிரந்தம் எழுதும் வேளையின் தன்மையும் அனுஸரித்து வரும் என்றும் ஸித்தாந்தம் இருப்பதால இக்கிரந்தத்தை அதுகளுடன் சேர்த்து பார்க்க ஒத்துவராததாதலாலும் அதற்கு அதுவே பிரமாணம். ஆதலால் இக்கிரந்த ரீதியாய் கவி வாக்யப்படி எதிரியின் பாதி பலத்தையோ, முழு பலத்தையோ இழுக்கும் யோக்யதை உடைய மாலையே கிடையாது என்று ஸித்தாநதம்.



## 28. ஸ்ரீ ராமன் வாலியை மறைந்தடிககவே இல்லை நேரிடவே அவனுடன் யுத்தம்செயதுகோன்றார் என்ற தாம ஸ்தாபனமான வாலிவத ஸித்தாந்தம்.

ஸாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணன் வைகுண்டத்தில விளங்கும் போது பூலோகததில் தசரதன் அயோத்தியில பரிபாலிக்கபபட்டவன் பிள்ளை இலலாததால அதற்காக புத்ரகாமேஷ்டி செய்வதென்று எண்ணி மஹர்ஷியான ரிசயசிருங்கருடன யாகத்தைச் செய்யும் அந்த வேளையில் அந்த யாக ஹவிர்பபாவத்தை வாங்குவதறகாகவந்த தேவதைகள தேவதாசத்ருக்களுடைய வதத்தை அபேக்ஷித்து அங்கு தஙகளுடன் கூட விளங்கும் பிரம்ம தேவனைபபாாத்து ஹே! ப்ரபோ, உமது வரததால ராவணாதிகள் எஙகளை உபத்ரவபபடுததுகிறபடியால அவாகள் வதமானாலொழிய எஙகளுககு ஸுகம இலலை என்ன செய்வோம் என்று கவலைப்படும்போது பிரமமதேவன தேவதைகளைப் பார்த்து ஏ தேவதைகளே அந்த ராவணனுககு தேவகந்தர்வ யக்ஷவித்யாதர உரகபன்னக அஸுர ராக்ஷஸாதிகளால் வதம இல்லை என்று அவன் கேட்டு இருககிறான். ஆனால் அவன் பிராணிகள் மனுஷ்யர்கள் இவர்கள் தனக்கு அல்பர்கள் என்றும் அதாவது ப்ராணி

ஹோஜா நூஷாஷயஃ । என்று அவர்களைப்பற்றி எனக்குக்கவலை யில்லை என்ருன். ஆதலால் நீங்கள் கவலைபபடவேண்டாம். இனனமும் சொல்லுகிறேன். அவனுக்கு மனுஷ்யனுல் வதம் கட்டாயம் உண்டு கவலையை விட்டுவிடுஙகள என்று சொல்லிக் கொண்டேயிருக்க அவ்வேளையில் ஏற்கனவே ஸமயம் வரட்டும் ரக்ஷிக்கிறேன் என்று தேவேந்திரனிடம் சொல்லியிருக்கும பக வான் உடனே அயோத்தியின ஸமீபத்தில் இருககும் ஸரயூ நதிக்கரையில நடக்கும் யாகசாலையின் ஆகாச வீதியில விளங்கும் தேவதா கூட்டத்தின மத்தியில் பிரத்தியக்ஷமாக, தேவதைகள் உடனே அந்த பகவானைக்கண்டு, உபாஸிக்காமல் தியானிக்கா மல் இருந்த அப்பொழுது வந்த மூர்த்தியாதலால் அதிப்ரேமை கொண்டு தங்களிடத்தில அந்த பரமாத்மாவுக்கு இருக்கும் கிருபையை எண்ணி ஆநந்தித்து அந்த பகவானைப் பாரத்து பால காண்டம் 15-ம் ஸர்க்கம் 24-ம் சலோகம் க்ஷம ஹதிஃ வாஜா தெவ ஸவெஷாம் நஃ வாமதவ । வயாயஹெவ பாஷ்ணாம் நூ ணாம் ஜொகெஉநஃ கூறா என்று ஏ! தேவ, எங்களுக்கு நீரே கதி தேவதா சத்ருக்களுடைய வதத்தை உத்தேசித்து தாங்கள் பூலோகத்தில் தங்கள் மனஸைவைக்கவேண்டும், சத்ருக்களை தபிக்கப்பண்ணப்பட்டவரே எஙகளைக் கார்க்கவேண்டும். ஏ! ப்ரபோ ஏற்கனவே அயோத்தியைப் பரிபாலித்த அநரண்ய மஹாராஜனை ராவணன் யுத்தத்தில அடித்துத்தள்ளி அவரை பரிஹஸித்தபோது ராவணனைப் பார்த்து ஏ துஷ்ட நீ என்னை அவமதித்து பேசியதால் என வம்சத்தில தசரதன் என்ருெரு ராஜன் உண்டாகப்போகிருன் அவன் புத்ரனுன தாசரதி உனனை சகலருடனை அழிப்பன் என்று சொன்ன ஸத்யஸந்தனுன அவன் சொல்லியிருப்பதால் (சபித்து இருப்பதால்) அவன் வார்த் தையை ஸத்யமாககவும் நந்திகேசனை ராவணன் குரங்கே என்று பரிஹஸித்ததால் அவர் என்போலொத்த தேஜஸ் உள்ளவர் களாய் என் ரூபத்துடன் வானரர்கள் உண்டாகி உன் வம்சத்தை அழிக்கட்டும என்றும் சபித்து இருப்பதாலும் வேதவதியை ராவணன் அவள் கேசத்தைப பிடித்து இழுத்தகாலத்தில் உன் வதத்திற்கு காரணமாக நானேவந்து பிறக்கிறேன் உத்தரகாண்

டம் 17-ம் ஸர்க்கம் 31-ம் ச்லோகம் யஸ்மாத்தஸ்மாதிதாஹம் ஸ்வயாவாவா தநாவநெ । தஸ்மாத்வ வயாயஉாய ஸஉதெஸ்ரஹ ஹம்வநஃ । என்று சபித்ததாலும் உத்தம ஸ்திரீகளை ராவணன் அபகரித்த காலத்தில் அவர்கள் கோபித்து அந்த ராவணனைப் பார்த்து உத்தரகாண்டம் 28-ம ஸாககம் 21-ம் சலோகம் யஸ்மா தெஷவாக்ஸ்ராவஸ ஊதெ ராக்ஷஸாயஉ । தஸ்மாதெவஹி கூதெ நெவவாஸதெ உஉதிவயம் । என்று அந்த ஸ்திரீகள் யாதொரு காரணத்தினால் இந்த ராவணன் பரஸ்திரீகளை ரமிக் கிருனே அதனால் இவனுக்கு ஸ்திரீ மூலமாகவே வதத்தை அடை யட்டும் என்று சபித்ததாலும தாங்களும் இபபொழுது புத்ர நிமித்தம் யாகம் செய்யும் அயோத்தியை யாளும தசரதனுக்கு உம்மை நீர நான்கு பாகமாகச செயதுகொண்டு பிள்ளைகளாய்ப் பிறந்து உமமை நீர அறியாதவராய் பூலோகததில் பிராகிருத மனுஷ்யனய் இருந்து ராவணவதம செயய வேணடும். அவன் மனுஷ்யனல் தனக்கு வதம் என்று கேட்கவில்லை ஏனென்றால் அந்த மனிதர்களும் மிருகஙகளும ராக்ஷஸாகளுக்கு ஆகார மாதலாலும் அல்பர்களாதலாலும கேட்கவில்லை என்பதே பிரமாணமாதலால நீர பிராக்ருத மனுஷயனய இருந்து அவனைக் கொலலவேண்டும் என்று கேட்டு பிரார்த்திக்க அவரும் அபபடியே என்று சொல்லி மேலும் நான் தசரதனுக்கு நீங்கள் சொனனபடி என்னை நான்கு பாகம் செய்துகொண்டு பிள்ளை களாய்ப் பிறந்து ராவணனைக் கொல்லுகிறேன் எபபடிக்கொல்லு கிறேன் என்றால் பாலகாண்டம 15-ம் ஸர்க்கம் 28-ம் சலோகம் ஹத்வா க்ரூரம் உராதாநம் தெவஷீணாம் ஸயாவஹம் । ஸவ தவஷ்டும் ஸாமாத்யம் ஸமித்ர ஜ்ஞாதி பாந்தவம் । என்று அந்த ராவணனை புத்ர, தாயாதி, மந்திரி, மித்ரனேடு, (வாலியோடு) வதிக்கிறேன் என்றார். (இந்த தேவதைகள் பகவானிடம் இப் பொழுது ராவண வதத்திற்காக பிரார்த்திப்பதற்கு வெகுகால முந்தியே அதாவது நந்திகேசவரன் ராவணனை சபித்த காலம் என்ன, அதறகும முந்தியகாலம் என்ன, அது முதலாக வான ரர்களை உண்டுபண்ணி இருக்கிறார்கள்). (இதனல்தான் ராவண மித்ரனன வாலியைக் கொல்லுகிறேன் என்றா. இதற்கு உத்தர

காண்டம் பிரமாணம்.) பகவான் அப்படியே தேவர்களும் கேட்டுக்கொண்டபடி சொன்னார் :— ஏனென்றால் எந்தக் காரணத்திற்காக வானரர்கள் எல்லாரும் உண்டுபண்ணப்பட்டார்களோ, பாலகாண்டம் 17-ம் ஸர்க்கம விஷ்ணோஸ்ஸஹாயாந்பலி நஸ்ஸ்ருஜத்வம் காமரூபிண: । என்று அதாவது பூமியில் விஷ்ணு மனுஷ்யராகப் பிறக்கப்போகும் ராமஸகாயத்திற்காக உண்டுபண்ணபபட்டார்களோ, ராவணவதத்தில் எலலோரும் இசசைஉள்ளவாகளோ, பாலகாண்டம் 17-ம் ஸர்க்கம் 16-ம் சலோகம்தே தஸ்ரஷ்டா: ஸஹஸ்ராஸ்ஸஹஸ்ரா: உபரி வதயொர்தா: । என்றபடியே இவவளவு பேருக்கும் எஜமானனுய்ப பிறந்து இருக்கும் வாலியும் இபபடியே இசசையுடன பிறந்து இருபபவன ராம ஸகாயத்திற்கு ராவண வதத்திறகு பிறந்தவன, அதைவிட்டு ராம சத்ருவாயும் தேவதா சதருவாயும் பிதா இந்திரனுக்கும் சத்ருவாய் விளங்கி வருபவனுமான ராவணனிடத்தில உத்தரகாண்டம் 39-ம் ஸர்க்கம 42-ம் சலோகம தத:ப்ரஜ்வால்ய தம் வஹ்நிம் தாவந்யோந்யம் ப்லவங்கமௌ । ப்ராத்ருத்வமுபஸம்பந்நௌ பரிஷ்வஜ்ய பரஸ்பரம் । என்று நீயும் நானும் அண்ணன் தம்பி என்று ஒருவருக்கொருவர் கட்டிக்கொண்டு ஸ்நேகம் செய்துகொண்டு இருப்பதால் அந்த ராவணமித்ரனையும், தேவதா சத்ருவாயும் உள்ள வாலியையும் கொல்லுகிறேன் என்று சபதம் செய்தார். அதன்படியே அவர் இதற்காகவும் ராமனாய் பிறந்து வாலி வதமும் செய்தார்.) இராமஸகாயத்திற்காக பிறந்த, கேவலம் ஒரு மிருகமான வாலிக்கு ராமனைக்காட்டிலும் பலம் ஜாஸ்தியாக இருக்கவேண்டுமா? அல்லது ராமனுக்கு பலம் ஜாஸ்தியாக இருக்கவேண்டுமா? ராமஸகாயத்திற்கு பிறந்தவனான ஓர் வானரத்திற்கு தேவர்கள் அபார வரம்கொடுததிருந்தால் தங்களுக்காக பகவானை பூமியில் பிறக்குமபடி ஏன் செய்யவேண்டும்? அந்த வாலியைக்கொண்டே இந்த ராவண வதம் செய்துகொள்ளக் கூடாதா? ராவணனை மிருக ரூபி கொல்லக்கூடாது அடக்கக் கூடாதென்றும் இல்லையே. ஏன் அப்படிச் செய்துகொள்ளாமல் இருந்தார்கள் என்பதை யோசிக்கவேண்டாமா? இதை கவனிக்க இவனுக்கு அந்த ராவண வதம் செய்யும் யோக்யதை

கிடையாதென்பது இக்கிரந்தத்தில் இருக்கும் முனபின் பிரமாணங்களால் ஸ்பஷ்டம். கர்வத்தால் ராவணன் ஒரு ஸமயம் சவேதத்வீப பெண்டுகளிடமும் கார்த்தவீர்யார்ஜுனனிடமும் அகப்பட்டதுபோல் வாலியிடமும் அகபபட்டதே தவிற இந்த வாலியோ காாத்தவீர்யார்ஜுனனோ அல்லது ச்வேதத்வீபப் பெண்டுகளோ, இவனை ஒன்றும் செய்யமுடியாது. கர்வம் உண்டாகிவிட்டால் பரம அற்ப பலிஷ்டர்களும் மஹா சூரர்களையும் அடக்கிவிடுவார்கள் என்று வாலமீகியின் பிரமாணம. இது ஒரு வீரத்தனமாகாது சாத-ஜவீய-ஜா-ஹு குக்ஷணஃ। எனறு கார்த்தவீர்யனைக்காட்டிலும் லக்ஷ்மணனை பலிஷ்டனுக சொல்லி அவனை ராவணன் அடித்துத் தள்ளினதையும் சொல்லி ராவணனையும் மகா சூரனுகக் குறிப்பிட்டதாலும் தவிர ராமன் லக்ஷ்மணனுக்குச சொன்னதில் இந்த ராவணன் ஸாமான்யமானவனல்லன் ஜாக்ரதையாய் யுத்தம்செய் என்றதாலும், விபீஷண வாக்யத்தால் ராவணவத பரியந்தம எவனும் அதுபரியந்தம் பங்கம்பண்ணப்படாதவனும் என்று வர்ணிக்கப்பட்டதாலும் தவிற வால்மீகி வாக்யத்தில் கடைசி நாள் ராம ராவணயுத்தத்தில ராமனை பல பாணங்களால் ராவணன் அடித்து அவரை வாய்விட்டலறும்படியும் அடித்து நீ சூரனு என்று ராமனை ராவணன் அவமதித்து கேட்டவனுதலாலும் அப்படியே ராமனைப் பிடிக்கவும் ஆரம்பித்தவனுதலாலும் அப்படியே ராவணனுக்கும் சுத்த மனுஷ்யர்கள் தவிற மற்ற யாருமே கொல்லமுடியாத வரமாதலாலும் யாரும் அவனை ஒனறும் செய்யமுடியாது. அதாவது கொல்ல முடியாது. என்று ஸ்பஷ்டம். விஷ்ணுவானுலும் நான் ராவணனை இந்த வேளை எதிர்த்தாலும் ஜயம் கிடைக்காது. விஷ்ணு சண்டைக்குப்போய் ஜயிக்காமல் திரும்பிவந்தாா என்பது உதவாது என்று விஷ்ணுவால் சிலாகிக்கப்பட்ட வரப்பிரஸாதமுள்ளவன். வால்மீகியாலும் அபார பலமுள்ளவன் ராவணன், ராமன் தவிற மற்றவரால் அடக்கமுடியாத பலமுள்ளவன் என்று வர்ணிக்கப் பட்டு இருபபதாலும், இதிலிருந்து ராகவனுக்கு தேவர்கள் எத்தனை உத்கிருஷ்டமான வரங்களைக் கொடுத்து இருக்கவேண்

டும் என்பதை ஊஹிக்கவேண்டும். விஷ்ணு அவதாரமான மஹாபுருஷனுக்கு அதாவது மனுஷ்யனுக்கு ஸ்வல்ப பலமும் அந்த மஹா புருஷனுக்கு ஸகாயமாகவந்த வாலிக்கு அதிக பலம கொடுபபார்களா? இக்கிரந்தத்தில் ராகவனுககுமேல் பலசாலி இலலையெனறு இருக்க ராகவன் பலிஷ்டனு, வாலி பலிஷ்டனு? என்பதை ஸ்பஷ்டமாய்த் தெரிந்துகொள்ளலாம். இதில மனுஷ்யனுகப் பிறந்த பிறகு ராகவன் தன்னையறியாமல் இருந்ததால் ரிஷிகள் எலலோரும் சரபங்கர் ஆச்ரமத்தில் அங்கு வந்து இருக்கும் ராகவனிடம் (தேவேந்திரன் தங்களிடம் சொல் லிபபோனபடி) அவரை ராக்ஷஸாதி வதம செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டு அவரிடமும் அப்படியே பிரதிகைஞயும் வாங்கிக்கொண்டார்கள். பிறகு அநத ராமன் தன்னுலும் தம்பி யாலும் வதிக்கப்பட்டு சாபவிமோசனமாகி தேவதா ரூபியாக விளங்கும் கபந்தனுல சொல்லபபட்டதான ஸுக்ரீவஸக்யத்தைச செய்துகொள்ளும் வாலி அதர்மிஷ்டன். ஸுக்ரீவன் வாலியால் விறட்டுப்பட்டு இருக்கிறுன் ஸுக்ரீவனும் அதனுல் ஸகாயத்தை எதிர்பார்க்கிறுன் அவன் தர்மிஷ்டன். ஸத்யஸந்தன. வாலி அதர்மிஷ்டனுதலால வாலி வதமசெய்யும் என்று சொன்னதைக் கேட்டு வாலிவதம் செய்தார். தன்னை அறியாமல் இருந்ததால் தான் ராமர் வாலிக்கு பதில சொல்லுமபோது நீ தேவதா விரோதிஎன்றுவது சொல்லாமல நீ தர்மத்தை விட்டுஇருக்கிருய் ஆதலால உன்னைக்கொன்றேன் என்றுர் ஆதலால் இதிலிருந்து ராவணுதிவதம் செய்யவந்து இருக்கும் இவன் ராமஸகாயமாக வந்தவன், அதைவிட்டு ராவணனிடம் சேர்ந்ததற்காக வாலிவதம் செய்தார் ராமன் என்று வால்மீகி ஸ்தாபித்திருக்கிறுர். மேல் வால்மீகி வாலி வதத்தை தர்ம ஸ்தாபனம் என்றும் ராவண வததை துஷட நிக்ரஹம் என்றும் இபபடி விஷ்ணு தேவதா சத்ருவான வாலியையும் அழிக்கிறேன் என்று ஸ்தாபிக்கிறுர்.

இப்படிசொல்லிமறைய இதற்கு முந்தியே தேவர்கள் வான ரர்களை உண்டுபண்ணியிருக்க பகவானும் தேவர்கள் பிரார்த்த னையை அங்கீகரித்து தன்னை நான்கு பாகம்செய்துகொண்டு ஜனி த்து கைகெயஂ்ாः வி஭ யகாஜாய௨ம் விதஂஷஂ஡ஶஂ஧யவஂவ। என்

றும் அத்துடன் பிதுர்வசந நிர்தேஶாத் கைகேய்யா: ப்ரிய காரணாத்! என்றும பிதா கைகயிடம் ஸத்யத்தில் கட்டுப்பட்ட தறகாக, பிதிர் வார்த்தை என்ற தர்மத்தை கைகேயின் பிரியத் திற்காக செய்யும் விஷயததில தனனுடன கூடப் பிறந்து இருக்கும் பரத லக்ஷ்மண சத்ருக்னர்களில பஹிப்பிராணனான லக்ஷ்மணனுடனும் புருஷனுககு ஆத்மா பத்னியாதலால் பத்னி யான ஸீதையுடனும் ராகவன் தண்டகாரண்யத்தில இருக்க ராவணன் தன்ஸ்வதர்மத்திற்காகவும தனஆத்மவதத்திறகாகவும் ஸீதாபஹரணம்செய்ய அந்த ஸீதையை ராமன் தேடிக்கொண்டு வரும்வழியில ராகவன் கபந்தனைக்கண்டு தம்பியுடன் அவன கைகளை வெட்டிவிட அவன் இவர்களைத்தெரிந்துகொண்டு, ஏ ராமா நான் உம்மைத் தெரிந்துகொண்டேன். நீர் மேலும் என் சரீரத்திற்கு அக்னிப்பிரதானம் செய்யவேண்டும் அப்படி நீர் செய்தால் நான் உமக்கு ஸீதையைத் தேடிக் கொடுக்கக் கூடிய வனையும் ஸமர்த்தனையும் இருபபவனை நான் உமக்குச் சொலலு வேன் ஆனல் நான் இநத ராக்ஷஸ சரீரத்தில இருந்துகொண்டு சொலல எனக்குத் தெரியாது எனறும் சொல்ல அவரும் அப் படியே என்று அக்னிபபிரதானம்செய்ய அவன் உடனே தேவதா ரூபம் அடைந்து விமானத்தில ஏறிககொண்டு ராகவனைப்பார்த்து சொலலுகிறன். ஆரண்யகாண்டம் 72-ம் ஸர்க்கம் 11-ம் சலோகம் முதல ஶ்ரூயதாம் ராம வக்ஷ்யாமி ஸுக்ரீவோ நாம வாநர: ப்ராத்ரா நிரஸ்த: க்ருத்தேந வாலிநா ஶக்ரஸூநுநா। ருஷ்யமூகே கிரிவரே பம்பாபர்யந்தஶோபிதே। நிவஸத்யாத்மவாந் வீர: சதுர்பி: ஸஹ வாநரை:। வாநரேந்த்ரோ மஹாவீர்ய: தேஜோவாநமிதப்ரப:। ஸத்யஸந்தோ விநீதஶ்ச த்ருதிமாந் மதிமாந் மஹாந்। தக்ஷ: ப்ரகல்போ த்யுதிமாந் மஹாபலபராக்ரம:। ப்ராத்ரா விவாஸிதோ ராமஸுக்ரீவஞ்ச மஹாபலம்। வயஸ்யஞ்சம் குரு க்ஷிப்ரமிதோ கத்வாத்ய ராகவ என்று ஏ ராமா! உம்மால் இது கேட்கப்படட்டும் சுக்ரீவன் என்ற ஒரு வானரன் இருக்கிறன். அவன் கோபத்திஞல் பிராதாவான வாலியான இந்திர புத்ரனல் விறட்டப்பட்டு இருக்கிறன், பம்பாஸரஸுக் கரையில் உள்ள ரிச்யமூகத்தில் அவன் தனது நாலுபேர் வானரர்

களுடன் வஸிக்கிறான். அவன மஹா வீர்யவான். அற்புத தேஜஸ்ஸுள்ளவன, ஸத்யவந்தன், வணககமுள்ளவன, உத்தம புத்தியுள்ளவன், ஸாவகாரியத்திலும் ஸமர்த்தன் அளவிட முடியாத பலமுள்ளவன். நீர் சீக்கிரம் மஹாபலிஷ்டனை அவனிடம் செல்லும் ஸஹாயஸாமத்ரு ஸுக்ரீவ வாநரோத்தமா வஸ்ஸ! என்று துரோகம் உண்டாகாமல் இருக்குபபொருட்டு அக்னிஸக்யமான ஸ்னேகம செய்துகொள்ளும என்றும் இப் பூமண்டலத்தில் இவனுக்குத் தெரியாத இடமே கிடையாது. அவனை அடைநதால் அவன் ஸீதையைத் தேடிகொடுப்பான் என்று சொன்னதையும் கேட்டுக்கொண்டு தம்பியுடன் ரிசய முகம் நாடிசசெலல அங்கு ஹநுமான ஸுக்ரீவனபக்கம் இருக்க அபபொழுது ஸுக்ரீவன தன் இருப்பிடத்தையே நாடிவரும் ராமாதிகளைக்கண்டு வாலியைச் சேர்ந்தவர்களும் மதங்கர் சபிதது இருக்கும் எலலையில் வரககூடாது என்று இருக்கும் சாபததையும் மறந்து தான் துக்கப்பட்டு இருக்கும் தன்மை யாலும் வாலி நம்மைக்கொலல இவர்களை அனுப்பினனோ என்று எண்ணி மலைக்கு மலை தாவும் சுக்ரீவனை கூட இருக்கும் ஹநு மான் பார்த்து ஸம்ப்ரமஸ்த்வயம் வாநர ஸிம்ஹ ... ! இது மலய பர்வதமாதலால் வாலியால இங்கு பயமிலலை என்று சொல்லி ஸமாதானம் செய்ய, ஸுக்ரீவன் அவர்களைத் தெரிந்து கொண்டுவரசசொல்ல அவன் ப்ரியத்திற்காக ஹநுமான் பிக்ஷு ரூபத்தை எடுத்துக்கொண்டு ராகவாதிகளிடம் வந்து குசலப் பிரசனம்செய்து தான் ஸுக்ரீவ மந்திரி என்றும் சுக்ரீவ பத்னியை வாலி அபஹரித்துககொண்டு அவனையும் விரட்டி இருக்கிறான் என்றும் மஹாராஜனை ஸுக்ரீவன் உமது ஸக்யததை இசசிக்கி றான் என்றும் சொல்ல ராகவன அதுகேட்டு ஸந்தோஷித்து லக்ஷ்மணனைபபார்த்து இவரிடம் ஸாவத்தையும், என் அந்த ரங்கத்தையும் சொல்லும என்று சொல்ல அவரும் அபபடியே என்று ஸர்வத்தையும சொலலிவிட்டு கடைசியில் நாங்கள் தெய்வரூபியான கபந்த வார்த்தையைக் கேட்டு ஸுக்ரீவனை நாடிவந்து இருக்கிறோம் என்றும் சொல்லி மேலும் ராமன் அந்த ரங்கத்தை சொல்லுகிறார்:—அதாவது தன் தமையனை ராம

ருடன் இருவர்களும் இப்பொழுது ஸுக்ரீவனை நமஸ்கரிக்கிறோம் என்றும சொல்லி மேலும் கிஷ்கிந்தா காண்டம் 4-ம் ஸர்க்கம் 18-ம் சுலோகம் முதல் த3த்வா ச வித்தாநி புரா ப்ராப்ய சாநுத்தமம் யச: | லோகநாத: புரா பூ4த்வா ஸுக்ரீவம் நாத2மிச்ச2தி | பிதா யஸ்ய புரா ஹ்யாஸீச்ச2ரண்யோ த4ர்மவத்ஸல: | தஸ்ய புத்ர: சரண்யச்ச ஸுக்ரீவம் சரணம் க3த: | ஸர்வலோகஸ்ய த4ர்மாத்மா சரண்ய: சரணம் புரா | கு3ருர்மே ராக4வ: ஸோऽயம் ஸுக்ரீவம் சரணம் க3த: | யஸ்ய ப்ரஸாதே3 ஸததம் ப்ரஸீதே3யுரிமா: ப்ரஜா: | ஸ ராமோ வாநரேந்த்3ரஸ்ய ப்ரஸாத3மபி4காங்க்ஷதே || யேந ஸர்வகு3ணோபேதா: ப்ருதி2வ்யாம் ஸர்வபார்தி2வா: | மாநிதா: ஸததம் ராஜ்ஞா ஸதா3 த3சரதே2ந வை | தஸ்யாயம் பூர்வஜ: புத்ரஸ்த்ரிஷு லோகேஷு விச்ருத: | ஸுக்ரீவம் வாநரேந்த்3ரம் து ராம: சரணமாக3த: | சோகாபி4பூ4தே ராமே து சோகார்தே சரணம் க3தே | கர்துமர்ஹதி ஸுக்ரீவ: ப்ரஸாத3ம் ஹரியூத2பை: | ஏவம் ப்3ருவாணம் ஸௌமித்ரிம் கருணம் ஸாச்ருபாதநம் || என்று ஸகல தானங்களையும் செய்து அதனால் உத்தம கீர்த்தியை உடையவர் முந்தி (அபபாவுடன்) லோகநாதனுயும் இருந்தவர் (ஸநாதநலோகாநுஜயதி என்றும் இருப்பவர்) இபபொழுது ஸுக்ரீவனை தனக்கு நாதனுக இச்சிக்கிறார். ஸர்வ லோகத்திற்கும் தர்மாத்மாவாயும், சரண்யனுயும் என்னுல் ஏற்கனவே சரணுகதம் செய்யப்பட்டவனுயும், எனக்கு குருவாயும் விளங்கப்பட்ட இவர் இபபொழுது சுக்ரீவனை சரணுகதி செய்கிறார் என்றும், எவருடைய ஒரு பிதா ஸகலராலும் ஸேவிக்கப் பட்டவரோ சரண்யரோ அவருடைய பிள்ளையான இவரும் அப்படிபபட்ட பாக்யத்தை உடையவர் எல்லோராலும் ஸேவிக்கத் தகுந்தவர். ரகு வம்சத்தில் பிறந்த இவர் இந்த ஸுக்ரீவனை சரணுகதி செய்கிறார். எவருடைய ஒரு பிரஸாதத்தை ஸர்வலோகமும் எதிர பார்ககிறதோ, ஸர்வ பிராணிகளும் எதிர பார்க்கிறதுகளோ, அந்த ராமன் இந்த வேளை சுக்ரீவ தயவை சுக்ரீவ பிரஸாதத்தை எதிர்பார்க்கிறார் என்றும் சோகத்தால் பீடிக்கப்பட்ட இவருககு சுக்ரீவன் அநுக்ரஹம் செய்ய அர்ஹன் என்றார். (அர்ஹனே சுக்ரீவன் என்றால் இந்த

விஷயத்தையே பிந்தி ராகவன் சொன்னபோது அதாவது வாலி சுக்ரீவர்கள் முதல் யுத்தம் செய்ய அதில் சுக்ரீவன் தோற்று ராகவனிடம் வந்து நீர் என்னை இப்படி சத்ருவுக்கு காட்டிக் கொடுக்கலாமா என்று கேட்க அவர் நான் உங்கள் இருவருக்கும் வித்தியாசம தெரியாமல் பேசாமல் இருந்தேன் என்றும் நான் உன்னை ஒருக்காலும் காட்டிக்கொடுக்கமாட்டேன். ஏனென்றால் நான் லக்ஷ்மணனுடனும், ஸீதையுடனும் உன் ஆதீனம் அல்லவோ என்று கிஷ்கிந்தா காண்டம் 12-ம் ஸர்க்கம் 36-ம் ச்லோகம் அஹம் ச லக்ஷ்மணஶ்சைவ ஸீதா ச வரவர்ணினீ த்வததீநா வயம் ஸர்வே வநேஸ்மிந் ஶரணம் தவ। என்று நாங்கள் ஏற்கனவே உம்மை சரணாகதி செய்யவில்லையோ என்றார். இதுவும் தவிற சுக்ரீவன் மழைகாலம் கழித்து வாராமல் இருந்தபோது லக்ஷ்மணனைப் பார்த்து கிஷ்கிந்தா காண்டம 30-ம் ஸர்க்கம் 66, 67-ம் சலோகங்களில் க்ருபாம் ந குருதே ராஜா ஸுக்ரீவோ மயி லக்ஷ்மண। அநாதோ ஹ்ருதராஜ்யோயம் ராவணேந ச தர்ஷித:। தீநோ தூரக்ருஹ: காமீ மாம் சைவ ஶரணம் கத:।' இத்யேதை: காரணை: ஸௌம்ய ஸுக்ரீவஸ்ய துராத்மந:। என்று ராகவனே சொல்லுகிறார். எனக்கு சுக்ரீவன் கிருபை பண்ணவில்லை. ஏனெனில் நான் நாதனில்லாதவன்; ராஜ்யம் அபஹரிக்கப்பட்டவன்; ராவணனால் பத்னி அபஹரிக்கப்பட்டவன்; தீனன்; வீடு வெகு தூரத்தில் இருக்கிறது; காமீ என்னை வந்து சரணாகதி செய்துவிட்டான் என்று இந்த காரணங்களாலே அவன் நமக்கு கிருபை செய்யவில்லை என்று தெரிவித்து இருப்பதாலும் ராகவன் சுக்ரீவனை சரணாகதி செய்து இருப்பது ஸ்பஷ்டம். இது ராகவ ஸம்மதம்.) ராகவ மனோபாவத்தை அறிந்தே லக்ஷ்மணன் சொன்னது. இதனால்தான் லக்ஷ்மணனிடம் நீ என மனோபாவத்தை அறிந்தவன் ஸாவஜ்ஞாக என்று சொல்லியிருக்கிறார். இதை லக்ஷ்மணன் ஹநுமானிடம் சொன்னார் தவிற சுக்ரீவன் ஸாக்ஷாத் சூர்யபுத்ரன். ராகவன் சூரிய வம்ஸஸ்தன், லோக ரக்ஷணார்த்தம். ஆதியில் சூரியன் உலகத்தை அடக்கி ஆளுவதற்கு க்ஷத்திரியாம்சத்தில் மனுவை உண்டுபண்ணி பூமியை பரிபாலிக்கும்படி செய்தார். ராவணன் பிராம்மணனுதலால்

அவன் பிரபாவத்தை அடக்கவே சுக்ரீவனை சூர்யன் தன் பிரம்ம தேஜஸ்ஸுடன் கூடினவனாய் பிராம்மணனாய் உண்டுபண்ணி வித்தார். இதனால் சுக்ரீவன் பிராம்மணனாதலாலும், குடும்பத்தில் மூலபுருஷனுக்கு நேரிட புத்ரனாதலாலும், ராகவன் க்ஷத்ரியனாதலாலும் சுக்ரீவனை ராகவன் ப்ராஹ்மணா நாச்வா ஸீதா! பிராம்மணர்களை உபாஸிப்பவராதலால் சுக்ரீவனைசரணாகதி செய்தது நியாயமே. அதனாலேயே லக்ஷ்மணன் ராகவனை சுக்ரீவன் அநுக்ரஹம் செய்ய அர்ஹன் என்றார். (இது நிற்க பிந்தியும் ராகவன் சூர்ய அனுக்ரஹம் அடைந்துதான் ராவண வதம செய்தார் என்று ஸ்பஷ்டம்.) சிலர் த்வேஷத்தால், கவிக்கு தவேஷம் இல்லாமல் இருந்தும், ராகவன் ஆதித்யனை உபாஸித்தது பிரக்ஷிப்தம் எனகிறார்கள். தன்னை அறியாமல் இருக்கும்போது எதை செய்யக்கூடாது. அதனாலல்லவோ சுக்ரீவனையும் சரணாகதி செய்தார. (இது பராக்ஷிப்தமானால் தேவாகள் ராமனை பரமாத்மா எனறு ஸ்தாபித்ததும் பிரக்ஷிப்தம் என்றும் ஸ்பஷ்டம். ஏனென்றால பரமாத்ம ஸ்வரூபியான மஹாதேவனை பரமசிவனும் மனுஷ்யனை ஸ்தித்ததாய் இருபபதால் வால்மீகி அந்த பரமேசசுவரரை சுஜ०சுவ்ரூவிணா० என்று இக்கிரநதத்தில் குறிப்பிடடு இருபபதால ஒருநாளும் அவர் இவரை ஸ்துதிக்கமாட்டார். ஆதலால் பிரக்ஷிபதம். ஆதலால் இவ்விஷயத்தில் த்வேஷம் கூடாது என்பதற்காக குறிப்பிடப்பட்டது. கவிக்கு துரோகம் இல்லாதபோது அனாவசயமான த்வேஷங்களே உதவாது என்று ஸ்பஷ்டம். ராமன் அகஸ்தியாச்ரமம் வந்தபோது அங்கு தேவர்களுக்கு எல்லாம் பீடங்கள் இருக்க ருத்ரனுக்கு அலலது சிவனுக்கு பீடம் இல்லை. எப்பொழுது கவி சொல்ல இல்லையோ நாம் பேசாமல் இருக்கவேண்டும். ஒருவர் சொலலுகிறார். சிவன் பூஜைக்கு அனர்ஹன் அதனால் இல்லை என்றார். மற்றொருவர் அக்னி என்பது பரமசிவ ஸ்ரூபம் அதனால் அக்னி ஸ்தானம் பரமசிவன் என்றார். இக்கிரந்தத்தில் வால்மீகி இந்த இரண்டையுமே தகாதது என்று குறிப்பிட்டார். ராமன் பிந்தி பரம சிவத்தை பூஜித்துவிட்டுதான் அச்வமேதம் செய்தார். அச்வ

மேதமும் பரமசிவ ஸம்பந்தமான அசவமேதமே தவிர விஷ்ணு ஸம்பந்தமான அசவமேதம் அல்ல எனபதற்கு பல பிரமாணம இருககிறது. தவிர ராமனை கவி உபமானம் பரமசிவனுக்கே வெகு இடத்தில் கொடுத்தவர் எஙகேயாவது அவரைக் குறைத் துப் பேசுவாரா? தவிற பரசுராமன், விஷ்ணு அதிகம் என்று பேசியிருக்கலாம் வாலமீகி ஸ்வயம் வாக்பத்தில் இருக்கிறதா பார்க்கலாம். பரசுராம வாக்யம் கவி வாக்யத்திற்கு மேலொத்த தாக ஆகாது. ஆதலால் துவேஷம் இல்லாத கிரந்தத்தில் துவே ஷம் உண்டுபண்ணுதல் கூடாது எனபது பிரத்யக்ஷம். ராமன் ஸ்நானுதிகளைச செய்தார் என்ற கவி, ராமன் நாமம் போட் டாரா? விபூதி பூசினுரா? என்று பேசினுரா? இப்படி த்வேஷம் இல்லாததில் த்வேஷத்தை உண்டுபண்ணுவது கூடாது என்று ஸ்பஷ்டம்.) (இபபடி ராமன் சூரியனை, ஆதித்யஹ்ருதயத்தால் உபாஸித்து பிரம்மதேஜஸ்யை அடைந்து ராவணனைக் கொன்றுர், என்பது தன்னை மனுஷயனுய் எண்ணி இருப்பதால் ஸத்யம. ஆகலால் ராமஸ்தவராஜஸதோத்ரமும் உண்டு. ஆதித்யஹ்ருதயமும் உண்டு என்று ஸித்தாந்தம். ராமன் இந்திரனை உபாஸிக்க இல்லை அந்த தேஜஸ் இந்திர னுக்கும் இல்லை. அவன் பிள்ளை வாலிக்கும் இல்லை.) இபபடி லக்ஷ்மணன் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு ஹநுமார் ஸந் தோஷப்பட்டு அவர்களை தூக்கிக்கொண்டு ஸுக்ரீவ ஸமீபம் சென்று அவர்களை ஓர் இடத்தில் விட்டுவிட்டு ஸுக்ரீவனைப் பார்த்து, அவர்கள் உம்மை சரணுகதி செய்திருக்கிறுர்கள். அவர்கள் பலம் இல்லாமற் செய்யவில்லை. ஸ்திரீ நிமித்தத்தில் செய்கிறுர்கள். இதனுல் நீர் கர்வப்பட்டுவிடாதேயும் என்று சொல்லி நீர் இவரிடம் ஸ்நேகம் செய்துகொள்ளும் என்றும் சொல்ல உடனே சுக்ரீவனும் அப்படியே என்று ஊ_ந-ஷெ ஈ-ிவஊஷூாய ஸு-ஹீ ்வஃஷு ஶஷ-ஶஃ என்று சுக்ரீவன் மனுஷ்ய ரூபத்துடன் ராகவ ஸமீபம் வந்து நான் உமது வரலாற்றைக் கேள்விப்பட்டேன். நானோ வானரன் உமக்கு என்னுடன் ஸ்நேகம் செய்யவேண்டும் என்ற எண்ணம் இருந்தால் கைமேல் கைதட்டும் என்று சொல்ல அப்படியே என்று சொல்லி ராம

னும் கைதட்டினுர். உடனே ஹநுமான் அக்னியைக் கொண்டு வந்து வைக்க அப்பொழுது கபந்தன் சொன்னதை ராகவன் எண்ணி அக்னிஸக்யமான ஸ்நேகத்தைச் செய்ய அப்பொழுது ராவணனது இடது கண்களும வாலியின இடது கண்ணும் ஸீதையின் இடது கண்களும் துடித்தது. இபபடி இருவரும் கைபிடித்துக்கொண்டு ஸந்தோஷித்தார்கள. அபபொழுது ராகவன் சுக்ரீவன் கைபிடித்துக்கொண்டு இருக்குமபோது அவனை யாதொன்றும் விசாரிக்காமலேயே அவனிடம் வாலிநம் தம்வயிஷ்யாமி தவஹாயாராவஹாரிணம் என்று கிஷ்கிந்தா காண்டம் 5-ம் ஸர்க்கம உன் பத்னியை அபஹரித்த வாலியை நான் அழிக்கிறேன் என்ருர். பிறகு ஸுக்ரீவனும் உமது பத்னியைத் தேடிக் கொடுக்கிறேன் என்ருன். இப் பொழுது ராகவன் சொன்னதில் வாலியை மறைந்தடிக்கிறேன் என்று சொன்ருரா இல்லையே. இது நிற்க இங்கு ஒரு ஸந் தேகம் ராகவன் வாலிவதம் செய்வதாயும் ஸுக்ரீவன் ஸீதையை தேடிக்கொடுப்பதாயும் சொலலிக்கொண்டார்களோ, ஒருவர்க் கொருவர் விசாரித்துக் கொள்ளுவதற்கு முந்தி இது எப்படித் தெரியுமென்ருல் ஹநுமான்மூலம ஸுக்ரீவனுக்கும், கபந்த ஹநுமான்மூலம் ராகவனுக்கும் விஷயங்கள் தெரியுமாதலால் சொல்லிக்கொண்டார்கள். இக்கிரந்தத்தில் பிதிர் வாக்யத்தால் தாடகா வதம் என்றும் மாதுர் வாக்யத்தால் அரண்ய கமனமும் ஆசார்யாளான மஹரிஷிகள் வாக்யத்தால் ராவணுதி ராக்ஷஸ வதமும் தெய்வரூபியான கபந்த வாக்கியத்தால் வாலிவதமும் என்பது இக்கிரந்த ஸித்தாந்தம்.

ராமன் வாலிக்கு மறைந்தவர் என்று சிலர் சொல்லுகிருர் களே? ஏன் என்று கேட்டால் வாலி எதிரில் நின்ருல் வாலி சரணுகதிசெய்துவிடுவான் அப்பொழுது அவனை ரக்ஷிக்கவேண்டி இருக்கும் என்று சிலர் சொல்லுகிருர்கள். இப்படி சில வியாக் யாதர்களும் சொலலுகிருர்கள். சில மதாசார்யர்களும் சொல்லு கிருர்கள். வால்மீகி இதைச் சொல்லாதபோது எப்படிச் சொல்வது இது பிசகு என்பதற்கு கவி 18 விதமான ஆதாரங் களைச் சொல்லுகிருர் அவைகளை கவனிப்போம்:—

இந்த மான் ராக்ஷஸன் என்று எண்ணி என்னைப் பிடிக்கச் சொல்லமாட்டாளே என்று அதற்காக மானை ஆகாரத்திற்காக பிடிக்காமல் தன்னை மறைத்துக்கொண்டே இருந்தான் மாரீசன் என்று கவி வர்ணித்தார். இப்படி பல இடங்களில் கவி ஒவ்வொருவர் மறைந்ததற்கும் காரணம் சொன்னவர் வாலிக்கு ராமன் மறைந்தார் என்று கவி சொல்லாததால் மறைந்ததற்குக் காரணமும் சொல்லாததாலும் மறைந்தார் எனபது அங்கீகரிக்க இடமில்லை என்றும் ஸ்பஷ்டம். தவிர உத்தர காண்டத்தில் ராவணனுடன் யுத்தம் செய்துகொண்டு இருந்த எமதர்மராஜன் பிர்ம்மாவினுடைய வார்த்தைக்காக அப்படியே பாதி யுத்தத்தில் மறைந்தான் என்று குறிப்பிட்டு இருக்கிறதாலும் ராவணன் பலி சக்ரவர்த்தியிடம் சென்றகாலத்தில அந்த வாசலில் இருக்கும் விஷ்ணு இந்த ராவணனைக் கண்டு உடனே பிர்ம்மாவை மானிப்பதற்காக மறைந்துவிட்டார் என்று இருப்பதாலும் ஸகல இடத்திலும் யார் மறைந்தாலும் இன்ன காரணத்திற்காக மறைந்தார் என்று வர்ணிக்கும் வால்மீகி வாலிக்கு ஏன் மறைந்தார் என்று காரணம் சொல்லாததாலும அவர் வாயினல் ராமன் வாலிக்கு மறைந்தவர் என்று சொல்லாததாலும் மறைந்தடித்தார் என்பது ஒருவிதத்திலும் அங்கீகரிக்கத்தகுந்ததில்லை என்று ஸ்பஷ்டம்.

இப்படி ராகவனுடைய பௌருஷத்தை கண்ணாரக் கண்டவனை சுக்ரீவன் சந்தோஷம் அடைந்ததை ராமன் சுக்ரீவனைப் பார்த்து இப்பொழுதே யுத்தத்திற்கு புறப்படு என்று தெரிவிக்க சகலருடன் சுக்ரீவன் புறப்பட்டான். எல்லா வானராகளும் அதாவது ஹநுமான், நளன், நீலன், தாரன், இவர்களும் ராம லக்ஷ்மணர்களும் புறப்பட்டார்கள். எல்லோரும் சென்று அவரவர்கள் தங்கள் தங்களை பல மரங்களால் மறைத்துக் கொண்டு நின்றுகொண்டு இருந்தார்கள் என்று அங்கு இருக்கும் சலோகத்திற்கு அர்த்தம். அப்படி இங்கு சொல்லப்பட்டது. இதனுல் ராமன் மறைந்தாரா இலலையா எனில் இப்பொழுது இக்கிரந்தத்தில் லோகத்தார் மறைந்தார் ராமன் என்று எதைக் கொண்டு சொல்லுகிறார்கள் என்றும் அதற்கு எந்தமட்டும் மதிப்பு என்பதையும் கவனிப்போம் :—

1. ஸர்வே தே த்வரிதம் கத்வா கிஷ்கிந்தாம் வாலிபாலிதாம் । வ்ருக்ஷைராத்மாநமாவ்ருத்ய வ்யதிஷ்டந் கஹநே வநே । என்று எல்லோரும் கிஷ்கிந்தை போய் அவரவர்கள் தங்கள் தங்களை பல மரங்களால மறைத்துக்கொண்டு நின்றுகொண்டு இருந்தார்கள் என்றர்த்தம். (இதனால் ராமன் மறைந்துகொண்டு அடித்தார என்று உலக வதந்தி.)

2. ஸுக்ரீவஸ்து ராகவம் நாதம் ருஶ்யமூகம் ப்ரதுத்ருவே। என்று சுக்ரீவன் நாதனை ராகவனை காணுதவனுகக் கொண்டு ரிசயமூகம் ஓடினுன் என்று ஆத்தம். (இதனால் ராமர் மறைந்தடித்தார் என்று வதந்தி.)

3. பராங்முகவதம் க்ருத்வா கோ நு ப்ராப்தஸ்த்வயா குண: । நான உம்மை பாராமல் இருக்கும்போது நீர் என்னை அடித்தீரே உம்மால் என்ன அடையப்பட்டது என்முன் வாலி. (இதற்கு மறைந்து என்றும் அர்த்தம் சிலர் சொல்லுவார்கள்) இதனுலும் மறைந்தடித்தார் என்று வதந்தி.)

4. த்ருஶ்யமாநஸ்து யுத்யேதா மயா யதி ந்ருபாத்மஜ । அத்ய வைவஸ்வதம் தேவம் பஶ்யேஸ்த்வம் நிஹதோ மயா । என்று நான் உன்னை யுத்தத்தில் கண்டு இருபபேனேயாகில நான் உம்மைக் கொன்று இருபபேன் ; நீர் யமனைப் பார்த்து இருப்பீர் என்முன் வாலி. (இதனுலும் மறைந்தடிததார் என்று வதந்தி.)

5. வீக்ஷமாணம் திஶஶ்சைவ ஸர்வாஸ்ஸஹஸா ஸஹ: । என்று திக்குக்களில் அடிக்கடி பார்க்கிறவனுன சுக்ரீவனை ராமன் பாாத்தார் என்று இருக்கிறது. (இதனுலும் மறைந்தடித்தார் என்று வதந்தி.)

6. அந்யேந யுத்யமாநம் எனறு வாலியானவன் நான் மற்ெருருவனுடன் சண்டைபோடும்போது நடுவில அடித்தாயே என்முன். (இது மறைந்தடித்தற்கு அல்ல நடுவில் அடித்தற்காக சொல்லபபட்டது.) (இதைவைத்து உலக வதந்தி).

7. ஜனங்கள் மிருகங்களை பாசங்களாலும் வலைகளாலும் மறைநதுகொண்டும் மறையாமலும் பிடிக்கிருர்கள். அந்த மிருகஙகள் ஓடிக்கொண்டு இருநதாலும் விளையாடிக்கொண்டு

இருந்தாலும் தூங்கிக்கொண்டு இருந்தாலும் விழித்து இருந்தாலும் களைத்து இருந்தாலும் மதித்து இருந்தாலும் மனுஷ்யர்கள் மாம்ஸத்திற்காக கொல்லுகிறார்கள். இதில் அந்த மனுஷ்யர்களுக்கு தோஷம் இல்லை. தர்மம் தெரிந்த ராஜரிஷிகளும் வேட்டையாடுகிறார்கள். அதனால் நான் உன்னை யுத்தத்தில் கொன்றேன். நீ சாகாமிருகமாதலால் நீ என்னுடன் யுத்தம் செய்தாலும் கொல்லலாம் என்னுடன செய்யாமல் இருந தாலும் கொல்லலாம் என்றார். இதனால் ராமன் மறைந்து அடித்ததாய் ஒத்துக்கொண்டுவிட்டார என்றும் மறைந்தடித்தார் என்றும் லோகவதந்தி.

இக்கிரந்தத்தில் நாரத வால்மீகி வாக்யத்தில் வித்யாஸம் வருமேயாகில் நாரத வாக்யத்திற்குத்தான் முதல் கௌரவம். பிறகுதான் வால்மீகி வாக்யத்திற்கு என்று இக்கிரந்தம் பிரமாணமாதலால் நாரத வாக்யத்தில் வாலி வதத்தில பௌருஷ லக்ஷணம் காட்டப்பட்டதாலும் வால்மீகியும் சண்டையை வாலியுடன் சண்டை செய்ய பாணங்களைக் கொண்டுவெதாயும் சொல்லி யுத்தம் உண்டென்று குறிப்பிட்டு பௌருஷத்தையும் சிலாகித்து பல உபமானப் பிரமாணங்களாலும் ராமனுக்கும் வாலிக்கும் பிரத்யக்ஷமே நடந்தது என்று ஸ்தாபித்துவிட்டதாலும், பிரத்யக்ஷ யுத்தமே என்று ஸித்தாந்தம். முன்சொன்னவைகள் இதுகளால் பூர்வபக்ஷம்.

மேலும் இவைகளை வைத்துக்கொண்டு மறைந்தடித்தார் என்று பரம்பரையாக மறைந்தடிக்காத ராகவனுக்கு மறைந்தடித்ததாக தோஷத்தைச் சொல்லி அதை நிலைக்கவைப்பதற்கு இல்லாத கிலிஷ்ட கற்பனைகளான பொய்கதைகளை எல்லாம் செய்து உலகத்தில ஸ்தாபிக்கிறார்கள். வாலியோ அவன் மாலையோ எதிரிபலத்தை இழுத்துவிடும் என்றும் வாலி ராமனை சரணாகதிசெய்துவிடுவான் என்றும் அதற்காக ராமன் மறைந்தார் என்றும், இப்படிஎல்லாம் தெரிநத கவி, சொல்லாதவைகளை எல்லாம் சொல்லி, வதந்தியை உலகத்தில கிளப்பிவிட்டு விட்டதாலும் வியாக்யாதாக்களும் இபபடி சொன்னதாலும் இவ்

வளவையும் வால்மீகி எப்படி பூர்வபக்ஷம்செய்து பிரத்தியக்ஷ யுத்ததத்தை எப்படி ஸதாபிக்கிறார் என்பதையும் கவனிப்போம், ஒவ்வொன்றின் பூர்வபக்ஷத்தை முந்தி கவனிப்போம் :—

இக்கிரந்த ரீதியில வாலியை ராமன் உத்தம பாணத்தால் அடித்ததாகப் பிரமாணம. அஸ்திரம் அலல. அவரவர்கள் எல்லோரும தங்கள் தஙகளை பல மரங்களால் மறைத்துக் கொண்டு இருககிறார்கள் என்றால் ஸுக்ரீவனும் பல மரங்களால் மறைத்துககொண்டு இருக்கிறதாகவே ஸ்பஷ்டம். பிறகு வெளி வந்ததான ச்லோகமே கிடையாது. வாலியானவன் ஒளிந்து கொண்டு இருக்கும இடத்திற்கே வந்து சண்டைபோட்டதாக வேண்டும். எப்படி ஸுக்ரீவனும் மறைத்துக்கொண்டு இருக்க விலலை என்று சொலலமுடியும? ஆதலால எல்லோரும் மறைத் துக்கொண்டு இருக்கிறார்கள் எனபது எபபடி? ஸுக்ரீவன் தவிற என்பதுதான எப்படி? ராமன் ஏன் மறையவேண்டும்? காரணம் இல்லாதபோது இதுவும் பிசகென்று ஸித்தாந்தம். மேலும் தஙகள தங்களை பல மரங்களால மறைந்துகொண்டு இருக் கும்போது ராமனுககு வாலி எப்படித் தெரியும். மரத்திறகு மரம் இருக்கும் இடவெளி என்றர்த்தமா? ஒரு மரத்தின் பெருமனே அடியோடு மனுஷாகளை மறைககுமே. இருக்கட்டும் ராமபாணம் வாலி மார்பில் விழுந்து இருக்க, எப்படி விழும்? நேறிட இருந் தாலல்லவோ விழும், இப்பொழுது ராமன் போட்ட பாணம் எதிரில் இருககும மரத்தை பிளந்துகொண்டு பிறகு கிளம்பி அதற்கு எதிரில இருக்கும் சுக்ரீவன் முதுகைப் பிளந்துகொண்டு மார்புவழியாய் வெளிபபட்டு பிறகு எதிரில நிற்கும் வாலி மார் பில் பாயவேண்டும், இபபடி இவவளவும் பிளககபபட்டதா யில்லையே. தவிற வாலி சுக்ரீவர்களுக்கு யுத்தம் நடந்துகொண்டு இருக்கும்போது பலவிதங்களான கதிகளுடன (சக்ரகதி, வின் யாஸ கதி, குக்குட கதி, ரயேன கதி, மந்த கதி, வக்ர கதி, சிம்ம கதி, சாரதூல கதி, கஜ கதி, விருஷப கதி இப்படியுள்ள பல கதிகளில் யுத்தம் நடப்பதாய் இருக்கிறது). சண்டை நடக் கிறபோது ராமனும் மறஙகளுடன் சுத்துகிறாரா? எப்படி? இப்படி சண்டை நடக்கும்போது தனபக்கம் எப்பொழுது வாலி

வரப்போகிறான் என்று காத்துக்கொண்டு இருந்தார் ராமன் என்று சொல்லாததாலும் மரங்களின் இடைவழியாய் பார்த்துக் கொண்டு இருந்ததாகவும் கவி சொல்லாததாலும் கவியானவர் வாலிவத நிமித்தத்தில் ஆகர்ஷிக்கப்பட்டதினால அடையபபட்டு இருக்கிற யுத்த லக்ஷ்யத்தை உடையவா என்று குறிப்பிட்ட தால் மரங்களின் நடுவில இருக்கிறார் என்றும் சொல்ல இடம் இல்லை. ஒதுப்புறத்தில் இருந்து அடித்தால் பாணம் ஒரு நாளும் நடு மார்பில் விழவே விழாது. விலாபபுறத்தில் இருந்து அடித்தால் விலாப்புறத்தில்தான் விழும் அதிலும் அஸ்திர மானல் மந்திர பிரயோகத்தால விழும். பாணமான சப்த வேதி யானல் விழும். மற்ற எதுவும் விழாது. இப்படி இந்த நிலையில் இருந்து இருவர் சண்டை போடும்போது அடித்துப்பார்த்தால் தான் அடிக்கமுடியாது என்று தெரியுமே தவிற வாய்ப் பேசசி னாலே பிரயோஜனமில்லை. (இதை இருவரை சண்டைபோடச் சொல்லி ஒளிந்து இருந்து வில்லைப்பிடித்து பாணமாக ஒரு குச்சியைச்செய்து பலவித யுக்திசெய்து, யோசனைக்கு பலருடன் கலந்து, பலதினுஷில் அடித்துப் பார்த்தும் பாணம் மட்டில் மார்பில் விழாமல் பாரிசங்களில்தான் விழுவதை அனுபவத்தில் கண்டுவிட்டதால் அதிலும் சண்டை நடந்துகொண்டே இருக் கும்போது நடுவில் அடித்தார் என்றால் வாலி சுக்ரீவர்கள் உயர மும் சரீர அகலமும் எல்லாம் ஒன்றாய் இருக்க சுக்ரீவன்பேரில கொஞ்சமும் அடிபடாமல வாலியையடிக்க முடியாமலிருபபது அனுபவததில் தெரிவதால் அவரவாகளும் அனுபவித்துப் பாாத்தாலதான் தெரியுமாதலால அப்பொழுதுதான் ஒத்துக் கொளளுவாாகளாதலால் அனுபவிககவேண்டும் என்றும் ஞாப கபபடுத்துகிறோம்) (தவிற தாரமங்கலம எனற ஒரு க்ஷேத் திரத்தில் ராமனிடம இருநது பாாத்தால் வாலி தெரியும் படியும் வாலியிடம் இருநதுபாாத்தால் ராமனைத் தெரியாதபடி வாலிவதம நடபபதாக ஒரு சிறபி சிலைசெய்து வைததுு இருக் கிறான் என்கிறாாகள். அதையும் போய்ப் பார்ததில வாலிக்கு ராமன் தெரியாது ஆனால் ராமன் இருக்கும் நிலையில் வில பிடித்து இருக்கும் நிலையில் விருக்ஷங்கள் இருக்கும் தினு

வில் சுக்ரீவன் இருக்கும் திறுவிலும் ராமபாணம் ஒருவிதத்திலும் வாலி மார்பில் விழாது என்பது பிரத்யக்ஷம். விழுந்தது போல் சிலை இருக்கலாமே தவிற பாணத்தை அங்கிலையில் இருந்து போட்டுப் பார்த்தால்தான் தெரியும். தவிற பரம்பரையாகச் சொல்லி வந்ததை சிற்பி செய்துவைத்து இருக்கிறானே தவிற அவன் வால்மீகி ராமாயணப்படி செய்தவனுமல்லன். தவிற நாம் வால்மீகியையும் அவர் கிரந்தத்தையும் பூஜிக்கிறோமே தவிற சிற்பியை பூஜித்துக்கொண்டு இருக்க இல்லை. ஆதலாலும் அதுவும் அங்கீகரிக்கத்தகுந்ததல்ல என்பது ஸ்பஷ்டம். மேலும் இவ்வளவு கர்ம சிரத்தையாய் ஏன் மறையவேண்டும் என்றால் அதற்கு ஒரு கதியும் இலலாதபோது காரணம இல்லாத காரியம் உபயோகமில்லையாதலாலும் இது பூர்வபக்ஷம ஆகிறது. தவிற நடுவில் அடிப்பது அதர்மம் என்று சாகா மிருகமான ஹநுமானே இருவர் சண்டை போடும்போது நடுவில் பிரவேசித்து அடிப்பது கூடாது அதர்மம் என்கிறார். இப்படி இருக்க, எப்படி நடுவில் ராமன் அடித்தாரென்பது? இதனாலும் முதலாவது பூர்வபக்ஷம்.

முன்சொன்ன ச்லோகத்திற்கு அடுத்தாற்போல் என்ன இருக்கிறதென்றால் வரிவாரை: வரிவ்ருத: நாரை ஹிர்-ஊநந்தி வாஂபாரஂ। என்று பரிவாரங்களால் சூழப்பட்டு என்றால் என்ன அர்த்தம் என்றால் ஒருவன் நடுவில்நிற்கவேண்டும். அவனை நான்கு பக்கத்திலும் எல்லோரும் சுற்றிக்கொண்டு இருப்பதற்கு தான் சூழ்ந்தவன் என்று பெயர். இபபடி இக்கிரந்தத்தில் பல இடத்தில இருக்கிறது. உதாரணமாக, ஸுந்தரகாண்டம் 17-ம் ஸர்க்கம் 24-ம் ச்லோகத்தில் தாஹி:வரிவ்ருதாஂ தத்ர ஸஹ்ர ஹாஇவரோஹிணீஂ। என்று (ஸீதை சூழப்பட்டு இருப்பதை வர்ணிக்கப்படுகிறது). கிரகங்களுடன் கூடஇருக்கிற ரோஹிணீ தேவியைப்போல் நான்கு பக்கத்திலும் ஏகாக்ஷி, ஏககர்ணை, லம்போதரீ, அஜாமுகி, என்று பலவித பெயர்களுள்ள ராக்ஷஸிகளால் சூழப்பட்டு இருந்தும் ஸீதையிடம் ராவணன் வந்தான் என்று இருக்க அங்கு நன்றாய் சூழ்ந்து என்பது என்ன அர்த்தம் என்று தெரியவில்லையா? தவிற ராவணன் ஸீதையிடம் பேச

வரும்போது தாபி: பரிவ்ருதோ ராஜா ஸுரூபாபிர் மஹாயசா: என்று ராவணன் உத்தம ரூபமுள்ள பெண்டுகளால் சூழப்பட்டவன் என்று நன்றாய் இருக்கிறது. இதை இன்னும் வர்ணிக்கிறார் கவி. மேலும் நக்ஷத்திரங்களால் சூழப்பட்ட சந்திரன்போல் பெண்டுகளால் சூழப்பட்டு இருக்கிறான் ராவணன் என்று இருப்பதால் ஒருவனை பலா சுற்றிக்கொண்டு இருந்தால்தான் பரிவ்ருத: என்ற பதம் பிரயோகம் செய்ய லாமே தவிற இல்லாவிட்டால் இந்த பதப்பிரயோகம் பிசகு என்று ஸித்தாந்தம். தவிற ஆரண்ய காண்டம் 44-ம் ஸர்க்கம் 10-ம் ச்லோகத்தில் ம்ருகை: பரிவ்ருதோ வந்யைரதூராத் ப்ரத்யத்ருச்யத என்று மாரீசன் வனத்தில் உண்டான மிருகங்களால் சூழப்பட்டவனைக்கொண்டு சமீபத்தில் தென்பட்டான் என்ற இடத்திலும் ஸுந்தரகாண்டம் 49-ம் ஸர்க்கம் 12-ம் ச்லோகம் வ்ருத: பரிவ்ருதோ லோக: ஸமுத்ரைரிவ ஸர்வத: । ஸசிவைர் மந்த்ரதத்வஜ்ஞைர் ந்ருபோ ஸம்ஸேவிதோ பலி: । என்று லோகமானது நான்கு ஸமுத்திரங்களால் சூழபபட்டு இருப்பது போல் உத்தம மந்திரிகளால் சூழப்பட்டு இருந்தான் ராவணன் என்று கவி வர்ணித்து இருபபதால் கிரந்தம் ஆத்யந்தமே பரிவ்ருத: என்ற பதம் எல்லாராலும் சூழ்ந்துகொண்டு இருந்தால்தான் சொல்லலாம் என்று கவியினுடைய ஸித்தாந்தமாகி விட்டதால் அம்மரங்களை விட்டு எல்லாரும் வெளிவந்து ஸுக்ரீவனை சூழ்ந்துகொண்டு நிற்க பிறகு ஸுக்ரீவன் ஆகாசம் பிளக்கும்படி கர்ஜித்தான் என்று கவியே வர்ணித்துவிட்டதால் ஒருவரும் மறையவில்லை என்று ஸ்பஷ்டமாவதால முதலாவது பூர்வ பக்ஷம்.

ராமன் வாலிவதம் செய்யும் இடத்தில் வாலியால் அடிபட்டு சுக்ரீவன் சப்தித்த பிறகு இனி சண்டைதான் போடமுடியாது என்று திரும்பிப பார்த்த பிறகே ராமன் வில்லை நாணேறிட்டதாய் பிரயோகம் இருப்பதாலும் நாணேறிட்ட பிறகு சுக்ரீவன் வாலியை எதிர்த்ததாய் பிறகு பிரயோகம் இல்லாததாலும் சுக்ரீவன் சண்டை போடமுடியாதென்று திரும்பின பிறகே ராமன் பாணப் பிரயோகம்செய்து வாலியை அடித்ததாய் கவி

பிரயோகித்து விட்டதால் நடுவில் அடிக்கவே இல்லை என்றும் வாலியை எதிர்த்தே அடித்தார் என்றும் பிரத்யக்ஷமாவதாலும் ராமனது நாஞ்ஞையால் பக்ஷி மிருகங்கள் முதலிய ஸகலமும் யுகாந்தம்போல் பிரமித்தது என்று கவி பிரயோகித்து இருக்க வாலி எனக்குத் தெரியாது என்று சொல்லுவானேயாகில அது அங்கீகரிக்கத் தக்கதில்லை என்று கவி வர்ணிப்பதாலும் ராமனை எதிர்க்கவே மாலைபோட்டு வந்தவன் என்று கவி வர்ணித்து இருப்பதாலும வாலி ராமனிடம் உன்னால் அடிபடவே இசசைப் பட்டு வந்தேன் என்று புலம்பி ராமனிடம் சொல்லியும் இருக் கிறவன், தாரை தடுத்ததற்காக மாலை போட்டுக்கொண்டு வந்தவன சண்டைக்காக ராமனை எதிர்பார்த்து இருப்பவன் முதலில் எதிரத்த சுகரீவனை முதலில் எதிர்த்துவிட்டு பிறகு எதிர்த்த ராமனை மலைகளாலும் மரங்களாலும் எதிர்க்க (இதனுல் இருவருக்கும் சண்டை உண்டு என்று தெரிவதாலும்) அவர் அவ்வளவையும் தவிடுபொடியாக்கி வாலியைக் கொனறதாய் குறிப்பிட்டதால் இதனுலும் பூாவபக்ஷம்.

நாரதபகவான அவா வாக்கினல ஸர்வ முக்ய விஷயங் களையும் சொன்னவர் ராமன் வாலியை மறைந்தடித்தார் என்று சொலலாமல் யுத்தத்தில் ராமன் வாலியைக் கொன்முர் என்று குறிப்பிட்டதால அதற்கு விரோதமாய் மறைந்தார் என்பது ஒருவிதத்திலும் அங்கீகரிக்கத் தகுந்ததில்லையாதலாலும் வால் மீகியும் அவர் வாக்கினுல் வாலியை அடித்தபோது மறைந்து கொண்டு இருந்தார் என்று அவர் வாக்கினல குறிப்பிடாத தாலும் முதலாவது பூர்வபக்ஷம். தவிற வால்மீகி வாக்கினு லேயே சூழப்பட்டவன் என்று குறிப்பிட்டதாலும் விமானத்தில் அடுத்த வரியிலேயே வாயு வேகத்துடன் சூழ்ந்து விளங்கிவரக் கூடிய மஹாமேகம் கர்ஜ்ஜித்தால் எப்படியோ அப்படி கர்ஜ ஜித்தான் சுக்ரீவன் என்றிருப்பதாலும் தவிற ஒரு ஷாராஜ0 கிருயா ஒக்ஷ0। என்று காரியத்தில் ஸமர்த்தனை ராமனை சுக்ரீவன் பார்த்தான் என்கிறதால் பிந்தி மறைந்தடிக்கப்போகிறவனை எப்படி கவி காரியத்தில் ஸமர்த்தன் என்பார்? அது ஒரு விதத்திலும் பொருந்தாதாதலாலும் முதலாவது பூர்வபக்ஷம்.

ராமனுனை நாதனை காணுதவனுய்க்கொண்டு ரிச்யமூகம் ஓடினுன் சுக்ரீவன் என்பதால் மறைந்து இருக்கிருர் என்பது பொருத்த மல்ல. ஏனெனில் ராமன் ஒளிந்து இருந்தால் ஏற்கனவே சுக்ரீவனுக்கு ராமன் ஒளிந்து இருக்கும் இடம்தான் தெரியுமே. அந்த இடத்திற்கு சுக்ரீவன் ஓடிவருவதற்கென்ன? ரிசய மூகத்திற்கு ஏன் ஓடவேண்டும்? ராமன் இருபபவர் சுக்ரீவ னுக்கு தெரியாத இடத்தில இருந்தாரா? அப்படி ஏன் இருக்கவேண்டும்? சுக்ரீவனுக்கு ஆபத்து வந்தால் அவன் தன்னிடம் வரக்கூடாது என்ற எண்ணமா எப்படி? வால்மீகி, ராமனைக் காணுதவனுய்கொண்டு ரிச்யமூகம் சென்முன் சுக்ரீவன் என்று சொன்னதால் ராமன் அந்த வனத்திலேயே இல்லை என்று ஸ்பஷ்டம். இருவர்களான வாலி சுக்ரீவர்களுக்கு வித்யாஸம் தெரியாமல் போய்விட்டதால் இனி வேறு யுத்தத்தில் பார்த் துக்கொள்வோம் என்றும் ஒரு அடையாளத்தை உருபபடி யார் என்று தெரிந்துகொண்ட பிறகு எதிர்ப்பதற்காக மாலையைப் போட்டு வாலியைக் கொல்லுவோம் என்று ரரமன் ரிசயமூகத்தை நாடி சென்றுவிட்டார் என்முர் கவி. (வாலியால் இப்பொழுது சுக்ரீவன் செத்துவிட்டால் என்ன செய்வது என்று நாம் புஸ்தகத்தில இல்லாததை யுத்திவாதம் செய்தால் செத்தால் செத்ததுதான் என்று ஸித்தாந்தம். ஆதலால் இல்லாததை விசாரிப்பது கூடாது என்று ஸித்தாந்தம்). ஆதலால் ராமன் ரிச்யமூகத்தில் இல்லை என்று ஸ்பஷ்டம். இதையே ராமன் தெரி வித்து இருப்பதாகத் தெரிவதால் இரண்டாவது ச்லோகத்தால் மறைந்து இருக்கிருர் ராமன் என்று சொல்லமுடியாது என்று ஸ்பஷ்டமாகத் தெரிவதால் இதனுல் இரண்டாவது பூர்வபக்ஷம்.

மூன்முவதும் நான்காவதும் புத்தி இழந்து புலம்புகிமு ருதலால் மூன்மும் நான்காம் பூர்வபக்ஷம். இதறகு ஆதாரம். வால்மீகி வர்ணிக்கிமுர் கிஷ்கிந்தாகாண்டம் 16-ம் ஸர்க்கம் 39-ம் சலோகத்தில் அடிபட்ட உடன் வாலியானவன் விசேதநோ வாஸவஸூநுராஹவே விப்ரம்ஸிதேஷ்வாஸஜ்வலக்ஷிதிம் ம து: என்று யுத்தத்தில் அடிபட்டு புத்தியிழந்தவன் என்று கவி குறிப்பிட்டு விட்டதால் இதற்கு பிறகுதான் வாலி ராமனிடம் பேசுவதால்

பேசுவது அத்தனையும் வாயில்வந்தபடி புலம்புவதாலும் இல்லாததையெல்லாம் பேசுவதாலும் யோக்யனாக இருப்பவனை அயோக்யன் என்று பேசுவதாலும் இவன் வாக்யங்களை ஸகலத்தையுமே புலம்பல என்கிறார் கவி. அவனும் ராமன் தனக்கு பதில் சொன்ன பிறகு நான் மூர்க்கி தெரியாமல் மதத்தினால் தெரியாத்தன்மையால் சொல்லிவிட்டேன். எதனால் சொன்னேனென்றால் கிஷ்கிந்தாகாண்டம் 18-ம் ஸர்க்கம் 68-ம் சலோகத்தில் ...... என்று ராமனைப் பார்த்து பாணம் என் ஹ்ருதயத்தை பிளந்துவிட்டதால் புத்தி இழந்த என்னால் நீர் தூஷிக்கப்பட்டுவிட்டீர். நீர் என்னை மன்னிக்கவேண்டும் அதை நீர் பொறுக்கவேண்டும் என்றான். கவி வாக்யத்தாலும் வாலி வாக்யத்தாலும் புலம்பல் என்பதே நிர்ணயம். இவன் வாக்யம் முழுமையும் புலம்பலாகப் போவதாலேயே நாரதரும் ராகவ னிடம் வாலி வதத்தில் பௌருஷத்தைக் காட்டிப் பேசினார். வாலி வாக்யத்தில முன்பின் விரோதத்தையும் கவி காட்டுகிறார். அதையும் கவனிப்போம். அதாவது :—வாலியானவன் சண்டை க்குப் புறப்பட்டபோது தாரை வாலியைப் பார்த்து நீர் போகா தேயும் ராமன் கொன்றுவிடுவான் என்றாள். அதுகேட்ட வாலி யானவன் ராமன் யோக்யன் தர்மிஷ்டன் அப்படிப்பட்டவன் எனனைக் கொல்லுவதான பாவத்தைச செய்யமாட்டான் என் றான். பிறகு யுததகளம் வர ராமன் அடித்துவிட நீ பாபி என்னை அடித்தாயே என்றான் ராமன் வாலிக்கு பதில சொன்ன உடனே நான் உம்மால் அடிபடவேண்டும் இச்சைபபட்டு அதற் காகவே என்பத்னி தடுத்தும் நான் அதைக் கேளாமல் வந்தேன் என்றான். ஸகலதனதையும் வந்தவனுடைய ஹ்ருதயம் முதல் ஸர்வமும் அறிந்து கிரந்தத்தைச சொல்லும் வால்மீகி வாலி அடிபட இசசைப்பட்டு வரவில்லை. ஆனால் ஏன் வந்தானெனறால் ...... என்று அவனுக்கு அழிகிற காலம் வந்ததால் வாலி வந்தான் என்றார். இப்பொழுது முதலில் வாலி சொன்னதான ராமன் அடிக்கமாட்டான் என்ற முதல் வார்த்தை நிஜமா? அடிததும் பாபியே என்னை அடித்தாயே

என்றானே அந்த இரண்டாம் வார்த்தை நிஜமா? ராமனிடம் கடைசியில உம்மால் அடிபட இசைசைபடடுவந்தேன என்ற வார்த்தை நிஜமா? இவ்வளவும் தள்ளி கவி சொன்னது நிஜமா? வாலி சொன்னது நிஜமாகில அழிகிறகாலம் வந்ததால் வாலி வந்தான் என்ற வால்மீகியின் வார்த்தை அடிபடுகிறது. இக் கிரந்தத்தில கவி வாக்யமே ஸத்யமாதலால விராதனையும் ராவணனையும் ராமனால் அடிபடவே இசைசைப்பட்டு ஸீதையை எடுத்தான் என்ற வால்மீகி வாலி அடிபட இசைசைப்பட்டு வந்தேன என்ற வார்த்தையைப பிசகு என்று குறிப்பிட்டு விட்டதால் அடிபட இச்சைப்பட்டது பொய் என்று ஸித்தாந்தம். தாரையிடம் அடிக்கமாட்டான் என்றவன் ராம னிடம் அடிபட இச்சைப்பட்டு வந்தேன் என்றதாலும் மேலும் அடிபட்டபோது உம்மை நேரில் கண்டு இருந்தால் கொன்று இருப்பேன் என்றவன் பிந்தி உம்மால் அடிபடவே இசைசைப் பட்டு வந்தேன என்றதாலும், ஸகலமும் இப்படி நேர்விரோத மாதலாலும் ராமன் வாலிக்கு ஞானம கொடுத்தார் என்பது இக்கிரந்தத்தில இல்லையாதலாலும் ராமனுக்குத் தன்னைத் தெரியாதபோது அவனுக்கு எங்கு இருந்து ராமன் ஞானம் கொடுப்பார்? கொடுக்கவில்லை என்று சொல்லுவதாலும் அடி பட இசைசைப்பட்டு வந்தவன் என்று சொலலுபவன் ராமனை மூர்க்கன, துபதன பாபி என்றும் இப்படி திரஸ்கரித்து இருக் கிறானதலால இசைசைபபட்டவனலலன் என்று ஸித்தாந்தமாவ தாலும் இக்கிரந்தத்திற்கு கவி வாக்யமே ஸித்தாந்தமாத லாலும் சாகும்போது உயிரைவிடும்போதுகூட சுக்ரீவனிடம் வாலி ராமனைபபற்றி கெட்ட எண்ணத்துடனேயேபேசி, நான் தாரை வார்த்தையைக கேளாமல் அனியாயமாய் அடிபட்டேன் என்றதாலும் இதனாலும் அடிபட இச்சைப்பட்டவன என்பது அடிபடுவதாலும் வாலி சித்தம் இழந்து புலம்புகிறான் என்றும் புலம்பும்போது இல்லாததெல்லாம் வரும் என்று கவி சொல்லி விட்டதால் மூன்றாவதும் நான்காவதும பூர்வபக்ஷம். வால்மீகி புலம்பலுக்கு உபமானங்கள் கொடுக்கிறார். அவைகளை கவனிப் போம். மேலும் வால்மீகி நாரதரைக் கேள்வியை கேட்டது.

ராவணன் மாரீசனிடத்தில் ராமனை தூஷித்தது, வாலி ராமனை தூஷித்தது இம்மூன்றும் ஒன்று. (இம்மூன்றுக்கும் பதில்) நாரதர் வால்மீகிக்கு சொன்ன பதில், மாரீசன் ராவணனுக்குச் சொன்ன பதில், வாலிக்கு ராமன் சொன்ன பதில் இம்மூன்றும் ஒன்று. இவைகளை எழுதிப்பார்த்தால் ராவண, வாலி, வாக்யங்கள் புலம்பல் என்று ஸ்பஷ்டமாகும். என்று வால்மீகி ஸ்தாபிக்கிறார். மேலும் உபமானமும் காட்டுகிறார். அதாவது தசரதர் முதலில் விச்வாமித்ரரை சிலாகித்து எதையும் கேளும் என்றபோது அவா தசரதனை பிள்ளையைக் கேட்க தசரதன் உடனே வ்யதித: நா: என்று மனம் உடைந்துவிட்டான் துக்கம் அடைந்தான என்றார் வாலமீகி. பிறகு தசரதன் அவரை திரஸ்கரித்தான். முதலில் ஸ்தோத்ரம் செய்த வாயானது தூஷித்தது. கடைசியில் ஏன் இப்படி தூஷித்தான் என்றபோது மஹர்ஷியான வால்மீகி ஊதிநாவதிஜூநாக என்று இப்படி ராஜா தசரதன் புலம்பினார் என்றார். இனி இப்படி உள்ள பதங்களை கவனிப்போம். இப்படி உள்ள பதங்களை அப்படி அப்படியே அங்கீகரிக்கவேண்டும். அங்கிகரிக்காவிட்டால் வரும் அனர்த்தங்களையும் கவனிப்போம் :—

வ்யதித: நா:வ்யவஹாரநாக இதைக் கவி சொல்லாவிட்டால் தசரதர் பெரியோர்களை தூஷித்த பாபியாகிறார்.

தக்காஜவெஷரபாஂவஜ: । என்ற இதைக் கவி சொல்லாவிட்டால் லக்ஷ்மணன் மாதா பிதுர் துரோகியாகுவார்.

யஉஜாவெதஸிஉஂவஉ: । என்று கவி இங்கு சொல்லாவிட்டால் நாஸ்திக மதம் ஸ்தாபனம் ஆகும்.

வ்ரணயாஜாஷிஉாநாஜ । என்று கவி இங்கு சொல்லாவிட்டால் ஸீதை பர்த்தாவான தெய்வத்தை தூஷித்த பாபத்தை அடைந்தவளாவாள்.

தஷிஂஷஉாஜஜதிவிஷ்உவெ । இதைக் கவி சொல்லாவிட்டால வஸிஷ்டர் பொய் சொனனவராவார்

வதெ்பொகாதஉயாதத । என்று இதைக் கவி சொல்லாவிட்டால் கௌஸல்யா பர்த்தாவை தூஷித்த பாபத்தை அடையுவள்.

விழுழாவஉஃகாந்தஃ। என்றும் ஐதெ்ரவம் விழுவஙஙராஜா என்றும் இப்படி தசரதர் புலம்புகிறார் என்று கவி சொல்லிவிட்டால் பல பத்னிகளுடையவராவார்.

விழுழாவ வஹாஉயெ்ர ஜமஹெவ வஹொஹிதம்। என்று இக்கவி சொல்லாவிட்டால் பரதன் ஆசார்யாளை நிந்தித்த பாபத்தை அடையுவன்.

உயாதவமெவஉம்கவம் ஜொஹாக। என்று கவி சொல்லாவிட்டால் ராமன் பாபிஷ்டனாகிவிடுவர்.

குதெஉாவ உஉவாதஉவ்ர। என்று கவி சொல்லாவிட்டால் ராகவன் துஷ்டனாகிவிடுவார்.

ராவணஃ காமுவொஜிதஃ। என்று கவி சொல்லாவிட்டால் ராமன் அதர்மிஷ்டன் என்றும், மூர்க்கன் என்று லுப்தன் என்பது நிசசயமாகும்.

ஷூஹெதாவவ்ர வதெ்ரயம் ராஉவாம் ஹரணம்மதஃ। என்று கவி சொல்லாவிட்டால் ராகவன் கையாலாகாதவராக ஏற்படுவார்.

விவெதநொவாஸவவஸநஃ। என்று கவி சொல்லாவிட்டால் ராமன் மஹா பாபியாகுவர்.

விழுவஞஉவெதநம்। என்று கவி சொல்லாவிட்டால் ராகவன் ஸத்யவாதியலலன்.

நிவிஉணஉநாஉநவ। என்று கவி சொல்லாவிட்டால் சுக்ரீவன் பிராதாவைக் கொன்ற பாபியாவன்.

வவம்விழுவஉாநம்। என்று கவி சொல்லாவிட்டால் விபீஷணன் காம்யபக்தி உள்ளவனாவன்.

வஉஃவிதஃ। என்று கவி சொலலாவிட்டால் தர்மம் கிடையாது என்று ஸ்பஷ்டம்.

உதீவஜைவீஸவஹாயாவிழுவ்ர। என்று இதைக் கவி சொல்லாவிட்டால் ராமன் பல பத்னி உடையவராகவேண்டும்.

விழுழாவாயஜெதக்ஷணா। என்று இதைக் கவி சொல்லாவிட்டால் ஸீதை பொய் சொன்னவளாவள்

உ꠰꠰ஃவவஞவா꠰ என்று கவி சொல்லாவிட்டால் ஸீதையின் பாதி விருத்யத்திற்கு லோபம் வரும்.

விருமாவவிஹீஷணஃ ॥ என்று கவி சொல்லாவிட்டால் ஸர்வத்திலும் பற்றுசை உள்ளவன் என்றாகும்.

விஜபஶ்யப꠰꠰ய்ரா ॥ என்று இதைக் கவி சொல்லாவிட்டால் விபீஷணன் அதர்மிஷ்டனாவன்.

ஹஷஹூராக ஜொஹஂஜஹாஉஹ꠰ என்று கவி சொல்லாவிட்டால் ஹநுமான் பிரம்மச்சர்யம் விட்டு பத்னிகளுடன் கூடினவராகவேண்டும்.

இப்படி ஒவ்வொரு இடத்திலும் வால்மீகி ஒவ்வொரு வாக்யத்தால் ஸமாதானம் சொல்லியிருப்பதுபோல் வாலியையும் வால்மீகி வாலி வாக்யம் முழுமையுமே விவெதநஃ என்று புத்தி இழந்து புலம்புகிறான் என்று ஸ்திரப்படுத்திவிட்டதாலும் கவி எங்கு எப்படிச் சொன்னாரோ அப்படியே அங்கீகரித்தாக வேண்டுமாதலாலும் மூன்றாவதும் நான்காவதும் பூர்வபக்ஷம்.

முன்சொன்ன புலம்பல்களை எல்லாம் பேசாமல் ஒத்துக்கொள்ளவேண்டும். அப்படி ஒத்துக்கொள்ளாவிட்டால் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு தோஷம் வந்து சேரும் என்பது பிரத்யக்ஷம். ஸீதை சித்தம் இழந்து புலம்பி இருப்பதுபோல் வாலியும் சித்தம் இழந்து புலம்பியிருப்பதால் ஸீதை வாக்யத்தை புலம்பல் என்று ஒத்துக்கொள்ளாவிட்டால் ஸீதை ஹநுமானை தொட இச்சைப்பட்டவளாகிவிடும். பதிவ்ரதா தர்மத்திற்கு லோபம் வரும். அப்படி வாலி வாக்யங்கள் முழுமையும் புலம்பலாக ஒத்துக்கொள்ளாவிட்டால் ராமன் மஹா பாபியாகவேண்டும். ஒரே உபமானம் கொடுத்து இருப்பதால் ஸீதை பதிவ்ரதை இல்லை என்று ஒத்துக்கொண்டால்தான் வாலி வாக்யப்படி ராமன் வாலியை மறைந்தடித்தான் என்றாகும். இப்படி முன் ஒவ்வொன்றுக்கும் வாலிவதத்திற்கும் பொருத்தம் காட்டி ஸகலத்துக்கும் தோஷம் சொல்லப்படும். இக்கிரந்தத்திற்கும் லோபம் காட்டி எவராலும் தடுக்கமுடியாத தோஷாரோபணங்கள் ஏற்பட்டு விடுமாதலால் வாலி வாக்கியங்கள்

ஸகலமும் கவி சொன்னபடி பேசாமல் பேத்தல் என்றே அங்கீகரிக்கவேண்டும் என்று இதன்மூலம் ஸ்தாபனம். இதனுலும் மூன்ருவது நான்காவது பூர்வபக்ஷம்.

வால்மீகி பாலகாண்டத்தில், இரண்டாம் ஸர்க்கத்தில் பக்ஷியை வேடன் அடித்ததில் அயமெ ஶாயதி வி இஜஃ என்று இது அதர்மம் என்ருர். நேரிட வேடன் அடித்தது அதர்மமா? அல்லது ஹநநாக அகாரணாக என்று அகாரணத்தால் அடித்தான் என்பதால் அதர்மமா? அல்லது ஜந்மத்திலேயே வாவநிஷ்டயஃ பாபத்திலேயே நிச்சயமான சித்தவிருத்தி உடையவன் என்று இருக்க இதனுல் அதர்மமா எப்படி? வைரநிலயஃ என்று வைரத்திற்கு இருப்பிடமாய் இருக்கிறவன் என்று இருக்கும்போது எப்படி? சேர்க்கையில பக்ஷிகள் இருக்கும்போது கொன்ருன் என்பதற்கு ஆதாரம் இல்லையே. மியுநாக என்று இறட்டையாய் இருப்பதில் ஏனறிருப்பதால் காஉமொஹிதம் என்று காமத்தால் மோஹிக்கப்பட்டு இருப்பதில் ஒன்றை என்று இருப்பதால் சேர்க்கையில் இருக்கக் கொன்ருன் என்று சிலர் அபிபபிராயம். அதுவும் இல்லையே. அப்படி இருந்தால் அவனு வைரநிலயஃ என்ற பதமும் வாவநிஷ்டஃ என்ற பதமும் எப்படி பிரயோகிப்பது, நிற்க காஉமொஹிதம் என்ருல் காமத்தால் மோஹிக்கப்பட்டு இருக்கிறதென்ருல் இன்னும் சேரவே இல்லை. இனிமேல் சேரவேண்டும். சேர்ந்து இருந்தால் அதற்கு காமத்தால் மோகிக்கப்பட்டு இருக்கிறதென்ற பதம் பிரகரணத்தில் பொருத்தமல்ல. இனிமேல் தான் சேரவேண்டும் என்பது ஸத்யம்.) இதில் வேடனே நேறிட அடித்து இருக்கும்போது அவனை சபித்தாரே வால்மீகி இது அதர்மம் என்கிருரே பாபிஷடன் செய்வதே அதர்மம் என்கிருரே. தொழிலாக உடைய வேடன் செய்வதே அதர்மம் என்கிருரே இப்படி சொல்லும் வால்மீகி, ராமன் வாலியை மறைந்தடித்து இருந்தால் அதர்மம் தானே. இவரும் தண்டனையை அடையவேண்டியதுதானே? இவரை பாபி என்றல்லவோ வால்மீகி வர்ணிக்கவேண்டும், உத்தமன் என்கிருரே. இதே ராமன் காகாஸுரனை காக்கையையும் நேரிடவே அடித்

தாரே தவிற மறைந்தடிக்க இல்லையே. இங்கு வேட நிமித்தத்திலும் வந்த சாபார்த்தமே எப்படி சோகத்தில் வந்ததால் அடிபட்டதோ சாபார்த்தமில்லாமல் எப்படி அனுக்ரஹார்த்தமோ அப்படி வாலி வாக்யமும் புத்தியிழந்து வந்ததால் வாலிவாக்யம் முழுமையுமே பேத்தல் என்று ஸித்தாந்தம். இதனாலும் மூன்றுவதும் நான்காவதும் பூர்வபக்ஷம். (மேலும் ராவண மந்தோதரிகள் கூடிக்கொண்டு இருக்கும்போது ராமன் ராவணனை அடிக்கவில்லை. அவர்கள் ஸ்திரீ புருஷர்கள். அவர்களில் ஒருவரான ராவணனை கொன்றதாக கிரந்தமாதலால் அதையே மானிஷாத என்ற சலோகம் பிரதிபாதிபபதால் மிதுனம் என்பதற்கு ஜெயர, ஸம்ஹஜ என்றதத்வர்த்தம் கிடையாதென்றும் மிதுனம் என்பதற்கு ஸ்திரீ புருஷர்களான இரட்டை என்றுதான் கவி வாக்யப்படி அர்த்தம் என்றும் ஸித்தாந்தம்)

முதல் வாலி சுக்ரீவ யுத்தத்தில் ராமன் வித்யாஸம் தெரியவில்லை அதனால் பேசாமல் இருந்தேன் என்றார். அதனால் வாலியை எதிர்க்கவில்லை. பிறகும் 2-ம் யுத்தம் நடக்க அதில் ஒரு முதல்யுத்தம் நடந்தது. இரண்டாம்யுக்த இரண்டாம்யுத்தத்தில்தான் ராமன் வாலியைவதம் செய்தார். இவர் முதல் யுத்தத்தில் வித்யாஸம் தெரியவில்லை என்றவர் இரண்டாம் யுத்தத்தில் நன்றாய் வித்யாஸம் தெரிந்துகொண்டு இருக்க ஏன் இரண்டாம் யுத்தம் முதல் யுத்தத்தில் வாலியை ராமன் வதிக்கவில்லை என்றால் இருவர் சண்டை போடும்போது நடுவில பிரவேசிப்பது கூடாதென்று இருந்தவர் உடனேயே இடைவெளியில்லாமலேயே இரண்டாம் யுத்தம் யுத்தத்துடனேயே ஆரம்பமாகி விட்டதால் அதில் சுக்ரீவன் களைப்பதைப் பார்த்துக்கொண்டு இருந்தும் ராமன் நடுவில பிரவேசிப்பது கூடாது என்ற தர்மத்தை அவலம்பித்து பிரவேசிக்காமல் சுக்ரீவன் களைத்து இனி சண்டை போட முடியாது என்று கத்தி திக்குகளில் திரும்பின பிறகு, இவர்கள் சண்டை முடிந்த பிறகே ராமன் வாலியை எதிர்த்ததாகக் கவி சொல்லிவிட்டதாலும் கவி நடுவில் அடித்தார் என்று சொல்லாததாலும் ஐந்தாவதும் ஆறாவதும் இரண்டும் பூர்வபக்ஷம்.

ராமன் வாலிக்குபதில் சொன்னபோது ஸாமான்ய ஜனங்கள் வலைகளாலும், பாசங்களாலும் மற்ற ஸாமக்கிரியைகளாலும் மறைந்துகொண்டும் மறையாமலும் மிருகங்களை ஓடிக்கொண்டு இருந்தாலும், தூங்கிக்கொண்டு இருந்தாலும், பிரமித்து இருந்தாலும், பதிந்து இருந்தாலும், களைத்திருந்தாலும் மாம்ஸத்திற்காக பிடிக்கிறார்கள், கொல்லுகிறார்கள். இதில் தோஷம் இல்லை. தர்மத்தை அறிந்த ராஜரிஷிகளும் வேட்டையில (வேட்டையில் என்றால் மறைந்து என்று ஆகவே ஆகாது) மிருகங்களை அடிக்கிறார்கள். நீ சாகா மிருகமானபடியால் நீ என்னுடன் சண்டை போட்டாலும், என்னுடன் சண்டை போடாமல் இருந்தாலும் (அன்னியரோடு சண்டை போடும்போது என்றர்த்தமே கிடையாது) உன்னைக் கொல்லலாம்; ஆனால் நான் உன்னுடன் சண்டைசெய்து உன்னை யுத்தத்திலேயே பாணத்தால் கொன்றேன் என்றார். இப்படி இருக்க ராமன் இதனால் மறைந்தடித்தார், ராமன் இதனால் ஒதுக்கொண்டார் என்கிறார்கள் சிலர். ஒருவிதத்திலும் பொருந்தாது; கவனிப்போம்:— ஜனங்கள் என்று ஸாமான்யர்களைத்தான குறிப்பிட்டார். வில்பிடித்த வீரர்களான ராஜாக்களை குறிப்பிடவே இல்லை. ராஜாக்கள் வில் பிடித்த வீரர்களா வலைகளையும், பாசங்களையும் கொண்டுபோகிறார்கள்? தவிற தனுர்வேத பாரங்கதர்களுக்கு பாசங்களும், வலைகளும் என்னத்திற்கு என்று கவனிக்கலாம். தவிற மாம்ஸத்திற்காக பிடிக்கிறார்கள் என்றார். வாலியை மாம்ஸத்திற்காக அடித்தாரா? அப்படியும் இல்லையே! குரங்கு மாம்ஸம் சாப்பாட்டுக்கு உபயோகம் இல்லையே! மறைந்தும் என்பதை எடுத்துக்கொண்டால் மறையாமலும் என்பதை ஏன் எடுத்துக்கொள்ளக்கூடாது? ஸாமான்ய ஜனங்களுக்கு சொல்லும் தர்மம் தனுர்வேதமறிந்த ராஜாக்களுக்கு கிடையாது. தவிற ராமனே லக்ஷ்மணனிடம் இந்த வேட்டை விஷயமாகச் சொன்னபோது 𑌮𑌾𑌂𑌸𑌹𑍇𑌤𑍋𑌰𑌪𑌿 𑌮𑍃𑌗𑌾𑌨𑍍 𑌵𑌿𑌹𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑌂 𑌚 𑌧𑌨𑍍𑌵𑌿𑌨𑌃 । 𑌘𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣 𑌰𑌾𑌜𑌾𑌨𑌃 𑌮𑍃𑌗𑌯𑌾𑌯𑌾𑌂 𑌮𑌹𑌾𑌵𑌨𑍇 । என்று வில்பிடித்த வீரர்களான ராஜாக்கள் மிருகங்களை மாம்ஸத்திற்காகவாவது விளையாட்டிற்காகவாவது மஹாவனத்தில் வேட்டையில் அடிக்கிறார்

கள் என்றூர். இதில் வேட்டையில் மறைந்தடிப்பது என்பது ராஜாக்களுக்கு இல்லவே இல்லை. முதலில் ஸாமான்ய ஜனங்களுடைய தர்மத்தை சொன்னூர். வில்பிடித்த ராஜாக்களைப்பற்றி சொன்னபோது வேட்டையாடுகிறூர்கள் என்றூரே தவிர மறைந்தடிக்கிறூர்கள் என்று சொல்லவே இல்லை. தவிற முதலில் சொன்னது வில்பிடிக்கத் தெரியாத ஸாமான்ய ஜனங்களுக்குச் சொன்னது. பிறகு ராஜாக்களுக்குச் சொன்னது. ஆதலால் ராமன் விளையாட்டுக்கு அடிக்கவும் இல்லை; சாப்பாட்டுக்கும் இல்லை. விளையாட்டுக்கும் இல்லை சாப்பாட்டுக்கும் இல்லை என்றூல் அப்பொழுது ஸாமான்ய ஜனங்களுக்குச் சொன்ன உபமானத்தை எபபடி எடுத்துக்கொள்வது? ஆதலால் இங்கு இந்த 7 சலோகங்களையும கவி பூர்வபக்ஷம் செய்வதாலும், பல உபமான பிரமாணங்களாலும் மரங்களையும் மலைகளையும் வாலி ராமன்பேரில் எறிய அவைகளை ராமன் பாணங்களால் சேதித்து விட்டதால் உண்டான கோபத்தால் வாலி (வால்மீகி ராமாயணப்படி) மன்மதன் பரமசிவத்தை எதிர்த்தோடி வந்ததுபோல் எதிர்த்தோடிவர அவனை ராமன் உத்தம பாணத்தால் அடித்தார் என்று கவி சொல்லிவிட்டதால் பிரத்யக்ஷ யுத்தம் உண்டு என்று ஸித்தாந்தமாகிவிட்டதால மறைந்தடித்தார் என்பது பூர்வபக்ஷம்.

இனி தர்மங்களைப்பற்றி கவனிப்போம்:—

(1) ராமன் தன் வாயினூல் அயுத்யமாநம் தன்னுடன் சண்டை போடாதவனை கொல்லக்கூடாது. என்ற தர்மத்தை ராமனே லக்ஷ்மணனுக்கு உபதேசித்து இருக்க இவர் உலகவதந்தியின்படி தன்னிடம் சண்டைபோடாத வாலியைக்கொன்றூர் என்றூல இவர் தான் தர்மத்தில் இல்லாமல் மற்றவருக்குத்தான் தர்மோபதேசம் செய்கிறூரா? இபபடி தர்மத்தில் இல்லாதவரை வால்மீகி தர்மிஷ்டர் என்று எப்படிச சொன்னூர். ஆதலால் தனனிடம் சண்டைபோடாத வாலியைக் கொன்றூர் என்பது அங்கீகரிக்கத் தகுந்ததில்லையாதலாலும (2) அந்யேந யுத்யமாநம் ப்ரமத்தமஸாவதாநம் । என்று இருவா சண்டை போடும்போது நடுவில அடிப்பது கூடாது என்று தர்மமாதலாலும்

(3) வராஜுவவயம் வாவயஃ கரோதிவ-வெஸ்ஹா । ஸஹதா நமவுமஉம் முஸிதேவ-ணா கூஉணாம் । எந்த ஒரு தர்மிஷ்டன் எதிராளி பாராமல் இருக்கும்போது மிருகங்களையாவது பக்ஷி களையாவது மனுஷ்யாகளையாவது அடிக்கிருனே அவன் உத்தமர்கள் அடையக்கூடிய புண்ணிய லோகத்தை அடைய மாட்டான் என்று தர்மமாதலாலும் (4) ஒரு தனுர்வேத பாரங் கதன் வேட்டையிலும் மிருகங்களை மறைந்தடிபபதையும் வால் மீகியே நூயமஸகஉ ॥ என்று சொல்லி இருப்பதால் அடிப்பது கூடாது என்றும் (5) வீரர்களான கல்மாஷபாதன, லவணு ஸுரன், அயோத்தியில் உள்ள வில்பிடித்த வீரர்களும், ராமன் இத்தனைபேரும் வேட்டையிலும் மிருகங்களை நேறிடவே கைபலத்தாலும் ஆயுத பலத்தாலும் அடித்து இருப்பதாய் பிர யோகித்து இருப்பதாலும் (6) மறைந்தடிப்பதறகு ஒருவிதமான காரணமும் இக்கிரந்தத்தில் இல்லாததாலும் காரணம் இல்லாத காரியமே கிடையாதாதலாலும, அக்காரியமும் அங்கீகரிக்கத் தகுந்ததில்லையாதலாலும் (7) அதர்மிஷ்டர்களான ராக்ஷஸர் களில் மாயா யுததமான அதர்ம யுத்தம் செய்யும் இந்திரஜித்தன் ஆகாசத்தில் மறைந்துகொண்டு மிருகங்களையும் வானரங்களையும் அடித்தபோது ராமசசந்திரன் வானரர்களைப்பார்த்து சுஜய-உா நமத ஃ வாவ ஃராவணீ ணககூ-உபஃ । என்று இவன் பாபி மறைந் தடிக்கிருன் என்றதாலும் அவன் அயோக்யன் அதர்மிஷ்டன் மறைந்து மிருகங்களையும் மனுஷ்யர்களையும் அடிக்க அவன் பாபி என்கிறதாலும் மறைந்தடிக்கவிலலை என்று பிரத்யக்ஷ மாவதாலும் பாபியான இந்திரஜித்தன் தவிற எந்த ராக்ஷஸர் களாவது வானரர்களை மறைந்தடித்தார்களா இல்லையே. ஆத லால் எதையுமே மறைந்தடிப்பது கூடாதாதலாலும் (8) குற்ற வாளியை எபபடியும் அடிக்கலாம் என்பது கிடையவே கிடையா தாதலாலும் தவிற (9) லக்ஷ்மணன் இந்திரஜித்திடம் யுத்தம் செய்தபோது இந்திரஜித்து லக்ஷ்மணனைப்பார்த்து ஏற்கனவே நான் உங்கள் எல்லோரையும் அடித்தேனே வெட்கமில்லையா என்று லக்ஷ்மணனைக் கேட்க அப்பொழுது லக்ஷ்மணன் இந்திர ஜித்தைப் பார்த்து தஸ்ராஉபிதொஉாமெ-உா நெஷவீர

கிஷேவித: என்று நீ திருட்டுத்தனமாகவல்லவா அடித்தாய் நீ திருடனல்லவா என்றூர். யாரையும் உத்தமர்கள் மறைந்து அடிப்பது என்பது திருட்டுமார்க்கம் என்று லக்ஷ்மணன் நிரூபிப்பதாலும (10) பிந்தி ராவணுதி ராக்ஷஸர்களுக்கும் வானரர்களுக்கும் யுத்தம நடந்தபோது ஒரு வானரத்தையாவது ஒரு ராக்ஷஸனுவது மறைந்தடிக்கவே இல்லையாதலாலும் சாகா மிருகத்தை எபபடியும் அடிக்கலாம், குறறவாளியை எப்படியும் தண்டிக்கலாம் என்று சொல்லும் அதர்மமான இந்த தர்மம், அதர்மத்தையே பிரதானமாகக்கொண்ட ராக்ஷஸர்களுக்கு ஏன் தெரியவில்லையோ தெரியவில்லை. விஷயத்தைக கவனித்தால் இக் கிரந்தரீதியாய் மறைந்தடிப்பது என்பது அதர்மயுத்தம் என்றும் ஸ்திரம். இதை கருடபகவானும குறிப்பிட்டுச் சொல்லுகிறூர். ஆதலால் எந்த வஸ்துக்களையுமே உத்தம தர்மிஷ்டர்கள் மறைந் தடிப்பது கூடாது என்று ஸித்தாந்தமாதலால் தர்ம ஸ்வரூபியான ராமன் தர்மங்களை மீறி மறைந்தடித்தார் வாலியை என்பது அங்கீகரிக்கத் தகுந்ததில்லை என்று ஸித்தாந்தம்.

இப்படி எல்லோரும் கிஷ்கிந்தை வந்ததும வீர்யவானுன சுக்ரீவன் கர்ஜித்துவிட அபபொழுது வாலி அந்த சப்தம்கேட்டு கோபத்தை உடையவனுய்க்கொண்டு யுத்தகளத்தை நாடிவந்து சுக்ரீவனை எதிர்த்துவிட இருவரும் யுத்தம் செய்தார்கள். இப்படி செய்யும்போது கவனித்துக்கொண்டு இருந்த ராகவன் கொஞ்சமாவது இருவருக்கும் வித்யாஸம் தெரியாமல் இருந்த தால் மற்ெருரு சண்டையில இருவரின் வித்யாஸங்களைக் கொண்டு பிறகு எதிர்ப்போம் என்கிற எண்ணத்தைக்கொண்டு ராமன் ரிச்யமூகத்தை நாடிவந்துவிட்டார். இப்படி ராமன் புறப் பட்டபிறகு சுக்ரீவன் தோற்றுவிட்டு ரிசயமூகத்தை நாடி ஓடினுன். வாலியும் துரத்தினுன். சுக்ரீவன் ரிசயமூகத்தில் சென்றதும் வாலி நீ பிழைததாய என்று சொல்லிவிட்டுச சென்றுன். பிறகு சுக்ரீவன் ராகவனைப பார்தது ராகவா! நீா என்னை இப்படிக் கைவிடலாமா என்று கேட்க ராமன் சுக்ரீவனைப்பார்த்து ஈழு‌ம காரெண வெஷெண வ ஊணொ நமெ தந உ। கூ௦உவ–ஜீ வ வாஜூ உவஷ்ரபளவூ: வஈவூரா௦। என்று நீர் இருவரும ஸகலத்திலும்

ஒன்றுயிருந்ததால் ஒரு வித்தியாஸமும் தெரியாமல போய்விட்ட தால் நான் வாலியை எதிர்க்கமுடியவில்லை. ஆதலால் இப்பொழுது உனக்கு ஒரு அடையாளம் போட்டு அனுப்புகிறேன்; இதன்மூலம் வாலி யார்? சுக்ரீவன் யார்? என்று நான் எதிர்ப்பதற்கு தெரிந்துகொள்வேன். அப்பொழுது தவருமல் அவனை எதிர்த்துக்கொல்லுவேன் என்று இப்படி வாக்யத்தை தெரிவித்து லக்ஷ்மணன்மூலமாய் கஜபுஷ்பி என்ற கொடிமாலையைப் போட்டு இரண்டாம் யுத்தத்திற்கு சுக்ரீவனை அனுப்பினுர்.

ஸுக்ரீவா நீ பட்ட அடியெல்லாம் நான் பட்ட அடி என்று சொல்லி உன் சுகதுக்கம் என்னுடையதல்லவா? உன்னை நான் சத்ருவுக்குக் காட்டிக் கொடுப்பேனு என்ருர். (இப்படிச்சொல்லி இருக்கும் இந்த ராமனை சிலர் தூஷிக்கிருர்கள். அதாவது ஏற்கனவே ஸ்னேகமானபோது ராமனுக்கு ஆஸனம் கொடுத்த சுக்ரீவன் லக்ஷ்மணனுக்கு ஆஸனம் கொடுக்கவில்லையென்றும் அதனுல் சுக்ரீவன் பாகவத அபசாரி என்றும் சுக்ரீவன் தன்னை எலும்பை எடுத்தெரியச்சொல்லி மரத்தைப் பிளக்கச்சொன்னதாலும் வாலியிடத்தில் முதல் யுத்தத்தில் அடிபடச் செய்தார் என்று பேத்துகிருர்கள். சுக்ரீவன் ராமனுக்கு ஸமானமானவன் தனக்கு மிகவும் மட்டமான லக்ஷ்மணனுக்கு எப்படி ஆஸனம் கொடுப்பான். லக்ஷ்மணனே சுக்ரீவனை ராமனுக்குச் ஸமானன் என்ருரே. ஆதலால் அடிபடச செய்தார் என்பது பரம கேவலம் என்று ஸித்தாந்தம். பரீக்ஷையில் பரம திருப்தியுடன் இருக்கும் ராமன் சுக்ரீவனை அடிபடச செய்தார் என்பது இன்னும் கேவலம். அவன் சுகதுக்கத்தைத் தன்னுடையதாக எண்ணுபவர் அவனை அடிபடச் செய்தார் என்ருல் இது இன்னும் விபரீதமல்லவா? ஆதலால் இதுவெல்லாம் பிசகு என்றும் ஸித்தாந்தம்.

(இப்படி லக்ஷ்மணனுல் கஜபுஷ்பி என்ற மாலை போடப்பட்டதும் அந்த ஸுக்ரீவன் எப்படி விளங்கினுன் என்ருல் விபரீதகாலத்தில் பகலிலே சூரியன் நக்ஷத்ரமாலையுடன் விளங்குவதுபோல் விளங்கினுன் என்ருர். இந்த இடத்தில் வியாக்யானங்கள் ஸரியில்லை. விபரீதகாலத்தில் பகலில் சூரியன் நக்ஷத்ர

மாலையுடன் விளங்கும் என்றும் கவி ஸ்தாபித்து இருக்கிறார் இக்கிரந்தத்திலும் கவி இரண்டு மூன்று இடத்திலும் காட்டி இருக்கிறார். ஆதலால் மற்ற சாஸ்திராதிகளைக்கொண்டு செய்யும் அர்த்தங்கள் சரியல்ல. ராமாயணம், ராமன் எப்படி ஸ்வதந்திரனோ அப்படி அதுவும் ஸ்வதந்திர கிரந்தமாதலால் வேதங்களோ மற்ற சாஸ்திரங்களோ எதுவும் ராமாயணத்தைக் கட்டுப் படுத்தாது. ராமனையும் கட்டுப்படுத்த முடியாதாதலால் இக் கிரந்தம் போகும் வழியில்தான் இதைச் சொல்லவேண்டும் என்றும் ஸித்தாந்தம்).

பிறகு சுக்ரீவன் கர்ஜித்தான் அப்பொழுது வாலி சண்டைக்கு கிளம்ப உடனே தாரையானவள் வாலியைப் பார்த்து நாதா! வேண்டாம்; சுக்ரீவன் புத்திசாலி; அவன் ஸகாயத்துடனேயே வந்து இருக்கிறான். நமது பிள்ளையான அங்கதன் நந்தவனம் சென்ற காலத்தில் அங்கு சாரர்கள் மூலமாய் சுக்ரீவன் இக்ஷ்வாகு வம்சஸ்தரான தசரதரின் பிள்ளைகளான ராம லக்ஷ்மணர்களிடம் ஸ்நேகம் செய்துகொண்டு இருப்பதாக கேள்வைப்பட்டு அதை என்னிடம் சொன்னான். அந்த ராம லக்ஷ்மணர்களை யுத்தத்தில் ஜயிக்கமுடியாது. அப்படிப்பட்ட ராம ஸகாயத்தை சுக்ரீவன் அடைந்து இருப்பதால் ராமனால் கட்டாயம் நீர் கொல்லப்பட்டு விடுவீர். ஆதலால் யுத்தத்திற்கு செல்லவேண்டாம் என்றும் சொல்லி நீர் சுக்ரீவனைக் கூப்பிட்டால் அவன் வந்துவிடுவன். அவனுக்கு உம்மைவிட வேறு கதியில்லை; உமக்கும் அவனை விட வேறு கதியில்லை. ஆதலால் ஸமரஸப்படுத்திக்கொள்ளலாம் என்று சொன்ன தாரா வாக்யம் கேட்டு வாலியானவன் அவள் வார்த்தையைக் கேட்கவில்லை. (ஏனெனில், அவனுக்கு அழிகிற காலம் வந்துவிட்டதால் கேட்கவில்லை என்றார் கவி) இப்படி கேட்காமல், அவளைப்பார்த்து ராமன் யோக்யன் என்னை அடிக்க மாட்டான் என்று இப்படிச் சொல்லிவிட்டு உடனே ராமனுடன் சண்டை போடுவதற்காக மாலையை எடுத்துப் போட்டுக்கொண்டு யுத்தத்திற்கு வந்தான். இப்படி யுத்தகளத்தை நாடிவந்து சுக்ரீவனை எதிர்த்தான். ராமனை அயோக்யன் என்று எண்ணியே ராமனிடம் சண்டைபோடவே மாலைபோட்டு வந்தவன், தன்னை

எதிர்த்த சுக்ரீவனையே எதிர்த்தான். இப்படி இருவரும் சண்டையை ஆரம்பித்து யுத்தம் செய்ய அப்பொழுதும் ராமன் பார்த்துக்கொண்டே இருந்தார். அப்பொழுது வாலி சுக்ரீவனை அடித்துவிட அதுகண்டு சுக்ரீவன் பரம கோபம் அடைந்து தன் ஸ்வதேஜஸ்ஸால் ஒரு ஸாலமரத்தைப் பிடுங்கி அடித்துவிட அந்த அடி பொறுக்கமுடியாமல் நடுநடுங்கினான் உயிருக்கு மன்றாடினான். பிறகு வாலி மிகவும் கோபமடைந்து ஸுக்ரீவனை அடிக்க சுக்ரீவன் களைத்தான். மறுபடி இரண்டாம யுத்தத்தில் இரண்டாம் யுத்தம் கோரமாய் நடக்க அப்பொழுதும் சுக்ரீவன் களைத்து லாகவ யுத்தம் செய்து அதனால் சிரமம அடைந்து இனி என்னால் சண்டைபோட முடியாதென்பதை வெளிப்படுத்துபவனாய் சப்தித்து திகருகளில் திரும்ப அபபொழுது ராகவன் இருவர் யுத்தம் செய்யும்போது நடுவில் பிரவேசிக்கக் கூடாதென்ற தர்மத்தை அவலம்பித்து ராமன அதுபரியந்தம் பேசாமல் இருந்தவர், அவன் களைத்ததையும், அவன் சண்டை முடிந்ததையும் கண்டு உடனே வில்லை எடுத்து நாணேறிட்டார் அந்த சபதம் யுகாந்த காலம்போல் இருக்க பக்ஷி மிருகாதிகளெல்லாம் பயந்து ஓட லோகம் பிரமிக்க அந்த சப்தம் கேட்டு வாலியானவன் கோபத்துடன் ராமன்பேரில் மரங்களையும், மலைகளையும் பிரயோகம் செய்ய அவ்வளவையும் ராமன் கணுக்குறுகிய பாணங்களால் சேதித்துவிட அதுகண்டு மிகவும் கோபித்து வாலியானவன் ராமனைக் கொல்லுவதற்காக மன்மதன் பரமசிவத்தை எதிர்த்தோடி வந்ததைப்போல் எதிர்த்தோடிவர அப்பொழுது ராகவன் அவனை ஓர் உத்தம பாணத்தால் அடித்துவிட அவன் அடிபட்டதும் கீழே விழுந்தான். மேலும் தீபப்பூச்சி தீபத்தில் வந்து விழுவதுபோலும், ராமன்பேரில் வந்து விழுந்து அடிபட்டான். அவன்பேரில் விட்ட பாணமானது அவன் மார்பில் விழுந்தது எப்படிபோல் எனில் வஜ்ரத்தினால் இந்திரன் மேருவைப் பிளப்பதுபோல் பிளந்தார் என்றார். இப்படி அவன் மார்பில் விழுந்த அந்த பாணமானது அவனுக்கு இதுதான் வீரஸ்வர்க்கம் போகுமவழி என்று காட்டினதே ஒழிய அவனுக்கு ஒரு முக்தியும் கொடுக்கவில்லை. இக்கிரந்த ரீதியாய்

பாணத்திற்காகவாவது அஸ்திரத்திற்காவது முக்தி கொடுக்கும் யோக்கியதை கிடையவே கிடையாது. தவிற ராமன் இவனுக்கு முக்தியை கொடு என்று சொல்லியும் விடவில்லை. மஹா பாபி என்று வால்மீகியால் சொலலப்பட்ட வாலிக்கு எப்படி முக்தியை பாணம் கொடுக்கும்? குலதர்மத்தை மீறி தம்பி பத்னியை அபகரித்த பாபம் மட்டில் ராகவனது தண்டனையினால் போகுமே தவிற பிதுர் துரோகமான பாபம் ஒருநாளும் போகாது என்பது ஸத்யம். இப்படி இவன் அடிபட்டதும் பாணம் ஹ்ருதயத்தைப் பிளந்ததால் புத்தியை இழந்த வாலி அடிபட்டு கீழே கிடக்க அபபொழுது ராமன் கிட்டே நெறுங்கினார். உயிரை ரக்ஷிக்கும் மாலை வாலி கழுத்தில இருந்ததால் அவனுக்கு உயிர்போகவில்லை. ஆனால் பாணம் ஹருதயத்தை பிளந்துவிட்டதால் சித்தம் இழந்து சமீபத்தில் வந்த ஸ்ரீராமனை களங்கமற்ற தர்ம விக்ரஹத்தைப் பார்த்து வாயில் வந்தபடி இல்லாததை எல்லாம் பேச ஆரம்பித்தான். இந்த வாலியை இந்திரன் முடிவில் தன் ரூபத்தில் சேர்த்துக்கொள்ளவில்லை. பிதா துரோகி இவன் என்று இவனை விட்டுவிட்டான். வாசாம்ஷதிம் என்பதற்கு முக்தி என்றர்த்தமே அல்ல. லக்ஷ்மணனால் அடிபட்ட இந்திரஜித்துக்கும் இந்த பதம் பிரயோகம் ஆகியிருக்கிறது. அவனும் முக்தி அடைந்தானு? இன்னும் பலபேருக்கும் பிரயோகம் உண்டு. எல்லோரும் முக்தியடைந்தார்கள் என்றர்த்தமா? முன்பின் ஆதாரங்கள் தான் பிரமாணம். ராமபாணத்தால் அடிபட்ட மாரீச, விராத, கர, கபந்த, கும்பகர்ண ராவணுதிகள் எல்லோரும் முக்தி அடைந்தார்கள் என்று கவி சொனனுரா? இல்லையே! அப்படியிருக்க இவனுக்கு மட்டும் எப்படி பொருந்தும்? வாலியாவது முக்தி வேண்டும் என்று யாரையாவது கேட்டு இருக்கிறுனு? ஆதலால் வாலி முக்தி அடைந்தான் என்பது ஒருவிதத்திலும் பொருத்தம் அல்ல. (அடுத்த ஜன்மாவில் வாலி வேடனுய்ப் பிறந்து ஸ்ரீராமனை கிருஷ்ணனைக் கொன்றுன் என்ற மற்ற எந்த புராணங்களும் யாருடைய வாக்யங்களாயிருந்தாலும் இந்தக் கிரந்த ரீதியில் அவ்வளவும் தள்ளத் தகுந்தது என்பது ஸத்யம. விஷ்ணுவுக்கு தசாவதாரமே தவிற ராமனுக்கு மறுபிறபபு இல்லை. பிறக்கவும்

இல்லை. வாலியால் அதாவது வேடனால ஆடுத்த ஜன்மாவில் தண்டனையை அடையப்போகிறவரை தர்மாத்மா என்று கவி எப்படி எழுதினார்? விஷ்ணுவை, பிருகு, பத்னியை பிரிந்து இருக்கக்கடவீர் என்று சபித்தார். அதை ராமாவதாரம் எடுத்து அதில் அனுபவித்தார் என்பதையும் வால்மீகி பிசகு என்று ஸ்தாபிக்கிறார். சாபத்தை அடைந்திருக்கும் பாபிஷ்டனையா வால்மீகி உத்தமன் என்றும், தர்மிஷ்டன என்றும் சொன்னார் என்று கேள்வை? மேலும் பரமசிவன் உள்பட ராமனை பரமாத்மா என்று ஸ்தோத்திரம் செய்தாரே பாபமுள்ள இவரையா ஸ்தோத்ரம் செய்தார், எப்படி? நாரதர் ஸர்வகுண ஸம்பன்னன் என்றும், உத்தமன் என்றும், சுத்த விக்ரஹம் என்றும், தர்மிஷ்டன் என்றதும் சாபம் அடைந்து இருக்கிற வனையா சொன்னார் என்றும மேலும் கேள்வை? இந்த ஜன்மாவில் வாலியைக் கொன்றது பிசகு என்றும் அதற்காக அடுத்த ஜன்மாவில் வேடனால் அடிபட்டார் என்று சொல்லுவது உண்மையானல ராமன் பாபியல்லவா? இவரையா தேவர்கள் துதித்தார்கள் எப்படி? பரமசிவனையும் மற்ற தேவர்களையும் தரிசித்து இவருக்கு அந்த பாபம் போகவில்லையா? இது நிஜமா? எப்படி? இந்த ராம விக்ரஹத்திற்கு ஒரு சாபமும் கிடையாது. முன் ஜன்மத்திலும் கிடையாது; இந்த ஜன்மத்திலும் கிடையாது; அடுதத ஜன்மத்திலும் கிடையாது. இது பரபிர்ம்மம் என்று ஸ்தாபிக்கப்பட்டு இருப்பதால் மற்ற எந்த புராணங்களும், எந்த வேதங்களும் ராமனையும், ராமாயணத்தையும் கட்டுப்படுத்த முடியாது என்று ஸித்தாந்தம். இந்த வால்மீகி சொல்லியிருக்கும விஷயத்தை கவனித்தால் ராமனை பரபிர்ம்மம் என்று நிரூபித்து இருக்க அதற்கு பிறப்பு எது? இப்படிப்பட்ட பிர்ம்மம் ஒரு தோஷத்தையும் உடையதில்லை. தேவர்கள் பிரார்த்தனைக்காக தன்னை அறியாமல மனுஷ்யனாய் இருந்த விக்ரஹம் என்று ஸ்தாபித்து இருப்பதால் இந்த கிரந்தத்திற்கு ஒன்றும் ஆதாரம் ஆகாது. அததற்கு அததுவேபிரமாணம். ஆதலால் மற்ற எதையும் ஸ்ரீமத் ராமாயணத்திற்கு ஆதாரம் சொல்லக் கூடாதென்பது ஸத்யம்.)

இப்படி அடிபட்டு விழுந்த வாலி ராமனைப் பார்த்து ஏ ராமா! நீர் என்ன காரியம் செய்தீர்? நான் உம்மைப் பாராமல் இருக்க நீர் என்னை அடித்தீரே; உம்மால் என்ன அடையப்பட்டது என்றான். மேலும் லோகத்தில் உம்மை ஸர்வ குணத்துடன் கூடினவன் என்று சொல்லுகிறார்களே நீ ஸர்வ குணங்களையும் விட்டுவிட்டீரே நான் சண்டைக்கு வரும்போது தாரையால் தடுக்கபபட்டும் கேளாமல் வந்து உம்மால் நான் அந்யாயமாய் அடிபட்டேன். காய் கிழங்கை தின்றுகொண்டு இருக்கப்பட்டவனான வானரனான என்னை ஏன் அடித்தீர்? ராஜ குலத்தில பிறந்து நீர் இப்படி அதர்மத்தைச் செய்யலாமா? தர்மவானென்று பிரஸித்தனாயிருந்து க்ரூரகர்மாவைச் செய்ய லாமா? உமக்கும் எமக்கும் எதில் விரோதம்? நாளைக்கு பெரி யோர்கள் கோஷ்டியில் காட்டில் இருக்கும் மிருகமான குரங்கை கொன்றேன் என்று வெட்கமில்லாமல் எப்படி சொல்லிக்கொள் வீர்? நீர் மஹா பாபி; தசரதன் குலத்தில் எங்கிருந்து பிறந்தீர்? நீர் பத்னியை இழந்ததும் உமது பத்னியையும் இழந்துவிட்டீர்; நீர் மூர்க்கன், சடன் என்றும் திரஸ்கரித்து, மேலும் ராஜாவைக் கொன்றவன், பிராம்மணனைக் கொன்றவன், நாஸ்திகன், தமைய னுக்கு கல்யாணமாகாமல இருக்க கல்யாணம் செய்துகொண்ட தம்பி, திருடனைக் கொன்றவன், பிராணி வதம் செய்தவன். இவர் களுக்கு நரகம் என்று நியாயம் இருக்க என்னை ஏன் அடித்தீர் என்றான். மேலும், அயோக்யனை உத்தம ஸ்திரீகள் எபபடி அடையமாட்டார்களோ அப்படி நீர் அயோக்யனானதலால் அந்த உத்தமியான அயோத்யா தேவதை உம்மையடையவில்லை. யுத்தத் தில் என் எதிரில் நீர் இருந்திருந்தால் உம்மை நான் கொன்று இருப்பேன். நீர் எமனைப் பார்த்திருப்பீர் என்று சொல்லி மேலும், நீர் என்னிடத்தில் சொல்லியிருந்தால் ஓரே நாளில் நான் ராவணனைக் கொன்றுவிட்டு ஸீதாதேவியை கொண்டுவந்து கொடுத்து இருப்பேன் என்று இப்படி ராமபலத்திற்கு பாம அல்பபலமுள்ளவனான வாலியானவன் பலவிதமாய் இல்லாதது களை எல்லாம் புலம்பினான். இப்படி சொன்ன அவன் வாக்யங் களை ராகவன் கேட்டார்.

வால்மீகி, ராவணனால் அடிபட்ட அனரண்ய மஹாராஜன் பிறகு அவன் தன்னை அவமதித்துப் பேசியதால அவனை சபித்தான். அப்படி சபித்த அனரண்யனை அவன் புலம்பினான், புத்தியிழந்தான் என்று கவி சொல்லவில்லை. தசரதனால் காட்டில் அடிபட்ட ரிஷி குமாரனும் புத்தியிழந்து புலம்பினான் என்று கவி சொல்லவில்லை. ஏன் அவர்கள் புலம்பவில்லை எனறால் அடிபட்டாலும் அவர்கள் புத்தியிழக்கவில்லை என்றார் கவி. ஆனால் வாலியை புத்தியிழந்தவன், சித்தமிழந்தவன் என்றார். இப்படியே வால்மீகி ஜாபாலியை தர்மத்திற்கு விரோதமாய் பேசுகிறார் என்றார். வாலியை புத்தியிழந்து பேசுகிறான் என்றார். தவிற, வாலி ராமனை தூஷித்த பிறகு வால்மீகி தர்மஸம்ஹிதமான வார்த்தையை வாலி சொன்னான் என்றார். வாலி ராமனைப் பார்த்து ராஜாவைக்கொன்றவன், பிராமணனைக் கொன்றவன், பசுவைக் கொன்றவன், திருடனைக் கொன்றவன், பிராணிகளைக் கொன்றவன், தெய்வமில்லை என்கிறவன், தமையனுக்கு கல்யாணமாகாமல் இருக்க கல்யாணம் செய்துகொண்ட தம்பி இவர்களுக்கு நரகம் என்று வாலி சொல்லி பிராணியாயும் ராஜாவுமான என்னை நீர் சொன்னதால் நீர் நரகமடையுவீர் என்றான். வாலி வாக்யம் தர்ம ஸம்ஹிதமானல் ராமன் நரகத்தை அடைந்து இருந்தால் அது வாஸ்தவம். எப்பொழுது நரகமடையவில்லையோ! அப்பொழுதே வாலி வாக்யங்கள் தர்மஸம்ஹிதமென்பது பிசகல்லவா? மேலும் இதனாலேயே புத்தி யிழந்தவனால் சித்தமிழந்தவனால் சொல்லப்பட்டது என்றார். இது நிஜமா? வாலி சொன்னதுகள் தர்மஸம்ஹிதமானல், வாலி ராமனை மூர்க்கனென்றும், பாபி என்றும், குணங்களை விட்டவன் என்றும் சொன்னானல்லவா! இதனால் ராமன் பாபி என்பதும், குணங்களை விட்டவன் மூர்க்கன் என்பதும் ஸத்யமல்லவா? இது உண்மையானல் வால்மீகி நாரதரிடம் ஸ்ரீராமபட்டாபிஷேகத்திற்கு பிறகு ராமாயணம் செய்பவர், உத்தமன் யார்? ஸர்வகுண ஸம்பன்னன் யார், தர்மிஷ்டன் யார் என்று கேட்டு இருக்க நாரதர் அது ராமன் தான் என்று சொல்லி, இப்பொழுது யார் வாக்யம் நிஜம் எனறு கேள்வை? இப்படி ராமன் உத்தமன் என்று கேட்டுக்

கொண்டு இருப்பவர் எவவிதத்தில வாலி வாக்யத்தை தர்ம ஸம்ஹிதம என்று சொலலுவார் என்று கேள்வை? அதனுல்தான் சித்தம் இழந்தவன் என்று அடுத்த வரியிலேயே குறிப்பிட்டார். தவிற வாலி வாக்யம் தர்மஸம்ஹிதமானுல் ராமன் நரகத்தை அடைந்து இருக்கவேண்டும். ஏனெனில் மிருகத்தை அடித்த வனுக்கு நரகம் என்கிறுன. வாலி தன்னை மிருகம் என்றும் குறிப்பிட்டும் இருக்கிறுன். நான உம்மைக் கண்டு இருந்தால் உம்மைக் கொன்று இருப்பேன் என்கிறுன். விஷ்ணுவின் பாதி பலத்துடன் கூடினவனுயும் அழிவில்லாத நித்யனுன ராமனை அழிக்க இவனுல் (அழிவை உடைய வாலியால்) முடியுமா? வாலி பலம் எஙகே? மஹா பலிஷ்டனுன ராமபலம் எங்கே? அடிபட்டு இபபடி வாலி பொறுக்காததால தான் செய்யமுடியாததை எலலாம் சொன்னுன். வாலமீகி வாலியையும் வானரர்கள் ஸகலரையுமே மிருக கோஷ்டியிலேயே சேர்த்து இருப்பதால் இவர்களுக்கு மனுஷ்ய தர்மம் கிடையாது. மிருக தர்மம் என்றே ஸ்பஷ்டம. மேலும், ராமன் இக்கிரநதத்தில் மனுஷ்ய தர்மத்தையும் காட்டி மிருக தர்மத்தையும் காட்டினுா. எப்படிபோல் எனில் ஸாமான்ய வேடாகள் மிருகஙகளை அடிக்கும் வழியையும் காட்டி தர்மம் தெரிந்த ராஜாக்கள் மிருகங்களை அடிக்கும் வழியையும் காட்டினதுபோல காட்டினுர். ஆதலால் ஸகலத்திற்கும் வால்மீகி வாகயமே முதல பிரமாணம். மிருகமான இவனை மறைந்தடிக்கலாமென்றுல வாலியும் மிருகத்தை மறைந்தடிப்பது பிசகு என்றுன். இது நிற்க, சில ஜனங்கள் (இக்கிரந்தத்தை ஆராய்ச்சி செய்யாதவர்கள்) மிருகதனை எப்படியும் அடிக்கலாம் என்று ராமன் சொனனுர். அது கேட்டதும் வாலி ஒத்துக்கொண்டுவிட்டான் என்கிறுாகள். அப்படி ராமன் சொல்லவே இல்லை. க்ஷத்திரியர்கள் மறையவே கூடாது. தவிற இபபொழுது வாலி வாக்யம் தர்மமானுல ராமன் நரகத்தை அடைந்து இருக்க வேண்டும். வாலி வாக்யஙகள தர்மம் இல்லையானுல் தர்மத்துடன் கூடின வார்த்தை என்று சொன்னது பிசகாகவேண்டும். ராமன் வாலியைப் பார்தது உனக்குத் தர்மம் தெரியவில்லை என்றுர். வால்மீகி ராமாயணததில் சூக்ஷ்ம தர்மம் என்று

ஒன்று கிடையாது. தர்மம் என்பது பரம சூக்ஷமம் என்பது தான். ராமன், வாலி வாக்யங்களை தர்மம் இல்லை என்கிறார். இப்பொழுது எது நிஜம்? ஸ்ரீராமனை தர்ம விக்ரஹம் என்றும் தர்மம் அறிந்தவன் என்று வால்மீகி வாக்யம் இருக்கிறதே. இப்பொழுது வாலி வாக்யம் தர்மத்துடன் கூடினதா? ராம வாக்யமா என்று கேள்வை? வால்மீகி வாலி வாக்யங்களை சித்தம் இழந்த வாக்யங்களாய்ச சொன்னதால் அதுகள் தள்ளத்தகுந் ததுகள் என்று பிரத்யக்ஷம். தவிற வாலி வாக்யம் தர்மஸம்ஹித மானுல், வாலி நான் அடிபட்டதால் சித்தமிழந்து புலம்பிவிட்டே னென்றான். முன் சொன்னதெல்லாம் பிசகு, மன்னிக்கவேண்டு என்றான். முன் சொன்னதுகள் தர்ம ஸம்ஹிதமானுல் முன் சொன்னதுகள் பிசகு என்றும், சித்தமிழந்ததால் சொன்னேன் என்றனே எபபடிச் சொன்னுன்? இபபொழுது அதுகள் தர்ம ஸம்ஹிதமா? எப்படி? வால்மீகி சித்தமிழந்தவனுை வாலியால் ஆபாஸ தர்மத்துடன் கூடின வாக்யத்தை சொன்னுன் என்றார்.

ஏனென்றால் வாலியை அடித்தபிறகும் உத்தம குணங் களுடன் கூடினவனை இல்லை என்றும் தர்மிஷ்டனை அதர்மிஷ்டன் என்றும் சொலலுவதால் ஆபாஸதர்மம் என்கிறார். பிந்தி வாலி தன் வாக்யங்களை சித்தமிழந்ததாய் குறிப்பிட்டதாலும் ஆபாஸ தர்மம் என்கிறார். வால்மீகியும் தன்வாக்யத்தாலும், வாலி வாக்யத்தாலும், ராகவ வாக்யத்தாலும், வாலி வாக்யங்களை அதர் மங்களாய்க் காட்டிவிட்டதாலும் அடிபட்டதால் சித்தம் இழந்து இலலாததை எலலாம் பேத்துவதாலும், அந்த ஸர்க்கம் முழுமையுமே பேத்தல என்று வால்மீகி ஸ்தாபித்தார. ஆத லால் அவ்வளவும் புலம்பலாதலால் அவவளவுக்கும் கௌரவம் கிடையாதென்று ஸித்தாந்தம். நாரத, வாலமீகி வாக்யங் களால் வாலி வாக்யங்கள் நிராகரிக்கப்பட்டதாலும், பிரத்யக்ஷம். இப்படி புலமபின வாலி வாக்யத்தைக்கேட்டு ஸ்ரீராமசசந்திரன் புலம்பின அவனைப்பார்த்து ஒருவன் தனக்கு நூறு அபராதம் செய்தாலும் அவனிடமும் அன்புகொள்ளும் குணமுள்ளவ னுதலாலும் தர்மத்தில் இருக்கும் தன்னை அலக்ஷயம்செய்து திரஸ்கரித்த அவனைப்பார்த்து அவன் குற்றத்தை அவனுக்கு

வெளிப்படுத்த வேண்டும் என்று எண்ணி நீ உன் குலதர்மத்தை மீறியதால் உன்னைக் கொன்று நான் தர்மத்தை ஸ்தாபித்தேன். நீ தர்மத்தை விட்டவன். குற்றவாளியை தர்மிஷ்டனான ராஜன் தண்டிக்காவிட்டால் அந்த பாபத்தை அந்த ராஜன் அடையாததாலும் நான் லோகாபவாதத்திற்கு பயப்படுகிறவனாதலாலும் உன்னை நான்நேரிடவே கொன்று தர்மத்தை ஸ்தாபித்தேன். ஸர்வ விதத்திலும் உனக்கும் எனக்கும் சத்ருபாவமாதலாலும் நீ அதர்மிஷ்டனாதலாலும், தர்மத்தைத் தெரிந்துகொள்ளாதவனாதலாலும் நான் உன்னைக் கொன்றேன். உத்தம பெரியோர்கள் செய்த மார்க்கத்தில் நான் இருக்கிறேன். எனது மூதாதையான மாந்தாதா காலத்தில் உன்னைப்போல் ச்ரமணன் என்றொருவன் தன்குலதர்மப்படி தம்பி பத்னியை அடையக்கூடாது என்கிற சட்டத்தை மீறி தம்பி பெண்டாட்டியை இழுக்க அவனை அவர் கொன்றார். நீ, உன் குலதர்மமான தம்பி உயிருடன் இருக்கும்போது தம்பியின் பத்னியை தமையன் அடையக் கூடாதென்றும் தமையன் உயிருடன் இருக்கும்போது தமையன் பத்னியை தம்பி அடையக் கூடாதென்ற குல தர்மத்தை மீறி உன் தமபி உயிருடன் இருக்கும்போது உன் தம்பி பத்னியை நீ அபகரித்ததால் உன்னை கொன்று நான் தர்மத்தை ஸ்தாபித்தேன். ராஜர்ஷியான நான் நீ சாகா மிருகமாயிருந்தும் நீ எனக்கு மாம்ஸத்துக்காவது விளையாட்டிற்காகவாவது உபயோகபபடாதவனாதலாலும் நீ பௌருஷத்துடன் கூடினவனாதலாலும் நான் என் பௌருஷத்தால் உன்னைக் கொன்று உத்தம கீர்த்தியை அடையவேண்டியும் நீ குல தர்மத்தைவிட்டதால உனனைக்கொன்று குலதர்மத்தை ஸ்தாபிக்கவேண்டியும் இருப்பதால் நான் உன்னுடன் சண்டை போடவே பல பாணங்களை பொறுக்கிக்கொண்டு வந்ததால் உன்னுடன் சண்டைபோட்டு நீ என்பேரில் போட்ட மலைகளையும் மரங்களையும் அழித்து உன்னையுமழித்து தர்மத்தை ஸ்தாபித்து இருப்பதாலும் இந்த தலைவாங்கும் தண்டனைக்கு மேல் தண்டனை இருந்தால் அதையும் உனக்குச செய்திருப்பேன் இலலாததால் இத்துடன் உன்னை விட்டேன், என்று

சொல்லி, அடிபட்டதால் ஏன் புத்தியை இழந்து கண்டபடி இல்லாததெல்லாம் புலம்புகிருய் என்றும் சொல்லி மேலும் வேட்டையாலும் தர்மம் தெரிந்த ராஜாக்கள் மிருகங்களேயோ மற்ற வஸ்துக்களேயோ மறைந்தடித்தால் அவர்களுக்கு நரகமாத லாலும் மறைந்தடித்தால, மிருகஙகளைக்கூட நேரிட அடிக்க யோக்யதை அற்ற அவர்களுக்கு தனுர் வேதம் அறிந்தவர்கள் என்ற பெயரே கிடையாதாதலாலும், நீ சொலலுவது அவ்வள வும் பேத்தல் என்று அவனை அதிக்ஷேபம் செய்து மேலும் தேவர் கள் மனுஷ்யர்களாய் ராஜாக்களாய் பூமியில ஸஞ்சரிக்கிருர்கள். ஆதலால் நீ உத்தமர்களான, தர்மத்தையும் ஸத்யத்தையும் பிர தான உடைய மஹாபுருஷர்களான ராஜாக்களை தூஷிக்காதே என்று அவன் குற்றத்தை அவன் அறியும்படி சொல, அவன் குற்றங்களைக் கேட்டு குற்றங்களை வியக்தமாய் அறிந்துகொண்டு நான் சொன்னதெல்லாம் பிசகு எனனை மன்னிககவேண்டும் என்று சொல்லிவிட்டு, என் பிள்ளை அஙகதனை காாககவேண்டும் என்று ராகவனைப் பார்த்துச சொல்லிவிட்டு அஙகதனைப் பார்த்து சுக்ரீவனுக்கு வசமாய் இருக்கச் சொல்லிவிட்டு, சுக்ரீ வனைப்பார்த்து நான் உனக்கு அபராதங்களைச செய்துவிட்டேன். அதுகளைப் பொருத்துக்கொள், என்றும் சொலலி ராமகாரி யத்தை நீ செய்யாவிட்டால் ராமன் உன்னைக் கொன்றுவிடு வான். (சாகும்போதுகூட வாலிக்கு ராமனிடம் நலல எண்ணம் இல்லை.) நான் தாரை வார்த்தை கேளாமல் அழிந்துபோனேன் என்றும் சொல்லி, இந்த மாலையை நீ போட்டுக்கொள என்றும் சொல்லி மாலையை சுக்ரீவனுக்கு கொடுத்துவிட்டு வாலி ப்ராணனை விட்டுவிட்டான். (ராமன் வாலி கேட்டதற்கெல்லாம் ராமன் பதில் சொல்லிக்கொண்டு இருக்கவில்லை. வால்மீகி அவன் வாக்யங்களை நிராகரிக்கிருர் என்கிருர். தவிற அவனை திரஸ் கரித்துப் பேசினுர் என்ருரே தவிற ராமன் பதில் சொல்வதாக வால்மீகி சொல்லவில்லை. தவிற ராமனே வதம் செய்ததற்கு காரணம் சொன்னுரே தவிற அவனுக்கு இவர் பதில் சொல்லவே இல்லை என்றும் பிரத்யக்ஷம். வாலியால ராவணனை அசைக்கமுடி யாதென்றும், தன் பிதா இந்திரனை இந்திரஜித்துப் பிடித்து

கட்டியபோது வாலி ராஜ்யபரிபாலனம் செய்துகொண்டு இருக்க லங்கைப் போய் தகப்பனை விடுவிக்க யோக்யதையற்ற இவனுக்கு ராவணனைக் கொன்று ஸீதையை ராமனிடம் கொடுக்கும் யோக்யதை கிடையாது என்றும், வாலி கார்த்தவீர்யார்ஜுனன், சுவேதத்வீப பெண்டுகள் இவ்வளவு பேரிடமும் ராவணன் கட்டுப்பட்டது கர்வத்தினால் பங்கமே தவிற வேறு அல்ல என்றும் இத்தனைபேர் ஒன்றுதிரண்டு வந்தாலும் ராவணனை அசைக்கமுடியாதென்றும் கர்வம் ஏற்பட்டால் மஹாபலிஷ்டர்களையும் அல்ப பலிஷ்டர்கள் அவமானப்படுத்திவிடுவார்கள் என்று கவி சொன்னதால் இது பிரயோசனை என்று ஸித்தாந்தம். தவிற வாலி இந்திராம்சமுள்ள விஷ்ணுவின் பாதி அம்சமுள்ள ராமனைக் கொல்லமுடியாது அடிபட்டதால் பேத்துகிறான் என்றார் கவி. வால்மீகி அவன் வார்த்தைகள் அத்தனையையும் நிராகரித்துவிட்டதால அவன் வார்த்தைகள் கௌரவமில்லாதது என்று ஸித்தாந்தம்.)

சிலர் ராமனும் வாலியும் ஒத்துப்போய்விட்டார்கள் அதைப் பற்றி நமக்கென்ன என்கிறார்கள். இதுவும் பிசகு என்கிறார் கவி. ஒத்துபபோயிருந்தால் வாலி சுக்ரீவனிடம், நான் தாரை சொல்லைக் கேளாமல் அனியாயமாய் அடிபட்டேன்; நீயும் கேளாமல் இருந்துவிடாதே என்று சொல்லி பிராணனை விட்டான். இப்படியிருக்க ஒத்துப்போன அழகு என்ன அழகோ! சிலர் மிருகத்தை எப்படியும் அடிக்கலாம் என்கிறார்கள். அப்பொழுது மறைந்துதான் அடிப்பானேன்! இதனாலும் பிசகு. ராவணனுக்கு தூதனுப்பின ராகவன் வாலிக்கு குலதர்மத்தை விட்டவனாதலால் தூதனுபபவில்லை. கபந்தன் வாலி வதம் செய்யும் என்றதால் தெய்வ வாக்யத்தால் வாலி வதம் செய்தார் ஆதலால் கண்டவர்கள் வாக்யங்கள் உபயோகமில்லை. மற்றும் சிலர் மனுஷ்யனுக்கு தோஷம் இருக்கவேண்டும்; அப்படி ராமனுக்கு தோஷம் உள்ள மனுஷ்யன் என்கிறார் கவி. இந்த வம்பு வரும் என்றே வால்மீகி முதல் ஸர்க்கத்திலேயே ஒருவித தோஷமும் இல்லாத மனுஷ்யன் யார் என்று நாரதரைக் கேட்டிருக்க நாரதர் ராமன் என்று ஸ்தாபித்து இருக்கிறார். இதையே கவி மறுபடி

அயோத்யா காண்டம் முதல் ஸர்க்கத்திலும் ராமனை ஸர்வகுண ஸம்பன்னனாயும் ஒருவித தோஷமும் இல்லாத உத்தம மனுஷ்ய னாயும் காட்டிவிட்டதால் கண்ட ப்ராகிருதர்களான அக்ஞானிகள் வாக்யங்கள் அங்கீகரிக்கத் தகுந்ததில்லை என்று ஸித்தாந்தம்.

இப்படி வாலியானவன் பிராணனை விட்டதும் யுத்த களத்தில் அடிபட்டவனுக்கு ஒரே நாளில் ஸர்வகர்மாவுமான படியால் ஸகல வானரர்களும் வாலிக்கு ஸ்நானாதி காரியங்களைச் செய்து அலங்காராதிகளைச் செய்துவிட, உடனே அற்புதமான பல்லக்கு வந்துவிட வாலியை அதில் சயனிக்கபண்ணி அப பல்லக்கை வானரவீரர்கள் வஹித்துவர உத்தமபூமியை நாடிச் சென்றார்கள். அங்கு அடுக்கப்பட்டு இருந்த சிதையில வாலியை சயனிக்கப்பண்ணிவிட சுக்ரீவன் அங்கதனுடன் ஸர்வ காரியங் களையும் வாலியை உத்தேசித்து முடித்துவிட்டு ஸர்வ அந்தப்புர ஸ்திரீ ஜாதிகளையும் அரண்மனைக்கு அனுப்பிவிட்டு ராம ஸமீ பத்தை அடைந்தான். உடனே ஹநுமான் ராகவனை சுக்ரீவ னுக்கு பட்டாபிஷேகத்தைச் செய்விக்கவேண்டும் என்று பிரார்த் திக்க, பகவான ஹநுமானைப்பார்த்து நமது எஜமானான சுக்ரீ வனுக்கு நீரே பட்டாபிஷேகத்தைச செய்யும் என்று சொலலி ஸுக்ரீவனைப்பார்த்து நீ அங்கதனுக்கு யுவராஜ்ய பட்டாபி ஷேகத்தை செய்யும் என்று தெரிவிக்க, அவனும் அங்கீகரித்து பட்டணத்தை அடைந்தான். ஹநுமான் அறபுதமாய் அலங் கரிக்கப்பட்டு விளங்கும் கிஷ்கிந்தையில் ரத்னமயமான ஸிம்மா ஸனத்தில ஸுக்ரீவனை உட்காருவித்து அஷ்டவஸுக்கள் தேவேந்திரனுக்குப் பட்டாபிஷேகம் செய்தால் எப்படியோ அப்படி சுக்ரீவனுக்குப பட்டாபிஷேகம் செய்தார். சுக்ரீவனும் அஙகதனுக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகம் செய்தார். இப்படி சுக்ரீவன் பட்டாபிஷிக்தனாகி தன் பத்னி ராஜ்யம் முதலிய ஸர்வத்துடன் பரமானந்தத்துடன் விளங்கினான். ஸாக்ஷாத் ராகவன் லேசில யுத்தத்தில் அசைக்கமுடியாதவாலியை எதிர்த்து கோரயுத்தம செய்து அவர் தன்பேரில பிரயோகித்த மரங்கள் எல்லாம் நாசம் செய்ய, அவன் கோபித்து எதிர்த்து ஓடிவர அவனை ஒரு உத்தமபாணத்தால் அடித்துத் தள்ளினார் என்று

கவியே ஸ்தாபித்து இருப்பதால் ராமன் வாலியை மறைந்து அடிக்கவே இல்லை நேரிட அவனிடம் யுத்தமசெய்தே கொன்றார் என்றே ஸித்தாந்தம். நாரத வாக்யம் வால்மீகி வாக்யம்தான் பிரமாணமாதலால் இவ்விருவர் வாக்யப்படி ராமன வாலியை நேரிடவே யுத்தம்செய்து கொனறார் என்றும ஸித்தாந்தம்.

---

29. பாணத்திற்காவது அஸ்திரத்திற்காக சாஸ்திரத்திற்காவது உத்தம கதியை கொடுக்கும் சக்தி கிடையாது என்பது.

கிஷ்கிந்தா காண்டம் 17-ம் ஸர்க்கம் 8-ம் ச்லோகம் [illegible] என்று ராமனுடைய விலலென்று விடப்பட்டதான பாணமானது (அஸ்திரம எனறு பொதுப்பேராய் கவி போட்டு இருக்கிறார். இது அஸ்திரமலல ; பாணம்) அந்த வீரனை வாலிக்கு இதுதான வீரஸ்வர்க்கத்தை அடையும்படியான வழியென்று வழியைக்காட்டினது என்றுதான் ஸ்லோகத்திற்கு அர்த்தம. உலகத்தில சொலலும் வழக்கமென்னவென்றால் ராமனுடைய அஸ்திரமானது அந்த வீரனுக்கு வாலிக்கு ஸ்வர்க்கததை அடைவித்து, அத்துடன் மோக்ஷத்தைக் கொடுத்தது, பிர்ம்ம லோகத்தைக கொடுத்தது என்று வியாக்யானமும் உண்டு இதை கவி பூர்வபக்ஷம் செய்கிறார். ஏனென்றால் முக்தியை அளித்துவிட்டது என்றால் செத்தவன் எப்படிவருவன் உயிரை விட்டால்தான் மேல்லோகம் போகமுடியும். இந்தச் சலோகத்திற்கு பிறகுதானே வாலி இராமரிடம் பேசப்போகிறான் அப்படியிருக்க முக்தியடைந்தவன் என்றால் எப்படித் திரும்பி வந்தான் ? பிர்ம்ம லோகம் போனவன் எப்படி வந்தான் ? தவிற முக்தியை அடையப் போகிறவன் என்றால் இவனுக்கு முக்தி ஏது ? இவன் பாபியல்லவா ? இவன் பிதுர்துரோகி அல்லவா ? ராமனால் அடிபட்டுவிட்டதால் பிதுர்துரோகமான பாபம் போகுமா ? ராமனால் அடிபட்டதால் வாலிக்கு தம்பி பெண்டாட்டியை இழுத்த பாபம் ஒன்றும் போனதே தவிற

மற்ற பிதுர்துரோகமான பாபம் போகவே போகாது. பிதுர் துரோகமான பாபி என்றே இந்திரன், வாலியை தன்னிடத்தில் லயப்படுத்திக்கொள்ளவில்லையே. யாராலும் பிதுர் துரோகத்தை போக்கமுடியாது. ராமனே தன் தம்பி பரதனையும், அம்மா கைகயீ தேவியையும் (தகப்பன் பிள்ளையைக் கைவிட்டு விட்டால் அவனை எந்த தெய்வமும் கைகொடுக்காததலாலும் எத்தனை ஜந்மா எடுத்தாலும் அந்த பிதா இவனை புத்ரன் என்றங்கீகரித்த பிறகுதான் எந்த தெய்வமும் கைகொடுக்குமாதலாலும் அப்படியே எந்த பத்னியை அவளிடம் அபவாதத்தைக் கண்டு அல்லது அவளது விபரீத குணத்தைக்கண்டு அவளை நீ என் பத்னி அல்ல என்று வர்ஜித்துவிடுவானேயாகில் அவளையும் எந்த தெய்வமும் கைகொடுக்காததலாலும்) தசரதரிடத்தில் அவருக்கு பரதனை பிள்ளையாயும், கைகயியை பத்னியாயும் அங்கீகரிக்கும் வரம் வாங்கிகொண்டு வந்ததாய் யுத்தகாண்டத்தில இருக்க ராமனுக்கு வாலியின் பிதிர்துரோகமான பாபத்தை எப்படி போக்கமுடியும்? வாலி ராமனிடம் சேர்ந்துகொண்டு ராவணனைக் கொல்லுவதற்காக இந்திரனால் உண்டுபண்ணப்பட்டு இருக்க அதை விட்டுவிட்டு வாலியானவன் ராவணனிடம் சேர்ந்துகொண்டு பிதிர்துரோகியான பாபியாய் ஏற்பட்டதினாலேயே, (ராமாவதாரம் பூர்த்தியாகிறபோது ராம ஸகாயமாக ஜனித்த அத்தனை வானரர்களும் எந்தெந்த தேவதைகளிடத்தில் இருந்து ஜனித்தார்களோ அந்த இடத்தில லயத்தை அடைந்தார்கள். சுக்ரீவன் சூரியனையடைந்தான் நீலன் அகனியையடைந்தான் என்று ஸ்ரீமத்ராமாயணம்) அவரவர்கள் அந்த அந்த யோனியை அடைந்தார்கள். அவரவர்களிடம் லயத்தை அடைந்தார்கள்.) ராமனால் அடிபட்ட வாலியை இநதிரன் பிதிர்துரோகி என்று சேர்த்துக்கொள்ள இல்லை என்றார் கவி. தவிற முக்தி அடையப்போகிறவன் என்றால முக்தியை அடையபபோகிறவனுக்கு ராமனைத் திரஸ்கரிக்கும் புத்தி எஙகு இருந்து வந்தது? அப்பொழுது திட்டுகிறவனுக்கு முக்தியா? அபபடி திட்டுகிறவனுக்கு முக்தி என்றால் திட்டினபிறகு ராமன் வாலிக்குப் பதில சொல்ல அதுகேட்டு நான் முந்தி தெரியாமல் திட்டினேன்

பாணம் ஹ்ருதயத்தை பிளந்துவிட்டதால புத்தியிழந்து புலம்பி விட்டேன் என்றானே. இப்பொழுது திட்டினால முக்தி என்று ஏற்படவில்லையே! ஆதலாலும் முக்தியடையப் போகிறவன் என்று எப்படிச சொல்லுவது வாஸ்ஸம்மதம் என்று முக்தி என்று அர்த்தம சொல்லவே முடியாது. இந்த பதம் எத்தனையோபேருக்குச சொல்லியிருக்கிறதே அவர்களுக்கும் பாணம் முக்தி கொடுத்ததாய் இலலையே அதையும கவனிப்போம் :—

யுத்தகாண்டம 93-ம ஸாககம் 3-ம் சலோகம் ருக்ஷணொ ஹதஸ்ஸுரு: ஸ்-த்ருஸ்வஸ்ஸெஸ்ம்ஜித। மஹதஸ்வாஸ்ஸ்ரு ஸ்ரோ காஸுஸ்ரெ: ஸஹாவ்ருக்ஷணம். என்று ராவணனைப் பார்த்து ராக்ஷஸ வீரர்கள மஹேந்திரனை ஜயித்த உமது பிள்ளையான இந்திரஜித்து பல பாணங்களால லக்ஷ்மணனை நடுங்கடித்து விட்டு கடைசியில லக்ஷ்மணனால கொலலப்பட்டு உத்தமலோக மான வீரஸ்வர்க்கத்தை அடைந்தான் என்றர்த்தமே தவிற எந்த முக்தி என்றர்த்தம? ராமன் பாணத்திற்குதான் முடியும் என்றால் ராம நாமத்தைதயே சொல்லி ராமமஹிமையைச சொல்லி அந்த பலத்துடன சென்று இந்திரஜித்தனைககொன்ற ஐந்திராஸ் திரத்திற்கு மட்டில் முக்தி கொடுக்கும் யோக்யதை இல்லையா? இந்திரஜித்து முக்தியடைந்தான எபபடி? ராமபாணம் சுபாகுவை அடித்ததே அவனுக்கு முக்தியைக் கொடுத்ததா? சம்பராசுரன் பிள்ளைககு கொடுத்ததா? கரதூஷண திரிசிராதி களுக்கும் பதினாலாயிரம வீரர்களுககும கொடுத்ததா? மாரீச னுககுக் கொடுத்ததா? கும்பகர்ணனுககுக் கொடுத்ததா? ராவணனுககுக் கொடுத்ததா? இததனைபேருககும பாணம் வாஸ்ஸம்மதம் முக்தியைக கொடுததததாய் இல்லாதபோது பிதிர் துரோகியாயும் மாதுர் துரோகியாயும் பிராதிருதுரோகியாயும் பிராம்மண துரோகியாயும் சரணாகதனை கைவிடுபவனாயும் ஸ்வ கர்மாவை விட்டவனாயும குலதாமத்தை விட்டவனாயும் ராமாப ராதியாயும் உள்ள வாலிககு ராமபாணம் முக்தி கொடுததது என்றால் எப்படிப் பொருந்தும்? முக்தியை அடையப் போகிற வன் என்றாலும் எபபடிப பொருந்தும்? ஆதலாலும் பாணத் திற்காவது அஸ்திரத்திற்காவது சஸ்திரத்திற்காவது உத்தம

கதியைக் கொடுக்கும் யோக்யதையே கிடையாது என்றும் ஸ்தாபனம். தவிற அயோத்யா காண்டத்தில் தசரதன் காட்டில் ஒரு ரிஷி குமாரனை யானை ஜலம் குடிக்கிறது என்று எண்ணி சப்தவேதி என்ற பாணத்தால் அடித்தாரே, அது அவனுக்கு முக்தியைக் கொடுத்து இருந்தால் அடிபட்ட அந்த குழந்தைக்கு மாதாபிதாக்கள் அந்த குழந்தைக்கு உத்தம லோகங்களை கொடுக்கிறதாய் பிரயோகம் இருக்கிறதே ஆதலால் எந்த பாணத்திற்கும் அஸ்திராதிகளுக்கும் எந்த லோகத்தையும் கொடுக்க சக்தி கிடையாதென்றும் பிரயோகித்தால் அடிக்கும் தன்மை மட்டும்தான் உண்டு என்றும் ஸ்தாபனம். ராமன் அநேகம் மிருகங்களை வேட்டையாடி இருக்கிறாரே, அது களுக்கெல்லாம் ராமபாணம் முக்தி கொடுத்ததா? ஆதலால் இது ஸரியல்ல. ராவணன் அரண்யனைக் கொன்றானே அவனுக்கு இவன் பாணம் முக்தி கொடுத்ததா? ஆதலால் இவைகளெல்லாம் ஸரியல்ல என்றும் தீர்மானம். தவிற அகஸ்தியர் ராகவனைப் பார்த்து உன்னால் உன பிதா தரணம் செய்யப்பட்டாரென்றபோது அதுவாஸ்தவமாயும் இருக்க ராகவன் அவரவர் கர்மாவால் அவரவர்கள் தரணம் செய்யப்படுகிறார்கள் என்றார். தவிற உத்தமர்கள் தங்கள் தங்கள் தர்மத்தில் இருந்தால் ஸத்யத்தில இருந்தால உத்தமலோகம் கொடுக்கலாம் என்று ஒன்று தான் இக்கிரநதமே தவிற பாணாதிகளுக்கும், அஸ்திர சஸ்திராதிகளுககும் உத்தம லோகம் கொடுக்கும தன்மையே கிடையாது என்று இக்கிரந்தமாதலால் ராமபாணமானது வாலிக்கு முக்தியை அளித்தது என்பது அங்கீகரிக்கத் தகுந்ததில்லை எனற ஸித்தாந்தம்.

---

30. Science முதலிய ஸர்வ சாஸ்திரத்திரத்திலும் நமது முன்னோர்கள் கெட்டிக்காரர்கள் என்பதும் இபபோழுது இருப்பவாகளுக்கு ரோம்ப மேன்மையில் அறிந்து கோண்டவர்கள் என்பதும் இப்போழுது இருப்பவர்கள் அவர்கள் செய்ததில் ரோம்ப ஸோல்பத்தைத்தான் கண்டு பிடித்து இருக்கிறாகள் என்றும் ஸகலமும் முன் காலத்திலேயே இருந்ததுகள் என்றும் அவர்களுடைய சக்திக்கு இப்போழுது இருப்பவர்கள் ரோம்ப சோல்ப ஞானம் உடையவர்கள் என்றும் வெகுகாலம் தெரியாம லிருந்ததை கண்டுபிடித்து இருக்கும் பரியந்தம் இப் போழுது இருப்பவர்களும் மிகவும் சிலாகிககத் தகுந்த வர்கள் என்ற ஸித்தாந்தம்.

*பூகோள சாஸ்திரத்தை சுக்ரீவன் வாணித்தான். வானரர் களிடம் ஸீதையைத் தேடச்சொன்னகாலத்தில பூமி உருண்டை யாயிருக்க நான் கண்ணாரக் கண்டேன் என்றான். ராமாயண ரீதியின்படி பூமி உருண்டை என்பது கோடிக் கணக்கான வருஷங்களுக்கு முந்தியே நமது பிராசீனர்கள் கண்டுபிடித்து இருக்கிறார்கள் என்ற ஸித்தாந்தம்.*

*ஸர்வநக்ஷத்ரங்களையும் சூர்யசந்திர முதலிய ஸகலத்தையும் நேறிட பூமி மண்டலத்திலிருந்து கண்டுவந்து இருக்கிறார்கள். ராவணன் நேறிடச் சென்று கண்டுவந்து இருக்கிறான். ராவ ணன் கைலாசம் சென்று மேரு சென்று ஸர்வ தேவலோகமும் சென்று வந்து இருககிறான். சுக்ரீவன் தென்துருவம் முதலிய ஸகல இடமும் கண்டுவந்ததாய் இருக்கிறது. சுக்ரீவன் திக்கு களின் கடைசி எல்லையில தங்கமயமான பனை மரம் இருக் கிறது என்று கண்டுவந்து சொல்லியிருக்கிறான். பல மலை களுடைய நீள அகலமெல்லாம் குறிப்பிட்டு இருக்கிறான். ஸமுத்ரஙகளில் ஏழு உண்டு என்றும் சுக்ரீவன் குறிபபிடுகிறான். உப்புஜலமிலலாத ஸமுத்ரம் உண்டு என்கிறான். ஸப்த தீவுகள் உண்டு என்றும் குறிபபிட்டு இருக்கிறான். பூமண்டல விஸ் தீர்ணம் குறிப்பிட்டு இருக்கிறன. இக்காலத்தில ஏறமுடியாமல் தத்தளிக்கும் இம்மலைகளிலெல்லாம் நமது பிராசீனர்கள் தபஸ்*

செய்துகொண்டும் அம்மலைகளின் உச்சியில வாஸம் செய்து கொண்டும் இருந்து இருக்கிறார்கள் நமது பிராசீனர்கள் மஹா பலமுள்ளவாகள, ஹநுமான் ஸமுத்ரம் தாண்டும்போது ஸமுத்ர மத்தியில் இருந்து நல்ல கூர்மையான கொடுமுடி ஹநுமான் மார்பில்பட்டு அது முறிந்து விழுந்ததே அவர் மார்புக்கு ஒருவிதகெடுதல் இல்லை அவ்வளவுகெட்டியான மார்புப்பிரதேசம உள்ளவா. ஹநுமான் குழந்தையாய் இருக்கும்போதே சூரியனை பிடிக்கச் சென்றார். இபபடி விசித்ரசக்தி 1,000 மைல் அகலமுள்ள ஸமுதரததைத் தாண்டினா. அங்கு செல்லும் வழியில் எத்தனையோ தடங்கல்வர அநதரத்தில இருந்து ஸர்வ சக்தியும உடையவராய்க் கொண்டு தன சரீரததை சிறிதாக்கிக் கொள்ளவும் பெரிதாக்கிக்கொளளவும் சகதி உடையவா. சின்ன தாக்கி சுரஸா வாயில குதித்து வெளிவந்தார். சின்ன சரீரமாகி ஸிம்ஹிகையின வாய் வழியாய் வயறறினுள் சென்று வயற்றிற்குள இருந்து விருத்தியடைந்து அவளைக் கொன்று வெளிவந்தார. நினைத்த ரூபத்தை எடுக்கமுடிந்தவா. ராவணாதி ராக்ஷஸர்கள் நினைதத ரூபம் எடுககமுடிந்தவாகளாக இருந்தார்கள். ராவணாதிகள ஆகாசத்தில ஸஞ்சரித்தாகள். ஆகாசத்தில் பட்டணங்கள், பறக்கும், திரிபுராளுடைய தஙகமயமாயும, வெள்ளிமயமாயும், இரும்பு மயமாயும உளள பட்டணங்கள் அநேகம். வீடுகளுடன, வீரர்களுடன் பறந்தன. மலைகள் பறந்தன, குதிரைகள் பறந்தன. ஒருவர் ஒரு இடத்தில இருந்து தேவ லோகத்தில் இருப்பவர்களை இந்த லோகததிற்கு வரவேண்டும் என்று நினைத்தால உடனே கீழே வந்து நேறிட எதிரில் நின்று பேசுவார்கள். தறகால Telephone எதிரில முகம் தெரியாமல் பேசலாமே தவிற நேறிடப பேசமுடியாது. முன் காலத்தில் இநத ஆகர்ஷண சக்தி பெண் பிள்ளைகளிடத்திலேயே இருந்தது இந்த Currentஐ நாம தொட்டால்தான் கொல்லும். பெண் பிள்ளைகள் ஆகாசத்தில் ஒரு வஸ்துவோ யார் சென்றாலும் அந்த நிழல் விழுந்துவிட்டால அதை பிடித்து இழுத்தால் அது உடனே ஸர்வ பலமும அடஙகிவிடும். அவவஸ்துவை இழுந்து விடுவார்கள், சாப்பிட்டுவிடுவார்கள் என்று இருக்கிறது. பறக்

கும் விமானங்கள் எத்தனையோ கோடிகள். எத்தனை விசித்திர சக்திகளுடன் செல்லும்! இதனால் ஒரு விசித்ர சக்தி. அதாவது மனஸுக்கு எத்தனை வேகம் உண்டோ அத்தனை வேகம் செல்லும்; எத்தனைபபேர் ஏறினாலும் இடம் கொடுக்கும. அதி உஷ்ணமும் இல்லாமல, அதி சீதளமும் இல்லாமல இருப்பது. தற்காலம்போல சொல்ப இடம் என்பது அல்ல. இந்த புஷ்பக விமானத்தில ஒரு விசித்ர சகதி. இதுமட்டும் எவனாலும் எக்காலமும் செய்யமுடியாது. அதாவது பர்த்தாவை இழந்த பெண்டுகள் அந்த விமானத்தில ஏறினால் உடனே அவாகளை கீழே தள்ளிவிடுகிற விசித்ர சக்தியுள்ளது எஜமானன் எந்த இடத்திற்கு செல்லவேண்டுமென்று எண்ணுகிறானோ அங்கு செல்லக்கூடியது; யாதொருவிதமான யந்திரமிலலாதது; ஆபத்து என்பதே கிடையாது. விமானங்களில் ஆகாசத்தில சண்டை உண்டு. ராமனும் விமானத்தில் இருக்க, ராவணனும ஆகாசத்தில் விமானத்தில் இருக்க ஆகாசத்தில் விமானத்தில் சண்டை நடந்தது. அந்த காலத்திலேயே விஷவாயுப் பிரயோகம் உண்டு. அதை அதர்ம யுத்தமாய் நிரூபணம் செய்யப்பட்டு இருக்கிறது. இந்திரஜித்து நாகபாசப் பிரயோகம செய்து ஒரேகாலத்தில கோடிக்கணக்கான ஸர்வ வானரக் கூட்டங்களையும் சாகடித்து விட்டான். அந்த விஷ வாயுவை கருடன் வந்து போக்கடித்தார். செத்தவர்களை உண்டுபண்ணும் யோக்யதை உண்டு. அதற்கு விசித்திர மருந்துகளும் உண்டு காயத்தை ஆற்றவும், துண்டம துண்டமாக துளிதுளியாய் கிடக்கும் சரீரங்களைச் சேர்ப்பது பச்சிலை ரத்தத்தைக் கொடுத்து உயிரைக் கொடுப்பதற்கு பச்சிலை இப்படி விசிதர ஔஷதிகள அக்காலத்தில உண்டு. ஸர்வ வித கவசங்களும் உண்டு. யுத்தத்தில் உடைக்கமுடியாத ரதங்கள், சாகாத வரமுள்ள குதிரைகள் இப்படி உண்டு. சாகாமல் எப்பொழுதும் இருக்கும்படி சிரஞ்சீவத்வம் உண்டு மந்திர சக்தி, யந்திர சக்தி, தந்திர சக்தி இவ்வளவுமுண்டு இந்த லோகத்தில் இருந்துகொண்டு, இங்கு செததவர்களுக்கு இங்கு இருந்துகொண்டு, புண்யலோகம் கொடுக்க அவர்கள புண்யலோகம் அடைவதும் உண்டு. அம்மா வயிற்றில இருந்து பிறந்த

சரீரத்துடன் அப்படியே ஸ்வர்க்கம செல்லமுடியும் என்றும் (ராமாதிகள்) எந்த லோகமும் ஸஞ்சரிக்க முடியுமென்பது ஒருவன் ஏக காலத்தில் 14 லோகங்களிலும் ஸஞ்சாரம் செய்ய முடியும் என்பது. கங்கைக்கு திருபதகா என்று பெயர். வாயு எங்கும் எல்லாலோகத்திலும் ஸஞ்சரிககிறார் என்பது. ஹநுமான் இக்கிரந்தத்தில எத்தனை இடத்தில ராமநாமம் நடந்தாலும் அத்தனை ரூபங்களுடனை அங்கங்கு விளங்குகிறார் என்பது; ஒருவன் அநேக ரூபங்கள் எடுக்க முடியும் என்பது இபபொழுது தற் காலத்தில இருக்கும Cinema திரேதா யுகததிலேயே உண்டு என்பது. ராமபட்டாபிஷேகத்திற்கு பிறகு வால்மீகி ராமாயணம் செய்தார். பிர்ம்மா அனுக்ரஹத்தால் முன் நடந்தது அப்படியே தெரிகிறது. பொம்மை பேசுகிறது. வால்மீகி, நடந்த அவ்வள வையும் Cinema வாகவே கண்டு கிரந்தம் செய்தார் எனறு இருக்கிறது. Cinema வாகமட்டும் அல்ல; Telivision ஆகவே கண்டார் என்றே ஸ்பஷ்டம். ஆகாசத்தில மறைந்துகொண்டு மற்றவர் யாருக்குமே தெரியாமல யுத்தம செய்யமுடியும் என்பது இந்திரஜித்து யாருக்குமே தெரியாமல் யுத்தம் செய்தான் என்பது. இது அதர்ம யுத்தம் என்று குறிப்பிடப்பட்டு இருக் கிறது. ஒருவனைப்போல், ஒரு பெண்ணைப்போல், அப்படியே கொஞ்சமும் வித்யாஸம் இல்லாமல் சிருஷ்டிக்கும் தன்மை. அந்த சிருஷ்டிக்கப்பட்ட வஸ்து அவர்கள் எப்படியிருக்கிறார் களோ அப்படியே இருக்கும். இப்படி விசித்ர சக்தி உள்ளவர் கள உண்டு. ஆனல் அது கொஞ்ச நாழிகைதான் இருக்கும். சாச்வதமாய் இருக்காது. அந்த வஸ்துக்கள் பேசும; சகலமும் செய்யும்; மேல் நடக்கப்போவதையும் அறியும் சக்தியும் சில ருக்கு இருந்து இருக்கிறது. ஒருவரே சிருஷ்டிப்பது, அழிப்பது ஸம்ரக்ஷிக்கும தன்மை. இபபடி உடையவர்கள் ஒருவனுக்கு ஸர்வ தேவபோகத்தை கொடுக்கும்சக்தி உடையவர்கள். எப்பேர் பட்ட ரூபவதிகளிடமும் கொஞ்சமும கலங்காத ஜிதேந்திரியர் கள். ஹநுமான ஸகல பெண்கள் கூட்ட மத்தியில ஸஞ்ச ரித்துக் கொஞ்சமாகிலும் கலங்கவில்லை. ரிஷ்யசிருங்கரை ஸ்திரீ கள் ஆலிங்கம்செய்தார்கள். அவர் சற்றும் கலங்காமல இருந்

தார். விசித்ரமான சிருஷ்டியை எல்லாம் செய்வார்கள். ஜலத்திற்குள்ளேயே மாயக்காரராக இருப்பார்கள் பஞ்சாக்னிமத்திலும் இருப்பார்கள் ; ஆகாரமே இல்லாமலிருப்பார்கள் ; சூரிய கிரணத்தை சாப்பிட்டுக்கொண்டு இருபபார்கள்; ஸமுத்திரத்தை வற்றடிக்கும் சக்தியுள்ளவர்கள் ; பட்டண நிர்மாணங்களில் விசித்ர சக்தி. ஒரு மனு என்றவா 12 யோசனை நீளத்தில் பட்டணத்தையும் 3 யோசனை அகலத்தில் பட்டணத்தையும் சிருஷ்டித்தார். விச்வகர்மா மனஸினுல் 100 யோசனை நீளத்திலும் 30 யோசனை அகலத்திலும் பட்டண நிர்மாணம்செய்தான். சில யந்திரங்கள், சத்ருவாசலில வந்து இருந்தால் சத்ருவந்து இருக்கிருன் என்று யந்திரத்தில் காட்டிவிடும். ஒரு தடவையில் 100 பேரைக் கொல்லும் யந்திரம். 1,000 பேரைக் கொல்லும் யந்திரம். ஜனதுர்க்கம், கிரிதுர்க்கம், வனதுர்க்கத்துடன் பட்டண நிர்மாணம். ஒரு அஸ்திரம் கோடானுகோடி வீரர்களை கொன்றது 3 கோடி கந்தர்வர்களை ஸம்வர்த்தம் என்ற அஸ்திரம் ஒரு க்ஷணகாலத்திற் எறித்தது. ஜனனத்தில் பலவிதத்தில் ஜனனம் என்ற விசித்ரம், வீர்யம் இல்லாமல ஸ்திரீ புருஷ ஸம்பந்தமுமில்லாமல் ஜனனம. இந்த விசித்ர விஷயம் இக்கிரந்தத்திலேயே மற்றொரு இடத்தில் இருக்கிறது. குரங்கு ஜாதியில் பிராம்மண ஜாதி, க்ஷத்திரிய ஜாதி, வைசயஜாதி, சூத்ரஜாதி பஞ்சம ஜாதி என்ற ஐந்து ஜாதிகள் உண்டு என்பது: ரத்னம், வஜ்ரம், வைடூரியம், கோமேதகம், புஷ்பராகம் முதலிய இந்தக் கல்லுகளில் பிராம்மணுதி நான்கு ஜாதிகள் உண்டு என்பது சூடாமணி என்ற ஒரு சிரஸில் சூடும் ஒரு ஆபரணத்திற்கு சரீரத்தில் உள்ள உயிரைக் கார்க்கும யோக்யதை உண்டு என்ற விசேஷம். ஆகாசத்தில் மாயையால் கற்களையும், மலைகளையும் வர்ஷித்து சண்டை போட்டாள் தாடகா ! இப்படி சண்டை போட பெண் பிள்ளைக்கே தெரியும் என்றிருக்கிறது. சட்டத்தை மீறுபவனை தண்டிப்பது என்பது பிராசினகாலத்திலேயே உண்டு. அதற்காகவே சம்புகனைக் கொன்றது. சண்டாளன் விலக்க வேண்டியவனே என்ற சட்டம், தேவலோகத்திற்கு திரிசங்கு விச்வாமித்ரரால் சென்றதும் உடனே அங்கு இருந்து தலை

குப்புற கீழேவிழ விசவாமித்ராரால அந்தரத்தில வைக்கப்பட்டு இன்னமும் தலைகீழேயே தொங்குகிறான். சட்டத்தை மீறினல் ஆசார்யாளை அவமதித்ததால இந்த கதியானன். அஸ்திரத் திறகு தொடர்ந்துபோகும் யோக்யதையும், கட்டும் யோக்யதை யும, உயிரை வாஙகும் யோகயதையும், எஜமானன் எப்படி எண்ணி விடும்போது விடுகிறானே அந்த விடுபவன் அபிப்ரா யத்தை அனுசரிக்கும என்பது. ஜலத்தில் கட்டடத்தை நிர்மாணம்செய்து அதற்குள் ஸகல பெண்கள் முதலியபேர்க ளுடன் வசிபபது இப்படி விசித்திர சிருஷ்டிசெய்யும் யோக்யதை உண்டு என்பது கூடுவிட்டு கூடுபாய்ந்து ஸஞ்சரிக்கும யோக் யதையை உடையவர்கள். இந்த லோகத்தில் இருந்துகொண்டு தேவலோகத்தில் நடப்பதை பார்ப்பது. சுவானம், கோட்டான் இவைகள் பக்ஷியான ஸம்பாதி ஜடாயு முதலானதுகள். மிருகங் களான வானராதிகள் இவைகள் பேசிக்கொண்டு இருந்தன என்பது. பக்ஷிகள், மிருகாதிகள் ஸந்தியாவந்தன தர்பபணாதி காரியங்கள் செய்துகொண்டு இருந்தன என்பது. ஏறிச் செலலும் விமானம் பேசுகிறது. செத்துபபோனவர்கள் பேச முடியும் என்பது. மந்திரங்களால் எதிரிகளை அழிக்கும் யோக்யதை உடையவாகள். வார்த்தையால அழிக்கும் யோக்யதை உடையவாகள. ஸாவ ஸித்திகளை உடையவர்கள். பெண்ணை புருஷனாகவும், புருஷரை பெண்ணாகவும் செய்ய சகதி உள்ளவர்கள். பசிதாகமே இல்லாமல் இருந்திருக்கமுடி யும் என்பது. ஒருதரம் சில பழங்களை சாப்பிட்டுவிட்டால் மாசக்கணக்காக பசிதாகமே இல்லாமல இருக்கும்படியான பழங்கள் உண்டு என்று ஏற்கனவே கண்டுபிடிக்கப்பட்டு இருக் கிறது. இருந்த இடத்தில் அப்படியே மறைந்துபோகும்படி யான யோக்யதை உண்டு என்பது. ஸ்வப்பனத்தில் தேவ தைகளுடன் பேசுவது, நேரிடப் பேசுவது, ஏக காலத்தில் யுத் தத்தில் ஒரு அஸ்திரப்பிரயோகத்தில் பல பயஙகரமான தலைக ளுடன் கூடிய ராக்ஷஸ ரூபங்கள் ஒருபக்கமும், ஸர்ப்பங்களின் விஷவாயு ஒருபக்கமும், பல ஆயுதங்கள் ஒருபக்கமும், பல கற் கள் மழை ஒருபக்கம் இப்படி பலவிதமாய் உண்டாகுமென்பது.

இப்படி செய்யும் சக்தி அப்பொழுதே உண்டு என்பது. உயிரு டன் இருப்பவனை அப்படியே பிரேதம்போல் செய்தல், அப்படி இருக்கும்போது அவனை என்ன செய்தாலும் தெரியாதென்பது, இந்த ஜந்மாவில் இருககும்போதே முன் நம்மை அறியவேண்டிய காலம் வந்துவிட்டால் அறியமுடியும் என்பது. அதர்மத்தில் இருக்கிற ராஜா எப்படிப்பட்ட வீரனுனாலும் பிர்ம்மா தேஜஸ் உள்ளவன் அவனை இருநத இடம் தெரியாமல் செய்துவிடும் யோக்யதை உடையவன் என்பது. முன்னோர்கள் அதிவிசித்ர மான சிருஷ்டிகளை செய்யும் யோக்யதையை உடையவர்கள் அதிவிசித்ரமான விதத்தினுல் ஸம்ஹாரமும் செய்யும் யோக் யதையை உடையவர்கள் என்று ஸர்வவிதத்தினுலும் தெரி வதால் முன்னோர்களான பெரியோர்கள் ஸர்வவிதத்தில் கெட்டிக் காரர்கள் என்றும் எல்லாம் அக்காலத்திலும் உண்டு என்றும் அக்காலத்தில் இல்லாதது ஒன்றும் இக்காலத்தில் புதிது இல்லை என்றும் இக்காலத்தவர்கள் அவர்கள் கண்டுபிடித்து இருப்பதில் ஆயிரத்தில ஒரு அம்சம்கூட கண்டுபிடித்தவர்கள் இல்லை என்றும் ஆனுல் படித்தவன் படிப்பை அது நல்லதானுல் எப்ப வும் சிலாகிக்கவேண்டியதென்ற தர்மத்தில் இக்காலத்தவர், பிரா சீன விஷயங்கள் ஒன்றும் பொய்யல்ல என்று ஸித்தாந்த மாவ தற்காகவே பகவான் இவர்கள் மூலம் சிலகாரியஙகளை வெளிப் படுத்துவதால் சிலாகிக்கத்தகுந்தவைகளே என்று ஸித்தாந்தம். ஆதலால் ஒன்றும் புதிது அல்ல என்றும ஸித்தாந்தம்.

---

## 31. இந்திரன் ஸீதைக்கு பாயஸம் கொண்டுவந்து கொடுக்க வில்லை என்ற ஸித்தாந்தம்.

கிஷ்கிந்தா காண்டம் 42-ம் ஸர்க்கம் 8-ம் சலோகம் [illegible] என்று இங்கு இந்திரன் ஸீதைக்கு அமிர்தமயமான அன்னத்தைக் கொண்டுவந்து கொடுக்கப்போகிறுன். அவள் அதைவாங்கி ராமலக்ஷ்மணர்கள் உயிரோடு இருநதாலும்ஸரி, அவர்கள் தேவலோகத்தை அடைந்து இருந்தாலும்ஸரி அவர்களுக்கு இந்த அன்னம் என்று பாதியைக் கீழேவிடப் போகிறுள் என்று இவவளவுதான் இங்கு இருக்கிறதே தவிற பாக்கியை சாபபிடப்போகிறுள் என்ற ஒன்றையுமே காணேம். தவிற பாக்கியை சாபபிட்டார் என்று வைத்துக்கொள்வோம். இது நிற்க:—ஆரண்யகாண்டத்தில இந்திரன் சரபங்கரிடம் நான் ராவணவதமாகிற பரியந்தம் ராமனிடம் பேசக்கூடாது என்கிறுன். இப்படி சொன்னவன் இப்பொழுதுமட்டும் ஸீதையுடன் பேசலாமா? இராமரிடம் பேசக்கூடாது என்றவன் கரவத்தில கரனைக்கொன்ற பாணமானது இந்திரனுல் கொடுக்கப்பட்டது என்று இருக்கிறதே எப்படி? எபபொழுது கொடுததான். பரசுராமர் வில்லை ராமர் வைத்துக்கொண்டிருக்க அதை வருணன் வந்து வாஙகிக்கொண்டு போனதுபோல் இந்திரன பாணம் [illegible]துபோனுன் என்று தெரிகிறது. இந்திரன் பிந்தி ராமரைக் கண்டபோது நான் ஸீதைக்கு பாயஸம் கொடுதது காத்தேன் என்று சொல்லியிருககிறுனு. அப்படியும் இல்லை ராமனைக காணக்கூடாது பேசக்கூடாது என்பவன் எந்த தர்மம் கொணடு ஸீதையிடம பேசலாம். ஸுந்தர காண்டம் வால்மீகி வாகயத்தில 15-ம் ஸர்க்கம் 19-ம் ச்லோகத்தில் உப [illegible] என்று உபவாஸத்தினுல் மெலிந்திருபபளாயும் தீனையாயும் பெருமூசசுடன் உள்ள

வளாயும் இருப்பவளை ஹநுமார்கண்டார் என்ற இந்த இடத்தில் அமிர்தமயமான அன்னம் சாப்பிட்டு இருந்தால் உபவாஸம் ஏது? தவிற வால்மீகியே ஸுந்தரகாண்டம் 19-ம் ஸர்க்கத்தில் 21-ம் ச்லோகத்தில் அல்பஹாராம் தபோதநாம்॥ என்று அல்ப மான ஆகாரத்தைச் சாபபிட்டுககொண்டு தபஸ் செய்கிருள் என்று இருபபதால இந்திரன் அமிர்தமயமான அன்னம் கொண்டுவந்தான் அதை ஸீதை சாப்பிட்டாள் என்பது ஒரு விதத்திலும் பொருத்தம் இல்லை என்பது ஸ்பஷ்டம்.

அயோத்தியில பரதன் 14 வருஷம் உபவாஸத்துடன் அல்ப மான ஆகாரத்துடன் இல்லையா? ஸீதையும் அபபடியே இருந்ததாகத்தானே சொல்லப்பட்டு இருக்கிறது. அப்படி இருக்க இந்திரன் ஸீதைக்குமட்டும் பாயஸம் கொண்டுவந்து கொடுப்பானேன்? பாயஸம் எதற்காக கொண்டுவந்தான்? பசி தாகம் இலலாதிருபபதற்கு என்ருல் ஸீதைதான் அல் பாஹாரத்தை சாப்பிட்டுக்கொண்டு இருக்கிருள என்று இருக் கிறது எபபடிப் பொருந்தும? தவிற ஸீதை துக்கமாவது பத்துமாதம். பரதன துக்கமோ பதினைகு வருஷம் அல்லவா? அவனுக்குக் கொடுப்பது கூடாதா? கவிவாக்யப்படி கவனித் தால பாயஸம் ஸீதைக்கு இந்திரன் கொண்டுவந்து கொடுக்க இலலை என்றே ஸித்தாந்தம். கவி வாக்ய விரோதம் வருமானுல் அதே கட்டத்தைபபறறி மறற இடங்களில் பிரயோகித்து இருப் பதைக் கவனித்தால ஸத்ய தாமத்திற்கு விரோதமல்லவா? கவி ஹ்ருதயத்தை அறியவேண்டும் இதுதான் கவியின் ஸித் தாந்தம். பசி தாகம் இலலாதிருக்க பலாதிகள் இருப்பதாகச் சொல்லி வாலமீகி குழந்தைகளுக்கு அப்பழங்களைக் கொடுத்து ராம ஸன்னிதானத்தில் கானம் செய்யசசொல்ல அவர்களும் அதுகளை சாப்பிடடு களைப்பில்லாமல் பசியில்லாமல் கானம் செய்ததாக இருககிறது. மேலும் ஸீதையும் ராமனைத் திரும்பிக் காணுவதற்காக உயிர் இருப்பதற்காக அல்பமான ஆகாரத்தைக் கொள்ளுவதாய் இருப்பதால் அமிர்த மான அன்னத்தை பசிதாகம் இல்லாமல் இருப்பதற்காக

கொண்டுவந்து கொடுத்தான் இந்திரன் என்பது ஒருவிதத்திலும் அங்கீகரிக்கத் தகுந்ததில்லை என்ற ஸித்தாந்தம்.

இவள் அல்பமான ஆகாரத்தைச் சாப்பிட்டுக்கொண்டு இருக்கிறபோது இந்திரன் அமிர்தமயமான அன்னத்தைக் கொண்டு வந்து கொடுப்பானேன்? அது சாப்பிட்டால் பசிக்காது என்றால் இந்திரன், ஸீதை லங்கைவந்தபோது கொண்டுவந்துகொடுத்தான் என்றால் கவி ஸுந்தரகாண்டத்தில ஆகாரம் சாப்பிடுகிறார்கள் என்றதால் பசிக்காவிட்டால் சாப்பிடவேண்டியதில்லை. சுந்தர காண்டத்தில்தான் கொடுத்தான் என்றால முந்தி பசிக்காதா? கொடுத்தது எதற்காக? ஆதலால் கவி போகும்வழியில இந்திரன் கொடுக்கவில்லை என்பதே ஸித்தாந்தம். தவிர பிரக்ஷிப்தங்கள் அதிகபாடங்கள் என்று சில கதைகளைச சொல்லுகிறார்கள். பிரக்ஷிப்பதங்கள் அதிகபாடங்கள என்பதே கிடையாது. அவ்வளவும் அங்கீகரிக்கத் தகுந்தது. ஆரண்ய காண்டத்தில் இராவணன் ஸீதையை அசோகவனத்தில்கொண்டுவிட்டதும் இந்திரன் பாயஸம் கொண்டுவந்து கொடுத்தான் என்று சொல்வார்கள். ஆனால், கவியின் முன் பின் காண்டங்களில் உள்ள வாக்யங்களைக் கவனிக்கும் காலத்திலும் ஸீதை இருக்கும் நிலையை பல இடங்களில் வர்ணித்து இருக்கும் லக்ஷணத்தையும் கவனிக்கும்போதும், கவியின் பலீயஸ்ஸான வாக்யத்தை பல இடங்களில் பார்ப்பதில் இந்திரன் கொடுக்கவே இல்லை என்று பிரத்யக்ஷ பிரமாணமாவதாலும், பாயஸம் கொண்டுவந்து கொடுக்கவே இல்லை என்றே ஸித்தாந்தம். தவிற அயோத்யா காண்டத்தில் காகாஸுர விருத்தாந்தத்தில் பிரக்ஷிப்தம் என்ற ஸர்க்கமாக சொல்லப்படும் காகாஸுர விருத்தாந்தத்தில் மாம்ஸங்கள் கல்லில் உலர்த்தி இருந்ததாயும் அதை ஸீதை காத்துக்கொண்டு இருந்ததாயும் அப்பொழுது ஒரு காக்கை மாம்ஸத்தை கொத்தினதாயும் அதை அவள் விரட்டினதாயும் சொல்லபபடும் அக்கதையும் மூலத்திற்கு விரோதம். முன்பின் பிரமாணங்களை கவனித்தால் மாம்ஸங்கள் உலர்த்தவே இல்லை என்றும் ராமஸீதைகள் விளையாடிக்கொண்டிருந்தார்கள் என்றும் விளையாடிக்கொண்டு இருக்கிறாள் என்று இருக்கும்

இடத்தில் மாம்ஸத்திற்கு காவலாக இருந்தாள் என்பது ஒரு விதத்திலும் பொருத்தமில்லையாதலால காகாஸுரன் வரும் போதே ஸீதையின் மார்பில் தான் குத்தினன் என்றே ஸ்பஷ்டம். ஒவ்வொரு பதத்திற்கும் நேறிட லஸிளிதமாக செய்யும் பதத்தின் அர்த்தம் ஒழுஙகாக இருக்கும்போது மனம்போன படி பதத்தை பிரித்து அர்த்தம் செயவது கவி அபிப்ராயத்திற்கு நேறிட விரோதமாவதால் இதுவும் பிசகு எனறும் ஸித்தாந்தம். மேல் விஷயங்களை ஸகல இடங்களிலும் கவனித்தால இந்திரன் பாயஸம் கொண்டுவந்து கொடுக்கவில்லை என்றே ஸித்தாந்தம்.



# ஸுந்தர காண்டம்.

---

## 32. தாந்யமாலி மந்தோதரி இருவரும் ஒருவர் அல்ல வெவ்வேறு என்ற ஸித்தாந்தம்.

ஸுந்தரகாண்டம் 22-ம் ஸர்க்கம் 39-ம ச்லோகத்தில உவாசத்வரிதா ராக்ஷஸீ தாந்யமாலிநீ என்று தான்யமாலிநீ என்கிற ராக்ஷஸியானவள் சீக்ரமாகத்தானே கிட்டே வந்து ராவணனைப பார்த்து நீ வாரும் என்னுடன் கிரீடிக்கலாம் இந்த ஸீதையோ ரொமப மெலிந்து இருக்கிறாள் என்று சொல்லி ராவணனைத் தடுத்து அழைத்துக்கொண்டு போனாள் என்று வால்மீகி குறிப்பிட்டார். ஸுந்தரகாண்டம் 58-ம் ஸர்க்கத்தில லங்கையை அழித்துவிட்டு எரித்துவிட்டு இக்கரைக்கு வந்த ஹநுமான் ஜாம்பவானுக்கு ஸகலத்தையும் சொன்னபோது 71-ம் ச்லோகத்தில் வரா ஸ்த்ரீ மந்தோதர்யா நிஷேதித: என்று ச்ரேஷ்டையான மந்தோதரியால தடுக்கப்பட்டாள் லங்கேசவரன் என்றார். இருவருக்கும் இந்த ஹநுமானுக்கு வித்யாசம் தெரியவில்லையோ எனில், தெரியாததுதான். தவிற இவர் மரத்தில் இருந்துகொண்டு நன்றாய் இலைகளின் மத்தியில் ஒளிந்துகொண்டு இருக்க அப்பொழுது ராவணன் ஸீதையை அடிக்கவரும்போது ஸீதையிடம் ஏற்பட்டு இருக்கும் பிரேமையால் ஸீதையை என்னபண்ணி விடுவானோ ராவணன என்று அவனை கவனிக்க ஏற்பட்டதாலும் இன்னார் இன்னார் என்று கண்டுபிடிக்கவும் இல்லை. தவிற இங்கு வால்மீகி தான்யமாலி என்கிறார். ஹநுமான் மந்தோதரி என்கிறார். இக்கிரந்தத்தில் வால்மீகி ஸர்வத்தையும் அறிந்து பேசுகிறவர் ஆதலால், அவர் வார்த்தைக்கே முதல் கௌரவம். ஹநுமானோ ஸர்வ ஸ்திரீகளையும் இவள் ஸீதையா இவள் ஸீதையா என்று பார்த்து

இருக்கிறார் என்று இருக்கிறது. தவிற மந்தோதரியை ஸீதை தான் என்று எண்ணினார் என்றும் இருக்கிறது. இவா மந்தோதரியை ஸீதை என்று எண்ணினபோதே ஹநுமானுக்கு இவள் பெயர் தெரியாது என்று ஸ்பஷ்டம். ஆனால் இவளைமட்டில் நன்றாய் தெரியுமென்றமட்டில் ஸ்பஷ்டம். இவர் எபபடி யாரைக்கேட்டு இவள்பெயரைத் தெரிந்துகொண்டார்? ஸீதையை ராவணன் பட்டமஹிஷி பெயர் என்ன என்று கேட்க பிரஸித்த மான மந்தோதரி என்ற பெயரை அவள்தான் சொல்லியிருக்க வேண்டும் என்றும் ஸ்பஷ்டம். வேறு யாரிடத்திலும் இவர் பேசாததாலும் ஸ்பஷ்டமாகிறது. இவள பேரைத் தெரிந்து கொண்டவா இன்னம் ஒருத்தி பெயரையும் கேட்கக் கூடாதா என்றால ராவணனை கட்டியழைத்துக்கொண்டு போனது ஒருத்தியே ஆதலால ஒருத்தியைமட்டும் கேட்கும்படி ஏற் பட்டது. அவரும் இப்பொழுது கட்டியழைத்துக்கொண்டு போனவள் யார் என்று கேட்டதாகசசொல்லவில்லை. பட்ட மஹிஷி தவிற வேறு யார் தைரியமாய் அவனை நெறுங்கமுடியும் என்று எண்ணி பட்டமஹிஷி யார் என்று கேட்டுயிருக்க மந்தோதரி என்று சொல்லியிருககலாம் என்று தெரிகிறது. ஆனால் மந்தோதரி அசோகவனம வரவே இல்லை. இவள் ஏற் கனவே ஸீதையைத் தேடும்போது ராவணன் பக்கத்தில் மந் தோதரி மட்டும் சயனித்து இருந்ததால் அவள் பட்டமஹிஷி ஆதலால் பட்டமஹிஷி யார் என்று கேட்டு மந்தோதரி என்று கேட்டு சொல்லியிருக்கலாம் என்று தெரிகிறது.

இந்த ஹநுமான் ஜாம்பவனிடம் வந்தபிறகு ஜாம்பவனுக்கு போய் வந்த கதையை ஸுந்தரகாண்டம் 56-ம் ஸர்க்கம் 12-ம் ச்லோகத்தில ததஸ்தம் ப்ரேஷயாமாஸ ஸுதம் ராவணபாலிதம்। என்று ராவணன் மந்தோதரி பிள்ளையை சண்டைக்கு அனுப்பினான் என்றார். அவன் மந்தோதரி பிள்ளை இவருக்கு எப்படித் தெரியும? யாராரை கேடடு இருக்கவேண்டும்? இது ஸரியே. ஆனால் அதே ஸர்க்கம் 128-ம் ச்லோகத்தில் ததஸ்தம் நிஜிதம் ஜ்ஞாத்வா த்விதீயம் ராவணாத்மஜம்। என்று முதலில் வந்த பிள்ளையைக் கொன்றபிறகு ராவணன் இரண்டாவது பிள்ளை

வந்தான் என்றார். இந்திரஜித்து என்று பெயர் உடையவன் என்றார். இதில இந்திரஜித்து என்ற பெயர் இவருக்கு எப்படித் தெரியும? பெயர் ஸரியே. அவன் இரண்டாவது பிள்ளை அல்ல. அவன் மூத்தப பிள்ளையே. இது இவருக்குத தெரியாது. ஸர்வமும் தெரிந்து கவி சொல்லும வாகயமே பிரமாணம் இங்கு இரண்டாம் பிள்ளை என்று இநதிரஜித்தைதச சொல்வதுபோல் தான்யமாலியை மந்தோதரி என்றார். ஆதலால் ஹநுமான் வாக்யம் பிரமாணம் அலல. வால்மீகி வாக்யமே ஸதயம் என்று பிரமமதேவ வாக்யததால் ஏற்பட்டிருப்பதால இந்திரஜிதது மூத்தவன் எனறே ஸித்தாநதம். தவிற இந்த ஹநுமான் ஜாம்பவனிடம் சொலலும் கதையில எத்தனையோ வித்தியாசம் இருக்கிறது. அத்தனையும் கவி வாகயத்திற்கு விரோதமாதலால் இந்த கட்டததில் ஹநுமான் வாக்யம் பிரமாணம் அல்ல என்ற ஸித்தாந்தம்.

இஙகு மேலும் வண-ஜாஞரெ ஸ்ரீ நம என்று நன்றாய் இலை களில் மறைந்துகொண்டு இருக்கிற விஷயங்களை கவனிக்கிறவர் (நடு ஸ்திரீ கூட்டத்தில பெண்களில் தான்யமாலியையும் பார்த் தவர் மந்தோதரியைத் தனித்துபபார்த்தார்) பெண்கள் கூட்டத் தில் இருந்து தைரியமாய் வந்து ராவணனை அழைப்பவள் நாம் ஏற்கனவே ராவணன் பக்கததில சயனித்து இருந்தாளே அவளாகவே இருக்கவேண்டும் என்று பட்டமஹிஷி பெயரைக் கேட்டு சொலலியிருக்கலாம் எனறு தோன்றுகிறது. இங்கு வியாக்யானங்கள் சரியல்ல. ஒருவர் தான்யமாலியே மந்தோதரி என்கிறார். மற்றொருவர் மந்தோதரி தான்யமாலி இருவருமே அசோகவனம் வந்து இருந்தார்கள் என்கிறார். இரண்டும் பொருத்தமலலை என்கிறார் வால்மீகி. ஏனென்றால் தான்ய மாலிக்கே மந்தோதரி என்று பெயர் என்றால யுத்தகாண்டத்தில் 71-ம் ஸர்ககம் 30-ம் ஸ்லோகத்தில தநயஂமாந்யா ஊஜிந்யா அதிகாயமிஒ விஒுஃ என்று இவனை தான்யமாலி பிள்ளை அதி காயன் எனறு சொலலுவார்கள் என்று விபீஷணன் ராமனுக்கு சொல்லுகிறான் ஆதலால் தான்யமாலி வேறு மந்தோதரி வேறு என்று ஸ்பஷ்டம். ஆதலால் இருவரும் ஒன்று என்பது

ஸரியல்ல. இரண்டாவதில் மந்தோதரி ஸீதை அசோகவனத்திற்கு வந்த பிறகு அசோகவனத்திற்கு போனதே இல்லை. அந்த மந்தோதரி ஸீதையைக் கொண்டுவந்த விஷயத்தில் இஷ்டப் படாதவளாயும் ராவணவதாநந்தரம் இவளே ஏ நாதா நீர் பதிவ்ரதையின் தேஜஸ்ஸால் எறிக்கப்பட்டீர் என்று குறிப்பிட்டதாலும் மந்தோதரிக்கு தான் ஒருத்தி இருக்கும்போது ராவணன் மற்றொருவளிடத்தில் கேவலம் காமத்திற்கு பிரார்த்தித்து பேசும் பேச்சில் ஸர்வதா இஷ்டம் இல்லாதவளாய் இருப்பதாலும் நீர் என்னைக்காட்டிலும் எந்த விசேஷத்தை அதிகமாய் ஸீதையிடத்தில் கண்டு அவளைக்கொண்டுவந்தீர் என்கிறாள். இப்படி பலவிதத்திலும் ராவணன் வேறு ஸ்திரீயிடம் போய் பேசுவதில் மந்தோதரி இஷ்டபபடாதவளாய் இருப்பதால் இவள் அசோகவனத்திறகு வந்து இருந்தாள் என்பது ஒரு விதத்திலும் பொருந்தாது. ஆதலால் வரவில்லை அசோகவனத்திற்கு மந்தோதரி வரவில்லை என்பது ஸ்பஷ்டம். நடந்ததை அப்படியேகண்டு வால்மீகி வர்ணிப்பதால் தான்யமாலியே வந்து அழைத்துப்போனதால் தான்யமாலி என்று வால்மீகிசொன்னதே பிரமாணம். இருவரும் ஒருவர் அல்ல வெவ்வேறு என்றும் ஸித்தாந்தம்.

---

## 33. திரிஜடை விபீஷண புத்ரி அல்ல என்ற ஸித்தாந்தம்.

ஸுந்தர காண்டம் 27-ம் ஸர்க்கம் 4-ம் ச்லோகம் ராக்ஷஸீ த்ரிஜடாவ்ருத்தாப்ரயா நாவாக்யமப்ரவீத் என்று திரிஜடை என்கிற ராக்ஷஸியான கிழவியானவள் ராக்ஷஸிகளைப் பார்த்து இவளைப் பக்ஷிக்காதீர்கள். அவளை உபத்ரவப்படுத்தாதீர்கள் என்கிறாள். (இதில ஒரு பாடாந்தரம் உண்டு. காசித் வ்ருத்தா த்ரிஜடா நாம என்பது யாரோ திருஜடா என்று பெயர் உள்ளவள் என்பது) என்று கவி சொல்லுகிறார். இக்கிரந்தத்தில் கவியானவர் விபீஷணனை ராக்ஷஸ குலம் அல்ல என்று குறிப்பிட்டு இருக்கிறார். தவிற குபேரன் யக்ஷர்களுக்கு ராஜனாயிருக்க அவனுக்கு ராஜஸ ராஜன் என்று குறிப்பிட்டு இருப்பதுபோல்

ராக்ஷஸன் விபீஷணன் என்று பிரயோகமே தவிர வேறல்ல. தவிர விபீஷணனை பெற்ற விசரவஸ் விபீஷணன் தன் குலம் என்றும் ராவணாதிகள் கேகஸியின குலம் என்று குறிப்பிட்டு இருக்கிறார். இப்படி இருக்க ராக்ஷஸி எப்படி விபீஷணனுக்கு பெண்ணாவாள். தவிர வால்மீகி அவருடைய வாக்கினால திரிஜடை விபீஷணன் பெண் என்று சொல்லாததால் விபீஷண புத்ரி அல்ல என்றே ஸ்பஷ்டம். தவிர ஸுந்தரகாண்டம் 37-ம் ஸர்க்கம் 11-ம் சலோகம் ஜ்யேஷ்டாகந்யா நலா நாம விபீஷண ஸுதாகபெ। என்று ஹநுமானிடம் ஸீதை பேசினபோது விபீஷணனுக்கு மூத்த பெண்ணான அநலையானவள் எனக்குச சொல்லி இருக்கிறாள் என்றாள். இதை கவனிக்க விபீஷண னுக்கு மூத்த புத்ரி அநலை என்பது ஸ்பஷ்டம். (இது ஸீதா வாக்யம) ஸீதைக்கும் திரிஜடையைப்பற்றி யாரு என்ன என்று தெரியாதென்பதும ஸ்பஷ்டம். தவிர வால்மீகி திரிஜடை என்பவளை வ்ருத்தா என்று சொல்லி யிருக்கிறார். ஸீதையோ அநலையை கந்யை என்றும் சொல்லியிருக்கிறாள். இப்படியிருக்க மூத்த புத்ரி அநலை. இரண்டாம் புத்ரி திரிஜடை என்று சொல்லுகிறகள் என்ற ஒரு கக்ஷி. வாஸ்தவம் என்ற ங்கீகரித்தால மூத்தபெண் (கந்யா என்பது சிறு பெண்ணுக்குப்பேர். இது ஸமயத்தைப் பொறுத்து நல்ல பால்யத்துக்கும் உண்டு. கிழவி என்பதற்கு பொருந்தாது) கந்யை இரண்டாம் பெண் கிழவி என்றால எப்படிப பொருந்தும். ஞானக கிழவி என்று வைத் துக்கொள்ளும்படி சில கக்ஷி. இருமட்டும் அப்படியா! வால்மீகி சூர்ப்பனகியையும ராக்ஷஸீ என்றும் சொல்லி கிழவி என்றும் சொல்லியிருக்கிறார். அவளும ஞானககிழவியா எப்படி? ஜடாயு ராவணனை பால்யமாய் சொல்லியிருப்பதால ராவணாதிகள் ஒரே நாளில ஜனித்து இருக்க ராவணன் பால்யமானால விபீஷணனும் பால்யமாயிருக்க பால்யனுக்கு கிழவியான திரிஜடை எப்படி பெண்ணாவாள்? இது நிற்க வால்மீகி ராவணன் தங்கை சூர்பப னகி ராமனிடம வரும்போது கிழவிவந்தாள் பால்யனான ராம ரிடத்தில என்று சொல்லி இருக்க ராவணாதி நான்குபேர்களும் ஒரே நாளில பிறந்து இருக்க சூர்ப்பனகி கிழவி என்று இருக்க

அப்பொழுது விபீஷணனும் கிழவனல்லவா? கிழவனுக்கு கிழவியான திருஜடை எப்படி பெண்ணாவாள்? ஆதலால் வால் மீகி எதை அவர் வாக்கினால் சொல்லவில்லையோ அதில் நாம் பிரவேசிப்பது பிசகு என்று ஸித்தாந்தம். சிலர் அனலைக்கே திரிஜடை என்று பெயர்உண்டு என்று வைத்துக்கொள்ளவேண்டு மென்கிறார்கள். அப்படியானால ஸீதா வாக்யப்படி அனலை என்பவள் கன்னிகையாயிருக்க வாலமீகி வாக்யப்படி திரிஜடை கிழவியாயிருக்க எபபடி இருவரையும் ஒன்றாகச சொல்லுவது? மூத்தவள் திரிஜடை எனறு சொல்லலாமென்றால மூத்தவள் அனலை எனறலலவோ ஸீதாவாக்யம. ஆதலாலும் பொருத்த மில்லை. ஸகல ரகஸ்யமும் தெரிந்து கிரந்தம செய்யும் என்று பிர்மமா சொல்லியிருக்கிறபோது வால்மீகியே, ராக்ஷஸி யாரோ ஒரு கிழவி என்றும் அலலது யாரோ ஒருத்தி கிழவி படுத்துக் கொண்டு இருந்தவள், என்றும் இபபடிசசொல்லியிருக்கும் போது திரிஜடை விபீஷண புத்ரி என்று சொலலுவது அங்கீ கரிக்கத் தகுந்ததில்லை என்று ஸித்தாந்தம. தவிற தசரதனை விருத்தர் என்று இருக்கிறது ஞான விருத்தரா? ஜடாயுவை விருத்தா என்று இருககிறது ஞான விருத்தரா? ஆதலால் வ்ருத்தா எனற இடத்தில கிழவி எனறு ஸித்தாந்தம். ஞானக் கிழவி எனறு இருக்கும் இடததிற்குதான ஞானக்கிழவி என்க லாமே தவிற இபபடிச சொலலதெரிந்த வாலமீகி விபீஷண புத்ரி என்று சொலலத் தெரியாதா? ஸகலமும் தெரியும் என்று பிரம்மா அனுகரஹம் செயது இருக்க திரிஜடை விபீஷணன் பெணணானல இதுமட்டும் தெரியவிலலையா? தெரியவிலலை என்றால பிர்மமா எல்லாம தெரியும என்று சொன்ன அனுக்ர ஹததின்பலன் என்ன? அதுதான் அனுக்ரஹத்தின் மகிமையா? மற்ற இடங்களுக்கெலலாம் கிழவி என்றே அர்த்தம் ஆதலால் கவி சொலலாததால் திரிஜடை விபீஷண புத்ரி என்ற வியாக் யானமும் உலகவதந்தியும் இக்கிரந்த ரீதியாய் அங்கீகரிக்க இடம் இலலை என்று ஸித்தாந்தம்.

34. ராகவன், ஸீதை, லக்ஷ்மணன் இம்மூவர்களும் ஸர்வத்தையும் விட்டு புறப்பட்டு காடு சென்றிருக்க ராகவனுக்கு பாதுகைகளும், மோதிரமும், ஸீதைக்கு சூடாமணியும் ஏது? ஸாவத்தையும் விட்டவர்கள் இவைகளை ஏன் வைத்துக்கொண்டார்கள் என்பது.

ஸாக்ஷாத் ராகவன் காடு புறப்படும்போது மேல உத்தரீயத்தையும் விட்டு பிதா இருக்கும கைகயீ அரண்மனையை நாடி வந்தார். அப்பொழுது மஹா தரித்திரத்தால பீடிக்கப்பட்ட ஒரு ரிஷி வந்தபோது தன்னிடத்தில் வேறு ஒன்றும் இல்லை என்று சொல்லி கோதானம் செய்ததாய் இருக்கிறதே. அப்படி இருக்க மோதிரம இருந்தால் கொடுத்திருக்கக் கூடாதா? ஏன் அதை கொடுக்கவில்லை. தவிர ஸாவத்தையும விட்டு கைகயீ இடம் வந்து மரவுரியை வாங்கும்போது கைகயீ மோதிரத்தை கொடும் என்று கேட்கவே இல்லையே. ஏன? தவிர ஸ்வர்ணமயமான பாதுகையும ஏது எனில, ராகவனை கைகயீ தலையில ஜடையுடனும இடுப்பில மரவுரியுடன் காடு செல்லவேண்டும் என்றதால் அப்படியே ராமனும தபோவனவாஸம் என்று வைகானஸாகள் மார்க்கத்தை அவலம்பித்து காடு சென்றதாலும் (அவர்கள் மார்க்கம என்பது காலில் பாதரக்ஷை உண்டு. ஜடை மரவுரி உண்டு) அதன்படி சென்றார். ராமன் வானப்ரஸ்தாஸ்ரமத்தில காடு சென்றார அதை அவர் வாங்கிக்கொள்ளவில்லை. வானப்ரஸ்தாஸ்ரமத்தை அடைந்துவிட்டால் திரும்ப மறுபடி க்ருஹஸ்தாச்ரமத்தில் மஹான்கள் ஈடுபடமாட்டார்கள். ராகவனுக்கு 14 வருஷம் கழித்து அப்பா வார்த்தைப்படி வருவதாய் உத்தேசமே. ஆதலால் அந்த ஆச்ரமத்திற்கு பாதுகைகள் உண்டானதால ராஜ குமாரனாதலால ஸ்வர்ணமயமான பாதுகைகளுடன சென்றார். பாதுகைகள் இல்லாமல் செல்லவே இல்லை. ராமன் காடு போகும்போது போட்டுக்கொண்டுபோன பாதுகைகளை பரதன் பெற்றுக்கொண்டுவந்ததாகக் இக்கிரந்தமே தவிர பரதன் கொண்டுபோய்க் கொண்டுவந்தான் என்பது இக்கிரந்தமல்ல இது கவிஹ்ருதயமுமல்ல. மேலும் ராகவன் ஸர்வதானத்தையும், தன் மாமனார் தனக்கு கொடுத்த கட்டில், மற்ற

வஸ்துக்கள் சத்ருஞ்ஜயம் என்ற யானை முதலிய ஸர்வத்தையும் தானம் செய்துவிட்டார். மோதிரம், மாமனார் கொடுத்தது என்று இக்கிரந்தம் அல்ல. அந்த மோதிரம் ராமஸீதைகளுக்கு இருந்த பிரணயகோபத்தை போக்கின மோதிரம் என்று யாதொன்றும் இக்கிரந்தம் அலல ஆனால் ராமன போட்டுக்கொண்டு இருந்த மோதிரத்தில ராமநாமதேயம இருப்பதாய் பிரமாணம். இதை கிஷ்கிந்தாகாண்டம 44-ம் ஸர்க்கம 12-ம் சலோகம ददौ तस्य ततः प्रीतः स्वनामाङ्कोपशोभितम् । என்று ராமநாமம் வரையப்பட்ட மோதிரம் என்று வால்மீகியும் குறிபபிட்டார். மேலும் 36-ம் ஸர்க்கம 2-ம சலோகத்தில वानरोऽहं महाभागे दूतो रामस्य धीमतः । रामनामाङ्कितं चेदं पश्य देव्यङ्गुलीयकम् । என்று ஹநுமான் ஸீதையைப பார்த்து அம்மா நான் ராமதூதன் இந்த மோதிரத்தில இருக்கும் ராமநாமத்தைப் பாரும் என்று ஸீதையிடம் சொல்லி மோதிரததைக் கொடுத்தார். அந்த மோதிரத்தில ராமன் பெயர இருப்பதாலும யாரிடமும் தானம் முதலியது செய்தாலும அது ராமனுடையது என்றே ஏற்படுமாதலால இது கொடுபபதற்கு அர்ஹமல்ல என்று ராமன் கொடுக்கவில்லை. என்று ஸித்தாந்தம் தவிற ராமன் வானப்ரஸ்தாஸ்ரமத்தை அனுஷ்டித்தாரே தவிற அதை வாங்கிக்கொள்ளவில்லை. அதனால்தான் வில்லு முதலிய ஆயுதங்களுடன் சென்றார். வானப்பிரஸ்தாச்ரமத்துக்கு வில்லுகிடையாது. இவர் இப்பொழுது தபஸுக்குச் செல்லவில்லையாதலால் பரதனிடம் ராகவன நான காட்டை பரிபாலிக்கிறேன் என்று அங்கு அதர்மத்தில உள்ளவர்களை தண்டித்து சிஷ்டர்களை பரிபாலித்து வருகிறேன என்று சொன்னபடி துஷ்டர்களை தண்டிப்பதற்காகவே வில்லுமுதலிய ஆயுதங்களுடன் சென்றது. தவிற திரும்ப வருவதான அபிபபிராயமாதலாலும் ஸீதையும் காடு வருவதால் தண்டகாரண்யம் மஹாரண்யமாதலாலும தங்களைக் காப்பாற்றிக்கொண்டால்தான் திரும்பிவரமுடியுமாதலால் ஆத்ம ரக்ஷணத்திற்காக ஒரு வில்லுபோராது என்று வஸிஷ்டர் பிள்ளை வீட்டில் தான் வைத்திருக்கும் இரண்டு வில்லுகளையும் லெக்ஷ்மணனை கொண்டுவரச சொல்லியிருப்பதாலும அதுவும் தவிற

நான் துக்கத்துடன் இருந்தாலும் இதை பார்த்துக்கொண்டு இருப்பதால் சற்று துக்கசமனம் ஆகிறது. இனி நான் இதையும் பிரிந்துவிட்டால் எப்படி ஜீவிப்பேன் என்கிருள். இனி நான் இந்த மாதத்திற்கு மேல ஜீவிக்கமாட்டேன் என்று ராமனிடம் சொல்லும் என்கிருள். இந்த மணியே ஸீதையின் உயிரைக் காக்கக்கூடியதாய் இருப்பதால் இவள் மற்ற ஆபரணங்களை மரக்கிளைகளில வைத்திருந்ததுபோல் வைக்காமல் துணியில முடிந்து பத்திரபபடுததி பிறகு அதிலிருந்து அவிழ்த்து ஹநுமானிடம ஸீதை கொடுப்பதாய் பிரயோகமாதலால உயிரை ரக்ஷிப்பதான அதை தானம் கொடுக்ககூடாதாதலால ஸீதை அதை தானத்தில கொடுக்கவில்லை என்று ஸ்பஷ்டம என்று வால்மீகி இப்படி பாதுகைகளுடனும், மோதிரத்துடனும, சூடாமணியுடனும், வில்லுடனும் விளங்கினர்கள என்று ஸதாபித்தார்.

35. அக்ஷ இந்திரஜித்து விஷயங்களில் ஜ்யேஷ்டகனிஷ்ட நிர்ணயம்.

ஸுந்தரகாண்டம 58-ம் ஸாக்கம 128-ம் ச்லோகத்தில தத்ஜஂ௫ ஜிதம் நாமஷிதீயம் ராவணம் ஸுதம் ! என்று ஹநுமான் ஜாம்பவனைப பார்தது என்னுடன சண்டைக்கு இந்திரஜித்து என்ற பெயருடைய இரண்டாவது பிள்ளையை ராவணன் அனுப்பினுன் என்ருர். இதிலிருந்து இந்திரஜித்து இரண்டாவது புதரன என்று தோன்றுகிறது. (இது ஹநுமத வாக்யம்)

இதை வைத்துச்சொல்ல இடம் இல்லை என்று தெரிகிறது. ஏனென்ருல இதே ஹநுமான அக்ஷனைபபற்றிச சொன்னபோது இதேஸாககம ஸுந்தரகாண்டம 126-ம் ச்லோகததில தம்தமஜம் தொஷஸீ வத்ரம் கஂஜாரம் ரணவஜ்ஜிதம்! என்று சொன்னதால் இதிலிருந்து யுத்தத்தில கெட்டிககாரனுன அக்ஷன் மந்தோதரி புத்ரன் என்றமட்டில் தெரிகிறது (இதுவும ஹநுமத்வாக்யம் )

ஸுந்தரகாண்டம 47-ம ஸாககததில 1-ம ச்லோகம ஸெஷீக்ஷ ராஜாஸுஸமெஸதொத் அவஂ கூஜாமஜஂ வ ஸமெக்ஷதா ஹூ தஃ! என்று வால்மீகி ராவணனை எதிரிலிருந்த குமாரனுன அக்ஷனைப் பார்த்தான் என்ருர். இதில ராவண புத்ரன என்பது ஸ்பஷ்டம.

ஸுந்தர காண்டம 48-ம ஸர்ககம் 9-ம சலோகததில ஸஹோதரஸ்ய தயிதஃ ஸுதாமோக்ஷஸ்ய ஸம்ஹ்ருதஃ। என்று ராவணன் இநதிரஜிததைப் பாாதது உனனுடைய ஸகோதர னுயும் எனககு குமாரனுமான அக்ஷன அந்த வீரனுல ஹநுமா னுல கொலலபபட்டான எனருன இதில அக்ஷனே உனக்கு ஸஹோதரன எனருன. இககிரந்த ரீதியில ஸஹோதரன் எனருல என்னவெனருல ஒருவன பிறநத பிறகு அவனுககு அடுத் தாறபோல அதே தாயாா வயிற்றில உடனே பிறககிறவனுக்கு ஸஹோதரன என்று பெயர். ஸஹோதரன எனபது பின பிறந்தவனுககே தவிற முன பிறந்தவனுககு இக்கிரந்தத்தில பிரயோகம இலலே. இககவி வாக்ய ரீதியாய இபபடி ஸித்தாந் தம. ராவணன் இநதிரஜித்தைப் பாாதது உனககு ஸஹோ தரன் எனறதால இநதிரஜிததுககு தம்பிதான அக்ஷன எனபது ஸித்தாந்தம். (இது ராவண வாகயம்)

இநத ஸஹோதரன எனபதற்கு பின் பிறந்தவன என்ப தறகு ஒரு உதாரணம லக்ஷமணன கடைசிநாள் ராம ராவண யுததததில ராவணனே எதிர்ததுவிட அப்பொழுது ராவணன தனககு தன் மாமனா கொடுதத சகதியாயுதததை லக்ஷ்மணன் பேரில பிரயோகிததுவிட அப்பொழுது லக்ஷ்மணன் அடிபட்டு கிழே விழுந்துவிட அப்பொழுது ராகவன லக்ஷ்மணனேப பார்தது உனனேப பிரிநதேனே என்று சொலலும் இடத்தில யுததகாண்டம 102-ம ஸாககம் 12-ம சலோகம தேசேதேசே களத்ராணி தேசேதேசே ச பாந்தவாஃ। தம் து தேசம் ந பச்யாமி யத்ர ப்ராதா ஸஹோதரஃ। என்று பல தேசங்களில பல பத்னி களே அடையலாம; பல தேசங்களில பல பநதுககளேயடைய லாம். இபபடிபபடட பிராதா ஸஹோதரன இருககும இடந் தான நான பாாககவிலலே. (பிராதாவை அடையமுடியாது என கிருா எனருர்.) இதில இபபொழுது என்ன விசேஷம எனருல ஸஹோதரன் என்ற இடததில சொன்னுர். இது ஒரே காப்பம் இலலே. இது ரிஷியினுடைய வாகயம அலல. இது ராம வாக்யம் ரிஷி சொலலவிலலே. இதற்கு ராமவாகய அர்ததத்தை கவனித் தால ப்ராதா என்ற பதம இருக்கிறதே அது அனேகமாய்

ஸ்நேகிதர்களுக்கு பிரயோகமாகிவிடுகிறது. ப்ராதா என்ற பெயர் பொதுவாய் போய்விடுகிறது. பரதன் ஸுக்ரீவனை யுத்த காண்டம் 130-ம் ஸர்க்கத்தில் 46-ம் சலோகத்தில் ப்ராதா த்வம் ச பஞ்சம: | என்று பரதன் சுக்ரீவனை பிராதா என்றார். ஸுந்தரகாண்டத்தில் ஹநுமான் ராவணனைப் பார்த்து பிராதா வான சுக்ரீவன் உம்மை விசாரித்தான் என்றார். ராவணன் சுகன் மூலமாய் சுக்ரீவனை யுத்தகாண்டத்தில் பிராதா என்ற முறை வைத்துப் பேசினான். ஆதலால் இக்கிரந்த ரீதியாய் பிராதா என்பது சாதாரண பிரயோகமாதலால் அந்த ராகவன ஸ்நேக பாவத்திற்கு ப்ராதா என்றார். (ஹநுமான் ராவணனைச் சொன்ன தற்கும், ராவணன் சுக்ரீவனைச் சொன்னதற்கும் பாவம் வேறு. பிரகரணத்தை கவனித்தால தெரியும்) கூடப்பிறந்தவன், பின் பிறந்தவன் என்பதை ஸ்தாபிப்பதற்காகவே ஒரே உதரத்தில் ஜனிக்காமல இருந்தும ஒரே உதரத்தில் என்று ஸ்தாபித்தார். ஸஹோதரன் என்பது ராமபாவம் பின் பிறந்தவன் என்பதை ஸ்தாபிப்பதற்கே சொன்னது. அதையே ஸ்தாபித்தார். ஆதலால் ராமவாக்யப்படியும் ராவணன் இந்திரஜித்தைப பார்த்து உன் ஸஹோதரன் அக்ஷன என்றதால் இந்திரஜித்துக்குப் பின் பிறந்தவன்தான் அக்ஷன் என்பதும் ஸ்பஷ்டம். தவிற உத்தர காண்டத்தில் ராமன் அகஸ்தியரிடம் இந்திரஜித்தின் பிரபாவத்தை சொல்லச்சொல்ல அவர் ராக்ஷஸ வம்சம் எல்லாம் சொல்லிவந்து கடைசியில இராவணனுக்கு இந்திரஜித்து பிறந்த இடத்தை வாணிக்கும் இடத்தில 12-ம் ஸாக்கத்தில ஹவனெ க்ருததாராஸ்தெ ராக்ஷஸா: | ஸொம் ஸொம் ஹாயூர ஊவாமூ ஹஸுவாஜுவநதெந | தத்ராஜுஜீ வபுத்ரம் ஜெவநாஜீஜநக் | ஸஹை ஊம்ர் யிநாஜ யஷாஹிஸிபெத | என்று ராவணன், கும்பகாணன, விபீஷணன் இவர்களுக்கு எல்லாம கல்யாணமாகிவிட அவரவர்கள் தங்கள் தங்கள் பத்னிகளுடன நந்தவனத்தில கந்தர்வர்கள்போல காமஸுகத்தை அனுபவித்துக்கொண்டு இருந்தார்கள். இப்படியிருக்க பிறகு மண்டோதரியானவள் மேகநாதன் என்றவனைப் பெற்றாள். அவனுக்குத்தான் இந்திரஜித்து என்று பெயர் என்றார் அகஸ்தியர்.

(இது அகஸ்திய வாகயம்) இதில கல்யாணத்திற்கு பிறகு அவரவர்கள் தங்கள் பத்னிகளுடன் ரமித்துக்கொண்டு இருக்க, மேகநாதனைப் பெற்றுள் மந்தோதரி என்றதால் முந்தி ஆ..னைப் பெற்று இருந்தால், அக்ஷனைப் பெற்றுள் பிறகு மேகநாதனைப பெற்றுள் என்று சொல்லாமல மேகநாதனைப பெற்றுள் என்று அவனை மேல் வர்ணனையும் சொலவதால் இவன் முன்பிறந்தவன்; அதாவது இந்திரஜித்து மூத்தவன் என்று அகஸ்திய வாக்யத்தாலும் தெரிகிறது. இதனுலும் அக்ஷன கனிஷ்டன் என்று ஸித்தாந்தம். ஸர்வத்திற்கும் வாலமீகி வாக்யமே பிரமாணமாதலால் அதைக்கவனிப்போம்.

ஸுந்தரகாண்டம் 47-ம் ஸர்க்கம் 20-ம் ச்லோகம் ஸபாலு ஹாவாகூ ... க்ஷணஃ । என்று வால்மீகி பாலபாவத்தினுல் இருககிற வீாயத்தினுல் கர்வம் கொண்டவனுன அக்ஷன் மிகவும கோபததை அடைநதவனுய் யுத்தத்தில நெறுககமுடியாத பலமுள்ள ஹநுமானை புல்களால் மூடபபட்ட கிணற்றில யானையானது தெரியாமல் விழுந்துவிட்டால் எப்படியோ அப்படி ஹநுமானை அக்ஷன் அடைந்தான் எனறுா. இதில் வாலமீகி அக்ஷனை ரொம்ப சிறு பிள்ளை பாலன் என்கிறுா. இந்திரஜித்தை பெரியவன் என்றும் அக்ஷனை சிறு பிளளை என்றும் பாலன் என்றும் குறிப்பிடுவதாலும் இந்திரஜித்தை நலல பால்யன் என்றும் தவிற இந்திரஜித்து இந்திரனை ஜயிததபிறகே அக்ஷன் ஜனனம என்று தெரிவதாலும் அக்ஷன் கனிஷ்டன்; இந்திரஜித்துதான் ஜ்யேஷ்டன என்றும் ஸிததாந்தம.

---

36. ஹநுமானை பிர்ம்மாஸ்திரம் முதலிய எந்த அஸ்திரமும் கட்டமுடியாதென்றும், ஹநுமான் ஸர்வ தந்திர ஸ்வதந்திரன் என்றும் ஸித்தாந்தம்.

ஸுந்தரகாண்டம் 48-ம் ஸர்க்கம் 38-ம் சுலோகம் அவத்யோயமிதி ஜ்ஞாத்வா தமஸ்த்ரேணாஸ்த்ர தத்வவித். । நிஜக்ராஹ மஹாபாஹு: மாருதாத்மஜமிந்த்ரஜித் । தேந பத்தஸ்ததோஸ்த்ரேண ராக்ஷஸேந ஸ வாநர: । என்று வால்மீகி, இந்திரஜித்து இவரை கொல்ல முடியாதவர் என்று தெரிந்துகொண்டு அஸ்திரங்களை அறிந்தவனாயிருக்கிற அவன் ஹநுமானை பிர்ம்மாஸ்திரத்தால் கட்டினான். ஹநுமானும் அந்த ராக்ஷஸனுடைய அஸ்திரத்தினால் கட்டுப்பட்டான் என்றார். இதனால் ஹநுமானை பிர்ம்மாஸ்திரம் கட்டினது என்று தீர்மானம்.

ஸுந்தரகாண்டம் 48-ம் ஸர்க்கம் 42-ம் ச்லோகம் நமேஸ்ய பந்தஸ்ய ச ஶக்திரஸ்தி விமோக்ஷணே லோககுரோ: ப்ரபாவாத் । இத்யேவமஸ்த்ர விஹிதாஸ்த்ர பந்தோ மயாத்மயோநேரநுவர்திதவ்ய: ॥ ஸவீர்யமஸ்த்ரஸ்ய கபிர்விசார்ய பிதாமஹாநுக்ரஹமாத்மநஶ்ச ॥ விமோக்ஷஶக்திம் பரிசிந்தயித்வா பிதாமஹாஜ்ஞாமநுவர்ததே ஸ்ம । அஸ்த்ரேணாபி ஹி பத்தஸ்ய பயம் மம ந ஜாயதே । என்று பிர்ம்மாஸ்திரம் ஹநுமானைக் கட்டினதும் ஹநுமான் இப்படி எண்ணுகிறார் என்றார் கவி. இந்த அஸ்திரத்தை போக்கடிப்பதில் லோக குருவின பிரபாவத்தால சக்தி எனக்கு இல்லை. என்றால இந்த பிர்ம்ம தேவனுடைய அஸ்திரமானது அநுஸரிக்கத்தகுந்தது. அந்த ஹநுமான் அந்த அஸ்திரத்தின் வீர்யத்தை எண்ணி தனக்கு இருக்கும் பிர்ம்மாவினுடைய அநுக்ரஹத்தையும் எண்ணி இந்த அஸ்திரத்தை போக்கடிப்பதில் சக்தியை எண்ணி பிர்ம்மதேவன் ஆக்ஞையை அநுஸரித்தார். அஸ்திரத்தில் கட்டுப்பட்ட எனக்கு பயம் இல்லை என்றும் எண்ணினார். இதனால் பிர்ம்மாஸ்திரம் ஹநுமானைக் கட்டினது என்று தீர்மானம். (இபபடி எண்ணினார் என்றார் கவி.) இப்பொழுது முன் இரண்டினால் உலக அநுஷ்டானம் பிர்ம்மா

ஙிடம் நீர் ஒருதடவை என் அஸ்திரத்திற்கு கட்டுப்பட
ம் என்று கேட்டுக்கொண்டார் என்றும், அதற்காக
ட்டார் ஹநுமான் என்றும் சொல்லுகிறார்கள். அது
நம் ஆகும் அழகை கவனிப்போம்.

பகாண்டம் :—ஸம்க்ஷேபமான முதல் ஸர்க்கம் 76-ம்
கம் [illegible]
ன்று (நாரதர் சொல்லுகிறார்) பிர்ம்மதேவ அனுக்ரஹத்
நுமான் தான் பிர்ம்மாஸ்திரத்தில் இருந்து விடுபட்டு
றன் என்று தெரிந்துகொண்டார் என்றார்.

ந்தரகாண்டம் :— 48-ம் ஸர்க்கம் 52-ம் ச்லோகம
[illegible] என்று அஸ்
ல் ஹநுமான் விடுபட்டு இருந்தும் தாம் விடுபட்டு
றன் என்று தெரிந்துகொள்ளவில்லை என்றார் வால்மீகி.
காண்டம் 50-ம் ஸர்க்கம் [illegible]
[illegible]
[illegible]
[illegible] என்று
ன் ராவணனைப் பார்த்து என்னை பிர்ம்மாஸ்திரம் முதலிய
ங்களாலும், எமபாசம் முதலிய பாசங்களாலும், தேவ
லும், அஸுரர்களாலும் கட்டமுடியாது. இப்படி
பிர்ம்மா கொடுத்த வரம் என்றும் சொல்லி மேலும்
க் காணவேண்டுமென்ற இச்சையால் என்றால் இந்த
அனுஸரிக்கப்பட்டது. ராக்ஷஸர்களால் நான் பிடிக்
போது நான் அஸ்திரத்தினால் விடப்பட்டேன் என்றார்
r.

ரகாண்டம் :—41-ம் ஸர்க்கம் 19-ம் ச்லோகம் [illegible]
[illegible] என்று ஸர்வ
ண்டம் முதலிய ஸகலத்தாலும் உமக்கு வதம் இல்லை
ர்ம்மா.

மேலும் அதே ஸர்க்கம் 24-ம் ச்லோகத்தில் ஸுஜெயோஹவி தாவ—த்ர: தவஶாஸ்—த ஶாஸ்—தி: । என்று உன்னுடைய பிள்ளை மாருதி, இதரர்களால் ஜயிக்கமுடியாதவன் என்றார் பிர்மமா.

அதே ஸர்க்கம் 44-ம் ச்லோகம் ஶௌம்ஸீயஷ்வா தஷ்யஷ்வ வீர்யஷ்யெயெத்ரஷ் ஹநூமத:கொஹ்யிகொஷ்ரொகெ । என்று சாதுர்யம், பராக்ரமம், தைர்யம், கம்பீரம் இதுகளில ஹநுமானைக் காட்டிலும் எவன் மேம்பட்டவன் ஒருவனும் இல்லை என்றார். (இது அகஸ்திய வாக்யம்.)

கிஷ்கிந்தா காண்டம்:—66-ம் ஸர்க்கம் 19-ம் ச்லோகம் ஊஹாவஸ்செவா ஊஹாதெஜா ஊஹாபலுவராக்ரஷ: ॥ ஶும்வெநவ நெவெவஹவிஷத்ரிஷிஶ்ஷஷ: । என்று வாயுபகவான் அஞ்சனா தேவியான புஞ்சிகஸ் தலையைப் பார்த்து உனது பிள்ளை அற்புத தேஜஸ்ஸுடனும், அபார பராக்ரமத்துடனும் தாண்டுவதில் எனக்கு ஸமானனாய் இருப்பன் என்று வாயுபகவான் சொன்னதை ஜாம்பவான் சொன்னார்.

கிஷ்கிந்தா காண்டம்:--66-ம ஸர்க்கம 27-ம் சலோகம் ஸுஶஸ்ஷவயத்ராம் தாதவஶஜெ வதத்ரிகஷ । என்று அஸ்திராதிகளால் உனக்கு வதம் கிடையாது அலலவா என்றார் ஜாமபவான். இப்பொழுது விஷயத்தைக் கவனிப்போம.

வீர்யவானான ஹநுமான் ஸ்வச்சந்தமான மரணத்துடன் கூடினவன அசோகவனத்தை அழிக்க ஆரம்பிக்கும்போதே ராவணனைக் காணுவதற்காகவே செய்கிறேன் என்று செயவதாலும் எவனிடத்திலாவது கட்டுபபட்டு சென்று ராவணனைக் காணுவது என்று ஸங்கல்பமாதலாலுமதான் இவர் கட்டுப்படுகிறார். இந்த ஹநுமானுக்கு பிர்ம்மா வரம்கொடுத்த காலத்தில் எனது அஸ்திரம் வந்தால் ஒரு தடவை கட்டுப்பட வேண்டும் என்று ஹநுமானை பிர்ம்மா கேட்டுக்கொண்டதாக பிரமாணம், ஹநுமானுக்கு வரம கொடுத்த இடத்தில் கிடையாது. ஹநுமானை பிர்ம்மா கேட்டுக்கொண்டார் என்றால் கேட்டுக்கொள்ளவேண்டிய அவசியம் என்ன? எதனாலும்

கட்டுப்படாமலும் மரணம் இல்லாமலும் இருக்கிற வரத்தைக் கொடுத்துவிட்டதாய் கேட்டுக்கொண்டார் என்றால் அப்படியும் பிரமாணம் இல்லை பிர்மமா கேட்டுக்கொண்டார் என்றால், கூட பரமசிவன் இருப்பதாய் இருக்கிறதே அவருந் தனசூலத்தால் வதம் இல்லை என்று வரமகொடுத்திருக்கிறாரே. அவர் ஏன் கேட்டுக்கொள்ளவில்லை. இக்கிரந்தத்தில பாசபந்தாஸ்திரம் பிர்ம்மாஸ்திரத்திற்கு ஸமானம். கொஞ்சம்கூட குறைவு இல்லை என்றிருக்கிறதே. அவர் ஏன் கேட்டுக்கொள்ளவில்லை. அது இருக்கட்டும். யுத்தகாண்டத்தில பிர்மமாஸ்திரத்தில ராமலக்ஷ்மணர்கள் கட்டுபட்டார்களே. எந்த பிர்ம்மா வந்து அவரைக் கேட்டார். கேட்காமலிருக்க அவர்கள் கட்டுப்படுவானேன். மேலும் யுத்தகாண்டத்தில இந்திரஜித்து பிரயோகித்தபோது ஹநுமான அதைப் பார்த்தார் அதற்கு மரியாதை செய்தார், அது போய்விட்டதே. இக்கிரந்தத்தில பிர்ம்மாஸ்திரத்திற்கு எவனும் கட்டுப்படவேண்டும் என்ற விதியா? இஷ்டமிருந்தால் கட்டுப்படுவானே தவிர இஷ்டம் இல்லாவிட்டால் ஒன்றும் அஸ்திரம் செய்யமுடியாது என்றுதான் தெரிகிறது. யுத்தகளத்தில் ஹநுமானிடம் வர அவர் அதை மானித்தார். உடனே சென்றுவிட்டதே. ஆதலால் இக்கிரந்தத்தில் ஹநுமானை ஒரு தடவை கட்டுபபடவேண்டும் என்று கேட்டுக்கொண்டார் என்று கதை இல்லாதபோது ஒரு தடவை என்பதற்கு எப்படிச் சொல்லுகிறது. தவிர ஹநுமான் யோசிப்பதில் லோககுருவான பிர்ம்மதேவன் பிரபாவத்தால இந்த பிர்ம்மாஸ்திரத்தின் இருந்து தன்னை விடுவித்துக்கொள்ளுவதில் தனக்கு சக்தி இல்லை என்கிறாரே இவர். ராவணனிடம் பேசும்போது என்னை எந்த அஸ்திரங்களாலும் எந்த பாசங்களாலும் என்னைக் கட்டமுடியாது. இது எனக்கு பிர்ம்மா கொடுத்த வரம் என்று சொல்லியிருக்க எனக்கு லோககுருவான பிர்ம்ம தேவன் பிரபாவத்தினால் இந்த அஸ்திரத்தை போக்குவதில் எனக்கு சக்தியில்லை என்று சொன்னாரே அது எப்படி? நேர் விரோதமல்லவா? தவிர பிர்ம்மா ஹநுமானுக்கு வரம்கொடுத்தகாலத்தில ஸகலவரமும் கொடுத்துவிட்டு வாயுபகவானிடம் உத்தரகாண்டம் 41-ம் ஸர்க்கம் 24-ம்

சலோகத்தில் அஜெயொஹவிதா வத்ஸ: தவசாஸ்த சாஸ்தி: உமது புத்ரன் ஜயிக்கமுடியாதவன என்றார் என்றால் ஹநுமானை இந்திரஜித்து கட்டிககொண்டு போய்விட்டால் ஜயித்ததாக தாத்பரியமாகிவிடவில்லையா? இந்த அஜெய: என்ற பதத்தை எந்தெந்த இடத்தில் எபபடிப பிரயோகம் என்று பின் இடத்தைக் கவனித்துப பேசவேண்டும். இப்படி சொல்லும்போது ஹநுமானும் இருக்கக்கொண்டு என்னை எந்த அஸ்திரங்களும் எந்த பாசங்களும் தேவர்களாலும் கட்டமுடியாது என்று பிர்மாவினுடைய வரம என்றார். தேவர்களாலும் அஸுரர்களாலும் கட்டமுடியாது என்றாரே. இந்திரஜித்து அஸுரன் எப்படி கட்டினான். பிரகரணத்தில் ஹநுமான் இந்திரஜித்தை அஸுரனாகப பேசுகிறார். இந்திரஜித்தினாலும் கட்டமுடியாதே. பிர்ம்மா அஸ்திரமும் கட்டமுடியாதே. அபபொழுது ஹநுமான் எனக்கு இப்படி பிரம்மா வரம் கொடுத்தார். என்றாரே அது பொய் அலலவா? அபபடி அவர் தனனை எந்த அஸ்திரமாவது எந்த அஸுரனாவது கட்டிவிடுவான் என்ற எண்ணமிருந்தால் இவர் எண்ணம் எப்படி நிறைவேறும்? கட்டிவிடுவான் என்ற எண்ணமிருந்தால் தன்னை எந்த அஸ்திரமும் கட்டாது என்ற வரம் இருக்க எப்படி கட்டிவிடுவான் என்று எண்ணுவார். விஷயத்தில் கவனித்தால இவராக நான் கட்டுபபடுகிறேன் என்று இவராக எண்ணினால கட்டமுடியுமே தவிற இல்லாவிட்டால் பிர்ம்மாஸ்திரத்தாலும் முடியாது என்று ஸ்திரமாக இலலையோ? தவிற ஹநுமான எண்ணினதில முதலில இந்த அஸ்திரத்தை போக்கடித்துககொள்ள சக்தி இலலை என்றவர் பிறகு விமொக்ஷ ஸக்திம்வரிஜிஞயிகவா என்று இருக்கிறதே அதைப் போக்கடிப்பதில் சக்தியை ஆலோசித்தார் எனறால் அப்பொழுது போக்கடித்துக்கொள்ளும் சக்தி உண்டுபோல் தெரிகிறதே. இப்படி சக்தி உண்டு போக்கடித்துக்கொள்ள என்று எப்பொழுது தெரிகிறதோ அப்பொழுது எனக்கு இதை லோககுருவின் பிரபாவத்தால் போக்கடித்துக்கொள்ள சக்தியிலலை என்றாரே. இது எப்படிப் பொருந்தும்? இதனால் முன்பின் விரோதமில்லையா? தவிற எப்பொழுது பிர்ம்மா ஹநுமானைக் கட்டுப்படவேண்டும்

என்று கேட்டுக்கொண்டு இருக்கிறாரா அப்பொழுது ஹநுமான் பேசாமல் இருக்கவேண்டியதை விட்டு விட்டு விடுபடுவதற்கு சக்தியை யோசித்தார என்றால அப்பொழுது பிரம்மா கேட்டுக்கொண்டார எனபது நிஜமா? தவிர ராவணனிடம் ஹநுமான் பேசினபோது உன்னை ஒன்றும் கட்டாது என்கிறாயே என் பிள்ளையிடம் கட்டுபபட்டு வநதாயே என்று கேட்பாயே யாகில் நான் ராஜாநம் த்ரஷ்டுகாமேந மயாஸ்த்ரமநுவர்த்திதம்। என்று எனறால் ராஜாவான உன்னைக் காணவேண்டும் என்ற என் எண்ணத்திற்காக நானாக கட்டுப்பட்டேனே தவிர என்னை எந்த அஸ்திரமும் கட்டாது என்றார். இதை கவனிக்க இவராக கட்டுப்பட்டதாகிறதே தவிர பிர்ம்மாஸ்திரத்திற்கும் ஹநுமானைக் கட்டமுடியாது என்றல்லவோ ஸ்திரமாகிறது. தவிர பிதாமஹாஜ்ஞாம் சாநுவர்த்ததேஸ என்று பிதாமகன ஆக்ஞையை அநுவர்த்தித்தார் என்றால அவர் ஆக்ஞை எது என்று கேள்வி? கட்டுபபடுகிறதா? விடுபடுகிறதா? என்பது போக்கடிப்பதில் சக்தியை எண்ணி பிதாமஹன் ஆக்ஞையை அனுசரித்தார் என்றால் கட்டுபடவேண்டும் என்று கேட்டுக்கொண்டதாக தெரிகிறது. இது உண்மையானால், யுத்த காண்டத்தில் இதே வால்மீகி பிர்ம்மாஸ்திரத்தை இந்திரஜித்து விட்ட போது அது ஹநுமானிடம் வர அவர் மானித்தார் என்று இருக்கிறதே தவிர பிதா மகன் ஆக்ஞை என்று சொல்லவில்லை. இங்கு மானித்தார் என்று இருப்பதால் பிர்ம்மா ஒரு தடவை கட்டுப்படவேண்டும் என்று கேட்டுக்கொண்டதாக உலகத்தில சொல்லுகிறார்கள். அதுவும் சரியாகத் தெரியவில்லை. ஏனெனில் ஸம்க்ஷேபமான முதல் ஸர்க்கத்தில் நாரத வாக்யத்தில அஸ்த்ரேணோந்முக்தமாத்மாநம் ஜ்ஞாத்வா பைதாமஹாத்வராத்। என்று பிர்ம்மதேவவரத்தினின்றும் அஸ்திரமான பிர்ம்மாஸ்திரத்தினின்றும் ஹநுமான் தன்னை விடுபட்டவராய்த் தெரிந்து கொண்டார் என்றும் இருக்கிறது. இப்பொழுது பிர்ம்மாவினுடைய வரம் ஹநுமானுக்கு விடுபடுவதற்கு என்பதே தவிர கட்டுப்படுவதற்கு என்பதில்லை என்பதல்லவா ஸ்பஷ்டமாகிறது

ஒரு யுக்தி என்னவென்றால் எப்பொழுது விடுபடுவதற்கு வரம் கொடுத்தாரோ அப்பொழுது கட்டுப்படுவது உண்டு. அதனால் தான விடுபடுவது என்று வரம் கொடுத்தார் என்பது. இதனாலேயே ஒரு விஷயம் கவனிப்போம். லோகத்தில் எப்பொழுது பிர்ம்மாஸ்திரத்திற்கு எல்லோரும் கட்டுப்படவேண்டும் என்று விதி இருக்கிறதோ அப்பொழுது, உதாரணமாக பிர்ம்மாஸ்திரம் வரும்போது ராமனை இந்த பிர்ம்மதேவன் அஸ்திரத்திற்கு நான் கட்டுப்படப்போகிறேன் நீயும் கட்டுபபடு 'என்றார். அவரும் அங்கீகரிகக ஸர்வ வானரங்களுடன் இருவரும் கட்டுப்பட்டார்கள். கட்டின பிர்மமாஸ்திரம் இவர்களை விடவே இலலை. அதற்கு முகூர்த்தகாலம் அதிகாரம உண்டு என்று இக்கிரந்தத்தில் இல்லை. ஹநுமான் கட்டுபபட்டபோது ஹநுமானை ராக்ஷஸர்கள் கயிற்றைப்போட்டு கட்டியதாலும் அது கட்டியிருக்கும் போது வேறுஒரு கட்டை அது தாஙகாததாலும அது விட்டுவிட்டது என்று பிரமாணம். ஹநுமான் ஸஞ்சீவி பர்வதம கொண்டு வந்துதான் அத்தனை பேர்களும் பிழைத்து எழுந்ததாய்ப் பிரமாணம். இப்படி எப்பொழுது எலலோரும கட்டுப்பட்டார்களோ கட்டுபபடுகிறது எனபது ஸ்திரமாய் இருக்கிறதோ அபபொழுது அந்த தன்மையில விளஙகும் ஹநுமானும் கட்டுப்படவேண்டியவரே. அப்படியிருக்க கட்டுபபடவேண்டும் ஒரு தடவை என்று ஹநுமானைப பிர்ம்மா கேட்கவேண்டியதில்லையே அப்பொழுது கேட்டார் என்பது பிசகலலவா? ஸகல வரமும் ஹநுமானுக்குக் கொடுத்துவிட்டபடியால, அதறகாக லோகம் கட்டுபபடுவதுபோல் கட்டுப்படாமல் போய்விட்டால் என்ன செய்வது என்று பிர்ம்மா கேட்டார் எனறு சொல்லவேண்டும். இப்படி சொன்னால் வாயுபகவானை திருப்தி செய்யவந்த பிர்ம்மா எல்லா வரமும் கொடுத்துவிட்டு என் அஸ்திரத்திற்கு கட்டுபபடு என்றார் எனறால் இதுதான் வரம கொடுதத அழகுபோலும்? அப்படியானால் வாயுபகவானிடம் உன பிள்ளை ஜயிக்கமுடியாதவன் என்று,சொன்னபோது என் அஸ்திரத்திற்குமட்டும் கட்டுப்படுவன் என்றாரா? எவனாவது இவனைக் கட்டிவிட்டால் ஜயிக்க முடியாதவன் ஹநுமான் என்பது எப்படி? எது பிரவலி,

மான அஸ்திரமோ அதில கட்டுப்படவேண்டும் எனருல் எதற்காக வரம் கொடுப்பது? இது என்ன கௌரவம்? அப்பொழுது எல்லோரையும்போலதானே ஆகிவிட்டது. ஆகலால்தான எல்லோரும் கட்டுப்படுவது என்பது பிரஸித்தமாயிருக்க அப்படி நீர் கட்டுபபடவேண்டியதில்லை. நீர் ஸ்வதிந்திரன் உன் இஷ்டம் ஏதாவது காரியத்திற்காக நீராக கட்டுபபடவேண்டும் என்று எண்ணிஞல் கட்டுப்படலாம். அப்படி கட்டுப்பட்ட காலத்தில எவர்களுடைய உபகாரத்தையும் எதிர்பார்க்காமல் (ராமாதிகளையும், வானரர்களையும்போல சஞ்சீவி வந்து எழுந்திருக்காமல்) விடுபடவேண்டும் என்று எண்ணுகிறபோது விடுபடும்படியான வரத்தை உமக்குக் கொடுத்தோம் என்று பிர்ம்மா கொடுத்த வரம் என்று நாரதர் வாக்யம். தவிற நாரதரும் ஸம்க்ஷேபத்தில் 75-ம் சலோகத்தில் [illegible] என்று சூரனை அக்ஷனை அழித்துவிட்டு (தானுக) கட்டுப்பாட்டை அடைந்தார் என்றதாலும் (முதல் பாதத்தின் போக்கிஞல் தானுக என்பது பிரதயக்ஷம்) இதையே பாலகாண்டம் 3-ம் ஸர்க்கம் 32-ம் ச்லோகத்தில [illegible] என்று ஹநுமானுல் கிங்கரர்கள் அழிவையும் ஹநுமானுடைய (தானுக) கட்டுப்பாட்டையும் என்று வால்மீகியும் குறிப்பிட்டார். இதுவும் முதல் பாதத்தின் போக்கிஞல் தானுக கடடுப்பாட்டை என்பது ஸ்பஷ்டம். இக் கிரந்தத்தில் ஸகல கதைக்கும் நாரதவாக்யம் முதல் கௌரவம். அடுத்தபடி வால்மீகி வாக்யம. பிறகுதான மற்றவர் வார்த்தை கௌரவமாதலால் நாரத வார்த்தைப்படியும, வால்மீகி வாக்யப் படியும் பிர்மமா ஹநுமானைக் கேட்டுக்கொண்டார் என்பது கிடையாது. ஆதலால் இது அங்கீகரிக்கத் தகுந்ததல்ல என்று ஸ்பஷ்டம். நாரத வால்மீகி வாக்யத்திற்கு அபிப்ராயபேதம் வருமாஞல் நாரத வாக்யத்திற்குத்தான முதல் கௌரவம். நாரத வாக்யத்தை வைத்துக்கொண்டு பிர்ம்மா கிரந்தம் செய்யச் சொன்னதால் முதல் வாக்ய கௌரவம் நாரத வாக்யத்திற்குதான் என்று ஸ்பஷ்டம. என் அஸ்திரத்திற்கு கட்டுப்படும் என்று பிர்ம்மா கேட்டுக்கொண்டார் என்ருல் ஹநுமான் எனக்கு

னுன்றினாலும் கட்டுப்பாடு கிடையாது என்று பிர்ம்மா கொடுத்தார் வரம் என்றுரே இதனுல் பிர்ம்மா கட்டுப்படவேண்டும் என்று கேட்டுக்கொண்டார் என்ற கதை நிஜமா? கட்டுப்பாடு எதனுலும் கிடையாது என்று வரம் கொடுத்தவர் என்ற கதை நிஜமா? இவரே ராவணனைக் காணுவதற்காகவே சண்டையை ஆரம்பித்தாலும் அதை அனுசரித்தே இவர் கட்டுப்பட்டேன் என்றுரே தவிற வேறு அல்ல. பிர்ம்மா ஹநுமானைக் கேட்டுக் கொள்ளவில்லை. தவிற பிர்ம்மாஸ்திரம் ஹநுமானை விட்டிருந்தும் அவர் தெரிந்துகொள்ளவில்லை என்று இருக்கிறதே அப்பொழுது தெரிந்துகொண்டார் என்று ஸம்க்ஷேபமான முதல் ஸர்க்கத்திற்கு விரோதமல்லவோ எனில் இல்லை. தெரிந்துகொள்ளவில்லை என்ற பரியந்தம் தெரிந்துகொள்ளவிலலை. பிறகு ராக்ஷஸர்களால் பிடிக்கப்பட்ட பிறகு தெரிந்துகொண்டதாக ராவணனிடம் ஹனுமான் சொல்லியிருப்பதால் விரோதம் இல்லை தவிற முதல் ஸர்க்கத்திற்கு எது விரோதமாயிருந்தாலும் முதல ஸர்க்கமான ஸம்க்ஷேபமே பீஜமாதலால் இதற்குத்தான் ஸப்த காண்டத்தில் உள்ள ஸர்வ விஷயங்களையும் ஆகர்ஷித்து ஒத்து தான்சொலலவேண்டும். வாலமீகி வாக்யத்தையும அனுஸரித்துச சொல்லவேண்டும். இது விரோதமானுல் அதுகளைக்கொண்டு தான் பூர்வபக்ஷம்செய்து கௌரவம் கொடுக்கவேண்டும். சிலது நாரதவாக்யத்தில் இல்லாமலிருககலாம். சிலது வால்மீகி வாக்யத்தில இல்லாமலிருக்கலாம். நாரதவாக்யம் இல்லாமல்போனுல் வால்மீகி வாக்யம் கௌரவம. அதிலும் இல்லாவிட்டால் பிரகரணம் யாருடைய இடமோ அந்தந்த இடத்தை ஒத்து அங்கு அதில பலர் ஸம்பந்தம் இருந்தால் அதில் கிரந்தம் போகும் வழியில் அதில் எது முதல் கௌரவம் என்று இப்படி கவனித்துச்சொல்லவேண்டியது என்பதும் ஸ்பஷ்டம். ஹநுமானுக்குமேல் யாரும் ஸர்வத்திலும் கிடையாதாதலாலும் ஸாக்ஷாத் ருத்ரமூர்த்தி வாயுபகவான் மூலம் அவதரித்ததாலும் ஹநுமானும், நாரதரும், வால்மீகியும் ராமனை விஷ்ணுவின் அவதாரம் என்று குறிப்பிட்டு இருப்பதாலும் ஹநுமான் சொல்லாமல் சொல்லியிருப்பதாலும் ராகவன் இப்படியே ஹநுமத்

பிரபாவத்தை அகஸ்தியரிடம் கேட்ட இடத்தில மஹர்ஷே காலபுருஷன் என்ன, இந்திரன் என்ன, விஷ்ணு என்ன, குபேரன என்ன, பிர்ம்மா என்ன இவர்களாலும் அசைக்கமுடியாதவன் இந்த ஹநுமான் என்று சொலலி ஹநுமானை ருத்ராணுக்கு சொன்னதாலும் ஹநுமானுக்குமேல் ஸர்வத்திலும் யாரும் கிடையாது என்று ஸ்தாபனம். ஆதலால் அவரை யாரும எந்த அஸ்திரத்தாலும் கட்டமுடியாது என்று சொன்னது நியாயமே. நாரத வாக்யப்படி பிர்ம்மாஸ்திரத்திலிருந்து விடுபடுவதற்குத் தான் ஹநுமானுக்கு வரமே தவிர கட்டுப்படுவதற்குக் கிடையாது என்றும் பிர்ம்மாஸ்திரமும் ஹநுமானைக்கட்டாது என்றும் காமரூபி காமசாரீ காமக: ப்லவதாம்வர: । என்று நினைத்த ரூபத்தை எடுக்கத் தகுந்தவன் என்றும், நினைத்தபடி ஸஞ் சரிக்கும்படியான யோக்யதை உடையவனென்றார், வானரன் ஆதலால் தாண்டுகிறவர்களுக்குள் சிரேஷ்டன் என்று இப்படி வரம் அடைந்து இருப்பதாலும் அப்படி இருந்ததாலும் செய்த தாலும் ஒன்றிலும் கட்டுப்படாதவராதலாலும் அதாவது ஸூர் யனைப்போய் பிடித்ததென்ன, ஸமுத்ரத்தை தாண்டியதென்ன, சின்ன ரூபம்கொண்டு ஸுரஸையின் வாயில் பிரவேசித்து வெளி வந்ததென்ன, சாயாக்ராஹி வாய் வழியாய் ரொம்ப சின்ன ரூபமாய் அவள் வயிற்றிற்குள் சென்று அவளைக் கொன்று அவள் வயற்றிலிருந்து வெளிவந்ததென்ன, ஸீதைக்காக சின்ன பூனையின் ரூபம்போலொத்த ரூபத்துடன் வேறொருவர் பிரவேசிக்க முடியாத லங்கையில பிரவேசித்து யாரும் தன்னைக் கண்டுபிடிக்க முடியாமல் இருக்கக்கொண்டு அதிகட்டுக் காவலுடன் கூடின அந்தப்புராதிகளிலெல்லாம் பிரவேசித்து வெளிவந்ததென்ன, அதிகாவலுடன் கூடின ஸீதை யிருப்பிடத்தில் யாருக்கும் தெரி யாமல் ஸீதையிடம் அவளுக்கு தன்னிடம் நம்பிக்கை உண்டா கும்படி பேசி மோதிரம் கொடுத்து சூடாமணி வாங்கிவந்த தென்ன, ராவணன் தனக்கு கொடுத்த அக்னியைக் கொண்டே லங்கையை அழித்துவந்ததென்ன, ராவணனைக் காணுவதற்காக பிர்ம்மாஸ்திரத்தில் கட்டுப்பட்ட விசித்ரம் என்ன, சுக்ரீவனுக் காக பயந்து உயிரை விட்டுவிடுகிறோம் என்று இருந்த வானர

கோடிகளுக்கு உயிரைக்கொடுத்த அழகென்ன, ஸூர்யன் ஸஞ்சரித்துக்கொண்டு இருக்க அவர் எதிராக சிஷ்யனுக உட்கார்ந்து கொண்டு அவர் போகும் வேகத்திற்குமேலொத்த வேகத்துடன் பின் ஓட்டம் ஓடிக்கொண்டு நவவ்யாகரண பாடம் வாசித்த தன்மை என்ன, ஸீதாதேவிக்கு தனது அகண்டமான விச்வ ரூபத்தைக் காட்டின பிரபாவம் என்ன, அவ்வளவு இருந்தும் ஸாக்ஷாத் ராகவனிடத்தில் விளங்கிவரும் பூர்ண பக்தி என்ன, ஜிதேந்திரியத்வம் என்ன, நைஷ்டிக பிரம்மசர்யவிரதத்தின் நியமம் என்ன, யோசனையில் மந்திரிஸ்தானம் என்ன, சுக்ரீவனிடத்தில் ராஜன் என்பது இருந்தாலும் அவனிடத்தில் இருக்கும் மித்ர பாவம் என்ன, இப்படி ஸர்வத்திலும் மேன்மையுள்ளவனுதலால் ஸ்வதந்திரன் என்பது) நாரத வாக்யப்படியும், வால்மீகி வாக்யப் படியும் ஹநுமானை எந்த அஸ்திரமும் கட்டமுடியாதென்றும் ஹநுமான் ஸர்வ தந்திர ஸ்வதந்திரன் என்றும் ஸித்தாந்தம்.



உ

ஸ்ரீராமஜெயம்.

# யுத்த காண்டம்.

---

## 37. ஶரணம் என்கிற பதத்திற்கு ரக்ஷணம், வீடு என்ற அர்த்தங்கள் இருந்தாலும் பிரகரணத்தில் நமஸ்காரத் திற்கும் பிரயோகம் உண்டு என்ற ஸித்தாந்தம்.

யுத்தகாண்டம் 19-ம் ஸர்க்கம் 3-ம் ச்லோகம் ஸது ராமஸ்ய தர்மாத்மா நிபபாத விபீஷண: । பாதயோ: ஶரணான்வேஷீ சதுர்பி: ஸஹ ராக்ஷஸை: । என்று (வால்மீகி வர்ணிக்கிறார்.) அந்த விபீஷணன் காலில் நமஸ்காரத்தை இச்சித்துக்கொண்டு ராமனுடைய பாதங்களில் விழுந்தான் என்று இருப்பதால இங்கு நமஸ்காரம் என்பது அர்த்தம். மேலும் யுத்த காண்டம 41-ம ஸர்க்கத்தில் 67-ம் ச்லோகத்தில் ந சேச் ஶரணம் அப்யேஷி ...ம் । என்று ஸீதாதேவியை விட்டு காலில விழுவதை இச்சிக்காமல் போவாயாகில பாணங்களால் ராக்ஷஸ லோகத்தை அழிக்கப்போகிறேன் என்று சொல் என்றார். ராகவன் இதையே அங்கதன், ராவணன் சொல்லும்போது ஶரண பதத்திற்கு அர்த்தத்தைச் சொன்னான். அதாவது அதேஸர்க்கம் 86ம் சலோகம் ந சேச் சரணம் ... வைதேஹீம் ப்ரணிபத்ய ப்ரதாஸ்யஸி ॥ என்று ஸீதாதேவியைக் கொண்டுவந்து விட்டு காலில் விழாமல் போவாயேயாகில் நீ கொல்லப்படுவாய் என்றான. இங்கு நமஸ்காரம் என்றால ஸீதை ராவணனிடத்திலும் நீ ராமன் காலில விழு என்றான். யுத்தகாண்டம் 80-ம் ஸர்க்கம் 89-ம் சலோகத்தில் அயுத்யமானம் ப்ரச்சன்னம் ப்ராஞ்ஜலிம் ஶரணாகதம் । பலாயந்தம் ப்ரமத்தம் வா ந த்வம் ஹந்துமிஹார்ஹஸி என்று யார் யார் கொலலத்தகாதவர்கள் என்கிறார். தன்னுடன் சண்டை போடாதவன், மறைந்துகொண்டு இருக்கிறவன், கைகளைச் சேர்த்து நமஸ்கரித்தவன், காலில் விழுந்தவன், ஓடின

வன், தன்னை மறந்து இருப்பவன அவர்களைக் கொல்லக்கூடாது என்றார். இதில் ப்ராணாமகம் காலில விழுந்தவன் என்றர்த்தம். மேலும் யுததகாண்டம் 18-ம் ஸர்க்கம 27-ம சலோகத்தில் வஞாஜலிவுட்டம் தீநம்யாசந்தம் ப்ராணாமகம் என்று இதில் கைகளைச் சேர்தது நமஸ்கரித்தவன், கதியில்லாதவன், யாசிக்கிறவன, காலில் விழுந்தவன் என்றும் இப்படி குறிபபிடப்பட்டது. மேலும் ராமன் லக்ஷ்மணன் மூலமாய் சுக்ரீவனை சரணாகதி செய்கிறார். கிஷ்கிந்தா காண்டம் 4-ம் ஸர்க்கம் 17 முதல் 24சலோகம் வரை லக்ஷ்மணன் ஹநுமானைப் பார்த்து (தங்களைத் தங்களுக்குத் தெரியாமல் இருப்பதால் சரணாகதி செய்யலாம். ஆதலால் செய்கிறார்கள்.) நாங்கள் இருவரும் இப்பொழுது சுக்ரீவனை சரணாகதி செய்கிறோம். உததமமான தானதிகளைச் செய்து உத்தம கீர்த்தியுடைய அந்த ராமன் முந்தி பிதாவுடன் லோகத்துக்கு நாதனாக இருந்தவன் இபபொழுது நாதனாக (ரக்ஷிக்கிறவனாக) இச்சிக்கிறார். ஸகல லோகத்திற்கும் தர்மாத்மாவான அந்த ராமன் எலலோராலும ஸேவிக்கப்படும் ராமன் ஏற்கனவே என்னால் ஸேவிக்கபபட்டு என் சரணாகதி பூர்த்தி செய்த அந்த ராமன் என் குருவான அந்த ராமன் இந்தவேளை சுக்ரீவனை சரணாகதி செயகிறார். எந்த ஒருவனுடைய பிரஸாதத்தை ஸர்வலோகமும் எதிர்பார்க்கிறதோ அந்த ராமன் இந்த சுக்ரீவ பிரஸாதத்தை எதிர் பார்க்கிறார். ராமன் சோகத்தால பீடிக்கப்பட்டு ஸுக்ரீவனை சரணாகதி செய்கிறார். சுக்ரீவன் சூரியனுக்கு நேரிட புத்திரராதலால நாங்கள் சூரியவம்சஸ்தர்களாதலால அவன் ராமனுக்கு அநுக்ரஹம்செய்ய அர்ஹமுடையவன் என்றார். இப்படி லக்ஷ்மணர் ராமன் ஸேவிக்கிறார் என்றார். ராமனே தன் வாயினால் வாலி சுக்ரீவர்கள் முதல் யுத்தத்தில் ஸுக்ரீவன் களைத்துவந்து கவலைப்பட்டபோது சுக்ரீவனைப் பார்த்து நான் உன்னை காட்டில சரணாகதிசெய்து இருக்க நான் உன்னைக் காட்டிக்கொடுபபேனா என்றார். இவரே லக்ஷ்மணனிடத்தில் நம்மை ராமன் சரணாகதி செய்துவிட்டதால நாம் கொடுக்கிறபோதுதானே இந்த ராமன் ஸீதையை யடைய வேண்டும் என்று எண்ணிவிட்டான், பார்த்தாயா, லக்ஷ்மணா!

என்றார். இப்படி பல இடங்களில் ப்ராண சப்தத்திற்கு நமஸ்காரம் என்ற அர்த்தம். மேலும் கவனிப்போம். ப்ராண சப்தத்திற்கு ராமன் ப்ரபந்நம் என்று நமஸ்காரம் என்று அர்த்தம் செய்கிறார் யுத்த காண்டம் 18-ம் ஸர்க்கம் 33-ம் ச்லோகத்தில் ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே। அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம। என்று உன்னைச்சேர்ந்தவன் என்று சொல்லி ஒருதடவை நமஸ்கரிப்பவனின் பொருட்டு ஸர்வபூதங்களினின்றும் நான் அவனை ரக்ஷிப்பேன் இது என் விரதம் என்றார். ப்ராணம் என்பதற்கு நமஸ்காரம் என்றார் கவி. 31-ம் ச்லோகத்தில் ப்ரபந்நாநாம் அரக்ஷணே। காலில் விழுந்தவர்களை ரக்ஷிக்காதவர்களுக்கு மஹா தோஷம் என்றார். இங்கு நமஸ்கரிக்கிறவர்களை என்ற அர்த்தமல்லவா? பிரகரணம் சரணாகதி கட்டமாதலால் நமஸ்காரம் என்கிறார். நசேத் ஸக்ஷ த்ரூவேவைஹீம் ப்ரணிபத்ய ப்ரஸாதய। என்று ப்ரணிபத்ய என்பதற்கும் நமஸ்காரம் என்றும் சொல்லி அதை ப்ராண சப்தத்திற்கும் காட்டினார். தவிர ஸுந்தர காண்டம் 38-ம் ஸர்க்கம் 34-ம் ச்லோகத்தில் ஸ்ரீநுவேராகாஸ்யம் வரிக்ஷ்ய தவைவப்ராணம் கத:। ஸ தம் நிபதிதம் பூமௌ ப்ரணம்ய ப்ராணாகதம்। என்று இங்கு காலில் விழுந்தவனை ரக்ஷிக்கிறவனாயிருக்கிற ராமன் பூமியில் விழுந்து நமஸ்கரித்த அவனை கிருபையால் ரக்ஷித்தார் என்று இருப்பதாலும் நமஸ்காரம் என்று அர்த்தம் ஸ்பஷ்டம். ஆதலால் பிரகரணத்தை ஒத்து ப்ராண சப்தத்திற்கு நமஸ்காரம் என்று வால்மீகியே குறிப்பிடுவதால் நமஸ்காரம் என்ற அர்த்தம் உண்டு என்று ஸித்தாந்தம்.

---

38. ராகவன் ஒரு இடத்திலும் ஸுக்ரீவனை அவமதித்தவர் அல்ல என்றும், அவனை தனக்கு நாதனாகவும் பரம மித்ரனாயும் எண்ணுகிறார் என்ற ஸித்தாந்தம்.

ஸாக்ஷாத் ராகவன் ஸகல வானர வீரர்களுடன் ஸமுத்ரக் கரையில் விளங்கிவரும் காலத்தில் ஏற்கனவே ஹநுமானால் லங்கை எறிக்கப்பட்டதும் ராவணனுக்னையால் விச்வகர்மாவால்

சிருஷ்டிக்கப்பட்டபிறகு ராவணன் ஸகலருடன் மந்திராலோசனை செய்யும்போது ஸீதையை ராமனிடம் கொடுத்துவிடலாம் என்று சொன்ன விபீஷணனிடம் ராவணன் கோபித்து அவனை வர்ஜித்துவிட விபீஷணன் ராமனை சரணாகதி செய்வதற்காக அக்கரை வந்து ஆகாசத்தில் இருந்துகொண்டு தான் சரணாகதிக்கு வந்து இருப்பதாகச் சொல்ல, அதைக்கேட்ட ஸுக்ரீவன் ராகவனிடம் சென்று இவ்விஷயத்தைச்சொல்ல ராமனும் மந்திரிகளிடம் சேர்க்கும் விஷயத்தைப்பற்றி ஆலோசனை செய்ய அப்பொழுது ஹநுமான் சேர்க்கலாம் என்று சொல்ல அதையும் ராமன் கேட்டுவிட்டு ஸுக்ரீவனைப்பார்த்து மித்ரபாவத்தில் வந்த இவன் விடத்தகுந்தவனல்லன் சரணாகதி என்று வந்தவன் தோஷத்தோடு கூடினவனானாலும் தோஷம் இல்லாதவனானாலும் ரக்ஷிக்கத் தகுந்தவன் என்றார். அது கேட்டு ஸுக்ரீவன் ராகவனைப் பார்த்து இவன் நீர் சொல்லுகிறபடி நல்லவனானாலும் ஸரி கெட்டவனானாலும் ஸரி பிராதாவுக்கு மஹத்தான ஆபத்து வந்து இருக்கும்போது அவனை விட்டு வந்தவனல்லவா—இவன் எவனைத்தான் தள்ளமாட்டான் என்றான், அதற்கு பிறகுதான் ராகவன் ஸுக்ரீவன் சொன்னதைக் கேட்டுவிட்டு ராமன் யுத்த காண்டம் 18ம் ஸர்க்கம் 7-ம் ச்லோகம் [illegible] । [illegible] । என்று எல்லோரையும் பார்த்துவிட்டு லக்ஷ்மணனைப்பார்த்து மந்தஹாஸம் செய்து இந்த வார்த்தையைச் சொன்னார். அதாவது சாஸ்திரங்களை யறியாமல் பெரியோர்களை ஸேவிக்காமல் கைங்கர்யம் செய்யாதவனுக்கு இப்படிச் சொல்ல முடியாது என்று மேலும் சொல்லுகிறார். இது இருக்கட்டும். முந்தி ராமர் மந்தஹாஸம் செய்தார் என்று சொல்லப்பட்டதே; அதற்கு முந்தி சொல்லப்பட்டிருப்பதுதான் பதத்தின் அர்த்தம். அப்படி இருக்க மந்தஹாஸத்திற்கு அர்த்தம் செய்கிறோம் என்று சொல்லிக்கொண்டு உலகத்தில் என்ன அர்த்தம் செய்கிறார்கள் என்றால் அண்ணாவுக்கு ஆபத்து வந்தபோது அவனை விட்டுவந்த இவன் எவனை விடமாட்டான் என்றதால் ராமன் எல்லோரையும் பார்த்துவிட்டு லக்ஷ்மணனைப் பார்த்து மந்தஹாஸம் செய்தார்

என்றிருக்கிறதால இந்த விபீஷணன் ராவணனை விட்டு வந்தவன் ராவணனைக் கொல்லவந்தவன என்கிறானே இந்த சுக்ரீவன். இவன்மட்டும் இவன் அண்ணாவை (வாலியை) கொல்லவில்லையா என்று மந்தஹாஸம் செய்ததாய் அர்த்தம் செய்கிறார்கள். தவிர மேலும் சில விஷயங்களைச் சொல்லிவிட்டு ஸகல பிராதாக்களும் பரதனுக்கு ஸமானமில்லை என்றும், அப்பாவுக்கு என்னைப்போல் பிள்ளை இல்லை என்றும ஸகல ஸ்நேகிதாகளும் உனக்கு ஸமான மில்லை என்றும சொன்னார். இதற்கும் மேலாகத்தில் ஸ்ரீ ராமனை ராமன பிதாவாய் வரித்துவிட்டார். அதனால் தான் பரதனை தம்பியின் கோஷ்டியில் சேர்த்து இருக்கிறார் என்கிறார்கள். அப்பாவுக்கு என்னைப்போல பிள்ளை இல்லை என்பதற்கு நான் காடு போனதும என் பிதாவுக்கு பிராணன் போய்விட்டது. இப்படி என்னைப்போல அபிமானமுள்ள பிள்ளை இல்லை என்று சொன்னதாயும சொல்லுகிறார்கள். இவைகளையும் வால்மீகி பிசகு என்று கண்டிக்கிறார். வால்மீகி எப்படி ச்லோகத்தின அர்த்தத்தையும ராமர் ஸகலரையும பராதாக்களையும ஸகல பிரா தாக்களும் பரதனுக்கு ஸமானமில்லை என்பதையும் என் பிதா வுக்கு என்னைப்போல பிள்ளை இல்லை என்பதையும் ஸகல ஸ்நேகிதாகளும உனக்கு ஸமானமில்லை என்பதையும் எப்படி வர்ணிக்கிறார் கவனிப்போம் :—

ஸாக்ஷாத் ராகவன சுக்ரீவனை ஸ்நேகம் செய்யும்போது உன் ஸுகதுக்கம் என்னுடையது என்று சொன்னார். அப்படியே ஸுக்ரீவனும ராமனைப் பார்த்து சொன்னார். இப்படி சொன்னபடி வாலி மரணாநந்தரம வாலி வதத்திற்கு துக்கித்த சுக்ரீவனுடன் இராமரும வாலிக்காக அவன் சுகதுக்கம தன்னுடையதாதலால் கூட துக்கித்தார். மேலும் வாலியிடம் முதல் யுத்தத்தில் துக்கப்பட்டு வந்த ஸுக்ரீவனைக் கட்டிக்கொண்டு உங்கள் இரு வருக்கும அடையாளம் தெரியவில்லை. அதனால் சண்டை போட வில்லை, வாலியை அடிக்கவில்லை, நீ பட்ட அடியெல்லாம் நான் பட்ட அடியே, நீ கவலைப்படாதே என்று அவனை அவன் சுக துக்கம் தன்னுடையதாதலால் அனுபவிக்கிறார். இப்படியே ராகவன் நாகபாச கட்டத்தில் எல்லோருடன் கீழே விழுந்து

இருந்தபோது சுக்ரீவன் ராமனுக்காக துக்கித்தான். அதற்காக ராமசுகதுக்கம் தன்னுடையதாதலால் சரணாகதிக்காக விபீஷணனை சேர்த்துவிட்டால் ராமாதிகள் தூங்கும்போது அவரை இந்த விபீஷணன் கொன்றுவிட்டால் என்ன செய்வது ராமஸுகதுக்கம தனனுடையதாதலால் அதற்காகவே விபீஷணனை சேர்க்ககூடாது என்கிறான் ஸுக்ரீவன். தவிர புண்ய லோகம் செல்லும காலத்தில ராமன ஸுக்ரீவனைப பார்த்து ஏ ஸ்நேகித! நீ இல்லாமல் எனக்கு எந்த லோகமும் வேணடாம் எந்த பதமும் வேண்டாம் என்கிறார். மேலும் ஸுக்ரீவனைப பார்த்து ராமன், சுக்ரீவன, ராவணனுடன யுத்தம் செய்து ராவணனது கிரீடங்களை உருட்டிவிடடு ஜயத்துடன திரும்பி வந்தும் நீ ராவணனுடன் யுத்தத்திற்கு சென்றீரே அவனிடம் நீர் அகப்பட்டு இருந்தால் என் கதி என்ன? நீர் செத்தபிறகு எனக்கு லக்ஷ்மணன இருந்து என்ன பிரயோசனம், ஸீதை இருந்து என்ன பிரயோசனம், என உயிர் இருந்து என்ன பிரயோசனம் எனகிறா இபபடி பரஸ்பரம் ஒருவர் சுகதுக்கம் மற்றொருவருடையதாய அனுபவிக்கிறார்கள். இபபடியிருக்க சுக்ரீவன் ராவணனுன பிராதாவுக்கு ஆபத்து வந்த வேளையில் அவனை விட்டுவந்த இவன் எவனை விடமாட்டான் என்றதற்கு ராமர் எலலோரையும் பார்த்தார். பிறகு லக்ஷ்மணனைப் பார்த்து மந்தஹாஸம் செய்தார். இதற்கு இவன் அண்ணனைக் கொன்றவனல்லவா என்று பார்த்ததாய் சொல்லுகிறார்களே இது கவி வாக்ய விரோதமலலவா? இப்படி சொலலும்போது மற்றொன்றும் சொலலலாமே. அதாவது லக்ஷ்மணனைப பார்த்தல்லவா மந்தஹாஸம் செய்தது. இந்த லக்ஷ்மணனும் சித்ரகூடத்தில் ராமனை தரிசிக்கவந்த பரதனை மூத்தவனைக்கொல்ல யோசித்தவனல்லவா ஆதலால் வந்த விபீஷணன ராவணனைக் கொலலவந்தான். ஸ்நேகிதனை சுக்ரீவன் மூத்தவனை வாலியைக் கொன்றான். பக்கத்தில இருக்கும் தம்பி லக்ஷ்மணனோ தன் தமையன் பரதனைக் கொலல யோசித்தான் இப்படி என்னை சேர்ந்தவர்கள் அத்தனை பேர்களும் அண்ணனைக் கொலலும் பேர்வழிகளாய் வந்துசேர்ந்தீர்களே என்று ஸகலத்திறகும் முதலான லக்ஷ்மணனைப் பார்த்து

மந்தஹாஸம் செய்ததாய் ஏன் சொல்லக்கூடாது? என்று கேட்
கிறோம். இவ்வளவும் பிசகாகிறது எப்படி எனில்:— ராமன்,
சுக்ரீவன் இந்த விபீஷணன் எனைத்தான் விடமாட்டான்
என்றதும் எல்லோரையும் பார்க்காவிட்டு லக்ஷ்மணனைப் பார்த்து
மந்தஹாஸம் செய்தார். எல்லோரையும் பார்த்த காரணம்
யாதெனில் கொஞ்ச நாழிகைக்கு முந்தி ராமன் இத்தனை பேரி
டமும் சுக்ரீவன் அபிப்பிராயத்தை ஒட்டி மந்திராலோசனை செய்த
வராதலால் அவ்வளவு போசகுநும் ஹநுமானைத் தவிர மற்றவர்
ஸகலரும் சேர்த்துக்கொள்ளலாகாதென்று சொல்லியும் ஒவ்வொரு
யோசனை சொன்னதால் அவ்வளவு பேர் அபிப்பிராயமும், ராஜன்
அபிப்ராயமும் ஒன்றுதலால் இதோ ராஜன் அபிப்பிராயத்தை
உங்கள் எல்லோருக்கும் என்று பார்த்துவிட்டு லக்ஷ்மணனைப்
பார்த்து மந்தஹாஸம் செய்தார். அதன் அபிப்பிராயம் என்ன
என்பதைக் கவனிப்போம். ராமன் சுக்ரீவனைப் பற்றி இவன்
அண்ணனைக் கொல்லவில்லையா என்று மந்தஹாஸம் செய்தார்
என்று சொல்லுவோமானால் வாலி வதம் செய்தது ராமனா?
சுக்ரீவனா? தவிர சுக்ரீவனை அவனைச்சேர்ந்த அநேக வீரர்கள்
மத்தியில் இவன் அண்ணனைக் கொன்றவன் என்று மந்த
ஹாஸம் செய்வாரேயானால் இதுதான் சுக்ரீவனிடம் உள்ள ஸௌக
தக்கம் என்னுடையதென்று சொன்ன அழகா! அவனை அவ
மானப்படுத்தினாரா? தன்னையே அவமானப்படுத்தினாரா? எப்படி?
தவிர இந்த மந்தஹாஸ அர்த்தத்தை சுக்ரீவன் அறிவானேயா
னால் மானியான அவன் பிராணன் அத்தனை பேர் மத்தியில்
அங்கே போயிருக்காதா? மித்ரனை அவமானப்படுத்துவதுதான்
ராமனது குணமா? தவிர வாலியைக் கொன்றது ராமனா தவிர
சுக்ரீவனில்லையே. இதே ராமன் வாலி வதத்திற்கு பிறகு வாலி
யைப்பார்த்து குடும்பத்தில் மூத்தவன் ஒரு பிதா, வித்தையைக்
கற்றுக்கொடுத்தவன் ஒரு பிதா, பெற்ற பிதா ஒரு பிதா என்றும்
குறிப்பிட்டவர் மூத்தவனான வாலியைக் கேட்ட சுக்ரீவனிடம்
நான் கொல்லமாட்டேன் அவன் உனக்கு பிதா என்று சொல்லா
மலும் இருந்துவிட்டு, அவன் வதத்தையும் இவரே செய்தார்.
செய்தபிறகாவது சுக்ரீவ, என்ன இருந்தாலும் மூத்தவன் பாபம்

உண்டு உனக்கு நான் இதற்கு ஒரு பிராயசித்தம் செய்விக்கிறேன். என்று சொல்லி செய்விக்காமலும் இருந்துவிட்டுதானே வாலி வதத்தையும் செய்துவிட்டு சுக்ரீவனை அவனைச் சேர்ந்த வானரர் மத்தியில் வைத்துக்கொண்டு இவன்மட்டிலே இவன் அண்ணனைக் கொன்றவனல்லவா என்று மந்தஹாஸம் செய்து இருப்பாரேயானால் இந்த ராமனைப்போல் மித்ர துரோகி உண்டா இதுதான் சுக்ரீவன் ஸாகதககம இவருடையதென்றர்த்தமா? எப்படி? இப்படிப்பட்ட ராமனையா வால்மீகி தர்மாத்மா என்று சொன்னார்—எப்படி? அப்படிப்பட்டவரானால் இந்த ராமன் முதல் யுத்தத்திலே அடிபட்டுவந்த சுக்ரீவனைப் பார்த்து கட்டிக் கொண்டு ஏன் அழுதார்? தன்னை மௌட்யனாயும் சொல்லிக் கொள்ளுகிறாரே. உங்கள் இருவரையும் வித்தியாஸம் கண்டு பிடிக்க எனக்கு யோக்யதை இல்லை என்கிறாரே! இவ்வளவும் வேஷம் போடுகிறாரா? கிரீடங்களை பேதித்துவந்தபோதும் நீ இல்லாமல் என்ன வேண்டும் என்றதும் எப்படி? இவர் தன்னையே அவமானம் செய்துகொண்டாலென்ன? சுக்ரீவனைச் செய்தா லென்ன? தவிர இவர் தன் வாயினால் சுக்ரீவனை தனக்கு எஜமானன் என்றும் தான் அவனை சரணாகதி அடைந்து இருக்கிறேன் என்றும் அவன் அனுக்ரஹம் தனக்கு வேண்டும் என்று இருக்கிறவர் எவ்விதத்தில் அவனை இவர் அவமானப்படுத்துவார். இது மஹத்தான அவமானமல்லவா? ராவண வதமாகி ஊருக்கு வந்ததும் தனது பட்டத்து யானையில் அவனை வரச்சொன்னவர் ஊருக்குள் வந்ததும் தனது அரண்மனையை அவனுக்கு கொடுக்கச் சொன்னவர் தவிர விபீஷணன் தன்னை சரணாகதி செய்ததாலும் தன்னை விபீஷணன் எஜமானனாய் எண்ணியதாலும் தன்னைத் தன் அனுக்ரஹம் வேண்டும் என்று விபீஷணன் கேட்டதாலும் ராவண வதத்திற்குப் பிறகு தன் தம்பி லக்ஷ்மணனைக் கொண்டு அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்தார். வாலி வதாநந்தரம் ஹநுமான் ராகவனைப் பார்த்து நீர் ஊருக்கு வந்து சுக்ரீவனுக்கு பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்று கேட்டபோது நான் 14 வருஷ பரியந்தம் பட்டணப்பிரவேசம் செய்வதில்லை என்றும் சொல்லி எனக்கு எஜமானனான சுக்ரீவனுக்கு நான் பட்டாபி

ஷேகம் செய்யமாட்டேன்; நான் அவனை சரணாகதி செய்திருக்கிறேனாதலால் நீரே போய் சுக்ரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்யும் என்று ஹனுமானைக்கொண்டே அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்திருக்க இவ்வளவு கௌரவமுள்ள சுக்ரீவனை இவர் அவமானப்படுத்துகிறார் என்றால் எப்படி? இதனால் மறைக்காமல் குறித்து சுக்ரீவன் வார்த்தைப்படி வாலியைக் கொன்று பாணம்போனவழித்த பாணம் இவனும் ராமனும் வாலியில் உணரி என்று லக்ஷ்மணனை முதலில் சொல்லியனுப்பினதால் அப்படியே லக்ஷ்மணனும் சொன்னான் இது சுக்ரீவனுக்கு குறைவல்லவா எனில் ராகவன பத்னி பிரிந்த வியோகத்தால் புலம்பிவிட்டதாயும் லக்ஷ்மணன் அண்ணா பிராண வியோகம் பொறுக்கமுடியாமல் சொல்லி அதை சுக்ரீவன் பொறுத்துக்கொள்ளவேண்டும் என்று இக்கிரந்தத்தில் குறிப்பிடப்பட்டுவிட்டபடியால் அதுகளுக்கு மதிப்புக்கிடையாதென்று பிரமாணம். ஆகலால் இக்கிரந்த ரீதியாய் ஒரு இடத்திலும் சுக்ரீவனுக்கு குறைவே கிடையாதென்ற ஸித்தாந்தம். இப்படி இருக்க இவனை வாலியைக் கொன்றவனல்லவா என்று மந்தஹாஸம் செய்தார் என்பது எப்படிப் பொருந்தும்? ஆதலால் இது விருத்தம் என்று ஸித்தாந்தம். தவிர லக்ஷ்மணனைப் பார்த்து மந்தஹாஸம். அவனையும் அவமானம் செய்ததோ எனில் லக்ஷ்மணன் ராமனுக்கு அபரப் பிராணனாய் இருக்க அந்த லக்ஷ்மணனை ராமன் பிள்ளையாய் எண்ணியிருக்க தன்னை அவமானப்படுத்திக் கொண்டாலென்ன, தன் பிள்ளையை செய்தாலென்ன, அவன் மானாவமானமும் தன்னுடையதாலும் லக்ஷ்மணன் சக்தியாயுதத்தில் அடிபட்டு விழுந்த போது நீ போன பிறகு எனக்கு என்ன வேண்டும், எனக்கு எதனால் என்ன பிரயோசனம் என்பதாலும் உத்தரகாண்டத்தில் நான் என் தம்பி அடைந்த கதியையே அடையுவேன் என்று இருப்பதாலும் ஒரு இடத்திலும் ராமன் லக்ஷ்மணனையும் அவமானம் செய்யவில்லை என்று இருப்பதால் அதுவும் பிசகு என்று ஸித்தாந்தம். ஆனால் லக்ஷ்மணனைப் பார்த்து மந்தஹாஸம் செய்த அர்த்தம் என்னவெனில்:—லக்ஷ்மணா நீ பிறந்தது முதல் என்னை காப்பதற்காக ஏற்பட்டவன் நீயும் என்னை ரக்ஷிப்

பதற்காக என் கூடவும் வந்தவன். அது இருக்கட்டும். இந்த சுக்ரீவனிடம் நான உன் ஸுகதுக்கம் என்னுடையதென்று சொல்லி அதை அனுபவிக்கிறவனாய் வாலிவதத்தை செய்து அவனுக்கு ஸௌகரியத்தை ராஜயத்தை கொடுததேனே. அவன் என்னிடம் உன் ஸுகதுககம 'என்னுடையது என்று சொன்ன படியால எனது பத்னி ஸீதையை தேடிககொடுப்பதாய பிரதிக்ஞை செய்து இருககிறபடியால அநத என்னுடைய ஸுக துககததை தான் அனுபவிககிறவனாய என்னைக் காபபாறறினு லல்லவோ எனக்கு ஸீதையைக கொடுத்தனுப்பலாம். அதறகாக இந்த சரணாகதி செய்யவந்து இருக்கும இவன் சதரு பட்டணத் தில இருந்துவந்து இருககிறான. ராவணனுக்கு தம்பி என்றும் சொல்லுகிறான. இவன் தூங்கும்போது உமமைக் கொன்று விட்டால் என்ன செய்வது என்று என்னை கார்பபதில் நீ எப்படி ஜாக்ரதையாய் இருக்கிறாயோ அபபடி உன்னைப்போல எப்படி என்னைக காரபபதில ஜாக்ரதையாய இருககிறான் பார்த்தாயா என்று மந்தஹாஸம் செய்தார என்றார் வால்மீகி. இதுதான் மநதஹாஸத்தின் அாததம இபபடி மந்தஹாஸம் செய்த பிறகு ராமன் சுக்ரீவனைப் பார்த்து சாஸ்திரங்களை அறியாத வனதான் இப்படி பேசுவன என்று இபபடி சொல்லி மேலும் நாம் இவனுக்கு குலமும் அல்ல, அவனது ராஜயமும் நமக்கு வேண்டாம் என்றும் சொல்லி மேலும் ஸகல தம்பிகளும் பரத னுக்கு ஸமானமாகமாட்டான் என்றார். இங்கு உலகத்தில் லக்ஷ்மணனை ராமன் பிதாவாக வரித்தார் என்பதை கவி கண்டிக் கிறார். திலகவியாக்யானமும் கண்டிக்கபபடுகிறது. உலகத்தில் எப்படி லக்ஷ்மணனைப் பிதாவாக வரித்தார் என்று சொல்லு கிறார்கள் என்றால் பிதா தகபபனுக்கு வீடு கட்டிக் கொடுப்பன். அப்படி லக்ஷ்மணன் காட்டில் தண்டகாரண்யத்தில் கோதாவரிக் கரையில் வீடு கட்டினதும் ராமன் லக்ஷ்மணரைக் கட்டிக்கொண் டார். அப்பொழுது லக்ஷ்மணரைப் பார்த்து ராமன் மனோ பாவத்தை அறிந்தவனாயும் எந்த காரியத்தை எப்படி செய்ய வேண்டுமென்றறிந்தவனாயும் தர்மத்தை அறிந்தவனாயுமுள்ள லக்ஷ்மணா உனனால் நான் அடைந்தேன் பிதா அடையவில்லை

என்றார். இப்படி இருப்பதை உலகத்தில் என்ன சொல்லுகிறார்கள் என்றால் பிதா பிள்ளைக்கு வீடு கட்டி கொடுப்பது வழக்கம் அப்படி மஹாராஜா எனக்கு நாளைக்கு பட்டாபிஷேகம் என்றார். வாஸ்தவம் என்று எண்ணியிருந்தேன். ஆயிருந்தால் எனக்கு வீடு எல்லாம் கிடைத்து இருக்கும். மறுநாள் நான் காடு போகும்படி ஏற்பட்டுவிட்டது—நானும் காடு வந்துவிட்டேன். எனக்கு அப்பா வீடு கட்டிக்கொடுக்கவில்லை. அதற்கு பதிலாக லக்ஷ்மணன் எனக்கு வீடு கட்டிக்கொடுத்ததால் நான் இவரை அப்பாவாக வரிக்கிறேன் என்று சொன்னதாகச் சொல்லுகிறார்கள். இதை வால்மீகி விபரீதம் என்கிறார். தகப்பன் பிள்ளைக்கு வீடு கட்டிக்கொடுக்கவேண்டாம். தகப்பன் காலமானால் தானாக பிள்ளை வீட்டை எடுத்துக்கொள்ளுகிறான் இது விசேஷம் இல்லை. கவி என்ன சொல்லுகிறார் என்றால் வயதான பிறகு வயதான பிதாவை பிள்ளை காக்கவேண்டும். வயதான பிதாவுக்கு பிள்ளை அவர் வானப்பிரஸ்தாஸ்ரமத்தை அடைய அவருக்கு ஆச்ரமம் கட்டிக்கொடுத்து அவருக்கு உபசாரணை செய்யவேண்டும். அந்த உபசாரணையை, லக்ஷ்மணனுடைய அப்பா அடையாமல் புண்ய லோகம் போய்விட்டார். அதற்கு பதிலாக நான் அடைந்தேன் என்றார். லக்ஷ்மணன் பிள்ளையாதலால் அவனால் நான் அடைந்தேன் என்றார். லக்ஷ்மணனை பிதாவாக வரித்தார் என்பது பிசகு என்றும் ப்ரத்யக்ஷம் வாலி வத கட்டத்தில் தம்பியை பிள்ளையாய் குறிப்பிட்ட ராமன் தம்பியை பிதாவாக எப்படி வரிப்பார். இது முன்பின் விரோதமல்லவா? எந்தவிதத்திலும் பிதாவாக வரிக்கமுடியாதென்ற ஸித்தாந்தம். தினம் பிதா பிள்ளையை ஸேவிப்பாரா எப்படி? லக்ஷ்மணனோ தினம் ராமனுக்கு கைங்கர்யம் செய்துகொண்டும் ஸீதையை ஸேவித்துக்கொண்டும் இருக்க எப்படி பிதா வரித்தார் என்பது பொருந்தும்? ஆதலால் அதுவும் பிசகு என்று ஸித்தாந்தம். இப்படி ராமன் ஸகல தம்பிகளும் பரதனுக்கு ஸமானமாகமாட்டார் என்றதால் லக்ஷ்மணனுக்கு கொஞ்சமும் கோபமே கிடையாது. ஏனெனில் பரதன் பக்தி தன் பக்தியைவிட மிஞ்சினதென்று நன்றாய் அறிந்தவராதலால் கொஞ்சமும் கோபமே கிடையா

தென்பதும் பிரத்யக்ஷம். தவிர ராமன் எதைக் குறிப்பிடுகிறார் என்றால் எந்த தம்பி பாதுகைகளைத் தூக்கி தலையில் வைத்துக் கொண்டு இதுவே என யோகக்ஷேமத்தை வஹிக்கட்டும் என்று சொன்னவன, அந்த பரதன் தவிர மற்ற எவனுமே இல்லை யாதலால ஸகலரும் பரதனுக்கு ஸமானமில்லை என்றார். பிதா வுக்கு என்னைப்போல பிள்ளை இல்லை என்றார். அதாவது என் பிதாவுக்கு நாலு பிள்ளைகள் உண்டு. அதில என்னைப்போல மகா துக்கத்தை அனுபவிக்கும் பிள்ளையே யாரும் இல்லை என்றார் அதாவது என பிதா நாளைக்கு ராஜ்யம் கொடுக்கிறேன் என்றார். விடிந்தது, ராஜ்யம் போய்விட்டது, பிறகு காடு வந் தேன. உடனே அப்பா போய்விட்டார் என்று கேள்விப்பட்டேன். பிறகு கொஞ்சகாலத்திறகெல்லாம பத்னி போய்விட்டாள். அவளை எவனே கொண்டுபோய்விட்டான்; உடனே பிராண ஸ்நேகிதனை ஜடாயுவும் போய்விட்டான். பிறகு ஸீதையை தேடிக்கொண்டு செல்லும்போது லக்ஷ்மணனும் இதோ தெரி யும இந்த பூதத்திறகு என்னை பலியாகக் கொடுத்துவிட்டு நீர் ஊருக்கு சென்றுவிடும். நீர ஊரில ஸுகமாய் இருக்கும்போது என்னை எபபொழுதும நினைத்துக்கொள்ளும் என்றார். ஏதோ தெய்வகதி தப்பிப்பிழைத்தான. இவவளவும் ஏற்பட்டும இந்த சுக்ரீவனையடைந்து இந்தவேளை என்னைக் காக்கவேண்டும் என்று கேட்கும்படியான ஒரு வேளையும் வந்தது. அதெல்லாம் போ கட்டும; இப்பொழுது ஸீதை இருப்பிடத்தில இருந்து ஒருவன் வந்து இருக்கிறான். அவனைக் கேட்டால் ஸீதையின் யோக க்ஷேமம் தெரியும். தவிர முக்யமாய் ராவணனால தியாகம் செய்யப் பட்டுவந்தவனாய் இருக்கிறான். ஸாவத்தையும் தியாகம் செய்து நாமே கதி என்று வந்து இருக்கிறான். இவனைச் சேர்த்துக் கொண்டால் இவனிடம் இருந்து ராக்ஷஸர்களை அழிக்கும்படி யான உபாயத்தையறிந்து சீக்கிரத்தில ராக்ஷஸர்களைக் கொல்ல லாமென்று எண்ணினால் நமமைக் காப்பதில் பரமப்ரேமையாய் இருக்கும் இந்த சுக்ரீவன், இவனால் ஆபத்து வந்துவிடும் என்று எண்ணி இவனைச சேர்க்கக்கூடாது என்று தடுக்கிறான். சுக்ரீவ னுடன கூடினால யுத்தத்திற்கு ஸாவ ஸேனையும் கிடைக்கும்;

ராக்ஷஸர்களைக் கொல்லும் உபாயம் தெரியாது. விபீஷணனு டன் கூடினால் ராக்ஷஸர்களைக் கொல்லும் உபாயம் தெரியுமே தவிர சண்டைபோட விபீஷணனிடம் சேனை கிடையாது. ஆதலால் ஒருவிதத்திலும் ஸஹாயம் இல்லாத என்னைப்போல் என் ஸஹாயம் அவனுடையதாதலால் இப்படி ஸமயத்தில் மித்ரனும் சத்ருவாக விளங்க இப்படி ஒருவிதத்திலும் ஸஹாயம் இல்லாத என்னைப்போல மகா துக்கத்தை அனுபவிக்கும் பிள்ளை நாலவரில் என் பிதாவுக்கு யாருமே இல்லை என்றார். இதுதான் அர்த்தமே தவிர நான் காடு சென்றதும் அப்பாவுக்கு பிராணன் போய்விட்டது. இப்படிப்பட்ட அபிமானமுள்ள என்னைப் போல் பிள்ளை இல்லை என்பது பிசகு. ராமன் காடு சென்றதால பிதா செத்துவிட்டார் என்ற அபவாதம் உத்தமமான ராமனுக்கு வேண்டாம். தசரதனுக்கு சாபத்தினால் ஏற்பட்டதே தவிர ராமனால ஏற்பட்டது என்பது கிடையாது என்கிறார் கவி. தவிர சாபம் புத்ரசோகத்தால என்றதால் சத்ருக்னன் காடு சென்றாலும் தசரதனுக்கு பிராணன் போகும். ஆதலால இது ஸரியல்ல. பிரகரணத்தை கவனித்தால் தர்ம சங்கடத்தில் ராமன் கஷ்டப்படுகிறார் என்று கவி நிரூபிக்கிறார். மேலும் சுக்ரீவனைப்பார்த்து ஸகல மித்ரார்களும் உனக்கு ஸமானம் இல்லை என்றார். ஏனெனில் நான் ஏதோ அல்பமான ஒரு வாலி வதத்தைச செய்தேன். அப்படிப்போல் நீயும் ஹநுமானை யாவது மற்ற யாரையாவது ஒரு ஆளை அனுப்பி ராமகாரியத்தை பார்த்துவா என்று சொல்லாமல மித்ரநிமித்தத்தில் ஸகல வீரர் களுடன் வந்து தன் பிராணனையும் விடுகிறது என்று எனக்காக வந்து இருக்கும் உனககு எவனும் ஸமானன் இல்லை என்கிறார். இப்படி கவியானவர் ஸகலத்தையும் அறிந்து உள்ளபடி வர்ணிக் கிறார். ஆதலால் ஒரு இடத்திலும் சுக்ரீவனை ராமன் அவமதித் தவர் அலல என்றும், சுக்ரீவனை தனக்கு நாதனையும், பரமமித்ர னையும் எண்ணுகிறார் என்றும் வால்மீகியின் ஸித்தாந்தம்.

---

39. வால்மீகி வாக்யரீதியாய் ஸ்ரீமத் ராமாயணம் ஸத்ய கிரந்தமே தவிற சரணாகதி கிரந்தமில்லை என்ற ஸித்தாந்தம்.

*பாலகாண்டம் 15-ம் ஸர்க்கத்தில் 24-ம் ச்லோகத்தில் தேவதைகள் ஸிஜ்ஹஸவ-ுயக்ஷாஞு தத்வஸ்ாம் ஶரஶ்ணம்ஹதா:। க்ஷம்ஹதி: வரசாஜெவவெவெ-ுஷாம்நஃ வரனுவ। வயாயஜெவ ஶத்ரூணாம் நரணாம் ஞொகெஜநஃகரஈ। என்று தேவதைகள் விஷ்ணுவைப்பார்த்து, ஸித்தர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள் எல்லோரும் உம்மை சரணம் செய்கிறோம். ஏ தேவ, எங்கள் எல்லோருக்கும நீரே கதி. தேவதா சத்ருக்களுடைய வதத்திற்காக நீர் பூலோகத்தில் உமது மனஸை வைக்கவேண்டும் என்று தேவதைகள் சரணாகதி செய்தார்கள். அவர், நீங்கள் பயத்தை விட்டுவிடுங்கள்; அவாகளை (ராவணாதிகளைக்) கொல்லுகிறேன் என்றார். இதனால சரணாகத ரெக்ஷணம் என்று சொல்வதுண்டு. இதை அல்ல என்கிறார்; ஏனெனில் ஸர்வலோகத்தையும் உண்டு பண்ணி ஸம்ஹரித்து ரெக்ஷிக்கும் பிரபுவானவர் தன் பிள்ளைகள், பேரன்கள் தன்னால் உண்டுபண்ணப்பட்டவர்களுக்கு ஆபத்து என்றால் இது ரெக்ஷிக்கவேண்டியது என்பது ஸ்வதர்மமாயிருக்க மேலும் ஸம்ரக்ஷணமூர்த்தியாயுமிருகக இவருக்கு சரணம் செய்வதென்ன? அதற்கு பிறகு அவர் சரண்யனாவது என்ன? இது என்ன நியாயம்? அவனவன் தன்தன் ஸ்வதர்மத்தைச் செய்தால் அது சரணாகதனை ரெக்ஷிப்பதென்பது எப்படி?*

*வால்மீகி இக்கிரந்தத்திற்கு பெயர் வைக்கும்போது ராமாயணம் என்று ஒரு பெயரும், ஸீதா சரித்திரம் என்ற ஒரு பெயரும், பௌலஸ்தியவதம் எனற ஒரு பெயரும் வைத்தாரே தவிற சரணாகதிக் கிரந்தம் என்று பெயர் வைக்காதபோது எப்படி சரணாகதிக் கிரந்தம் என்று சொல்லுவது?*

*தவிற சரணாகதனை ரெக்ஷிப்பதால் விசேஷ ஒருபலனுமில்லை. ஆனால் பாலகாண்டம் 29ம் ஸாக்கம் 13-ம் ச்லோகம் க்ஷஜநாதிரஹி தெ-ுஶஹ்யூ ஸ்ாஜஹம் ஶரரணம்ஹதஃ। என்று காச்யபர் விஷ்ணுவை உத்தேசித்து நான் உமது சரீரத்தில் ஸர்வ ஜகத்தையும் பார்க்*

கிறேனுதலால் நீ அநாதியாயிருக்கப்பட்டவர்; ஒருவரால் ஆக்ஞை செய்யப்படாதவர். இப்படிப்பட்ட உம்மை நான் சரணுகதி செய்கிறேன் என்கிறுர். இது ஸகஜமே. இந்த காச்யபர் பிர்ம்மாவினுடைய பேரன் விஷ்ணுவின் பேரனுக்குப்பிள்ளை. அவர் என்ன சொல்லுகிறார் என்றால் என்னுடைய பத்னியான அதிதி தேவிக்கு பிள்ளைகளான தேவதைகளை ரக்ஷிக்கிறதாக எனக்கு பிள்ளையாயக் கர்ப்பத்தில் நீர் பிறந்து தேவர்களைக் கார்க்கவேண்டுமே என்றார். இது கேட்டு அவர் தன் ஸ்வதர்மமான ரக்ஷணத்தையே செய்தார். இதையே இராமர் மால்யவான் என்ற ராக்ஷஸனிடத்திலும் என் ஸ்வதர்மமே ரக்ஷிப்பதென்பது என்றார். ஆதலால் அவனவன் தன் ஸ்வதர்மத்தில் இருப்பதற்கு சரணுகதரக்ஷணம் என்ற பேர் ஏது? இப்படி இருப்பதினுலேயே தேவதைகள் விஷ்ணுவைப் பார்த்து பாலகாண்டம் 15-ம் ஸர்க்கம் 18-ம் சலோகம் த்வாம் நியோக்ஷ்யாமஹே விஷ்ணோ லோகானாம் ஹிதகாம்யயா। என்று லோகங்களுக்கு ஹிதத்தை உத்தேசித்து உம்மை நியோகம் செய்கிறோம் என்றார்கள் என்பதும் பிரமாணம். ஆதலால் ஸ்வதர்மத்தை ரக்ஷிப்பதை ஒரு பெரிய சரணுகதரக்ஷணம் என்று சொல்ல இடமே இல்லை என்பது பிரத்யக்ஷம்.

பாலகாண்டம் 45-ம் ஸர்க்கம் 22-ம் ச்லோகம் ததோ தேவா மஹாதேவம் ஶங்கரம் ஶரணார்திந:। என்று தேவதைகள் மஹாதேவனை சங்கரரை சரணம் செய்தார்கள். அவரும் அவர்களை ரக்ஷித்தார். இப்பொழுது இவரும் ஸ்வதர்மத்துடன் கூடியவரே. கர்த்துமகர்த்தும் அந்யதாகர்த்தும் சக்தியோடு கூடியவர் இவரும் ஸம்ரக்ஷண, ஸம்ஹார, ஸிருஷ்டியாதி ஸர்வத்திலும் அதிகாரபூதர். ஆனால் இவர் ஸம்ஹாரகர்; இந்த தேவதைகள் அமிர்தமதன காலத்தில் வாஸுகியின் விஷத்தின் காலாக்னியில் பயந்து ஸம்ஹாரத்திற்கு ருத்ரனைப் பிரார்த்திக்க அவரும் ரக்ஷித்தார். இவரும் தன் ஸ்வகர்மாவைச் செய்தார். சரணுகதரக்ஷணத்தினுல் பலன் உண்டு என்று எதிர்பார்த்தவரல்ல. தவிர ரக்ஷிப்பதால் விசேஷமான ஒரு பலனுமில்லை, ஆனல் சரணுகதனை ரக்ஷிக்காமல் விட்டுவிட்டால் மஹா நரகத்தை அடைய

வேண்டும். அவன அபயசஸையும, அபகீர்த்தியையும் அடையுவன். மேலும ஸத்யத்தை அனுஸரித்த சரணுகதி ரெக்ஷணம் தான் அங்கீகரிக்கத் தகுந்தது. ஸத்யத்தில சரணுகதி ரெக்ஷணம் முதலிய தாமஙகள் அடங்கினதே. ஸத்யத்தில் இருந்தே தாமம் உண்டானது. ஸத்யத்தை மீறினுல் சரணுகதி தர்மமான அது விடத்தகுந்தது என்பது பிரத்யக்ஷம். ஸத்யத்தை விடடால் சரணுகதியும் விட்டதே; ராவணனை அழிபபதாய் ராமன் பிரதிக்ஞை செய்திருக்க ராவணன் ராமனை சரணுகதி செய்தால பிரதிக்ஞையை செய்து இருப்பதால் ரெக்ஷிக்கமாட்டார் அழிப்பார் எனறே கவியின் ஸித்தாந்தம். அழிப்பார் என்றே கவி எபபடி வர்ணிக்கிறுா என்றுல் தேவதைகள் விஷ்ணுவை ராவணுதிகளைக் கொல்லவேண்டும என்று கேட்ட காலத்தில் அவர்கள சரணுகதி செய்துவிட்டால் நீர் சரணுகதி ரெக்ஷகனுதலால ரெக்ஷித்துவிடும் என்று சொல்லவில்லை. அவராவது ராக்ஷஸாகள் சரணுகதி செய்துவிட்டால் ரெக்ஷிக்க விடுவேன் என்றும சொலலவில்லை. பூலோகத்தில் ஜனித்து சரபஙகர் ஆசரமத்தை அடைந்தபோது ரிஷிகள் ராக்ஷஸ வதத்திற்கு பிரார்த்திக்க அபபடியே அழிபபதாகச் சொன்னுரே தவிற அவா சரணுகதி செய்துவிட்டால் ரெக்ஷித்துவிடுவேன் என்றும சொல்லவில்லை. தேவர்கள் அழிபபதற்கு சரணுகதி செய்திருக்க அதற்காக இவா பிறந்திருக்க ரிஷிகளும் அழிப்பதற்காக சரணுகதி செய்ய அழிபபதாய் சபதம் செய்திருக்க ராவணன் சரணுகதி செய்து இவர் ரெக்ஷித்தால தேவர்களும் ரிஷிகளும் செய்த சரணுகதியின் கதி அதோகதி இல்லையா? அபபொழுது இவருக்கு ஸ்வதர்மத்தை ரெக்ஷிககிறவன் என்ற பெயர் போய்விடுமல்லவா? உன்னை விட்டாவது ராக்ஷஸர்களை அழிப்பேன் என்று ஸீதையிடம் சொன்னவரல்லவா? ஸீதை காணுமல்போனதும் எடுத்தவன கொண்டுவந்து விடாவிட்டால ஸர்வலோக ஸம்ஹாரம் செய்வேன் என்று கோபத்தில் சொன்ஞர். அப்பொழுதும் கொண்டுவந்து விடாவிட்டால் குறறவாளியை விட்டுவிடுவதாகச் சொலலவில்லை. அங்கதனை தூது விட்டகாலத்திலும் ஸீதையை விட்டு சரணுகதம் செய்யாவிட்

டால் கொல்லுவேன் என்று சொல்லு என்றார் ஆனால் ஸீதையை விட்டுவிட்டால் விட்டுவிடுவேன் என்று சொல்ல வில்லை. ராவணனை அவனுக்கு ஆத்மதர்ப்பணம் செய்துகொண்டு வரச்சொன்னதாய் மேலே இருக்கிறது. ஸீதை ராவணனிடத்தில் உனக்கு பிழைக்கவேண்டுமென்ற எண்ணமிருந்தால் காலில் விழுந்தவர்களை ரக்ஷிக்கும் விரதமுள்ள என் பர்த்தாவிடம் என்னை விட்டு காலில் விழு என்றாள். அப்படி விழுந்தால் ரக்ஷிப்பன் என்ற அவளே மேலும் அவனைப் பார்த்து நீ என்னிடம் பலவிதமாய் பேசுவதற்கு நானே உன்னை எரித்துவிடுவேன்; ஏன் விட்டிருக்கிறேனென்றால் எனக்கு என் பர்த்தாவினுடைய ஆக்ஞை இல்லை என்றாள். மேலும் உன் வதத்தின் பொருட்டே பிரம்மா என் நாதனை உண்டுபண்ணி இருக்கிறார் என்றாள். அப்படியிருக்க எப்படி ரக்ஷிப்பான் என்பது பொருந்தும்? ஹநுமானும் நான் கொல்லுவேன் என்று சொல்லுகிறார் ராமனும் யுத்தகாண்டத்தில் 4-ம் ஸர்க்கத்தில் 2-ம் ச்லோகத்தில் யாம் நிவேதயஸே லங்காம் புரீம் பீமஸ்ய ரக்ஷஸ: க்ஷிப்ரமேநாம் வதிஷ்யாமி ஸத்யமேதத் ப்ரவீமி தே। என்று சுக்ரீவன் அந்த ராக்ஷஸனுடைய பட்டணமான லங்கை இருக்கிற இடத்தை நீ சொல்லுவாயேயானால் சீக்கிரமாக அழிக்கிறேன். இது ஸத்யம், இதுவே நல்லவேளை புறப்படு உடனே என்றார். இப்படி சொல்லி அதே ஸர்க்கம 7-ம ச்லோகத்தில் நிஹத்ய ராவணம் ஸீதாமாநயிஷ்யாமி ஜாநகீம்॥ என்று ராவணனைக் கொன்று ஸீதையை அழைத்துவருகிறேன் என்கிறார். இவர் ராவணனைக் கொன்று ஸீதையை அழைத்துவருகிறேன் என்கிறவர் எப்படி பிரதிக்ஞை மீறி ராவணனை ரக்ஷிப்பார். தவிர யுத்தகாண்டம் விபீஷண சரணாகதி கட்டத்தில் விபீஷணனைப் பார்த்து 19-ம ஸர்க்கம் 19-ம் ச்லோகம் அஹம் ஹத்வா ப்ரஹஸ்தம் ச ஸபந்தும் ஸபலம் ஸஹ॥ ராஜாநம் த்வாம் கரிஷ்யாமி ஸத்யமேதத் ப்ரவீமி தே। ரஸாதலம் வா ப்ரவிசேத் பாதாலம் வாபி ராவண:। பிதாமஹஸகாசம் வா ந மே ஜீவந் விமோக்ஷ்யதே। அஹத்வா ராவணம் ஸங்க்யே ஸபுத்ரஜநபாந்தவம்। அயோத்யாம் ந ப்ரவேக்ஷ்யாமி த்ரிபிஸ்தைர் ப்ராத்ருபிச்சபே। ப்ரதிஜ்ஞாதம் ச ராமேண வதநம்

தவ ராஜ்யாய வாநரேந்த்ர க்ஷிதிபத்யாய என்று ராமன விபீஷணனைப் பார்த்து நான் ராவணனை பிரஹஸ்தன், பந்துக்களுடன கொன்று உன்னை ராஜனாகச செய்கிறேன். இது ஸத்யம் என்றார். மேலும் அவன் ரஸாதலலோகம் சென்றாலும், பாதாளலோகம் சென்றாலும், பிர்மமாவினிடம் சென்றாலும நான் அவனை உயிருடன் விடப்போகிறதில்லை. கொல்லுவேன் என்றார். மேலும் தம்பிகள் மூன்று பேரில் பிரமாணமாய ராவணனை யுத்தத்தில் கொல்லாமல் நான் அயோத்தியில காலடி வைக்கமாட்டேன் என்று இப்படி பிரதிக்ஞையைச் செய்தவர் ராவணன் சரணாகதிககு வந்தாலும் ரெக்ஷிப்பேன் என்ற வார்த்தை சுக்ரீவனை மேலே பேசாமல் இருக்கும்படி சொன்ன வார்த்தையை தவிற வேறு ஒன்றுமே அலல என்று பிரத்யக்ஷம். இது முந்தின பிரதிக்ஞைபபோல் பிரதிக்ஞை அல்ல. கொல்லுவதற்குச சொனனதுபோல் ரெக்ஷ ணத்திற்கு பிரதிக்ஞை இருககிறதா — ராவணன வந்தால் தம்பிகள் பேரில் பிரமாணமாய ரெக்ஷிப்பேன் என்றாரா? சபதம் இல்லாததால பிரதிக்ஞை இல்லாததால் இது அங்கீகரிக்கத் தகுந்ததில்லை என்று ஸ்பஷ்டம். 'சிலர் ராவணன் சரணாகதிக்கு வரமாட்டான் என்று தெரியும் அதனால அப்படி சொன்னார் என்கிறார்கள். வரமாட்டான என்று எப்பொழுது தெரியுமோ அப்பொழுது வந்தால ரெக்ஷிப்பேன் என்று சொலலுவானேன்? ஆதலாலும் ஸரியலல. (தவிற வாலி ராவணனைக் கட்டிவிட்ட தால் ராவணனை பலிஷ்டன் என்று சிலர் சொல்லுகிறார்கள். அப்படியிருகக வாலிக்குஏன் மறைந்தார் என்றால் எதிரில நின்றால சரணாகதி செய்வன. அதனால மறைநதார் என்கிறார்கள். ராவணனை ரெக்ஷிப்பேன் என்றாரே, ஏனென்றால வரமாட்டான் என்று தெரியும். அதனால சொன்னார் எனகிறார்கள். இப்பொழுது யோசிப்போம். பலிஷ்டனான வாலி சரணாகதிக்கு வந்து விடுவன். பலமில்லாத ராவணன் சரணாகதிக்கு வரமாட்டான் என்றால் இது எவ்வளவு பிசகாயிருக்கிறது என்று பார்க்கலாம்; முன்பின் விரோதமல்லவா? பலமில்லாதவனல்லவோ சரணாகதிக்கு வருவன். ஆதலால் இதுவும் ஸரியல்ல. தவிற, சிலர் விபீஷணனுக்கு ராஜ்யம் கொடுத்துவிட்டாரே ராவணன் சரணா

கதி செய்தால் என்ன செய்வார் என்று கேட்டுக்கொண்டு அயோத்தியை அவனுக்கு கொடுப்பார் என்கிறார்கள். இவரே ஹநுமானிடத்தில் பரதனுக்கு ராஜ்யத்தில் ஆசையிருக்கிறதா பாரும். அவனுக்கு ஆஸக்தி இருந்தால் நமக்கு இந்த அயோத்தி வேண்டாம் என்கிறவர், இவருக்கே அயோத்தி ஸந்தேகத்தில் இருக்கும்போது இவர் எப்படிக்கொடுப்பார்? ஆகலால் இதுவும் ஸரியல்ல.) இதை வால்மீகி ராவண வதமானதும் அதை வர்ணிக்கும் காலத்தில் யுத்தகாண்டம் 111-ம் ஸர்க்கத்தில் 34-ம் ச்லோகத்தில் ஸ தந்நிஹ தரிபு: ப்ரவ்ருத்திஜ்ஞ: ஸ்வஜந ஸமாவ்ருதோ ரணே ராஜ! என்று அந்த ராகவன் ராவணனைக் கொன்று தன் பிரதிக்ஞையை ஸ்திரப்படுத்தினவனாய்க்கொண்டு ஸ்வஜனங்களால் சூழப்பட்டவராய் ரணகளத்தில் விளங்கினார் என்று இருப்பதால் இவர் ராவணனை ரக்ஷிப்பார் என்றால் இவர் ஸத்யம் எங்கே? இக்கிரந்தத்தில் ஸத்யத்தை முதலாக சொல்லியிருப்பதால் ராவணன் சரணாகதி செய்தால் ரக்ஷிக்க மாட்டார் என்றும் பிரமாணம். மேலும் ராகவன் விபீஷண சரணாகதி கட்டத்தில் ஸ்வதர்மத்தை விடக்கூடாது. ஆகலால் விடமாட்டேன் என்றார். இவர் விபீஷணனை அழிப்பதாய் பிரதிக்ஞை செய்யவில்லை. சரணாகதன் எவனானாலும் அவனை சரணாகதி செய்கிறானே அவனை அழிப்பதாய் பிரதிக்ஞை செய்யப்படாமல் இருந்ததால்தான் ரக்ஷிக்கத் தகுந்தவன். இல்லாவிட்டால் அந்த சரணாகதன் கொலைத் தகுந்தவனே. கொன்றால் ஒரு பாபமும் வராது என்பதையே ராமன் ஸ்தாபிக்கிறார். ஆதலால்தான் விபீஷணனை ரக்ஷிக்கிறார். ஸ்வதர்மத்தை விட்டவனுக்கு மகா நரகமே. அப்படியே ஸத்யத்தை விட்டவனுக்கும் நரகமே. இவரே வாலிக்கு பதில்சொன்ன இடத்தில் என்னைப் போலொத்த ஸத்யஸந்தனால் பிரதிக்ஞையானது எப்படி விடத் தகுந்தது என்கிறார். பிரதிக்ஞையை [illegible] எப்படி ராவணனைக் கொல்லாமல் வருவார்? [illegible] ராவண வதத்தை இச்சித்து இருக்கும் தேவதைகள் பரதன் ராமனை ஊருக்கு கூட்டிவரக் கண்டு பரதனை, நீ நாட்டில்தான் இருக்க வேண்டும் என்று சொல்லியிருக்க ராவணனை ராமன் கொல்லா

விட்டால தேவர்கள் இச்சையின் கதி என்ன? சிலர் ராவணன் ராமனை சரணுகதி செய்துவிட்டால் அவனுக்கு ராவணத்வம் போய்விடும். அப்பொழுது பிசகில்லை என்கிருர்கள். வால்மீகி ஸமுத்ரராஜ வாக்யத்தால அவரவர்கள்குணம் அவரவர்களுடைய கட்டை அழியும் பரியந்தம் விடாது என்று ஸ்தாபித்து இருக்க எப்படி ராவணத்வம் போகும்? ஆதலால் இதுவும் ஸரியல்ல என்பது ஸ்பஷ்டம். அன்யனுக்கு பயந்து வந்தவனை ரெக்ஷிப்பது சரணுகதி ரெக்ஷணமே; இன்னும் சிலஸமயமும வரலாம்; அதுவும் சரணுகதியே. இக்கிரந்தத்திற்கு பௌலஸ்தியவதம் என்று பெயர். உபஸம்பிராஸஹஸம் என்று பெயர் இருக்க ராவணனை ராமன் ரெக்ஷிப்பன் எனருல் எப்படி? பட்டாபிஷேக மானபிறகல்லவா கவி கிரந்தம் செய்தார். ஆதலால் ரெக்ஷிப்பார் என்று எபபடி சொல்லமுடியும்? பாலகாண்டத்தில் தேவதைகள் ராவண வதத்திற்காக கூடியிருக்கிறேம் என்று சொல்லியிருக்க எப்படி ரெக்ஷணம் என்பது? ஸீதையும் ராவணனிடம் எங்கு சென்ருலும் ராமன் உனனைக் கொலலாமல விடமாட்டார் என்ற தாலும் ஸீதா அக்னிப்பிரவேச கட்டத்தில் தேவர்கள் நீர் ராவணனைக் கொலலுவதற்காக மனுஷ்யனுக ஜனித்தீர் என்ற தாலும, யுத்தகாண்டத்தில் லக்ஷ்மணரும் ராகவனைப்பார்த்து சீக்கிரம் ராவணனைக் கொன்று பிரதிக்ஞையை நிறைவேற்றும் என்றதிலுைம் ஸத்யம் முதல் தர்மம் இரண்டாவது என்று இக்கிரந்த ரீதியின் பிரமாணமாதலாலும் ஸத்யத்தை அனுஸரித்த தர்மமே ரெக்ஷிக்கத்தகுந்ததென்றும், ஸத்யத்திற்கு மேல பதம் கிடையாது என்று சொன்னதாலும் ராவணுதிகள் சரணுகதி செய்தால் ரெக்ஷிக்கமாட்டார் என்று ஸித்தாந்தம். ஆதலால் தான் இக்கிரந்தத்திற்கு ஸத்யகிரந்தம் என்று பெயர்.

பாலகாண்டம் 58-ம் ஸர்க்கம் 24-ம் ச்லோகம் நாந்யாம் கதிம் கமிஷ்யாமி நாந்யஶ்ஶரணமஸ்தி மே । என்று இதில் திரிசங்கு மஹாராஜன் விச்வாமித்ரரை அடைந்து எனக்கு வேறு கதி இல்லை. உம்மை சரணுகதி செய்கிறேன் என்ருன். இதில் திரிசங்கு விச்வாமித்ரரை அடைய அவர் க்ஷத்திரியனுதலால் ஸ்வதர்மமான ஆண்டினவனை ரக்ஷிக்கிறதான தன் ஸ்வதர்மத்தை

அவலம்பித்தாரே தவிர வேறு ஒன்றும் இல்லை. ஆதலால் இதுவும் ஸரியல்ல கடைசியிலும விசுவாமித்ரார் என ஸத்யத்தை விடமாட்டேன் என்கிறார். ஆதலால இதுவும் ஸரியல்ல

பாலகாண்டம 62-ம் ஸர்க்கம் 10-ம சுலோகம் ஸ்வ் ... வா ... தாபாயுஃ உத்து பாரணஷு ... தி। என்று இந்த விச்வாமித்திரர் ரிஷிகுமாரன சுனசேபஸ் என்னிடம் இருந்து தனக்கு ரக்ஷ-ணத்தை இச்சிககிறான். தன் உயிரான து அம்பரீஷ யாகத்தில் போகாமல இருக்கும்படி நம்மைப் பிரார்த்திககிறான் என்றார். இவர் இன்னும க்ஷத்ரியரே. பிரம்மரிஷியாகவில்லை; அப்பொழுதும் ஸ்வதர்மமாதலாலும், தவிர முந்தி க்ஷத்ரியராயிருந்ததற்கு இப்பொழுது கொஞ்சம் மாறுதலாலும் மந்திரத்தை மட்டும் உபதேசித்து அவன் உயிரை ரக்ஷித்தார். ஆதலால் இதுவும் இவர் ஸ்வதர்மமே.

பரதன் சரணாகதி செய்தான்; அது உடனே பூர்த்தியாகவிலலை என்பது பிரத்யக்ஷம். மேலும் இதை ஸம்க்ஷேபமான முதல்ஸர்க்கததில ... என்று பரதன் தன் இஷ்டம் நிறைவேறாமலேயே ராம பாதுகைகளை பெற்றுக்கொண்டு சென்றான என்றார் நாரதர். அப்படியே வால்மீகியும் சொன்னார். அபபடியே பரதன் ... தி। என்று எதுவரையில் நான் ராகவனுககு பட்டாபிஷேகம் செய்து பார்க்கவில்லையோ அதுவரையில் எனக்கு சாந்தி உண்டாகாது என்றான். இப்படியிருக்க எபபடி பரத இஷ்டம் பூர்த்தியாகும்? எப்படி பரத சரணாகதி பூர்த்தியாகும? இது 14-வருஷம் கழித்துத்தான் பூர்த்தியே தவிர வேறு இல்லை. தவிற, ராமனும் தன் வாயினால் யுத்த காண்டம் 124-ம் ஸர்க்கத்தில ... தாயஸ்வ ... நம ... தம் ... யா। என்று பரதனை சிரஸால் என்னை யாசித்த அந்த வசனத்தை நான் செய்யவில்லை என்று விபீஷணனிடம் ராமன் சொலலுகிறார். அப்படி இருக்க பரத சரணாகதி எப்படி பூர்த்தி? தவிர வால்மீகி ராமாயணத்தில் சரணாகதி தர்மத்தில் ஸாமான்ய தர்மம் என்றும், விசேஷ தர்மம் என்றும் வால்மீகி குறிப்பிடாததால இதுவும் அங்கீகரிக்கத் தகுந்ததில்லை என்று ஸ்பஷ்டம்.

இதனால் பரத சரணாகதி பூர்த்தி இல்லை என்று ஸ்பஷ்டம். ஆரண்யகாண்டத்தில் சூர்ப்பனகி காது மூக்கறுபட்டு அழுது கொண்டு 21-ம் ஸர்க்கம் 11-ம் ச்லோகம் 𑌶𑌰𑌣𑌂 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌾 𑌸𑌰𑍍𑌵𑌤𑍋 𑌭𑌯𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑍀 ॥ என்று கரனை நான் உன்னை மறுபடி அடைந்தேன் என்றாள். கரன் சூர்ப்பனகியை ரெக்ஷித்ததும் ஸ்வதர்மமே. தன் தங்கை சரணாகதி செய்ய இது ரெக்ஷிக்கிறதெல்லாம் சரணாகதியா? சரணாகதி தர்மமா? (தன் பிள்ளை பசி என்று கத்தினால் அதற்கு சாப்பாடு போடுவதும் சரணாகதி ரெக்ஷணம்போலும்) இவனுக்குத் தன் தங்கையை தான் ரெக்ஷிப்பது தன் ஸ்வதர்மமே.

தேவேந்திரன் தன்னை ராமனிடம் இருந்து பயந்துவந்து சரணாகதி செய்த காகாஸுரனை ரெக்ஷிக்கவே இல்லை. விட்டு விட்டான்; சரணாகதியைவிட்ட இவனுக்கு என்ன நரகம் கிடைத்தது? என்ன அபாயம் வந்தது? ஒன்றும் இல்லையே; ரிஷிகளை தேவதைகளை, சரணாகதி செய்தானே! அவ்வளவு பேர்களும் அவனைக் கைவிட்டார்களே, அவர்களுக்கு என்ன நரகம் வந்தது ஒன்றுமே இல்லையே; கையாலாகாமல் போனால் பலமில்லாமல் போனால் சரணாகதனை விட்டுவிடலாமென்று ஆதாரம் உண்டா? தன் உயிரை விட்டாவது சரணாகதனை ரெக்ஷிக்கவேண்டுமென்று இருக்கிறதே. பிருகு பத்னி தனக்கு விஷ்ணுவுடன் சண்டை போடமுடியும் என்று எண்ணியா அஸுரர்களை ரெக்ஷித்தாள்? இவள் தன் உயிரை விட்டு ரெக்ஷித்தாள்; ஜடாயு ரெக்ஷிக்கப் போய் உயிரை விட்டார். சகதி இருந்தாலும், இல்லாமல் போனாலும் சரணாகதனை ரெக்ஷிக்கவே வேண்டும். இக்கிரந்த ரீதியில் இந்த காகாஸுரன் ஸத்யத்திற்கு விரோதமாய்ச் செய்த தால ஸத்யத்திற்கு விரோதமான சரணாகதி தள்ளத்தகுந்ததாத லாலேயே இந்திரன் தள்ளிவிட்டான்; மற்றவர்களும் தள்ளிவிட்டார்கள். அதனால்தான் அவர்களுக்கு நரகம் வரவில்லை. ராமன் அப்பாவிடம் 14-வருஷம் காட்டில் இருப்பதாய் பிரதிக்ஞை செய்துவிட்டதால் அதற்கு விரோதமாய் பரதன் சரணாகதி செய்து ஊருக்கு ராகவனைக் கூப்பிடுவதால் எனக்கு அபபா வார்த்தையைத் தள்ள, பிரதிக்ஞையைத் தள்ள, சக்தி இல்லை

என்று சொல்லி ராகவன் பரத சரணாகதியை கைவிட்டுவிட்டார். அதனால்தான் ராகவனுக்கும் நரகம் வரவில்லை. இதனால் ஸத்யத்திற்கு விரோதமான சரணாகதி விடத் தகுந்ததென்று ஸ்தாபனம்.

காகாஸுரன் பரதாரத்தை மார்பில் குத்திவிட்டு குத்தின குற்றத்தை உடையவனாதலால் அதற்காக அவனை தண்டனையாக கண்ணை வாங்கினார் என்பது அழகே தவிர சரணாகத ரக்ஷணம் என்று எப்படிச் சொல்லுவது? கொல்லத் தகுந்தவனாயிருந்த போதிலும் கிருபையால் விட்டுவிட்டார். சரணாகதி தர்மத்தில் சரணாகதன் குற்றவாளியாய் இருப்பானேயாகில் குற்றத்திற்கு தகுந்த பிரகாரம் தண்டனைச் செய்துவிட்டு பிறகு அவனை ரக்ஷிப்பது என்பது சரணாகதி ரக்ஷணமா? ராமனோ பக்ஷியினிடம் ஒரு பெண் புறாவான பத்னியைக் கொன்றவனான சத்ருவான வேடனை ஆண் புறாவானது சரணாகதன் என்று தன் உயிரைக் கொடுத்து ரக்ஷித்தது என்றார். இந்த பெண் புறாவை இவன் கொன்றவனல்லவா என்று ஆண் புறா அவனுக்கு ஒரு கெடுதலை யும் செய்யவில்லை. அப்படி இருக்க இவரோ தன் பத்னி மார்பில் கொஞ்சம் குத்திவிட்டான் என்று அவன் கண்ணையே பிடுங்கி விட்டார். இதுதான் சரணாகதி தர்மத்தின் மர்மம்போலும்! இக்கிரந்தத்தில் ஒரு விஷயம் உண்டு. சரணாகதி என்று ஒருவன் வந்தால் அவனை ரக்ஷிக்கவேண்டியது என்பது ஸர்வசராசரத் திற்கும் ஸ்வதர்மத்தைத் தவிர வேறு அல்ல. இதைச் செய்வதால் விசேஷ புண்யம் இல்லை. ரக்ஷிக்காவிட்டால் பாபம். இக்கிரந் தத்தில் மற்றொரு அழகு சொல்லுகிறார். அயுத்யமாநம் ப்ரச்ச ந்நம் ப்ராஞ்ஜலிம் ஶரணாகதம் | பலாயந்தம் ப்ரமத்தம் வா ந த்வம் ஹந்து மிஹார்ஹஸி | என்று இதுகள் தர்மம் என்கிறார் ராமன். லக்ஷ்மணனைப் பார்த்து லக்ஷ்மணா, தன்னுடன் சண்டை போடா தவனை கொல்லக்கூடாது; மறைந்துகொண்டு இருப்பவனைக் கொல்லக்கூடாது; கைகளை சேர்த்து நமஸ்கரித்துக்கொண்டு இருப்பவனை கொல்லக்கூடாது; காலில் விழுந்தவனை கொல் லக்கூடாது; ஓடினவனைக் கொல்லக்கூடாது; தன்னை மறந்து இருக்கிறவனைக் கொல்லக்கூடாது என்றார். இத்தனை தர்மங்

களை விட்டால் பாபம் உண்டு என்றார். இந்த தர்மங்களை ராமன் அனுஷ்டித்தார். தன்னுடன் சண்டை போடாமல் நின்றுகொண்டிருந்த ராவணனைப பார்த்து, நீ சண்டைபோடவில்லை, ஆயுதம் இல்லை. நீ இன்று சென்று சிரமபரிகாரம் செய்துகொண்டு நாளை வா என்றார். ஆகாசத்தில் இந்திரஜித்து மறைந்துகொண்டு சண்டை போடுவதால் லக்ஷ்மணனிடம் அவனை கொல்லக்கூடாது இப்பொழுது என்றார். அதனலை அபபொழுது கொல்லவில்லை. ஸமுத்ரராஜன் கைகளைச சேர்த்து நமஸ்கரித்ததால் அவனைக் கொல்லவில்லை; காலில் விழுந்தவன் விபீஷணனுதலால் அவனைக் கொல்லவில்லை; ஓடினவன் காகாஸுரனுதலால் அவனைக் கொல்லவில்லை; காலில விழுந்தது இரண்டாம்பக்ஷம்; தன்னை மறந்து இருந்தான் மாரீசன் இரண்டாம் தடவை, ஆதலால் அவனைக் கொல்லவில்லை என்றார் வால்மீகி. இப்படி ராமன் தர்மத்தை அனுஷ்டிககிறார் எனறார்.

ஆரண்யகாண்டத்தில் 1-ம் ஸர்க்கத்திலும் 6-ம் ஸர்க்கத்திலும் சரணுகதத்தை ரிஷிகள் செய்தார்களே என்றால் அந்த ரிஷிகளே ராகவனைப் பார்த்து எங்களை ரெக்ஷிப்பது உமது ஸ்வதர்மம். நீங்கள் எங்களிடம் நேரே வந்து [illegible] வதால் ரெக்ஷிக்கத் தகுந்தவர் என்றார்கள்.

கிஷ்கிந்தா காண்டம் 4-ம் ஸர்க்கத்தில் ராமன் லக்ஷ்மணர் மூலம் சுக்ரீவனை சரணுகதி செய்கிறார். பிறகு ராமன் தன் வாயினுலும் சரணுகதி செய்கிறேன் என்றார். இக்கிரந்தத்தில சுக்ரீவன் ராமனை சரணுகதி செய்யவே இல்லை. ராமன்தான் சுக்ரீவனைப் பண்ணினுர். அவனும் தன் ஸ்வதர்மத்தைச் செய்தானே தவிற வேறு அல்ல. ராமன் ஸீதைக்காக சரணுகதி செய்தார் என்றே ச்லோகம். அவனும், ஸீதையைத் தேடிக்கொடுத்தான் என்றார் அக்னிஸக்யமான ஸ்நேகம் செய்துகொண்டு ஸ்வதர்மமான மித்ரனுக்காகவும் செய்யவேண்டியதையும் செய்தான். சுக்ரீவனை ராமன் சரணம் என்று சொன்னதுபோல் சுக்ரீவன் ராமனைச் சொல்லவில்லை. பரஸ்பரமாக சரணுகதி செய்துகொண்டால் பிறகு சரண்யன் யாரு? சரணுகதன் யாரு? இரண்டுபேரும்

சரணாகதர்களும் சரண்யர்களுமா? இது என்ன முறை? ஆதலால் சுக்ரீவன் ராமனை சரணாகதி செய்ததென்பது கிடையாது. நாமாக வைத்துக்கொண்டாலும் அதுவும் ஸ்வதர்மமே.

இந்திரன், ராவணன் தேவலோகத்திற்கு சண்டைக்கு வந்த காலத்தில் உத்தரகாண்டம் 31-ம் ஸர்க்கத்தில 7-ம் சலோகத்தில விஷ்ணோஸஜீவஜாமஜ்ருவாகஜேதத்ருவாயஹ। விஷ்ணோகஃபஃசுகஷ்ராதி ஜஹாபமுவஸாகஜ:। ஏ விஷ்ணுவே அபார பலமுள்ளவனை ராவணன் வந்து இருக்கிறான் என்ன செய்வது? முந்தி உமது தயவினால் பலரைக் கொன்று இருக்கிறேன். இப்பொழுதும் நீரே ரக்ஷிக்கவேண்டும் என்றான். அவர் இப்பொழுது அவனைக் கொல்லமுடியாது. நான் வந்து சத்ருவைக் கொல்லாமல் திரும்பமாட்டேன். ஆதலால் நான் இப்பொழுது வரவில்லை என்று சொல்லிவிட்டார். இங்கு இந்த சரணாகதி பூர்த்தி இல்லை. இந்திரனை வரபலத்தால் இவன் வந்து இருக்கிறான்; ஸகாயத்திற்கு வாரும் எனகிறான்; பகவானும் அவனுக்கு இது வதகாலம் இல்லை என்றார். ஆதலால் இந்த சரணாகதி உபயோகம் இல்லாமல் போய்விட்டது. உத்தர காண்டத்தில் விருத்திர வதத்திற்காக இந்திரன் பிரார்த்தித்தபோது நான் அவனை நேரிட கொல்லமாட்டேனென்று தெரிவித்துவிட்டார். என்னை விருத்திரன் உபாஸிக்கிறான் என்கிறார். ஆதலால் இங்கும் அந்த சரணாகதியும் பூர்த்தி இல்லை. ஸீதையும் மிருகம் பக்ஷி முதலிய எல்லோரையும் சரணாகதி செய்கிறாள். ஜடாயு ஆதியில உங்களை ரெக்ஷிக்கிறேன் என்றதால் ரெக்ஷித்தார். வேறு யாருக்கும் ஸீதையை ரெக்ஷிக்கவில்லை. இந்த சரணாகதி தர்மம் பக்ஷி ஜாதிகளுக்கும் உண்டு. பக்ஷி ராஜனை ஸம்பாதி பிள்ளை சுபார்ச்சுவன ராவணனை ரெக்ஷிக்கிறான். ஜடாயு ரெக்ஷிக்க ஆரம்பித்து தன் உயிரையும் விட்டது. காகாஸுரனும் சக்தியற்று காலிலும் விழுந்தான். முதலில் ஓடினான், பிறகு காலில் விழ வந்தான்; இரண்டையும் உத்தேசித்து கொல்லாமல் விட்டார். விபீஷணன ராமனை சரணாகதி செய்தது இது உத்தமர்கள் உத்தமர்களை அடைவது அவர்கள் குணம். அப்படி அண்டினவர்களை ரெக்ஷிப்பது அவர்கள் ஸ்வதர்மம்.

இராகவனும் அதிலும் அதையே செய்தார். முதல், ராமனுக்கு விபீஷணனிடம் ராவணவத உபாயத்தை அறிவது, இரண்டாவது ஸ்வதர்மம். தவிற விபீஷணன் ராமனிடம் வந்து காலில் விழுந்தவனை உன்னை ரெக்ஷிக்கிறேன் என்று சொல்லவே இல்லை. அவன் எழுந்தபிறகு ஸமாதான வாக்யத்தால் அவனை இருக்கசசொல்லி உடனே முதல் பேசசே ராவண பலம் முதலிய ஸர்வ பலத்தையும் கேட்டார். அவன ஸகலத்தையும சொன்ன பிறகே ராவணனைக் கொல்வதாகப் பிரதிக்ஞை செய்து பிறகு அவனுக்கு பட்டாபிஷேகம் செய்யச் சொனனார். இதுதான் சரணாகதி ரெக்ஷணத்தின் முறைபோலும்? ஒருவன் சரணாகதத்திற்கு வந்து இருக்கிறேன, கதி இலலை என்று இருக்க இடமும் அற்று முந்தியும், பிந்தியும், கீழேயும் போகமுடியாமல அந்தரத்தில் இருந்துகொண்டு கார்க்கவேண்டுமென்று கதறிக்கொண்டு இருக்கும்போது சேர்க்கும் விஷயத்தில நான் ஆலோசனை செய்கிறேன். எனக்கு வேண்டும் எனகிறவர்களைக் கேட்கிறேன என்பதுதான் சரணாகதனை ரெக்ஷிக்கும வழிபோலும? சரணாகதன் குற்றவாளியாய் இருந்தால அதற்குதகுந்தபடி அவனை தண்டித்துவிட்டு ரெக்ஷிப்பதுதான் அவனை ரெக்ஷிக்கும் முறைபோலும்? இப்படி அவனைபற்றி யோசிப்பதெனறும், அவனுக்கு தெண்டனை என்றும் இருந்துவிட்டால் ஏன ஒருவன் இனனும் ஒருவனை சரணாகதி செய்வான்? ஒருவன் ஒரு குற்றத்திற்காகவே சரணாகதிசெய்கிறான். அப்படி இருக்க குற்றத்திற்கு தண்டனை என்றால் அதற்கு சரணாகத ரெக்ஷணம் என்று பெயர் என்ன? சரணாகதன் என்பவன் சத்ருவுக்கு பயந்து வரலாம்; தன்னிடம் குற்றம் இருந்து வரலாம், மஹா துக்கத்தால வரலாம், பரம தரித்திரத்தால் வரலாம், மஹா வியாதியினாலே வரலாம இப்படி ஏதாவது ஒன்றினால்தானே வருவன். அப்படி இருக்க அவனுக்கு பரீக்ஷை என்றும் தண்டனை என்பதும் ஏற்பட்டுவிட்டால சரணாகத ரெக்ஷணம் என்று அதற்கு பெயரே இக்கிரந்த ரீதியாய் கிடையாது என்பது பிரத்யக்ஷம்.

மேலும் தானே ஒருவனுக்கு வேணும் என்று குற்றத்தைச் செய்துவிட்டு அந்த குற்றம் செய்யப்பட்டவனை குற்றம் செய்

தவன் சரணாகதி செய்தால் அவனை ரக்ஷிப்பது இருக்கிறதே இது சரணாகதி ரக்ஷணமா எப்படி? இக்கிரந்தத்தில் ஸமுத்ர ராஜனை ராமன் சரணாகதி செய்தாரே தவிர ஸமுத்ர ராஜன் ராமனை சரணாகதி செய்யவில்லை. ஸமுத்ர ராஜன் ராமனைப பண்ணினால் யார ரக்ஷகன்? யார் சரணாகதன்? வால்மீகி ஸமுத்ரராஜன செய்ததாய் சொல்லவில்லை. ராக்ஷஸிகள் சரணாகதி என்று சொல்லுவதுண்டு. அதுவும் புஸ்தகத்தில் இல்லை. வானரர்கள் யுத்தகளத்தில ராமனையும், லக்ஷ்மணனையும் சரணாகதிசெய்தார். அவர்களுக்கு இவர்களை ரக்ஷிப்பது ஸ்வதர்மமே. வால்மீகி தன் வாக்யத்தால் ராமாயணத்தை சரணாகதி கிரந்தம் என்று சொல்லாததாலும், ராமன் யாரை அழிப்பதாய் சபதம் செய்கிறாரோ அந்த சபதம் செய்யப்பட்டவர்கள் தவிர மற்ற எவர்களானாலும, அவர்கள் சத்ருவானாலும் ஸரி அவர்களை சரணாகதி செய்தால ஸ்வதர்மப்படி ரக்ஷிப்பார். சபதம செய்யப்பட்டவர்கள் வந்தால அவர்களுடைய தலையை வாங்குகிறது தான் ரக்ஷணம் என்று கவி குறிப்பிடுவதாலும் இக்கிரந்தத்தில் ராவணன், இந்திரஜித்து, மூன்றுகோடி கந்தர்வர்கள், லவணாஸுரன், வாலி இவர்கள் எவ்வளவு சரணாகதி செய்தாலும் ராமன் ரக்ஷிக்கமாட்டார். ஏனெனில் இவர்களை அழிப்பதாய் சபதம் செய்திருப்பதாலும ஸத்யத்தில் இருந்தே தர்மம் உண்டாயிருப்பதாலும ஸத்யே ப்ரதிஷ்டிதா: வேதா: ஸத்யே யஜ்ஞ: ப்ரதிஷ்டித: । ஸத்யே உக்தாநிஸர்வாணி ஸத்யாந்நாஸ்தி பரம்பதம் । என்று ஸத்யத்தில இருந்து தர்மம் உண்டாயிருக்கிறது. ஸத்யத்தில் இருந்து வேதங்கள் உண்டாயிருக்கிறது. ஸர்வத்திற்கும் ஸத்யம் மூலம் ஸத்யத்திற்கு மேல்பதம் கிடையாததலால் ஸத்யத்திற்கு விரோதமான தர்மங்கள் மட்டில் விடத்தகுந்ததென்று கவி வாக்யம். (ஆதி வைஷ்ணவாச்சார்யாள் அபயப்பிரதானஸாரம் என்ற கிரந்தத்தை எழுதியதற்கு பிராட்டியான ஸீதா வாக்யத்தை ப்ரமாணமாகக் கொண்டார்கள். தேவியானவள் ராகவனிடத்தில் தர்மத்திலிருந்து ஸத்யம் உண்டாயிருக்கிறது. தர்மம் எல்லாவற்றிற்கும் மூலம் என்று ஆரண்யகாண்டத்தில் சொன்னாள். அதை வைத்து தர்மம்

தான் ப்ரதானம என்று அபயப்ரதான ஸாரம் என்று எழுதினர். அந்த மதத்திற்கு அமபாள் வார்த்தை முதல் கௌரவமாதலால் அதன்படி அவர் சொன்னர். ஸ்ரீராமனே அந்த ஸீதாவாக்யத்தைக் கண்டித்துவிட்டார். அதாவது ஸீதை தனக்கு சொன்னதற்கு அவளைப் பார்த்து நான் உன்னை விட்டாவது என் தம்பியை விட்டாவது ராக்ஷஸர்களை அழிப்பேன், பெரியோர்களை ரெக்ஷிப்பேன் என்று இபபடி ப்ரதிக்ஞை செய்து நான் ப்ரதிக்ஞையை விடமாட்டேன் என்று தெரிவித்து ஸீதாவாக்யத்தைக் கண்டித்துவிட்டதால், தேவி வாக்யம், வால்மீகி வாக்யத்திற்கும் ஸ்ரீராம வாக்யத்திற்கும் விரோதமாதலால் தள்ளத் தகுந்ததென்று ஸித்தாந்தம்.

க்ரந்தமே சரணுகதி க்ரந்தமில்லாதபோது ஸ்ரீராமனைக்காட்டிலும் ஸீதைக்கு ரெக்ஷிக்கும் தன்மை ஜாஸ்தி என்று சொலலி ராக்ஷஸிகள் சரணுகதிக்கு வருவதற்கு முந்தியே இங்கிதம் தெரிந்து ராக்ஷஸிகளை ஸீதை ரெக்ஷித்தாள் என்று இப்படி சிலர் சொல்லுகிருர்கள். இதுவும் சரியலல. ராக்ஷஸிகளோ பிள்ளைகளையும் பர்த்தாக்களையும் பந்துக்களையும் இழந்ததால் சரணுகதிக்கு வரவேமாட்டார்கள். ஆதலால முன்சொன்னது ஸரியல்ல. திரிஜடை ராக்ஷஸிகளுக்குச சொன்னதுகூட பிற்பட்டு தங்களிடம் அவளுக்கு தவேஷமிலலாதிருப்பதற்காகச் சொன்னது. அதையே ஸீதையும் பிந்தி இவர்கள் குற்றவாளிகள் அலல என்று ஹநுமானிடம் சொன்னதும் ஸ்பஷ்டம். ராக்ஷஸிகள் வராதபோது வருவார்கள் என்பது ஸரியல்ல. ஆதலால் ராக்ஷஸிகள் சரணுகதி என்பதே கிடையாது. ஆதலால இது ஸரியல்ல. ஆதலால இக்கிரந்தம் ஸத்யக்ரந்தமே தவிற சரணுகதி க்ரந்தமல்லவென்று ஸித்தாந்தம்.

அதது அந்தந்த மதத்திற்கு எற்றதே. அந்தந்த மதஸ்தர்கள் அதனை அனுஷ்டிக்கவேண்டும. வால்மீகி மஹரிஷி ராமாயணம் செயத காலத்தில இந்த மதஙகள் இலலையாதலால் இந்தக்ரந்தத்தில் அவைகளைக் கலக்கக்கூடாது என்றும் ஸித்தாந்தம. தவிற ரகுவீரகத்யதில் ராமன் மாரீசனுடைய தங்கமான தோலைக் கொண்டுவந்து போட்டுகொண்டு உட்கார்ந்து

கொண்டு இருப்பதாகச் சொல்லுகிறார். ஆதி மத்வாச்சாரியார் கிரந்தமான தாத்பர்ய நிர்ணயம் என்ற க்ரந்தத்தில் ராவண வதம் ஆனதும் பரமசிவன் ராமனை எதிர்த்துவர ராமன் அவரை அடித்துத் தள்ளிவிட்டார் என்றும் அவர் நடுநடுங்கி ஸ்துதித்தார் என்றும் ராவணன் கொண்டுபோன ஸீதை வேறு உண்மையான ஸீதை வேறு என்றும் சொல்லுகிறார். ஆதியில் இருந்த அப்பயதீக்ஷிதர் ராமன் சரீரத்தை விட்டுவிட்டு செத்துவிட்டார் என்று பரம்ம தர்க்கஸ்தவம் என்ற கிரந்தத்திலும் ராமாயண ஸாரஸங்கிரஹம் என்பதில் ராமாயணம் சிவனையே சொல்லுகிறது என்கிறார் இப்படி மதாச்சாரியார்கள் தங்கள் மதங்களுக்காக சொன்னது ஒன்றும் வால்மீகி ஹ்ருதயம் அல்ல என்றும் மற்ற புராணங்களில் உள்ள ராமாயணத்திற்கு நேரிட விரோத இடங்கள் பல இதில் இருப்பதால் அவைகள் ஒன்றும் அங்கீகரிக்கத் தகுந்தவைகள் அல்ல. அததுகளுக்கு அததுகளே பிரமாணம் என்றும் ஸித்தாந்தம்.

இக்கிரந்தப்படி ஸத்யத்திற்கு விரோதமான தர்மங்களை தள்ளத் தகுந்தது என்று வால்மீகி வாக்யமாதலாலும் ஸத்யத்திற்குமேல் யாதொரு பதமும் கிடையாதாதலால் அதிலிருந்தே தர்மம் பிறந்ததாலும் ஸத்யமே ஸகலமும் ஆதலாலும் இக்கிரந்தம் ஸத்ய கிரந்தமே தவிர சரணாகதி க்ரந்தமல்ல என்றும் ஸித்தாந்தம். வால்மீகி வாக்யத்தில் இக்கிரந்தம் சரணாகதி க்ரந்தம் என்று ப்ரமாணமில்லையாதலாலும் சரணாகதி என்பது எல்லாருக்கும் ஸ்வதர்மம இது விசேஷமில்லையாதலாலும் வால்மீகியே இக்கிரந்தத்தை ஸத்ய கிரந்தமென்று சொன்னதாலும் ஸ்ரீமத் ராமாயணம் ஸத்யக்ரந்தமே தவிர சரணாகதி க்ரந்தமல்ல என்றும ஸித்தாந்தம்.

---

## 40. விபீஷணன் நிஷ்காம்ய பக்தியோடு கூடினவனே தவிர காம்ய பக்தியுடன் கூடினவனல்லன் என்ற ஸித்தாந்தம்

விபீஷணன் ஸாக்ஷாத் ராமனை பரமாத்மாவாக தன் ஞானத்தால் எண்ணி ஸர்வத்தையும் விட்டு ராமனிடம் காலில் விழுவதற்கு வாஜயொ: பபாணாமெஷ்டி। என்று வந்தவனாய் இருக்கப்

பட்டவனை ராமனை பரப்ரம்மம் என்று எண்ணியிருக்கிறவனை ஸர்வத்தையும் தியாக சித்தத்தில் விட்டுவந்தவனாயிருக்கிறவனை எவ்விதத்தில் காம்ய பக்தியுடன் கூடினவன் என்று சொல்ல முடியும்? உலகத்தில சிலர் சொலவதால் அது இல்லை என்று பூர்வபக்ஷம செய்யப்படுகிறது. நாரத வாக்யமும் கவி ஹ்ருதயமும் அவன் காம்யபக்தி உள்ளவனல்லன் என்று இருபபதால் அது ஸ்தாபிக்கபபடுகிறது. எதைக்கொண்டு காமயபக்தி என்று சொல்லுகிறார்களோ அதை கவனித்து பிறகு அது பூர்வ பக்ஷமாகிறதையும் நிஷ்காம்ய பக்தி உள்ளவன் என்று கவி ஸ்தாபிக்கும அழகையும் கவனிபபோம்:— விபீஷணன் ராமனிடம் சரணாகதிக்கு வந்த காலத்தில் ராகவன அவனைப்பற்றி சேர்க்கும் விஷயத்தில் மந்திரிகளிடத்தில் கலந்தபோது ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாய்ச சொலல ராகவன் ஹநுமானைக் கேட்க அவர் தனக்கு முன் சொன்னவர்கள் சொன்னது அந்த ஸமயத்திற்கு சரியல்ல என்று காரணஙகளுடன காட்டிவிட்டு அவனை சேர்த்துக்கொள்ளலாம் என்றார். இப்படிச சொல்லிவிட்டு பிறகு அதே யுத்தகாண்டத்தில் அதே இடத்தில் 17-ம் ஸர்க்கம் 66-ம் சலோகத்தில் வாலிநஞ்ச ஹதம் ச்ருத்வா ஸுக்ரீவஞ்சாபிஷேசிதம் । ராஜ்யம் ப்ரார்த்தயமானஸ்து புத்திபூர்வமிஹாகத:। என்று ராகவனைப் பார்த்து ஹநுமான் நீர் வாலியைக் கொன்று ஸுக்ரீவனுக்கு ராஜ்யம் கொடுத்த உமது பௌருஷத்தைக் கேட்டு விட்டு நீர் ராவணனைக் கொன்றபிறகு இந்த லங்கா ராஜயத்தை தான் அடையவேண்டி வந்திருப்பன் எனறார். இப்படி ஹநுமான் சொன்னதாலும் ஸ்ரீராகவன் யுத்தகாண்டம் 18-ம் ஸர்க்கத்தில் 13-ம் ச்லோகத்தில ந வயம் தத்குலீநாச்ச ராஜ்யகாங்க்ஷீ ச ராக்ஷஸ:। என்று ஸுக்ரீவனைப் பார்த்து நீ சொலலுகிறபடி அந்த விபீஷணன் ராவணனுக்கு தம்பியாயிருக்கட்டும், அல்லது அவனால் ஏவப்பட்டவனாயிருக்கட்டும், நீ சொல்லும் இந்த தோஷம் நியாயமில்லை. ஏனென்றால் நாம் இந்த விபீஷணனுக்கு தாயாதிகள் அல்ல. ஆதலால் இவன் நம்மைக் கொல்ல வேண்டியதிலலை. இவன் லங்கா ராஜ்யத்தை எதிர்பார்க்கிறவனாயும் இருக்கலாம் என்றதாலும், யுத்தகாண்டத்தில் நாகபாச

கட்டத்தில் ராம லக்ஷ்மணர்கள் நாகபாசத்தில் கட்டுப்பட்டு கீழே விழுந்திருக்கும்போது 50-ம் ஸர்க்கத்தில் 18, 19-ம் ச்லோகங்களில் யயோர்வீர்யமுபாச்ரித்ய ப்ரதிஷ்டா காங்க்ஷிதா மயா। தாவுபௌ தேஹ நாசாய ப்ரஸுப்தௌ புருஷர்ஷபௌ। ஜீவந்நத்ய விபந்நோஸ்மி நஷ்டராஜ்யமநோரத:। என்று எவர்களுடைய ஒரு வீர்யத்தை அடைந்து எனது இருப்பை எதிர்பார்த்தேனோ அவ்விருவர்களும இப்பொழுது கீழே விழுந்துவிட்டார்களே நானும் இப்பொழுது ராஜ்யத்தை இழந்தவனையும், மனோரதத்தை இழந்தவனையும், உயிர் இழந்தவனையும் ஆகிவிட்டேன் என்று விபீஷணனே சொல்லியிருப்பதாலும் யுத்தகாண்டம் 19ம் ஸர்க்கம் 22ம ச்லோகத்தில் விபீஷணன் ராகவனைப்பார்த்து ராக்ஷஸாநாம் வதே ஸாஹ்யம் லங்காயாச்ச ப்ரதர்ஷணே। கரிஷ்யாமி யதா ப்ராணம் ப்ரவேக்ஷ்யாமி ச வாஹிநீம்। என்று ராக்ஷஸர்கள் வதத்திற்கு ஸகாயத்தையும் சரீரத்தில் பிராணனுள்ளபரியந்தம் ஸேனையில் பிரவேசித்து உபகாரம் செய்கிறேன் என்று சொன்னதாலும ராவணவதாநந்தரம் ராமன் ராஜ்யம் கொடுக்க, வேண்டாம் என்று சொல்லாமல் பெற்றுக்கொண்டுவிட்டதாலும் ராவணன் லோக ரீதியில் ஜயேஷ்டனாயிருக்க அவனால் விடுபட்டபோது அவனுக்கு சத்ருவான ராமன் கக்ஷியில் சேர்ந்துகொண்டு ராவண வதத்திற்கு ஸகாயம் செய்ததாலும், விபீஷணனை ராஜ்யத்திற்கு ஆசைபட்டு வந்தவன் என்று இதனால் சிலர் சொல்லுகிறார்களே தவிர (இது வால்மீகி ஹ்ருதயம் அல்ல) பிரஸித்தரான அப்பய தீக்ஷிதர் அவர்களும் விபீஷணன் பணத்தாசைப் பட்டுவந்தவன் என்றார் மற்றும் சில வியாக்யதாக்களும் சொல்லுகிறார்கள். இத்தனையும் கிரந்தம் அத்யந்தம் கவனிக்காமல், கவி ஹ்ருதயம் இதில் என்னவென்று ஊஹிக்காததால் சொன்னதே தவிர வேறு ஒன்றும் இல்லை. வால்மீகி அவர் வாக்கினால் ராஜயத்திற்கு ஆசைப்பட்டவன் என்று சொல்லவே இல்லை. அவனை வால்மீகி நிஷ்காம்ய பக்தியுள்ளவன் என்று ஸ்தாபிப்பதால ஸ்ரீமத் ராமாயணத்திற்கு அவரைக்காட்டிலும் மற்றவர்கள் வாக்யம் பிரமாணம் இல்லையாதலால் அந்த அழகை கவனிப்போம் :— அவர் எப்படி காம்யபக்தி என்பதை கண்டிக்

கிருர். விபீஷணன் மஹிமையை எப்படி வெளியிடுகிருர் என்பதையும் கவனிப்போம் :

ஸாக்ஷாத் விச்ரவஸ்ஸானவர் ஸந்தியாகாலத்தில் அக்னிஹோத்திரம் செய்துகொண்டு இருக்கும்போது கேகஸியென்ற சுமாலி என்ற ராக்ஷஸனின் பெண்ணனவள், தனது பிதாவின் ஆக்ஞையால் அவரிடம் வந்து நிற்க, நீ யார் யாருடைய புத்ரி ஏன் இங்கு வந்தாய் என்று இப்படிக்கேட்ட விச்ரவஸ்ஸைப் பார்த்து, கேகஸி தான் சுமாலியான ராக்ஷஸனின் புத்ரி. என் பிதா என்னை உம்மிடம் அனுப்பினுர் விஷயம் என்ன என்று தங்களுக்குத் தெரியும் என்று பிதா சொல்லச் சொன்னுர் என்று சொல்ல, அவர் அது கேட்டு ஞானத்தால் அவள் பிதா அனுப்பின காரணத்தைத் தெரிந்துகொண்டு பெண்ணே நீ இந்த விபரீத வேளையில் வந்ததால் உனக்கு பிறக்கும் பிள்ளைகள் ஸர்வலோகத்தை அழிக்கும் பாபிகளாயும் அதர்மிஷ்டர்களாயும் இருப்பார்கள் என்று சொல்ல அவள் உடனே அவரைப்பார்த்து உத்தமரே, எனக்கு அப்படிப்பட்ட பாபிகளான பிள்ளைகள் வேண்டாம் உம்மைப்போல் யோகியான பிள்ளை வேண்டும் என்று சொல்ல அதுகேட்டு அவர் பெண்ணே விவாஹம் ஆகும் பரியந்தம் பெண் பிதாவிடம் அடங்கியிருத்தல் வேண்டும். உன் பிதாவின் அபிப்ராயம் ராக்ஷஸ குலத்தில் மஹாவீரனை ராக்ஷஸன் பிறக்கவேண்டும், ராக்ஷஸ குலம் விருத்தியாகவேண்டும் உலகத்தை அழிக்கக்கூடியவனுய் இருக்கவேண்டுமென்றே, ராக்ஷஸர்களுக்கு உகந்த வேளை ஸந்தியாகால வேளையாதலால் அந்த வேளையிலேயே உன் பிதா அனுப்பினதால் பிறப்பவர்கள் பாபிகளே பிறப்பார்கள். நீ என்னைப்போல் புத்ரன் வேணுமென்பது இது தேவதாக்ஞை என்றும் நான் அறிந்துகொண்டேன். நீ கேட்கும்படி உனக்கு குழந்தை உண்டாகும்படி செய்கிறேன் ஆனல் அது உன் குலத்துப்பிள்ளை அல்ல அது ஸர்வத்திலும் என்னைப்போலவே இருக்கும் என்று உத்தரகாண்டம் 9-ம் ஸர்க்கம் 27-ம் ச்லோகத்தில் [illegible] ஷ்யதி। என்று என் வம்சத்திற்கு அனுரூபன் தர்மாத்மாவாய் இருக்கப்போகிருன். கடைசிப் பிள்ளை என் வம்சம், முன் பிள்ளை

கள் உன் வம்சமென்று இப்படி குறிப்பிட்டார். பௌலஸ்தியர் என்று விச்ரவஸ்ஸுக்குப் பெயர். விச்ரவஸ் ராவணாதிகளை உண்டுபண்ணியதால் அந்த ராக்ஷஸர்கள் எல்லோருக்கும் அதாவது ராவண, கும்பகர்ண, சூர்ப்பணகா, விபீஷணன் எல்லோருக்கும் பெயர். முக்யம் இவர்களில் ராவணனுதலால் ராமாயணத்திற்கு பௌலஸ்திய வதம், ராவண வதம் என்றும் பெயர். ஆனால் பிரம்மா விபீஷணனை விச்ரவஸ்ஸின் குலம் என்றும், ராவணாதிகளை ராக்ஷஸ குலம் என்றும் காட்டியிருப்பதாலும் விச்ரவஸ்ஸும், ராவணனை நீ அப்ரியக்கடவாய் என்றும் சபித்து இருப்பதாலும் பிர்ம்மா அனுக்ரஹத்தால் ஸகலமும் தெரிந்து கிரந்தம் செய்யும் வால்மீகியும் விபீஷணனை தர்மாத்மா என்றும் ராவணனை அதர்மிஷ்டன் என்றுங்காட்டி விச்ரவஸ்ஸான பௌலஸ்தியரால் ராவணன் உண்டுபண்ணப்பட்டதால் பௌலஸ்தியனான ராவணன் அவன் வதம் ராமாயணம் பௌலஸ்திய வதம் என்றும்பெயர் கொடுத்தாரே தவிர ராவணன் விச்ரவஸ்ஸின் வம்சமே அல்ல என்றும் கவி வாக்யப்படி ஸித்தாந்தம்) இதனாலேயே பிறகு (முதலில் அவள் வயசத்து பிள்ளையான ராவணாதிகள் பிறந்தபோது பல விபரீதங்கள் எல்லாம் ஆகாசத்தில் உண்டாயின) விபீஷணன் பிறந்தபோது, உத்தரகாண்டம் 9-ம் ஸர்க்கம் 36ம் ச்லோகம் [illegible] । [illegible] । என்றும் வாக்யம் [illegible] । என்ற சப்தமும், புஷ்பவர்ஷமும் ஆகாசத்தில் இருந்து வர்ஷிக்கப்பட்டது. ஆகாசத்தில வாத்யங்கள் கோஷிக்கப்பட்டன. மேலும் பூமி ஆகாசம் முதலிய எங்கும் தேவதைகளுக்கு உயிரைக் கொடுப்பவன் பிறந்தான். ஸாது ஸாது நல்ல பிறப்பு நல்ல பிறப்பு என்று இப்படி எல்லோராலும் கொண்டாடப்பட்டது. பிறகு, ராவணாதிகள் எல்லோரும் தபஸ் செய்தார்கள். அப்பொழுது விபீஷணனும் தபஸ்செய்ய பிர்ம்மா அவனுக்கு வரம் கொடுக்க வந்ததும் பிர்ம்மா அவனைப் பார்த்து கூப்பிடும் போதே உத்தரகாண்டம் 10-ம் ஸர்க்கம் 26-ம் ச்லோகத்தில் விபீஷண [illegible] । [illegible]

வ்ரூ யதேஷ்டது வரம் வரயஸ்வஸுவ்ரத ॥ என்று தர்மத்துடன் கூடின புத்தியுடையவனே ஏ விபீஷணா உன் தபஸால் நான் திருபதியடைந்தேன். உனக்கு என்ன வரம் வேண்டுமோ அதைகேள் என்று சொல்ல அப்பொழுது உடனே விபீஷணன் உத்தரகாண்டம் 10-ம் ஸர்க்கம் 31-ம ச்லோகத்தில வாரோஹ தஸ்யாபி யதேஷ்டம் ஜ ஜதிஷ்டமேவஸ ॥ அஸிகஷி தஂவ பூஹா ஷஂ ஷமவஂ வ்ருதிஷா தஸ ஜெ । யாயா ஜெஜாயதெ தவெஷீ யெஷஸ்யெஷாஶ்ரஜெஷஸ வ । ஸாஸா ஷவதஸயஷி ஷஂ தஂ யஷிஂ வ வாஶயெ ॥ வநஷ ஜெ வாஜொஷாஶவாஜெவாஜ கொஜதஃ । நஹியஜ்டாஷிரஹா நாம ஜொஜெக கிஂவநஷஸஷஂ என்று இப்படி எனது புத்தி பரம ஆபத்துக்காலத்திலும் தர்மத்திலேயே இருக்கவேண்டும. நீரே எனககு, வேறுஒருவர் சிக்ஷையில்லாமல பிர்மமாஸ்திரத்தை அனுக்கிரஹம் செய்யவேண்டும். எது எதில் என் புத்தி பிரவேசிக்கிறதோ எந்த எநத ஆச்ரமத்தில (பிர்மமசர்ய, கிருஹஸ்த, வானபரஸ்த ஸந்நியாஸமான ஆச்ரமங்கள்) என் புத்தியானது பிரவேசிககிறதோ அது அது அப்படி அப்படியே தர்மமாகவேண்டும் என்றும தர்மத்தில ஆஸ்தை உள்ளவர்களுககு லோகத்தில் எதுவும்துர்லபம இல்லை. ஆதலால எனக்கு இந்த வரத்தைககொடும் என்று கேட்டான். இந்த வாக்யத்தாலும் உடனே பிர்ம்மா அதே ஸர்க்கம 34-ம் ச்லோகத்தில, யஸ்ஷ்ஷஂ யயாவஷ தயாஜெவெதஜீவிஷ்யஜி । யஷா ஷ்ராக்ஷஸயொநௌ ஜெத ஜாதஸ்யாமிஜுகஸஷந । நாயஜெ ஜாயஜெத ஷெஷிரஶரஸஂ ஷஷாஷிஜெத । என்று விபீஷணனைப் பார்த்து பிர்ம்மதேவன் உனக்கு நான் நீ கேட்டபடியே வரத்தை கொடுத்தோம் என்று சொல்லிவிட்டு நீ ராக்ஷஸ யோநியில் ஜனித்ததால் அதர்மம் உன் புத்தியில் உண்டாகும். அது ஏற்படாமலேயே இருக்கும்படி உன் பிதா உன்னை அவர் குலம் என்று குறிப்பிட்டுவிட்டதாலும் நானும் உனக்கு உன் புத்தி அதர்மததில் போகாமல இருக்குமபடியும் நீ விச்ரவஸ்ஸின் குலமாதலால் சிரஞ்சீவித்வத்தையும் உ..க்குக் கொடுததேன் என்று தெரிவித்தார். இதனால் தான் விபீ

ஷணன் ராவணனிடம் இருந்து இராமனை யடைந்தது தர்மம என்று கவி ஸதாபிக்கிறார். தவிற ஆபத்துக்கள் வராலா மென்றே அறிந்து விபீஷணன் பிர்மாவிடம் என் புத்தி எதில் சென்றாலும் அது தர்மமாகவேண்டும் என்றார். விபீஷணன் ராமனை அடைந்தது தர்மமாயிருக்கக்கொண்டே விபீஷணனை தர்மாத்மா என்கிறார். சுத்தாத்மா என்று கவியானவர் யுத்த காண்டம் 115-ம் ஸர்க்கத்தில, 16-ம் ச்லோகத்தில ஸுஹ்ருத்பிஸ் தயாஸ்தா ஸா ஸுஸ்தா நம்விபீஷணம் என்றார் மேலும, 19-ம் ஸர்க்கம் யுத்தகாண்டம் 2-ம் சலோகத்திலும் ஸதா ஸாஸெ யாஸ்தா மிவயாத விபீஷணஃ। என்று அவன் தர்மாத்மா என்றும் கவி குறிப்பிட்டார். மேலும் ஜனனத்தில் விபீஷணனை தேவதைகளுக்கு பிராணன்களைக் கொடுக்கிறவன் பிறந்தான் என்றதால் என்ன விஷயம் என்றால் விபீஷண ஜனனமே ராம ஸகாயததிற்கு என்றார். அதாவது ராக்ஷஸாதிகள் மாயாயுத்தம் செய்பவர்கள் ஆதலால் ராமாதிகள் தர்மயுத்தத்தில் கூடியவர் களாகையால் அதர்ம யுத்தமான மாயைகளால் ராமாதிகளை ராக்ஷஸர்கள் கொன்றுவிட்டால் என் செய்வது என்றும் ஆபத் துக் காலங்களில் ராக்ஷஸ மாயைகளில் இருந்து ராமாதிகளை காப்பாற்றவும் ராக்ஷஸாதிகளை வதிக்கவும் உபாயத்தை அறிந்து கொள்ளுவதற்காகவுமே விபீஷணனை தேவதைகள் உண்டு பண்ணி ராமனை யடையும்படி செய்தார்கள். இப்படி பிராத்ரு துரோகம் செய்யலாமோ எனில ராவணனும் விபீஷணனும் பிராதாவே அல்ல ஆதலால்தான் ராவண வதத்தினால் பாபம விபீஷணனுக்கு உண்டாகவே இல்லை. விபீஷணனை ராமன் சர ணாகதிக்காக சேர்த்துக்கொண்டார் என்று சொல்லாமல் ரிஷியு டைய வாக்யம், அதைப்பற்றி என்னவென்றால் பாலகாண்டம் 3-ம் ஸர்க்கம் 35-ம் ச்லோகத்தில் விபீஷணேந ஸம்ஸமம் வயோபாய நிவேதநம்। என்று வத உபாயத்தை அறியவே சேர்த்தார் என்று கவி சொன்னார். ராமன் ஸ்வதர்மமான சரணா கதனை விடமாட்டேன் என்றார். வால்மீகிக்குத் தான் ஸகலமும் தெரியுமானபடியாலும் முதல் கௌரவம வால்மீகி வாக்யத்திற் கே என்று ஸபஷடம். இதற்கு இன்னம் ஒரு உபமானமும்

சொல்லுகிறார். ராமன் வாலியைக் கொன்றது எதற்காக என்றால் வால்மீகி சொல்லுவது ராமனிடம் சேர்ந்துகொண்டு ராவணனைக் கொல்லவந்த வாலியானவன் அதைவிட்டு விட்டு ராவணனிடம் நீயும் நானும் அண்ணன் தம்பி என்று ஸ்நேகம் செய்துகொண்டு பெற்ற பிதாவான இந்திரனுக்கும் ருக்ஷரஜஸுக்கும் தேவதைகளுக்கும் ராமனுக்கும் விரோதியாய் ஏற்பட்டு விட்டதால் தான் ராமன் வாலியைக் கொன்றார் என்றார். ராமனோ தம்பி பத்னியை குலதர்மத்தை மீறி வாலி அபஹரித்துவிட்டது அதர்மம், அதற்காக என்றார். ஏன ராமன் அப்படிச் சொன்னார் என்றால் இராமனுக்கு தன்பிறப்பு எதற்கு என்று தெரியாதிருக்கும்போது வாலி பிறப்பு எதற்கு என்று இவருக்கு எப்படி தெரியும். ஆதலால் ராமன் இப்படிச் சொன்னார் ஆதலால் ஸர்வ கதைக்கும் வால்மீகி வாக்யத்திற்குத்தான் முன் கௌரவம் மற்றதற்கு அடுத்தபடியே. அதனால் விபீஷணனை சேர்த்துக் கொண்டது முதலாவது ராக்ஷஸவத உபாயத்தை அறிவதற்கு என்பது இரண்டாவது ஸவதாமத்தை ரக்ஷிப்பதற்கு என்பது. இது ஒவ்வொருவர் வாக்கிலும் வந்து இருப்பதையும் கவனிப்போம். ராம வாக்யத்திலும் யுத்த முடிவில் ராமன் விபீஷணனைப் பார்த்து யுத்த காண்டம் 114-ம் ஸர்க்கம் 99-ம் ச்லோகத்தில் உன் பிரபாவத்தால நான் ராவணனை ஜயித்தேன் என்றார். பிறகு லக்ஷ்மணனைப் பார்த்து லக்ஷ்மணா என்றழைத்து யுத்தகாண்டம் 115-ஸர்க்கம் 9-ம் ஸ்லோகத்தில எனக்கு பக்தனும் எனக்கு உபகாரியான இவனுக்கு பட்டாபிஷேகம் செய்யும் என்றார். இதில் இவர் பணத்தாசை பிடித்த விபீஷணனையா எனக்கு பக்தன் என்கிறார். எப்படி? பணத்தாசை உள்ளவனுக்கு பகவத் பக்தி உண்டாகாது என்று அயோத்யா காண்டத்தில் இருக்கிறது. பணத்தாசையினாலேயே கைகயீ ராம பட்டாபிஷேகத்தை கலைக்க ஆரம்பித்தாள் என்றும் கூனியும் அதே ஆசையினாலே ராம பட்டாபிஷேகத்தைக் கலைப்பதற்கு கைகயீயைக் கலைத்தாள் என்றும் இருக்கிறதே. இப்படி கைகயீயை பணத்தாசைப் பிடித்தவள் என்று சொல்லத் தெரிந்த மஹரிஷியான வால்மீகிக்கு விபீஷணன லங்கைக்கு ஆசைப

பட்டவனென்று சொல்லத் தெரியவில்லையா? விட்டவன் என்றல்லவோ வர்ணிக்கிறார். தர்மாத்மா, சுத்தாத்மா, என்றல்லவோ வால்மீகியும் சொல்லுகிறார். ஆதலாலல்லவோ ராமனும் ஸர்வத்தையும் விட்டவனென்றே என் பக்தன் என்கிறார். அப்படி விட்டவனுகில பிந்தி ஏன ராவணவதாநந்தரம் லங்கா ராஜ்யத்தைப் பெற்றுக்கொண்டானெனில்:—ராமன் விபீஷணனை பார்த்துவிட்டு, லக்ஷ்மணனைப் பார்த்து லக்ஷ்மணா யுத்தகாண்டம் 115-ம் ஸர்க்கத்தில் 9-ம் சலோகத்தில் என் உபகாரிக்கு பக்தனுக்கு பட்டாபிஷேகம் செய் அவன் தடுப்பனே என்பயோ அது அவன் இஷ்டம் அல்ல. நான் அவன் என்னை சரணுகதி செய்தபோது ராவணுதிகளைக்கொன்று யுத்தகாண்டம் 19-ம் ஸர்க்கம் 19-ம் ச்லோகத்தில் உன்னை பட்டாபிஷேகம் செய்கிறேன் என்று நான் பிரதிக்ஞை செய்து இருக்கிறேனுதலாலும் நான பிரதிக்ஞையை விடமாட்டேனுதலாலும் எனக்கு, இவனுக்கு பட்டாபிஷேகம் செய்து பார்க்கவேண்டும் என்று என் இச்சையாதலாலும பட்டாபிஷேகம் செய்யச் சொல்ல அதனுல்தான் விபீஷணன் ராமன் இச்சைக்காக பெற்றுக்கொண்டதே தவிற வேறு அல்ல. அதனுல்தான் ஸர்வத்தையும விட்டவன் யென்றறிந்தே பக்தன் என்றார். மேலும் ஹநுமான் ஸீதையிடம் ராவணவத விருத்தாந்தத்தைச் சொன்னபோது யுத்தகாண்டம் 116-ம் ஸர்க்கம் 7-ம் ச்லோகத்தில் விபீஷண ஸகாயத்தால வானராகளுடன் ராமன் ராவணனைக் கொனறார் என்றார். இதனுலும், விபீஷணனே ராகவனைப் பார்த்து யுத்தகாண்டம 19 ம் ஸர்க்கம் 23-ம் ச்லோகத்தில் லங்கையை தகைவதற்கும் ராக்ஷஸர்கள் வதத்திற்கும் சரீரதில் உயிருள்ள பரியந்தம் ஸகாயம் செய்கிறேன் என்றதாலும் விபீஷணன் ராம ஸகாயத்திற்காகவே ஜனனம் என்று ஸ்தாபிக்கிறார் வால்மீகி. தவிற இவர் விபீஷணனை தர்மாத்மா என்றாரே எபபடி தர்மாதமா? ராமரும் அவனை தர்மாத்மா என்கிறாரே எப்படி பொருந்தும்? கவனிப்போம். ராகவனே வாலிவத கட்டத்தில் வாலிககு பதில் சொன்னபோது குடும்பத்தில் மூத்தவன் ஒரு பிதா, பெற்ற பிதா ஒரு பிதா, வித்தையைக் கற்றுக்

கொடுத்தவன் ஒரு பிதாயென்று சொன்னார். தவிர சிஷ்யன் ஒரு பிள்ளை, பிள்ளை ஒரு பிள்ளை, தம்பி ஒரு பிள்ளை என்றார். அப்படிச்சொன்ன இவர் மூத்தவனை பிதாவாகச் சொல்லியிருக்க சுக்ரீவனுக்கு வாலி மூத்தவனாயிருக்க அவனை வதித்து ரெக்ஷிக்க வேண்டும் என்று சுக்ரீவன் கேட்க அதை அங்கீகரித்து இவர் வாலி வதம் செய்து அவனுக்கு ராஜ்யம் கொடுத்தாரே மூத்தவன் பிதாவாயிருக்க அவன் வதத்திற்கு இவன் பிரதானமாயிருந்திருக்க, இவனையும் தர்மாத்மா என்றாரே வால்மீகி. இன்னும் அப்படியே விபீஷணனுக்கு மூத்தவன் என்ற முறை ராவணன், அவன் வதத்தை செய்ய விபீஷணன் உபகாரம் செய்தான் ஆனால் விபீஷணன் ராமனிடம் ராவணனைக் கொன்று ராஜ்யம் கொடும் என்று கேட்டவனல்லன். ஸகாயம் செய்தவனல்லவா இவ்விருவர்களும் தர்மிஷ்டர்களா (இருவர்களும பிதாவான ஜயேஷ்டர்கள் வதத்தால் பிரும்மஹத்தி பாபத்தை யடைய வேண்டுமே. ஏன் அடையவில்லை? இவர்கள் எப்படி தர்மிஷ்டர்கள் இவர்களிடம் சேர்ந்த ராமனும் தர்மிஷ்டரா எப்படி? மஹாத்மா என்ற பதம் யோக்யர்கள் அயோக்யர்கள் இருவருக்கும் உண்டு. ஆதலால் மஹாத்மா என்ற பதம் ரஸமல்ல. தர்மாத்மா என்று இக்கிரந்தத்தில் ராமாதிகள் நாலவருக்கும் சுக்ரீவனுக்கும் விபீஷணனுக்கும் தான் சொல்லப்பட்டிருக்கிறது. விஷயத்தைக் கவனித்தால் ஒரு தம்பிக்கு தன் தமையன் பிடிக்காதவனாயும் அந்த தமையன் அதர்மிஷ்டனாயும் இருந்துவிட்டால் மற்றொருவனிடம் சேர்ந்துகொண்டு அண்ணனைக் கொன்றுவிடலாம் போல் தெரிகிறதே என்ன விஷயம் இப்படியிருக்கிறதே என்றால்:—வால்மீகி வர்ணிக்கிறார். வாலிக்கும் சுக்ரீவன் பிராதாவல்ல ராவணனுக்கும் விபீஷணன் பிராதாவல்ல என்பது ஸ்கிரமாதலாலேயே பிர்ம்மஹத்தியாதிபாபம் வரவில்லை என்று ஸ்தாபிக்கிறார். எப்படி எனில் விபீஷணன் ஜனனத்தின்போதே ராவணாதிகள் ராக்ஷஸகுலம் என்றும் விபீஷணன் விச்ரவஸ்ஸின் குலம் என்றும் கர்ப்பம் ஏற்படுவதற்கு முந்தியே குறிப்பிட்டதாலும் பிள்ளைகள் பிறந்த பிறகுதான் பிராதாக்களுடைய பாவம் ஆதலாலும் அதற்கு

முந்தியே அந்த குலம் அல்ல என்று பிரிக்கப்பட்டதாலும் யுத்தகாண்டத்தில் இந்திரஜித்து ராவணனைப் பார்த்து 15-ம் ஸர்க்கம் 2-ம் ச்லோகத்தில, உமது கனிஷ்டனான இந்த விபீஷணன் வாக்யத்தைக் கேட்டீரா? இது அவர்க்கும் பயத்தை உண்டுபண்ணக்கூடியது. இவன் இந்த குலத்தில் பிறக்கவே இல்லை. இதில் பிறந்து இருந்தால் இவன் இப்படி பேசவே மாட்டான. வீர்யம் சௌர்யம், தேஜஸ் பராக்ரமம் முதலிய ஸர்வத்திலும் இவன் எடுபட்டவன் இவன் இக்குலத்தில விடுபட்டவன் என்றான். தவிற சூர்ப்பனகை ராமனிடம் பேசும் போது ஆரண்யகாண்டத்தில் 17-ம் ஸர்க்கம் 24-ம் ச்லோகத்தில விபீஷணன் தர்மிஷ்டன். அவனுக்கு ராக்ஷஸ சேஷ்டையே கிடையாது என்றாள். மேலும் விபீஷணனும் யுத்தகாண்டம் 114-ம் ஸர்க்கம் 96-ம் ச்லோகத்தில் தர்மத்தை அறிந்தவனை அவன் புத்தியால் நன்றாய் விமர்சம் செய்து நாமே ஸர்வத்தை யும் விட்டவன் ஜந்மா முதலேயே நமக்கும் இவனுக்கும் ஸம் பந்தமில்லை. பெற்ற பிதாவினுலேயே ராவணன் நீ அழிந்து போவாய் என்று பிதிர்சாபம் உள்ளவன் மாதாவால் பிரார்த் திக்கப்பட்டு விபீஷணன் லங்கையில் இருந்தது தவிற வேறு அல்ல. பிதாவைப்போல் தபஸ்வியாயும் யோகியாயும் இருப்பவன் விபீஷணன். சத்ரு பிராத்ரு ரூபியாய் வந்து இருக்கிறான். நான் இவனுக்கு கர்மா செய்ய மாட்டேன் என்ற இந்த விபீஷணவாக்யத்தாலும் பாலகாண்டத்தில் 15-ம் ஸர்க்கம் 27-ம் ச்லோகம் விஷ்ணு தேவதைகளைப்பார்த்து ராவணனை அவனது புத்ர, பௌத்ர, மந்திரி, தாயாதிகள், பந்துக்கள் இவர்களுடன் கொல்லுவேன் என்றபடி தாயாதியான கும்ப கர்ணனைக்கொன்றார். விபீஷணன் தம்பியே இல்லாததால் குலமே வேறானபோது எப்படி தாயாதியாகும்? ஆதலால் அவனைக் கொல்லாமல் விட்டார் ராமன். பிராதா என்பது வ்யாஜமே தவிற வேறல்ல. அதனாலேதான் ராவண வதத்தால் ஜ்யேஷ்ட வத பாபமே விபீஷணனுக்கு வரவில்லை. சுக்ரீவனுக்கு வாலி ஜனனமான க்ஷணத்திலேயே சத்ரு பாவம் ஏற்பட்டுவிட்டது. ராவண விபீஷணர்களுக்கு ஜந்மாவுக்கு முந்தியே பிராத்ருபாவம்

இல்லை. சுக்ரீவன் வாலியிடம் இருந்தபோது வேலைக்காரனைப் போல் இருந்தான். தவிற ராகவன் சுக்ரீவனைப்பார்த்து கிஷ்கிந் தாகாண்டம் 8-ம் ஸர்க்கம் 24-ம் ச்லோகத்தில் கெடுதலசெய்தவ ளுயும் அமித்ரனுயும் பிராதா என்ற ஸம்க்ஞை உள்ளவனுயும் இருக்கிற வாலியை நான் அழிககிறேன் என்றுர். தவிற சுக்ரீவ னும் ராகவனிடம் அவன் எனக்கு பிராதா என்கிற ஸம்ஞைதான் என்றுன். சுக்ரீவ ஜனனமும் ராம ஸகாயத்திற்காகவே ஜனனம். தவிற மற்ெருரு விஷயம். மதங்கர் என்ற மஹாிஷி வாலி தன் ஆச்ரமத்தை கெடுத்தபோது வாலியை சபித்த ஸமயம் வாலி, ஆச்ரமத்தை சுற்றி ஒரு யோசனை வந்தால் தலை வெடிக்கும் என்று சபித்துவிட்டு மேலும் கிஷ்கிந்தா காண்டம் 11-ம் ஸர்க் கம் 56-ம் சலோகத்தில் ரிக்ஷராஜஸ்ஸின் பிள்ளையான வாலியோ அவனை சேர்ந்தவர்களோ, அவன் மந்திரிகளோ அவர்களும் இன்றைக்குள் ஓடிவிடவேண்டும் இருந்தால அவர்களையும் சபிப் பேன் என்றுர். இபபடி சொல்லி மேலும் எவனொரு வான ரனை நான் நாளை பார்பபேனே அவன் ஆயிரக்கணக்கான வரு ஷங்கள் மலையாகிவிடுவன் என்று சபித்திருக்க அப்பொழுது அங்கிருந்தவர்கள் அவ்வளவு பேரும் ஓடிவிட்டதாயிருக்கிறது. இந்த சாபம் வாலிக்கு கொடுககப்பட்டபோது வாலி சுக்ரீவர் கள் ஒற்றுமையாய் இருந்தகாலம் என்பது பிரத்யக்ஷம். அப்பொழுது வாலியைச் சேர்ந்தவனுயும் மந்திரியாயும் இருந் திருக்க அந்த சுக்ரீவன் மதங்கர் சபித்திருக்கும் வாலி வரக்கூடாத எல்லையில் இருக்கிறுனே. இவனும் மலையாகி விடவேண்டுமே ஏனுகவில்லை என்றுல் ஜந்மாவிலேயே இரு வரும் சத்ருக்களாதலாலும் இருவருக்கும் பிராத்ரு பாவமே இல்லையாதலாலும் தான், ரிஷிசாபம் சுக்ரீவனை பிடிக்க இல்லை என்றுர். இருவருக்கும் அதனுல்தான் பிர்ம்மஹத்தி பாபம் சுக்ரீவ விபீஷணர்களுக்கு வரவில்லை என்று ஸ்தாபிக்கிறுர். வால்மீகி. இப்படி பிராத்ருபாவமில்லாததாலும் இந்த விபீஷ ணன் பிதாவைப்போலேயே பிள்ளையாதலால் ஞானத்தாலும் ஹநுமான் ராவண சபையில சொன்ன ராம பௌருஷத்தையும் கேட்டு பல வீரர்கள் அடிபட்டதையும் கேட்டு இருப்பதாலும்

பரமாத்மா என்று தெரிந்துகொண்டு ராமன் சரணாரவிந்தங்களையே இச்சித்து ராமனும் நித்யனாதலால் தானும் நித்யனாதலால் தான் தர்மத்தை அனுஷ்டிக்கிறவனாதலால் அவன் தர்மமூர்த்தியாதலால் ராமனிடம் வந்து பத்னிபிள்ளை முதலிய ஸர்வத்தையும் விட்டு ராமனை சரணாகதி செய்யவே வந்தேன் என்றதாலும் ராமன் காலில விழும்போது யுத்தகாண்டம் 19-ம் ஸர்க்கம் 5-ம் ச்லோகம் ஸர்வ பூதங்களுக்கும் சரண்யனாயிருக்கிற உம்மை நான் சரணாகதி செய்கிறேன் என்றதாலும் வந்தபோது ஸர்வலோகத்தினாலும் சரணாகதி செய்யப்பட்டவராயும் ரகுவம்சத்தில் பிறந்தவராயும் மஹாத்மாவுமான ராமனை சரணாகதி செய்ய வந்திருக்கிறேன் என்று தெரிவித்ததாலும் பகவான் வைகுண்டம் போகும் காலத்தில், விபீஷணனை தன் பக்தனுக்கு தனக்காக அவனுக்கு ராஜ்யம் கொடுத்து அவனைப் பெற்றுக் கொள்ளும்படி செய்ததுபோல், மறுபடி விபீஷணனை அழைத்து நான் புண்யலோகம் செல்கிறேன். நான் சொல்வதைக் கேளும் மேலே ஒன்றும் சொல்லக்கூடாது என்று கட்டுப் படுத்தி நீ என்னுடன் கூடவரவேண்டாம். நீ எனக்குப் பதிலாக நான் உமக்குக் கொடுக்கும் இந்த இக்ஷ்வாகு குலதெய்வத்தைப் பெற்றுக்கொள் என்று தான் பெற்ற பிள்ளைகளான குசலவர்களுக்குக்கூட கொடுக்காமல் விபீஷணனுக்குக் கொடுத்தார். இபபடி உள்ள பக்தனை எவ்விதத்தில காம்ய பக்தி உள்ளவன் என்று சொல்வது? தவிற இனி முன்விஷயத்தை கவனிப்போம்:

ஹநுமான் ராகவனிடம் நீர் வாலிவதம் செய்ததைக் கேட்டு ராஜ்யத்திற்கு ஆசைபட்டு இவன் வந்திருப்பான் என்று சொன்ன வார்த்தை அங்கீகரிக்கத்தக்கதல்ல. ஹநுமான் வார்த்தையால் ராமன் விபீஷணனை சேர்க்கவேயில்லை. விபீஷண பக்தி ஹநுமானுக்கு தெரியாது. மேலும் வால்மீகி வாக்யத்தைக்காட்டிலும், நாரதவாக்யத்தைக் காட்டிலும், ஹநுமத் வார்த்தைக்கும் மற்ற ராமாதிகள் யார் வாக்யத்திற்கும் அவ்வளவு பலமில்லை. ஏனென்றால் அவர் எல்லாம் தெரிந்து சொல்லுகிறார். எப்படி போல் என்றால், ஸுந்தரகாண்டத்தில் ராவணன் ஸீதையை அடிக்கவந்தபோது ராவணனை அழைத்துப்போனவள் தாங்ய

மாலியாயிருக்க, ஹநுமான் மந்தோதரி என்கிருர். ஆதலால் இது அவருககு தெரியாது என்பது ஸ்பஷ்டம். வால்மீகி தான்யமாலி என்கிருர். இப்படியே ராமனும் கைகேயிதேவி கலயாண காலத்தில் தசரதன் சுல்கம் வைக்காமலிருக்க தசரதன் சுல்கம் ராஜயத்தை வைத்ததாக கேட்வை என்பதால் இவர் கைகேயி கல்யாணத்தின்போது பார்த்துக்கொண்டிருந்தாரா என்று கேட்வை? இது பரதனுக்கு அவன் ஊரையடைவதற்கு வியாஜமாய் சொல்லபபட்டதாய் பிரத்யக்ஷம். ஆதலால் ஸர்வகதைக்கும் வால்மீகி வாக்யமே முதல் பிரமாணம். இப்படி ராகவனும் விபீஷணன் ராஜயகாங்க்ஷீ என்ருர். இராமன், விபீஷணன் ராஜ்யத்திற்கு ஆசைப்பட்டவனும் வந்து இருக்கலாம் என்ருரே தவிற ஸ்திரப்படுத்தவுமில்லை. ஏனென்ருல் ராமன் தான் சொல்லலாம். மற்றவர் சொல்லக்கூடாது என்கிருர். ஆதாரம் எப்படியெனில் ராமன் சூர்ப்பனகியிடம் உன்னைப் போல் அழகுள்ளவளை அடைய என் தம்பி எதிர்பார்க்கிருன் அங்கு செல் என்று பரிஹஸித்து அனுப்பினுர். லக்ஷ்மணன் அவளிடம் நீ ஸ்ரீராமனிடமே செல், அவரிடம் ஒரு கிழவி இருக்கிருள். நீ போனுல அவளை விட்டு உனையடைவார் நீயும் மங்களத்தை அடையலாம் என்று திருபபி பரிஹஸித்து அனுப்ப அவள் உடனே ஸீதையைக கொல்லவர ராமன் லக்ஷ்மணனைப் பார்த்து லக்ஷ்மணு பரிஹஸித்தாயே பார்த்தாயா என் பரிஹாஸத்தால் உனக்கு ஆபத்து இல்லை உன் பரிஹஸத்தால் இவளுக்கு ஆபத்து வந்துவிட்டதே துஷ்டாளிடம் பரிஹஸிக்கலாகாது என்று சொல்லி தான் சொல்லலாம், மற்றவர்கள் சொல்லக்கூடாதென்ருர். இப்படியே மழைக்காலம் கழித்து சுக்ரீவன் வாராதபோது வாலியை வதித்த பாணம் போலொத்த பாணம் உண்டு என்று சுக்ரீவனுக்கு சொலலென்று லக்ஷ்மணனிடம் சொலல உடனே அவன் இப்பொழுதே அவனைக் கொன்றுவிடுகிறேன் என்ருர். உடனே ராகவன் அப்பா கூடாது அவனைக் கொன்ருல் மித்ர துரோகம் வரும் கைவைத்துவிடாதே என்கிருர். இப்படிதான ஸீதாவியோகத்தில் சொனனது என்று மேலே காட்டுகிருர். ஆதலால், தான் சொல்லலாம், அதற்கு சரிபடுத்திக்

கொள்ளலாம் மற்றவருக்கு முடியாது என்று காட்டிவிடுவதால் அங்கு பிரகரணத்தை கவனிக்கவேண்டும். முன்பின் ஆதாரங்களையும் கவனித்து பேசவேண்டும். ஆதலால் கவி வாக்யார்விரோதமானால் ராம வாக்யமும், பிறர் வாக்யமும் போய்விடும் என்று ஸித்தாந்தம்) வால்மீகி ஸர்வதத்தையும் விட்டவன் என்பதால் இந்த வாக்யத்திற்கும் பலமில்லை. விபீஷணன் ராக்ஷஸ வதத்திற்கு உபகாரம் செய்கிறேன் என்றதானது ராம ஸகாயத்திற்காகவே ஜனனமாதலால் அதையே சொன்னான். எவனெவன் எதற்காக பிறந்தானோ அதையே அவனவன் செய்ய வேண்டும். அதுதான் தர்மம் ஆதலால் விபீஷணன் ராமனால் பலாத்காரமாய் ராமன இச்சைக்காக பட்டாபிஷேகம் செய்யப் பட்டவனே தவிற வேறு இல்லையாதலாலும் நாகபாச கட்டத்தில் என் ராஜ்யம், மனோரதம் போச்சு என்று விபீஷணன் சொன்ன இடத்தில் வால்மீகி யுத்தகாண்டத்தில் 50-ம் ஸர்க்கத்தில் அதிக துக்கத்தால மிகவும் பீடிக்கப்பட்ட மனமுடையவனாய் மேலே சொல்லப்பட்டபடி புலம்பினான் என்றதால் அதுவும் அங்கீகரிக்கத் தகுந்ததல்ல. இக்கிரந்தத்தில் வால்மீகி ஸ்வயம் வாக்கியத்தில, அதிக துக்கத்தில வந்த வாக்யத்திற்கும, அதிக கோபத்தில வந்த வாக்யத்திற்கும அதிக ஸந்தோஷத்தில் வரும் வாக்யத்திற்கும சித்தம் இழந்த காலத்தில வரும் வாக்யங்களுக்கும் அது கள யாருடையதாயிருந்தாலும் அதுகளுக்கு மதிப்பு கிடையாதென்றும் அக்காலங்களில இல்லாததெல்லாம்கூட கண்டபடி வாக்கிலவரும என்றும் வால்மீகி ஸ்திரப்படுத்துவதால் விபீஷணனை புலம்பினான் என்றதால் அதுவும் பிரயோஜனமில்லை. அந்த, முன் சொன்ன இடங்களில், கௌரவத்தை நாமாக கல்பித்தால் ஸீதை முதலிய உத்தமிகளுக்கு பதிவ்ருதா தர்ம விருத்தமும் ராமாதிகளான உத்தமர்களுக்கு தர்மலோபமும் ஏற்படுமாதலால் கவி தன் வாக்கில சொல்லாதபோது கவி பாவத்திற்கு விரோதமாய் சொல்வது விருத்தம் என்றும் ஸ்தாபிக்கப்படுகிறது. ஆதலால பெரியோர்களும் மற்ற வியாக்யாதாக்களும் விபீஷணனை காம்ய பக்தி உள்ளவனென்று சொன்னதால் அது வால்மீகி ஹ்ருதயம் அல்ல. ஆதலால் அதுகள் அங்கீகரிக்க

தகுந்தவைகள் அல்ல என்று ஸித்தாந்தம். இக்கிரந்தத்தில் ராகவனும் ஹநுமானும், பெரியோர்கள் வழிதப்பி எதைச் சொலலியிருந்தாலும் எதைச் செய்திருந்தாலும் அது இன்ன காரணத்தினால அது பிசகு என்று காரணத்துடன் அதை தள்ளி விட்டு இன்னதுதான் சரி என்று முன்பின் காரணங்களுடன் உண்மையை குழந்தையானாலும் வெளிப்படுத்தவேண்டும் என்று ஸ்திரப்படுத்தி இருப்பதினால் அதை அனுஸரித்து காரணங்களுடன் உண்மையை ஸ்தாபிக்கிறோம். வால்மீகி நிஷ்காம்ய பக்தி உடையவன் விபீஷணன் என்று ஸ்தாபிப்பதால் பிர்ம்ம தேவ வாக்யம், அவர் வாக்யத்தை ஸத்யம் என்றும் உமது வாக்கில் பொய் வராது என்று சொல்லியிருப்பதால் அதற்கு விரோதமான மற்றவர்கள் வாகயங்கள் தள்ளத்தகுந்ததாதலால் அதன்படி விபீஷணன் நிஷ்காம்ய பக்தி உள்ளவனே என்றும் ஸித்தாந்தம்.

---

## 41. இக்கிரந்த கர்த்தாவின் ஓர் முக்ய அறிவிப்பு.

சிறுகுடி பிரம்மஸ்ரீ பண்டித, ராமாயணம் சாம்பசிவ சாஸ்திரிகள் அவர்கள் புத்ரராயும் இக்கலியில் இக்கிரந்தத்தின் உண்மையான அர்த்தத்தை ஸ்தாபிக்க வந்திருக்கும் ஓர் அவதார புருஷரும் 22 வருஷகாலமாய் திக்விஜயம் செய்து ஸ்ரீராம கிருபையால் தாம் சொன்ன விஷயங்களில் எதிர்த்த வித்வான்களை ஸதஸில் ஜெயித்து அனுக்ரஹத்தால் மூலரீதியான அர்த்தத்தை வெளிப்படுத்தி அதனால் திரிமதஸ்தர்களிலும் ஸந்தோஷித்த மஹாவித்வான்களால் பல பாஷைகளிலும் நற்சாக்ஷி பத்திரங்கள் பெற்று வருஷக்கணக்கான பல பட்டாபிஷேகங்களும் ஸ்ரீமத் ராமாயண நவாஹமாக 156 பட்டாபிஷேகங்களும் செய்து தன் கீர்த்தியை எங்கும் அப்ரதித்வந்த்வராய் இருந்துகொண்டு ஸ்தாபித்து வருபவருமான அத்யந்த ராமபக்த ப்ரதிவாதி பயங்கர பண்டித ஸ்ரீராம கதாமிர்த வர்ஷக ஸ்ரீராமாயண விமர்சகாசார்ய ஸ்ரீவால்மீகி முனிஹ்ருதய தத்வஸார பிரகாசக, ஸ்ரீராமாயண சிரோமணி ஸ்ரீமத் வால்மீகி ராமாயண பிரவசன

சக்ரவர்த்தி பிரம்மஸ்ரீ ராமாயணம் ஸீதாராம சாஸ்திரிகள் அவர்கள் ஸ்ரீமத் ராமாயண சம்பந்தமான (25) வியாக்யான பரியந்தம் அவையவை வெளிப்பட்டுள்ள பரியந்தம் வரிவிடாமல் குருவாயும் வயோதிகராயும் பிதாவாயும் பண்டிதராயும் புராணிகராயும் நடுக்காவேரி பட்டஸ்ரீ பாலஸரஸ்வதி பண்டித ஸுதர்சன பிர்ம்மஸ்ரீ நாராயண சாஸ்திரிகள் பரமதகண்டன பாஞ்சஜந்ய பிர்ம்ம வித்யாபதராதியா பிரம்மஸ்ரீ ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் கோவிலூர் மடம பிர்ம்மஸ்ரீ சங்கர சாஸ்திரிகள், செம்பயநத்தம் பிர்ம்மஸ்ரீ வைத்தியநாத சாஸ்திரிகள் இவர்களுக்கு சிஷ்யராயும் கவித்வசக்தி வாய்ந்தவராயும் ஸர்வதேவதைகளையுமுத்தேசித்து தனித்தனியாய் "ஸ்தோத்ர கதம்பம்" என்கிற ஸர்வ தேவதாஸ்துதி என்னும் கிரந்தகர்த்தாவாயும் விளங்கிவருபவருமான பண்டித பிரம்மஸ்ரீ ராமாயணம் ஸாம்பசிவ சாஸ்திரிகள் அவர்களிடம் வாசித்து ஸ்ரீராமாயண ஸம்பந்தப்பட்டில ஸர்வ புராணங்களையும் பார்த்துவிட்டு வியாக்யானங்கள் பெரியோர்களுடையதாயிருந்தாலும் சில இடங்களில் பொருந்தாமல் இருப்பதால பெரியோர்களுடையதாயிருந்தாலும் பொருந்தாததை காரணங்களுடன் தள்ளிவிட்டு பொருந்தினதை குழந்தை சொன்னாலும் அங்கீகரிக்கவேண்டும் என்று ஸ்ரீராகவனும் ஹநுமானும் இக்கிரந்தத்தில் குறிப்பிட்டிருப்பதால் பொருந்தியிருப்பதை அங்கீகரித்தல் வேண்டும் என்றும் குறிப்பிடுகிறார்கள். ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்திற்கு அதுவே பிரமாணமே தவிர வேறு எதுவும் பிரமாணம் அல்ல ஆதலால் எந்த சாஸ்திரத்திற்கும் எந்த வேதத்திற்கும் ராமாயணம் கட்டுப்படாததாலும் இது ஸ்வதந்திர கிரந்தமென்றிருப்பதாலும் பல விடங்களில் வியாக்யானங்களிலும் உலக அநுஷ்டானமும் சாஸ்திரக்ருத்கள் அபிப்பிராயங்களும், புராணங்கள் அபிப்பிராயங்களும் வால்மீகி ஹ்ருதயத்திற்கு விரோதமாய் போய் இருப்பதினால் அவ்விரோதங்களைப் போக்கி உண்மையான கவிஹ்ருதயத்தை வெளிப்படுத்துவதற்காகவே ஸ்ரீராகவன் இவைகளை பாயஸத்திலேயே உண்டுபண்ணி கவிஹ்ருதயத்தை அறிவதற்கு அனுக்ரஹம் செய்து இருப்பதினாலும் விரோதமாய் போயிருக்கும் பாகங்களை ஸ்ரீஸீதாராமீயம்

என்ற கிரந்தத்திலும் ஸ்ரீமத் வால்மீகி முனிஹ்ருதய தத்வஸார பிரகாசிகா என்ற ஸ்ரீமத் ராமாயண ஸித்தாந்தம் என்ற இக்கிரந்தத்திலும் ஒவ்வொன்றிலும் எதிர்கக்ஷியின், மூலத்திற்கு விரோதமாயிருக்கும் அபிப்ராயங்களைக் காட்டி காரணங்களுடன் எதிர்கக்ஷியை ஸர்வத்திற்கும் முதலான நாரத வால்மீகியின் ஸ்வயமான மூலவாக்யத்தால எந்த கட்டத்திற்கு யார்வாக்யத்திற்கு கௌரவம் என்று இப்படி கிரமத்தால் பூர்வபக்ஷம் செய்து கவிஹ்ருதயத்தை அனுக்ரஹத்தால் ஒவ்வொரு கட்டத்திலும் அறிந்து ஸ்தாபித்து இருப்பதால் மஹா வித்வான்கள் யாராயிருந்தபோதிலும் மூல கிரந்தத்தை, ஸீதாராமீயம் என்ற கிரந்தத்துடன ஸ்ரீமத் வால்மீகி முனிஹ்ருதய தத்வஸார பிரகாசிகா என்கிற இக்கிரந்தத்துடனும் பொறுமை, அஸூயை, பொறாமை த்வேஷம் இல்லாமல் வாசித்துவிட்டு நன்றாய் ஆலோசித்து எந்த இடமாவது பொருத்தமில்லை என்று மூலப்படி பக்தர்களுக்கு படுமானல் வியங்கியமாகிற த்வனி, யுக்தி, விசேஷார்த்த, வியாக்யானங்கள் இல்லாமல் மூலச்லோகத்தை எடுத்துக்காட்டி னுல வால்மீகி நாரதரிடம் தெரிந்துகொண்டதுபோல் என்னைக்கும் பெற்றுக்கொண்டு அந்த இடத்தை மாற்றிக்கொள்ளத் தயாராயிருக்கிறார்கள்.

பிர்ம்மஸ்ரீ சிறுகுடி ஸீதாராம சாஸ்திரிகளை உத்தேசித்து அவர்களால் பிரவசனம் செய்யப்பட்ட காலங்களில் வரிவிடாமல் கேட்டு அவர்கள், ஸத்யம் தர்மம் இதுகளை இக்கிரந்தத்தில் ஸ்தாபிக்கும் அழகையும இராகவனிடமும் ஸ்ரீமத் ராமாயணத்தினிடமும் கொஞ்சமாவது தர்மத்திற்காவது ஸத்யத்திற்காக லோபம் ஒருவிதத்திலும் கிடையாது என்றும் ஸ்தாபிக்கும் அழகையும் கண்டு இவர்கள் உத்தம தர்மங்களை ஸ்தாபிக்க வந்தவர்கள் என்று எண்ணி ஸ்ரீராம பக்தியில் ஈடுபட்டு பல மஹா வித்வான்கள் பல நற்சாக்ஷி பத்திரங்களை கொடுத்து இருப்பதால் அதுகள் இப்புஸ்தகத்தில் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. இப்புஸ்தகத்தில் பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகளை உத்தேசித்து கொடுக்கப்பட்டு இருக்கும நற்சாக்ஷி பத்திரங்களைக் கொடுத்தவர்கள் ஒவ்வொருவரும் இக்கிரந்தத்தை நன்றாய் ஆராய்ந்து பார்த்தவர்

கள். அவர்கள் நற்சாக்ஷி பத்திரங்களை எவர் தூஷித்தாலும் அவர்கள் ஸ்ரீராகவனையும் ஸ்ரீமத் ராமாயணத்தையும் ஸ்ரீராமனது பக்தனை, அவருடைய பூர்ணானுக்ரஹம்பெற்று ஸ்ரீராமனைப போல் அப்ரதித்வந்தவராய் விளங்கிவருபவருமான பிர்மஸ்ரீ சாஸ்திரிகளை தூஷித்தவர்களாக கருதப்படுவார்கள். ஸ்ரீராமன் பேரில் பிரமாணமாய் அவர்கள் ராமாபராதிகள்என்றே ஸித்தாந்தம். ஷை பத்திரங்களை பலபாஷைகளிலும் கொடுத்தவர்கள் பிர்ம்மஸ்ரீசாஸ்திரிகளுடையபிரவசனத்தில்லயித்துகொடுத்தவர்கள். மேலும் மற்றவர்களை நீங்கள் ஒத்துக்கொள்ளுங்கள் என்று அவர்கள் சொல்லவில்லை. வால்மீகியும் மற்றவர்களை தம் கிரந்தத்தை ஒத்துக்கொள்ளவேண்டும் என்று சொல்லவில்லை. படித்தால் கேட்டால் பாபத்தை போக்கிறது என்றார். அவர், பகவத் குணங்களைச் சொன்னார். அந்த வழியையே அனுசரித்து பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகளும் வாலமீகி வாக்யமாக ஸ்ரீராமனது உத்தம குணத்தை வெளிப்படுத்தி இருக்கிறார்கள். நல்ல பிரக்ஞையிருந்தால் ஸ்ரீராவணிடத்தில் திருட பக்தியிருந்தால் தானாகவே திருடமாய் ஸர்வத்தையும் ஒத்துக்கொள்ளுகிறார்கள் என்பது அவர்கள் நிர்மானம். ஸ்ரீராகவனே நேரிட இக்கிரந்தத்தை பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகளுக்கு இப்படிச் சொல்லவேண்டுமென்று சொல்லிக் கொடுத்து இருப்பதால் அப்படியே சாஸ்திரிகள் சொல்வதால் தன் அபிப்பிராயத்தை, வால்மீகி ஹ்ருதயத்தை, கிரந்தமூலமாயும் பிரவசன மூலமாயும் வெளிப்படுத்தும் விஷயங்களை அங்கீகரித்துக்கொண்டதற்கடையாளமாக மழையைக்காட்டி உலகத்தையும் அங்கீகரிக்கும்படி செய்விக்கிறார் என்பது பிரத்யக்ஷம். ஆதலால் எவர்களும் முந்தி எழுதியிருப்பவர்களை தூஷிப்பதற்கு எவ்விதத்திலும் யோக்யதையுடையவர்களல்லர் என்றும் ஸ்தாபிக்கிறார்கள். மேலும் பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகள் அவர்கள் இக்கிரந்தத்தில் ஸ்ரீராகவ குணங்களில் ஸத்யத்தில் தர்மத்தில் கொஞ்சம்கூட குறைவில்லை என்பதை ஸ்தாபிப்பதற்காகவே வந்து பிறந்திருப்பதால் ஸ்ரீமத் ராமாயணத்தில் சொல்லியிருக்கும்படி சாஸ்திரிகள் அனுபவித்துக்கொண்டும் இருப்பதால் பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகள் அவர்கள் ஸ்ரீராகவனிடத்தில் தாடகா

வதத்தில் ஸ்திரீவதம் செய்தவர் என்றும் கரவதத்தில் காலைப் பிந்திப்போட்டவர் என்றும் வாலி வீதத்தில் ராமன் வாலியை மறைந்தடித்தவர் என்றும் மற்றும் சில இடங்களில் தசரதன் சுல்கம் வைத்து கைகேயியைக் கல்யாணம் செய்துகொண்டார் என்றும் ஸீதை, சுக்ரீவன், ராமன் இவர்கள் பொய் சொன்னார் கள் என்றும் இபபடி பலவிதமான தோஷங்களை ராகவாதிகளி டம் இந்த லோகத்தார் ஆரோபணம் செய்திருப்பதாலும் ஸ்ரீராகவ குணங்களுக்கும் தோஷங்களை ஏராளமாய்ச் சொலலிக் கொண்டு வருவதாலும் அதுகளை ஸஹிக்காமல் பகவான் அது களுடைய நிவாரணத்திற்காகவே பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகள் அவர் களை தன் அம்சமாய் அவதரிக்கும்படி செய்து ஸத்யத்தை ஸ்தாபிக்கும் நிமித்தத்தில எவ்வித கஷ்டங்கள் எப்படி எவர் களால் எவ்விதமாயும் வந்தாலும் அதுகளிலிருந்து காப் பதாய் அநுக்ரஹம் செய்திருப்பதால் இவர்கள் எவர்களாலும் ஸ்ரீராமன் எப்படி ஜயிக்கமுடியாதவராயிருந்தாரோ அப்படி ஜயிக்க முடியாதவர் என்றே ஸ்தாபனம் தவிற ராகவன் யுக்தத் தில் இன்று ராகவனாவது மிசசம் அல்லது ராவணனாவது மிச்சம் என்றபடியும் இந்த ஸர்வசேனையையும் அழிக்கும்படியான இந்த அஸ்திரம் எனக்குத் தெரியும் பரமசிவத்திற்கு தெரியும் என்ற படியும் நான் ஸமுத்ரத்தைத் தாண்டுவேன் அல்லது பிராணனை விடுவேன் என்றபடியும் எனது ஸ்ரீராமத்வத்தை இன்று இந்த ஜகத் பார்க்கட்டும் என்று சொன்னபடியாலும் பிர்ம்மஸ்ரீ சாஸ் திரிகளும் தானாவது மிச்சம் அல்லது ஸ்ரீராமாயணத்திற்கும் ஸ்ரீராகவனுக்கும் அபவாதம் சொல்லுகிறவர்களாவது மிச்சம் என்றும் இந்த ஸமன்வயபத்ததி தனக்குத் தெரியும் அல்லது ஸ்ரீராகவனுக்குத்தான் தெரியும் என்றும் ஸ்ரீமத் வால்மீகி ராமா யண பிரவசனத்தில் உலகத்தில் பலரும் வியாக்யாதாக்களும் பல தோஷங்களை இக்கிரந்தத்தில் சொல்லுவதால் அதுகளைப் போக்கி இவர்கள் சொல்லுவது தான் உண்மை இவருக்குமேல் யாருமே கிடையாது என்றும் ஸ்ரீமத் வால்மீகி ராமாயண பிர வசன சக்ரவர்த்தி என்று விளங்குவோம் அல்லது பிராணனை விடுவோம் என்றும் ஸ்ரீராகவன் எனது ஸ்ரீராமத்வத்தை இந்த

ஜகத் பார்க்கட்டும் என்றபடி ஸத்ய தர்மாதிகள் ஸ்தாபனத்திற்காகப் பிறந்து ஸ்ரீராமாயணத்திற்கும் ஸ்ரீராகவாதிகளுக்கும் சொல்லும் அபவாதங்களாகிற ராவணத்வத்தைப் போக்கி தனது ஸ்ரீஸீதா ராமத்வத்தை இந்த ஜகத் இப்பொழுது பார்க்கட்டும் என்றும் சொல்லி ஸ்ரீராமன் ஸ்தாபித்தது போல இவர்களும் ஸ்தாபித்துக்கொண்டு வருவதாலும் ஸ்ரீராமன் இருந்த பரியந்தம் மற்றவரால் ஜயிக்கமுடியாமல் இருந்து எப்படி புண்ய லோகமடைந்தாரோ அப்படியே பிர்மஸ்ரீ சாஸ்திரிகளும் அவர்களுக்கு ராமானுக்ரஹம் இருப்பதால் மற்றவர்களாலும் ஜயிக்கமுடியாமல் இருந்துவிட்டு புண்யலோகம் போகப்போவதாலும் பிர்மஸ்ரீ சாஸ்திரிகள் செய்திருக்கும் ஸித்தாந்தங்களை ஸ்ரீமத் வால்மீகி ராமாயண ஸம்பந்தமட்டில் எவர்களாலும் எக்காலத்திலும் பிசகு என்று சொல்லி ஜயிக்கமுடியாதென்றும் ஸித்தாந்தம். பிர்மஸ்ரீ சாஸ்திரிகள் அவர்கள் உபந்யாஸங்களில் ஈடுபட்ட மஹா வித்வான்களாலும் பல பக்த சிகாமணிகளாலும் கொடுக்கப்பட்ட பல பட்டங்களை, அர்த்தங்களையே வ்யயமாக செய்யாமலிருக்கும் இவர் அவர்கள் மனோபீஷ்டங்களுக்காக அப்பட்டங்களையும் அர்த்தங்களையும் பெற்றுக்கொண்டு மொத்தமாக 156 பட்டாபிஷேகங்களை நாலு திக்குகளிலும் சென்று செய்து வடதேசங்களிலும் ஸஞ்சரித்துவிட்டு கவிஹ்ருதயமான தன் ஸித்தாந்தங்களை எங்கும் ஸ்தாபனம் செய்து திக்விஜயத்தால் எதிர்த்தவர்கள் ஸகலரையும் ஜயித்துவிட்டு ஸ்ரீமத் வால்மீகி ராமாயண பிரவசன சக்ரவர்த்தி என்று ராமனது மஹா சபையில் ஸ்ரீராம பட்டாபிஷேக தினத்தில் பட்டாபிஷேகமும் செய்யப்பட்டு அதற்கடையாளமாக வீரகண்டாமணியுடன் கூடின தோடாவையும் பரிசாகப்பெற்று விளங்குவதால் ஸ்ரீராமானுக்ரஹமுள்ள சாஸ்திரிகள் அவர்களை இனி எவர்களாலும் ஜயிக்கமுடியாதென்றும் இவர் ஸகலரையும் ஜயித்துவிட்டதாகவும் ஸ்தாபனம். இவர்கள் இப்பொழுது அடைந்திருக்கும் இந்த பட்டமானது இந்திரனுக்கு இந்திரத்வம் என்ற மஹிமைக்கும் ருத்ரனுக்கு ருத்ரத்வம் என்ற மஹிமைக்கும் விஷ்ணுவுக்கு விஷ்ணுத்வம் என்ற மஹிமைக்கும் துல்யமானது. இதுகள்

எப்படி ஜயிக்கமுடியாதோ அப்படியே ஸ்ரீஸீதா ராமதத்வ மும் நெருங்கமுடியாது என்பது ஸத்யம். இக்கிரந்தத்தின் உண்மையான அர்த்தத்தை ஸ்தாபிப்பதற்காக இவருக்கு பகவான் சக்தியுடன் கூடின ஸீதாராமன் என்ற பெயரை யும் கொடுத்து உலகத்தை ஜயிப்பதற்காக ஸ்ரீராம என்ற தாரக மந்திரத்தையும் நேரிட உபதேசித்து ஸர்வ ஆபத் துக்களினின்றும் காப்பதாய் அனுக்ரஹம் செய்தனுப்பியிருப் பதாலும் உள்ளதை உள்ளபடி சொல்லவேண்டுமாதலால் அப் படியே சொல்லுவதான இதுகளில் ஒன்றும் கர்வ ஆத்மஸ்துத் யங்களே கிடையாதாதலாலும் அனுக்ரஹத்தால் இவர்களால் கொஞ்சகாலத்திற்கு முந்தி வெளிவந்ததான ஸாக்ஷாத் வால் மீகியின் ஹ்ருதயமான பார்க்கவ ஸம்ஹிதையான ஸ்ரீஸீதா ராமீயம் என்ற கிரந்தமென்ன, இப்பொழுது வெளிவந்து இருக் கும் கிரந்தமான, நடக்காததான, வியங்கியமாகிற த்வனி யுக்தி, விசேஷார்த்தங்கள், மற்றதுகளான வியாக்யானங்கள் இல்லாமல ஸ்ரீமத்ராமாயணமான ஸமுத்ரத்தில் இருந்து வெளிவந்து இருக்கும் ஸ்ரீராம கல்யாண குணங்களான ரத்னங்களை உடைத் தாயிருக்கிற பார்க்கவ ஸம்ஹிதையான ஸ்ரீமத்வால்மீகிமுனி ஹ்ருதய தத்வஸார பிரகாசிகா என்று பெயருடன் இருக்கும் ஸ்ரீமத்வால்மீகி ராமாயண ஸித்தாந்தம என்ற இக்கிரந்தத்தை யும் பக்தகோடிகள் ஸ்ரீராம பக்தியில ஈடுபட்டவர்களாய்க் கொண்டு அதையும் வாங்கிப்பார்த்து மிகவும் பகவத் குணங் களில ஈடுபட்டு அனுக்ரஹத்தால் சதுர்வித புருஷார்த்தத்தை யும் அடைந்து விளங்குமாறு பகவானை பிரார்த்திக்கிறோம். பிரம்மஸ்ரீ சாஸ்திரிகள் அவர்கள் சொல்லும் அர்த்தங்களை அதுவே ஸத்யம் என்றுபகவான் தான் அங்கீகரித்தாக ஒவ்வொரு பட்டாபிஷேகத்திலும் மழைமூலம் காட்டிவருவதும் பிரத் யக்ஷமே. இவ்வளவும இக்கிரந்தத்தில உள்ளதே. உள்ளதைச் சொல்லுவார்களிடத்தில பக்தியை விட்டுவிட்டு கோபங்கொண்டு எதிர்க்கவேண்டும் என்ற எண்ணமுள்ள எந்த மதஸ்தர்களானு லும், எந்த மடாதிபதிகளானாலும், எந்த மஹா வித்வான்களா னாலும் இக்கிரந்தத்தில் உழைத்து இருந்தால் அனுவச்யமாய்

தூஷணைகளைச் செய்யாமல் பொதுவான ஸபைசேர்த்து ராமாயண மூலத்தில் உழைப்பு, ஆராய்சசி ஞானம், விவேறாா ஞானம் ஸமன்வய ஞானம் இப்படியுள்ள நாலவரை மத்யஸ்தராக வைத்துக்கொண்டு பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகள் அவர்களை யோக்யதை இருந்தால் குசலவர்கள் வயங்காதி அர்த்தங்களை கானம் செய்யாததால் வ்யாக்யானங்களையும் கானம் செய்யாததால் அப்பொழுது வ்யாக்னங்கள் கிடையாதாதலால் அதுகளைவிட்டு மூலப்படி நேரில் ஜயித்துக்கொள்ளலாம் என்று மிகவும் வணக்கமாய் தெரிவிக்கிறோம்.

உலகத்தில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு சாஸ்திரத்தில் மஹா வித்வானகளே ஆனால் யாரும் எல்லாம் அறிந்தவர்கள் அல்ல, அதைப்பற்றி யாரையும் குறைகூறவில்லை. மடாதிபதிகள் தங்கள் மதங்களை ஸ்தாபனம் செய்ய ஏற்பட்டவர்களே. ஆனால் அவர்கள் ஸ்ரீமத் ராமாயணத்திற்காக உழைத்தவர்களல்ல. ஆனால் மற்றவர்கள் மற்றதில் உழைத்தவர்கள்போல பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகள், ஸ்ரீமத்ராமாயணத்தில் அனுக்ரஹத்தால் உண்மையை அறிந்து அதை ஸ்தாபிக்க வந்தவர்கள் என்பதை உலகம் அறியத்தான் இதை குறிப்பிடுகிறோம்

பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகள் ராகவன் தனக்கு உலகத்தில பிரகடனம் செய்யும்படி கொடுத்ததாயும் வேத சாஸ்திராதிகளை படித்ததால் மட்டில் அறியமுடியாததாயும் அனுக்ஹாகத்தால் மட்டில் அறியத்தகுந்ததாயும் உள்ள ஸ்ரீமத் ராமாயணத்தில் வால்மீகியின் ஹ்ருதயமான உன்மையான அர்த்தத்தை ஸ்ரீராமானுக்ரஹத்தால் அறிந்து ஸ்தாபனம் செய்யவந்திருப்பதால் ஸ்ரீராகவனை, கூனி, வாலி, ராவணாதிகள், நிந்தித்ததுபோல் அதுகளை ஸ்ரீராகவன் லக்ஷ்யம் செய்யாமல் தன் லக்ஷ்யத்தில் இருந்ததுபோல் பிர்மஸ்ரீ சாஸ்திரிகள் அவர்களும் வந்த காரியத்தில் கண்ணுயிருந்து துஷ்டர்கள் நிந்தனைகளை லக்ஷ்யம் செய்யாமல் பகவத் கிருபையுடன், பகவான் ராவணாதிகளை ஸம்ஹாரித்து விட்டு பட்டாபிராமனாய் விளங்கினதுபோல் ராவணத்வமாகிற தோஷங்களை ஸம்ஹாரித்து வால்மீகி ஹ்ருதயமான ஸித்தாத்

தங்களை எங்கும் ஸ்தாபித்துக்கொண்டு தான் பூமண்டலத்தில் உள்ள பரியந்தம் ஸ்ரீமத் வால்மீகி ராமாயண பிரவசன சக்ர வர்த்தி என்ற பெயருடன் விளங்கிக்கொண்டும் விளங்கவும் போகிறார்கள் என்றும் ஸ்தாபிக்கிறோம். வால்மீகி கிரந்தம் ஸப்த காண்டத்தையும் செய்துவிட்டுதான் செய்தேன் என்று சொல்லாமல் அவர் கேட்டார் அவர் செய்தார் என்று சொன்ன படி அக்கிரந்தத்தை அனுஷ்டிக்கும் பிர்ம்மஸ்ரீ சாஸ்திரிகள் அவர்களும் செய்தார், சொல்லுகிறார், விளங்குகிறார், விளங்கப் போகிறார் என்று நாமும் குறிப்பிடுகிறோம்.

இப்படிக்கு,

சிறுகுடி, பிர்ம்மஸ்ரீ பண்டித ராமாயணம் சாம்பசிவ சாஸ்திரிகள் அவர்கள் புத்திரரான அதயந்த ராமபக்த, பிரதிவாதி பயங்கர பண்டித, ஸ்ரீராம கதாமிர்த வர்ஷக, ஸ்ரீராமாயண விமர்சகாசார்ய, ஸ்ரீவால்மீகி முனிஹ்ருதய தத்வஸார பிரகாசக ஸ்ரீராமாயண சிரோமணி, ஸ்ரீமத் வால்மீகி ராமாயண பிரவசன சக்ரவர்தத்தி பிர்ம்மஸ்ரீ ராமாயணம்

ஸீதாராம சாஸ்திரிகள்.

புஸ்தகம் இருப்பிடம்:—

சிறுகுடி பிர்ம்மஸ்ரீ ராமாயணம்
ஸீதாராம சாஸ்திரிகள் அவர்கள்,
ஓகை கிராமம, கொடவாசல போஸ்டு.

சிறுகுடி S. ராஜாராம சாஸ்திரிகள்,
பர்ஸனல் கிளார்க், P. M. O's. Office, S. I. Railway.
திருச்சி ஜங்ஷன்.



## 42: ஸ்ரீராகவனுக்கு ஒருவிதத்திலும் தனக்குத் தன்னை விஷ்ணுவென்று தெரியாதென்ற ஸித்தாந்தம்.

(1) பாலகாண்டம் 76-ம் ஸர்க்கம் 16-ம் ச்லோகம் அக்ஷய்யம் மதுஹந்தாரம் ஜாநாமி த்வாம் ஸுரேச்வரம் । தநுஷோऽஸ்ய பராமர்சாத் ஸ்வஸ்தி தேऽஸ்து பரந்தப । என்று பரசுராமன் ராகவனைப்பார்த்து நீர் இந்த வில்லை நாணேற்றிவிட்டதிலிருந்து உம்மை அழிவில்லாதவராயும் மது என்ற அஸுரனைக்கொன்ற மதுஸூதனனாயும் தேவதைகளுக்கு ஈச்வரனுமான நாராயணன் என்றறிகிறேன் என்று பரசுராம வாக்யங்களை ராமன் கேட்டுக்கொண்டு நான் இல்லை என்று சொல்லி தடுக்காமல் பேசாமல் கேட்டுக்கொண்டு இருந்ததால் ராகவனுக்குத் தன்னைத் தெரியும் என்ற நிர்ணயம். தவிர ராமனும் இப்படி பரசுராமன் தன்னை சொல்லுவதற்குமுந்தியே அவஜாநாஸி மே தேஜ: பச்ய மேऽத்ய பராக்ரமம் । என்று என்னுடைய தேஜஸ் உமக்குத் தெரியாது என் பராக்ரமத்தைப் பாரும் என்று பரசுராமன் ஸர்வலோகத்தையும் ஜயித்தவரைப் பார்த்துச் சொன்னதாலும் ராகவனுக்குத் தன்னை விஷ்ணு வென்று தெரியும் என்ற நிர்ணயம். (இது பரசுராம வாக்யம்)

(2) பாலகாண்டம் 48-ம் ஸர்க்கம் 31-ம் ச்லோகம் யதா சைதத்வநம் கோரம் ராமோ தசரதாத்மஜ: । ஆகமிஷ்யதி துர்தர்ஷ: ததா பூதா பவிஷ்யஸி । என்று கௌதமர் அகல்யையைப் பார்த்து எப்பொழுது இந்த வனத்திற்கு ராமன் வருவரோ அப்பொழுது நீ அவரை தரிசித்து உத்தம ரூபம் அடையலாம் என்றார். இக்கதையை விச்வாமித்ரர் ராமனுக்குச் சொல்லி அவரை ஆச்ரமத்திற்கு அழைத்துவர அவளுக்கு சாப விமோசனம் ஆனதுகண்டு ராமன் தனக்கு பரமாத்ம ரூபம் விஷ்ணு ரூபம் உண்டு என்று எண்ணினார் என்பது ஸ்பஷ்டம்.

(3) அயோத்யா காண்டம் 19-ம் ஸர்க்கம் 20-ம் ச்லோகம் நாஹமர்தபரோ தேவி லோகமாவஸ்துமுத்ஸஹே । வித்தி மாம் ருஷிபிஸ்துல்யம் கேவலம் தர்மமாஸ்திதம் என்று ராகவன் கைகேயி தேவியைப் பார்த்து ஏ தேவி நான் பணத்தாசை பிடித்தவ

னல்லன். லோகத்தில் வஸிப்பதற்கும் இச்சையுள்ளவனல்லன். நீர என்னை ரிஷிகளுக்கு துல்யனுயும் தர்மத்தை பிரதானமாய் உடையவனுயும் தெரிந்துகொள்ளும் என்ருர். என்று இப்படி சொன்னதால ஒன்றிலும் பற்றுதல் இலலாதவன் அந்த பக வானே ஆதலால தனனை அறிந்து இருக்கிருர் என்று ஸ்பஷ்டம்.

(4) அயோத்யா காண்டம் 111-ம் ஸர்க்கம் உத்திஷ்ட ஸௌம்ய
உஹாபாஹொ ஊாம உஷ்ரய பதயொசுகம் என்று இப்படி ஊருக்கு வரவேண்டும் இல்லாவிட்டால் எழுந்திருக்கமாட்டேன என்று கீழே தர்ப்பஙகளைப போட்டுக்கொண்டு அதில படுத்த பரதனை ராகவன் தடுத்து பரத, இது பாபமான காரியம் எழுந்திரு இந்த பாபத்தைச் செய்ததற்காக என்னைத் தொடு ஆசமனம் செய் என்ருர். இதனுல் ஸ்ரீராமன் பரதன் எழுந்து தன்னைத் தொட் டால் அவனுக்கு அந்த பாபம போகும என்கிருர். ஆசமனம் செய் என்ருர். இபபடி இவர் சொன்னதால் தனக்குத் தன்னை விஷ்ணு எனறு தெரியுமாதலால தொடு' தனனை, பாபம் போகும் என்கிருர். ஆதலால் அவருக்குத் தெரியும் என்பது ஸ்பஷ்டம்.

(5) ஆரண்யகாண்டம் 64-ம் ஸர்க்கம் 59-ம் சலோகத்தில்
நைவதைவா ந கந்தர்வா ந பிசாசா ந ராக்ஷஸா: । கிந்நரா வா மநுஷ்யா வா ஸுகம் ப்ராப்ஸ்யந்தி லக்ஷ்மண என்று ஸீதையை ராவணன கொண்டுபோனதும் லக்ஷ்மணு, ஸீதையை எடுத்தவன் தேவனுகட்டும, கந்தர்வனுகடடும், பிசாசர்கள் ராக்ஷஸர்கள் ஆகட்டும எவர்களாயிருந்தாலும் ஸரி அவர்கள் கொண்டுவந்து விடாமல போனுல் ஸுகத்தை அடையமாட்டார்கள் என்று ராமன் கோபிப்பதாலும் அதே ஸர்க்கம் 72-ம் சலோகத்தில் நாசயாமி ஜகத் ஸர்வம் த்ரைலோக்யம் ஸசராசரம் என்று மூன்று லோகத்துடன் கூடின ஸர்வ ஜகத்தையும் இப்பொழுதே அழித்து விடுகிறேன் என்பதிலும் ராகவனுக்கு தன்னை விஷ்ணு வென்று தெரியும் என்று நிர்ணயம்.

(6) ஆரண்ய காண்டம் 66-ம் ஸ்ர்க்கம் 19-ம் சலோகம்
பஹுபிஸ் தே மஹாப்ராஜ்ஞ தைவைரபி துராஸதா । பொகேநா பிப்ரஸம்யுக்தே ஜ்ஞாநம் ஸம்பொயாஷ்யஹம் । பிப்ரம் வஜ்ர ந்ருபம்ஸம் வ

சாத்மநஶ்ச பராக்ரமம் | இக்ஷ்வாகுவ்ருஷபாவேக்ஷ்ய யதஸ்வ த்விஷதாம் வதே | கிம் தே ஸர்வவிநாஶேந க்ருதேந புருஷர்ஷப | தமேவைகம் ரிபும் பாபம் விஜ்ஞாயோத்தர்துமர்ஹஸி என்று லக்ஷ்மணன் ராகவனைப்பார்த்து ஏ! மஹாபிராக்ஞ, உம்முடைய புத்தியானது தேவர்களாலும அடைய முடியாதது. அப்படிப் பட்ட அது, சோகத்தினால் மங்கியிருக்கிறது. அதனால் நான் ஞானத்தை உண்டுபண்ணுவிக்கிறேன். திவ்யமான உம்முடைய மனுஷ்யத்வத்தையும் உம்முடைய பராக்ரமத்தையும் ஏ! இக்ஷ்வாகு வம்சஸ்தர்களுக்குள் சிரேஷ்டனே! நீர் அடைந்து சத்ருக்களுடைய வதத்திற்கு யத்னம் செய்யும். உத்தமா, ஸகலரையும் நாசம் செய்வதால் என்ன பிரயோசனம்? ஸீதையை அபஹரித்த அந்த சத்ருவை அறிந்து அவனை அழிப்பதற்கு அர்ஹதை உடையவராய் இருக்கிறீர் என்று ராமனுக்கு தன்னைத் தெரிந்து இருக்க மறந்து இருக்கும் ராகவனுக்கு ஞாபகப்படுத்தினதால் ராமருக்குத் தெரியும் என்று நிர்ணயம்.

(7) ஆரண்ய காண்டம் 68-ம் ஸர்க்கம் 30, 31-ம் ச்லோகங்களான யா கதிர்யஜ்ஞஶீலாநாமாஹிதாக்நேஶ்ச யா கதி: | அபராவர்திநாம் யா ச யா ச பூமிப்ரதாயிநாம் | மயா த்வம் ஸமநுஜ்ஞாதோ கச்ச லோகாநநுத்தமாந் | க்ருத்ரராஜ மஹாஸத்த்வ ஸம்ஸ்க்ருதஶ்ச மயா வ்ரஜ | என்று ராகவன் பக்ஷிராஜனுக்கு அக்னிப்பிரதான கர்மாவை அவர் உத்தமலோகம் அடைவதற்காக தானே நேரிடச் செய்து அவரை உத்தேசித்து சொல்லுகிறார். யாகம் செய்தவர்களுக்கெல்லாம் எந்த கதியோ, அக்னிஹோத்ரம் செய்தவர்களுக்கு எந்தகதியோ, யுத்தத்தில புறமுதுகு காட்டாதவர்களுக்கு எந்த கதியோ (இங்கு திரும்பி வராத வைகுண்டம் என்பார்கள் அது பொருத்தமல்ல) பூதானம் செய்தவர்களுக்கு எந்த லோகமோ, அப்பேர்பட்ட உத்தம லோகங்களை நான் உமக்குக் கொடுக்கிறேன். என்னால் கொடுக்கப்பட்ட இந்த உத்தமலோகங்களை அடையும் என்னால் கர்மா செய்யப்பட்டவராய் ஏ பக்ஷிராஜனே நீர் அடையும் என்று இப்படி ராமன் பக்ஷிராஜனைப்பார்த்துச் சொன்னதால் இவருக்குத் தன்னை விஷ்ணுவென்று தெரியும் என்பது ஸ்பஷ்டம்.

(8) கிஷ்கிந்தா காண்டம் 1-ம் ஸர்க்கம் 125-ம் ச்லோகம் ஜஹாதாநம் கூதாதாநஜாதாநம் நாவபுயு்ஷெ ।ஸாவம ஸம்பொயிதஷூதூ பொகொவஹதவெதந: என்று லக்ஷ்மணன் துக்கத்தால் இழந்து இருக்கும் சித்தத்தை உடைய ராகவனை நீர் மஹாத்மாவாயும் செய்யப்பட்டு இருக்கிற உத்தம புத்தியுடன் கூடினவராயும் ஏன் அறிந்துகொள்ள இல்லை என்று அவரை எழுப்பினர். (அல்லது ஞாபகப்படுத்தினர்) என்று இருப்பதினால் ராமனுக்கும் தெரியும் லக்ஷ்மணனுக்கும் தெரியும் என்றுகிறது.

(9) யுத்தகாண்டம் 18-ம் ஸர்க்கம் 23-ம் ச்லோகத்தில் விஶாவாநு உாநவாநு யக்ஷாநு வூயிவ்ராம்வெவ ராக்ஷஸாநு । ஸம்ஹுவைராஜ்ஹணதாநு ஹநாஸூநு ஹரிஹணெஶூ । என்று ராகவன் ஸுக்ரீவனைப் பார்த்து ஸுக்ரீவ பிசாசர்கள், தானவர்கள் யக்ஷர்கள் பூமியில் உள்ள ராக்ஷஸர்களையும் இசிப்பேனே யாகில் எனது சுண்டுவிரலால் அழிப்பேன் என்றதாலும் இவருக்குத் தன்னைத் தெரியும் என்று நிர்ணயம்.

(10) யுத்தகாண்டம் 21-ம் ஸர்க்கம் 22-ம் ச்லோகத்தில் உாவஜாநுபஸஎஜிஷெ ஶஶாம்ஶூாஶீவிஷொவஜாநு । ஸாஹஶம் பொஷயிஷ்யாமி ஸமுஸ்ரம்பாதஜ ஸைம்ஹஜா: । என்று ஸமுத்ர ராஜனை உபாஸித்தும் வராததால் கோபித்து லக்ஷ்மணனைப் பார்த்து லக்ஷ்மணா இப்பொழுதே வில்லைக் கொண்டுவா. நான் ஸர்ப்பங்களுக்கு உபமானமான கடுமையான சரங்களால் ஸமுத்ரத்தை வற்றடித்து விடுகிறேன் எல்லாரும் ஸமுத்திரத்தில் நடந்து செல்லட்டும் என்று கர்ஜ்ஜித்து விலலை எடுத்ததால் இவருக்குத் தன்னைத் தெரிந்ததாலேயே ஸமுத்திரத்தை வற்றடிக்கிறேன் என்றார் என்ற நிர்ணயம்.

(11) யுத்த காண்டம் 83-ம் ஸர்க்கம் 43-ம் ச்லோகத்தில் கிஜாதாநம் ஜஹாதாநம் குதாநம் நாவபுயு்ஷெ । மாயா ஸீதாவதத்தில் ராமன் ஸீதைக்காக துக்கப்பட்டபோது லக்ஷ்மணன் ராகவனைப் பார்த்து மஹாத்மாவான உம்மை நீர் ஏன் அறியவில்லை என்று லக்ஷ்மணன் கேட்பதால், ராமனுக்கும் தெரியும் லக்ஷ்மணனுக்கும் தெரியும் என்று நிர்ணயம்.

(12) யுத்த காண்டம் 94-ம் ஸர்க்கம் 38-ம் ச்லோகத்தில் 𑌏𑌤𑌦𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌬𑌲𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌮𑌮 𑌵𑌾 𑌤𑍍𑌰𑍍𑌯𑌮𑍍𑌬𑌕𑌸𑍍𑌯 𑌵𑌾 என்று ராகவன் ஸகல வானரவீரர்களைப் பார்த்து இந்த திவ்யமான அஸ்திரம் எனக்குத் தெரியும் பரமசிவத்திற்குத் தெரியும் என்றார் ஆகலால் தன்னைத் தெரியும் என்று நிர்ணயம்.

(13) யுத்தகாண்டம் 120-ம் ஸர்க்கம் 11-ம் ச்லோகத்தில் 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌮𑌾𑌨𑍁𑌷𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇 𑌰𑌾𑌮𑌂 𑌦𑌶𑌰𑌥𑌾𑌤𑍍𑌮𑌜𑌮𑍍 என்று ஸ்தோத்ரம் செய்தபோது நீர் பிராகிருதனான மனுஷ்யன் போல் ஸீதையை உபேக்ஷிக்கிறீரே, நீர் பகவான் அல்லவா என்று ஸ்தோத்ரம் செய்த அப்பொழுது ராகவன் பிரம்ம தேவனைப் பார்த்து நான் என்னை தசரதர் பிள்ளை ராமனாக நினைக்கிறேன் என்றார். இப்படி நினைக்கிறேன் என்றதால தனக்குத் தன்னைத் தெரியும். அதனால் நினைக்கிறேன் என்றார். என்பது இதனால் தெரியும் என்ற நிர்ணயம்.

(14) தவிர விபீஷண சரணாகதி கட்டத்தில் ராவணன் உயிருடன் இருக்கும்பொழுதே விபீஷணனுக்கு லக்ஷ்மணனால் ஸமுத்ரக் கரையில் லங்கா ராஜ்ய பட்டாபிஷேகம் செய்ததிலேயும் உத்தரகாண்டத்தில் லவணாஸுரன் உயிரோடு இருக்கும்போது அவனிடம் இருக்கும் சூலம் தேவர்களையும் பிராம்மணர்களையும் கொல்லாததாயும் மற்ற யாரையும் அழிக்கவிடும் யோக்யதை உடைய சூலத்தை லவணன் வைத்துக்கொண்டு இருக்க அவனுடைய பட்டணமான மடமதுரையை ராகவன் சத்ருக்னனுக்கு பட்டாபிஷேகம் தன் ஊரில் இருந்துகொண்டு செய்ததில் இருந்தும் தனக்குத் தன்னை பரமாத்மா என்று அறிந்துகொண்டுதான் இருக்கிறார் என்பது பிரமாணம்.

இதுகளால் உலகத்தில் ராகவனுக்குத் தனக்குத் தன்னை விஷ்ணு என்று தெரியும் என்று சொல்லுகிறார்கள். வியாக்யாதாக்களும் மற்றும் சில மத ஸித்தாந்தக்காரர்களும் அபிப்பிராயப்படுகிறார்கள். வால்மீகி எந்தவிதத்திலும் எந்தச் ச்லோகத்தாலும் ராகவனுக்குத் தான் விஷ்ணு என்றும் மற்ற தம்பிகளான பேர்களுக்கும் தாங்கள் விஷ்ணு அம்சங்கள் என்

றும் தெரியாது என்று ஸ்தாபிக்கிறார் என்றும் மத கிரந்தங்களுக்கும இக்கிரந்தத்திற்கும் ஸமபந்தமில்லை என்றும் அதற்கு அதுவே பிரமாணம என்றும ஸ்தாபனம். வால்மீகி தெரியாதென்று ஸ்தாபிக்கும் அழகையும் கவனிப்போம், முன் சொல்லி இருக்கும் ச்லோகங்களைப் பூர்வபக்ஷம் செய்யும் அழகையும் கவனிப்போம :—

ஸ்ரீராகவனுக்குத் தன்னை விஷ்ணு என்று தெரியுமேயானால், ஸீதையை அவநிஜா என்று பூமிக்கு புத்ரி என்று சொல்லி பிறகுதான ஜனகனுக்கு வளர்ப்புப் பெண என்று இருக்கிறது. ஆதலால ஜனக புத்ரி என்பது இரண்டாவது பக்ஷம். பூமியை விஷ்ணு பத்னி என்று வர்ணிக்கப்பட்டு இருக்கிறது. ராம ஸ்வர்க்காரோஹண கட்டத்தில்தான் ராமனுக்குத் தன்னைத் தெரியுமென்று குறிப்பிட்டு ஒரு பக்கத்தில பூதேவி, ஒரு பக்கத்தில ஸ்ரீதேவி என்றும், குறிப்பிட்டு இருக்கிறது. இப்படி வர்ணிக்கப்பட்டு இருக்க பூதேவி ஒரு பத்னி என்று ஸ்பஷ்டம். அந்த ஸ்வர்க்காரோஹண காலத்திற்கு ஆயிர வருஷம முந்தியே ஸீதை பூப்பிரவேசமாகி மறைந்துவிட்டாள். ஸீதை பூபுத்திரி பூமி விஷ்ணு பத்னி. இப்படி இருக்க பூபுத்ரியை இவர் விவாஹம் செய்துகொண்டு இருக்க அப்பொழுது ஸீதை இவருக்கு பெண்ணல்லவா ஆகிறது. இவரை கிரந்த கர்த்தா தர்மாத்மா என்றும தனக்குமட்டுமல்ல தாமத்தை மற்றவர்களையும் அனுஷ்டிக்கவேண்டும் தவறக்கூடாது என்கிறவர் இவர் தர்மத்தினின்றும் நழுவினரா எப்படி? அவருக்குத் தன்னைத் தெரிந்தால் இந்த தர்ம ஸங்கடம் வரும் என்றறிந்தே கவி தெரியாதென்றே எங்கும் வர்ணிக்கிறார்.

தவிற இரண்டாவதாக பரசுராம காவ்யங்க கட்டத்தில பரசுராமன ராமனிடம் வரும்போதே உண்டான பயங்கரமான காற்றினுலும் பயங்கரமான பக்ஷிகள் சப்தத்தினுலும் ஒரே இருட்டு ஏற்பட்டதாலும் ஸேனைகளபயந்து அப்படியேகொஞ்ச காலம தங்கி போவோம என்று ராஜனை கேட்க ராஜாவும அங்கீகரிக்க பரசுராமன் ராமனிடம் நெருங்க தசரதன் பலவிதமாய் பரசுராமரைப் பிரார்த்திக்க அவரை அலக்ஷ்யம்செய்துகொண்டு

ராமரிடம் வர, அக்கவலையால தசரதரும பிரமிக்க, பிறகு பரசு ராமன் ராகவனைப் பார்த்து நீர் இந்த வில்லை வாங்கி நாணேற் றிடுவீரேயாகில பிறகு அதை தெரிந்துகொண்டு பிறகு உம் முடன் சண்டைக்கு வருகிறோம என்று சொலலி வில்லை ராகவ னிடம் கொடுக்க அப்பொழுது அந்த வில்லை வாங்கி நாணேற் றும்போது ஜகத்தில ஸகல சராசரமும அப்படியே பிரமித்து விட்டது. அதநின் ஞாபகம் அப்படியே பிரமித்து இருந்தது. என்று பாலகாண்டத்தில் வால்மீகி 76-ம் ஸர்க்கம் 11-ம சலோ கத்தில் [illegible] । [illegible] । என்று சிரேஷ்ட மான அந்த வில்லை தரித்துக்கொண்டு இருக்கும் அந்தகாலத்தில் லோகமானது பிரக்ஞை இழந்து இருந்தது என்று வர்ணித்தார். ஏனென்றால் மேலே பரசுராமன் ராமனைப பார்த்து நீர் இந்த வில்லை நாணேற்றிவிட்டதினால நான் உம்மை அழிவில்லாதவ ராயும் தேவர்களுக்கு ஈச்வரரான மதுஸூதனுமான நாராயண னாய் அறிகிறேன் என்றும் மூன்று லோகத்திற்கும் நாதனான உம்மால் நான் அவமானப்பட்டது எனக்கு இது அவமானமல்ல என்கிற இதையும் ஸகல ஸேனா ஸமூகமும் இருக்க எல்லா ஜனங்களும் இருக்க எல்லார் மத்தியிலும் சொல்வதால் ஸகல ஜகத்தும் ராமனை நாராயணனாய் விஷ்ணுவாய்த் தெரிந்துகொண் டால் ராவணனை மனுஷ்யன்தான் கொல்லவேண்டும் என்றும் இருக்க தேவதையான இவரால் கொல்லமுடியாததாலால் ஜகத் முழுமையுமே அறியாமல் இருக்கவேண்டுமென்றே ஜகத் பிர மித்து இருந்தது என்று குறிப்பிட்டதாலும் ராவணவதாநந்தரம் பரமேச்வரன் பிர்ம்மதேவன் முதலிய ஸர்வ தேவதைகளும் ஸீதா அக்னிப பிரவேசம் ஆனதும் இராமஸ்தவ ராஜஸ்தோத் ரம் என்பதால் ராமனை பரமாத்மா என்று ஸ்துதிக்க ராமன், நான் என்னை தசரதன் பிள்ளை ராம[illegible] ணிககொண்டு இருக்கிறேன். உமக்குத் தோன்றினதை நீர் சொல்லும் என் இஷ்டம் தசரதன் பிள்ளை ராமன்தான் என் றும் ஸ்தாபித்தார் (இக்கிரந்தத்தில் [illegible] என்ற சப்தத்திற்கு ஸந்தேகமான அர்த்தமே கிடையாது நிச்சயார்த்தமே) மனுஷ்ய

கொல்லவேண்டும் ராவணனை என்று இருப்பதால் ராமன் என்று பேர் வைத்துக்கொண்டு கபடமாய்க் குரங்குகளைக்கொண்டு ராமன் ராவணனை என்னமோ மாயம் செய்து கொன்றுவிட்டானும் என்று அபவாதம் நாளைக்கு வந்துவிடுமாம் அது கூடாது என்றே கவிகாட்டி அவர் கபட நாடகன் அல்லன் என்கிறார். அதனாலும் தேவதைகள் ராவணவதபரியந்தம் ராமன்கிட்டே வந்து ஸ்தோத்ரம் செய்யவில்லை. பிறகு செய்த போதும் தன்னை அவர் தசரதன் பிள்ளை என்றே ஸ்தாபித்தார். தேவதைகளுடன்கூட பிர்மமா ராகவனை யுத்தகாண்டம் 120-ம் ஸர்க்கம் 7-ம் சலோகத்தில் കഥം ദേവഗണശ്രേഷ്ഠമാത്മാനം നാവബുധ്യസേ! என்று தேவதைகளுக்குள் சிரேஷ்டனான பகவானாக நீர் ஏன் உம்மை அறிந்துகொள்ள இல்லை என்றும் கேட்கிறார். ராமன் அறிந்துகொள்ள இல்லை என்றே ஸ்தாபிக்கிறார். இப்படி இருக்க பரசுராமன் ராமனை ஸ்தோத்ரம் செய்தபோது ராமன் பேசாமல் இருந்தார். அவருக்குத் தோன்றினதை சொல்லுகிறார். இது அவரபிப்ராயம் என்று பேசாமல் இருந்தாரே ஒழிய ஒத்துககொள்ள இல்லை. இந்த இடத்தில் ஸகலருடைய மததியில பிர்ம்மா சொன்னது தெரியாதென்றே ஸ்திரப்படுத்திவிட்டார். பிர்மமாவை உமக்கு தோன்றினதை நீர் சொல்லிக்கொள்ளும் என்றதைப்போல் பரசுராமன சொன்ன போது பேசாமல் இருந்தார். இங்கு சொன்னார் அங்கு சொல்ல வில்லை. இதுதான் வித்யாஸம். பேசாமல் இருந்ததால் அங்கீகரித்ததாய் அர்த்தமல்ல. பேசாமல் இருந்தால் முன் ஆதாரத்தை ஒத்து அர்த்தம். கவிஹ்ருதயத்தை ஒத்து அர்த்தம். உதாரணமாய் தசரதன் ராமனை அழைத்து நாளை உனக்கு பட்டாபிஷேகம் செய்யப்போகிறேன் என்றார். பெற்றுக்கொள் என்றார். ராமன் பேசாமல் இருந்தார் என்று இருக்கிறது. என்ன அபிபராயம் எனில் அப்பா நாளை, கொடுக்கிறேன் என்றார். ஸரி, கொடுக்கிற போது வாங்கிக்கொள்வோம் என்று பேசாமல் இருந்தார். கொடுக்கவில்லை வாங்கிக்கொள்ளவில்லை. ஆகட்டும் என்று ஒத்துக்கொண்டார் என்றார்த்தமென்றால அப்பா சொல்லைக் கேட்கிறவன், ஏன் பெற்றுக்கொள்ளவில்லை. என்று கேள்வை? வேண்

டாம் என்றார் என்றால் பிதா சொல்லை இவர் கேட்கவில்லையே. இது தர்மமா என்று கேள்வி. ஆதலால் பிரகரணத்தை ஒத்து, கவிஹ்ருதயத்தை ஒத்து அர்த்தம். இக்கிரந்தத்தில் பதங்களுக்கு, கதைகளுக்கு, பிரகரணார்த்தம்தான் பல இடங்களுக்கு ஏற்பட்டு இருக்கிறது. ஆதலால் எங்கு பதத்தின் அர்த்தம், எங்கு பிரகரணத்தின் அர்த்தம் என்று கவி நிர்ணயிக்கிறார் என்பதை கவனிக்கவேண்டும். மனுஷ்யனுக்கு இக்கிரந்த ரீதியாய், தன்னைத் தனக்கு தெரியாததாலேயே ராமன் மனுஷ்யனாகவே இருந்தார். காலபுருஷன் வந்து ராமனை புண்யலோகம் கூப்பிடும் பரியந்தம் தெரியாதென்றே கவி ஸ்தாபித்தார். நரன் என்றால், இக்கிரந்த ரீதியில் தன்னை தனக்கு தெரியாதென்றே ஸ்தாபனம் அதையும் கவனிப்போம் :—

வால்மீகி நாரதரைப் பார்த்து உத்தம குணங்களுடன் கூடினவன யார். உத்தமன் யார் என்றும் ஸாம்ப்ரதம் வீர்யம் நரம் இப்படி உள்ள மனுஷ்யன் யார் என்கிறார். பரமாத்மாவைச் சொல்லும் என்றும் கேட்கவில்லை. (நமக்கெல்லாம் பரமாத்மா தான். கிரந்தம், நடந்துகொண்டிருக்கும்போது ராவணவதாநந்திரம் ராமாயணம் செய்ததால் ராமனிருக்கிறபோது செய்ததால் அவருக்கு அவர் தன்னைத் தெரியாமல இருந்ததால அதைக் கவி குறிப்பிடுகிறார்) இவ்வளவு குணங்கள் பொருந்தமுள்ள மனுஷ்யன் வேண்டும என்கிறார். இங்கு நர: என்பதற்கு தன்னை அறிந்தவன் என்றர்த்தம் சொல்லமுடியுமா—எப்படி, இங்கு நர: என்பதற்கு உலகத்தில் உள்ள மனுஷ்யனைப்போல் மனுஷ்யன் என்றே அர்த்தமல்லவா இங்கு நர: என்பதற்கு தெரியும் என்றால் பலச்ருதியில் படந் ராமாயணம் நர: | எந்த நரன் ராமாயணத்தைபடிக்கிறானோ அவன் ஸர்வ பாவத்தினின்றும் பரிமுக்தனாக மடைகிறான் என்று இருக்க இந்த நர: என்பதற்கு தன்னை தெரிந்தவன் என்றர்த்தமில்லையா? நால்வருக்கும் தெரியாதென்றே கவி சொல்வதால் நர: என்பதால் தெரிந்தவன் என்ற சொல்ல இடம் இல்லை. இந்த கிரந்தத்தை லேகயந்தி நரா: தேஷாம்வாஸஸ் த்ரிவிஷ்டபே | என்று இந்த கிரந்தத்தை எழுதுகிற நரர்கள் ஸ்வர்க்கத்தில் வஸிக்கிறார்கள் என்று இருக்க

இந்த நராஃ என்றால் என்ன அர்த்தம். ஆதலால் ராமனை வால்மீகி அவர் துக்கப்படும்போது மனுஷ்யனாதலால் புலம்புகிறார் என்றும் குறிப்பிடுகிறார். ஸீதையும் பிரலாபிக்கிறார் என்கிறார். எங்கும் மனுஷ்யத் தன்மையையே நிரூபிக்கிறார். தெரியுமென்றால் பல தர்ம ஸங்கடங்கள் வருகிறதென்றே கவியானவர் தெரியாதென்கிறார். அவரும் (ராமரும்) தெரியாமல் இருந்தாலும் அவர் அபிப்ராயத்திற்கு விரோதம் வேண்டாம் என்றும் காலபுருஷனும் ரிஷிவேஷத்துடன் வந்தான் என்று கவி காட்டி ராமனும் தனக்குத் தன்னைத் தெரியாமல் இருந்தால் நடந்தபடி கிரந்தம் செய்யும் என்று பிர்ம்மா சொன்னதால் அதன்படி ராமனுக்கு தன்னைத் தெரியாமல் இருக்கும்போது நான் எப்படி சொல்வது என்று தெரியாமல் இருந்தார் என்றும் ஸ்தாபிப்பதால் தெரியவில்லை என்றே ஸ்தாபனம். இதனால் முதலாவது பூர்வபக்ஷம்.

தவிற லவணாஸுரனை வதிக்கவேண்டும் என்று யமுனாதீரவாஸிகளான ரிஷிகள் ராமனிடம் வந்து பிரார்த்தித்தபோது ராமா, அவனிடத்தில் ஒரு சூலம் இருக்கிறது அது தேவதைகளைக் கொல்லாது பிராம்மணர்களைக் கொல்லாது மற்ற யாவரையும் அது கொன்றுவிடும். ஆதலால அவனை ஜாக்கிறதையாகக் கொல்லவேண்டும் என்று தெரிவிக்க ராகவன் சத்ருக்னனுக்கு அந்த லவணாஸுர பட்டணத்தை பட்டாபிஷேகம் செய்துவிட்டு சத்ருக்னனுக்கு நாராயணாஸ்திரத்தையும் லவண வதத்திற்காக கொடுத்துவிட்டு சத்ருக்னா, அந்த லவணாஸுரனிடம் இருக்கும் சூலம் தேவதைகளைக் கொல்லாது பிராம்மணர்களைக் கொல்லாது நாம் மனுஷ்யர்களாதலால் நம்மை அது கொன்றுவிடும் ஆதலால் அந்தசூலம் இலலாதபோது நீ அவனைக்கொன்றுவிடு என்று அஸ்திரம் கொடுத்து அனுப்புகிறார் என்று இருக்கிறது. இதைக் கவனிக்க இவர் தன்னை விஷ்ணுவென்றறிந்து இருந்து தம்பிகளையும் இவர் அறிந்து இருந்தால் தம்பிகளும் தங்களை அறிந்து இருந்தால், இவர் எப்பொழுது விஷ்ணுவோ, அப்பொழுது தேவதையல்லவோ? அப்பொழுது சூலம் எப்படிக் கொல்லும்? அப்படியிருக்க சூலம் இல்லாதபோது கொல்லு

மென்று அவனிடம் சொல்லுவானேன்? தன்னைத் தெரியாத்தி னாலேயும் மனுஷ்யனாயிருப்பதினாலேயும் தம்பிகளையும் தனக்கு தெரியாமல் இருப்பதினாலேயும் தம்பிகளும் தங்களுக்குத் தங்களை தெரியாமல் இருப்பதினாலேயும் சுகதுக்கங்களை அனுப விக்கிறார்கள் என்று வால்மீகி வர்ணிக்கிறார். இல்லாவிட்டால் எல்லாம் வேஷம் ஆகும். வால்மீகி நடிக்கிறார்கள் என்று வர் ணிக்காமல் அனுபவிக்கிறார்கள் என்று வர்ணிப்பதினாலேயும் தெரியாது யாருக்கும் என்பது ஸ்பஷ்டம். அதனாலேயே சூலம் இல்லாமல் இருக்கும்போது கொன்றுவிடமுடியும் என்ற ஸ்திரத்தாலும், விபரீத காலத்தினாலேயே அவனுக்கு சூலம் கொண்டு வரத்தோன்றவில்லை என்று வால்மீகி வர்ணித்த தாலும் அவனுக்கு அழிகிற காலம் வந்துவிட்டதாலும், அப்படி வந்தாலும் சத்ருக்னன் தவிர மற்றவரால் கொல்ல முடியாதவ னாதலாலும் லவணாஸுரன் அதர்மிஷ்டனாதலால் அடிபட்டவன் என்ற தீர்மானத்தாலும், அதற்காகவே ராகவனும் நாராயணா ஸ்திரத்தை கொடுத்தனுப்பியதாலும் சத்ருக்னன் கொன்றுவிடு வான் என்ற ஸ்திரமாதலாலும் லவணன் உயிரோடு இருக்கும் போது வட மதுரையை சத்ருக்னனுக்குப் பட்டாபிஷேகம் செய்ததாலும் தான் ராவணனை அழிப்பதாய் பிரதிக்ஞை செய்து இருப்பதாலும் எப்படிப்பட்ட வரப்பிரஸாதத்துடன் இருந்தா லும் அவன் அதர்மிஷ்டன் ஆதலால் கொன்றுவிடமுடியும் என்ற ஸித்தாந்ததாலும் விபீஷணனுக்கு லங்கா ராஜ்யத்தை ராவணன் உயிருடனிருக்கும்போது லக்ஷ்மணனால் பட்டாபிஷே கத்தை செய்வித்தாரே தவிர தன்னை பரமாத்மா என்று எண் ணிக்கொண்டு செய்ததாய் கவி சொல்லாததால் ராகவாதிகளுக்கு தங்களுக்கு தங்களைத் தெரியாது என்ற ஸித்தாந்தம். இதனால் பதினாலாவதும் பூர்வபக்ஷமாய்விட்டது. இப்படி வால்மீகி ராமனைத் தனக்கு தெரியாது என்று ஸ்தாபிக்கிறார். இனி மூன் ச்லோகங்கள் பூர்வபக்ஷமாகும் அழகை கவனிப்போம்:—முதலா வது, பரசுராமன் ராமனை ஸ்துதித்தால் ராமனுக்கு தெரியும் என்று சொல்வது பொருத்தமல்ல என்று ஏற்கனவே பூர்வபக்ஷ மாகிவிட்டதால் இங்கு சொல்லவில்லை.

ராகவன் அகல்யாதேவி சாபவிமோசனம் அடைந்ததால் தன்னை பரமாத்மா விஷ்ணு என்றறிந்தார் என்று சொல்ல இடமில்லை. ஏனெனில் தான் தர்மத்தில் இருப்பதால் இது விசித்ரம் அல்ல. உத்தமர்கள் தங்கள் தங்கள் தர்மத்தில் இருந்தால் யாரும் யாருக்கும் எந்த பதவியும் கொடுக்க முடியும் என்றும் சாபத்தையும் விமோசனம் செய்ய முடியும் என்றும் உதாரணமாய் ஆகாசத்தில் பகிரதனால் கொண்டுவரப்பட்ட கங்கையானது செல்லும்போது சாபமடைந்திருந்த ஸகலரையும் சாபத்தை போக்கி உத்தம லோகத்தை கொடுத்துக் கொண்டு செல்லுகிறது என்று சொல்லியிருப்பதாலும் சுவேத மஹாராஜன் தன் பிரேதத்தையே தான் சாப்பிட்டுக்கொண்டு இருந்தவன் அகஸ்தியரை தரிசித்து அவருடைய கிருபையால் சாபவிமோசனமாகி உத்தமமான ரூபத்தை அடைந்து உம்மால் எனக்கு சாபவிமோசனம் என்று சொலலி ஸ்வர்க்கம் சென்றான் என்று இருப்பதாலும் இதனால் அவரும் தன்னை பரமாத்மாவாக எண்ணவில்லை இந்த ராமனே விராதனைக் கொன்றபோது அந்த விராதன் தேவதா ரூபத்தை அடைந்து ராமனைப் பார்த்து, எப்பொழுது ராமன் உன்னைக் கொல்லுவரோ அப்பொழுது உனக்கு ஸ்வரூபம் வரட்டும் என்று சொல்லியிருந்ததால உம்மால் எனக்கு சாபவிமோசனமாகிவிட்டது என்றபோதும் ராமன் தன்னை பரமாத்மா என்று எண்ணிக்கொள்ளாமல் ஒவ்வொருவருக்கு ஒவ்வொருவரால் சாபவிமோசனமாதலால் அதனால் அவரவரும் தங்களை பரமாத்மா என்று எண்ணமுடியுமா—அதனால் அவர்கள் உத்தம புருஷர்கள் என்ற மட்டில்தான் ஸ்திரமாதலால் அகல்யை உத்தம ரூபத்தை அடைந்ததால் தன்னை விஷ்ணு என்று அறிந்து இருக்கிறார் என்று சொல்ல இடம் இல்லை. தவிற கபந்தவதமானதும் அவனும் உம்மால் எனக்கு சாபவிமோசனம் என்றதால் அதையும் ஸகஜமாய் எண்ணுவதால் இவர் தன்னை பரமாத்மா விஷ்ணு என்று எண்ணவே இல்லை என்பது ஸ்திரம். இதனால் இரண்டாவது பூர்வபக்ஷம்.

ராகவன் கைகயீயைப் பார்த்து நான் பணத்தாசை பிடித்தவனல்லன் லோகத்தில் வஸிப்பதற்கும் இச்சையுள்ளவனல்லன்

நீர் என்னை ரிஷிகளுக்குத் துல்யனாயும் தர்மத்தை பிரதானமாக உடையவனாயும் தெரிந்துகொள்ளும் என்றதால ராமனுக்கு தன்னை விஷ்ணுவென்று தெரியும் என்பது எப்படி பொருந்தும். ராமன் சொல்லும் இடத்தை கவனித்தால இந்த கைகயீதேவி யானவள் ராகவனைப பார்த்து நீ எது வரையில் வனம்போக இல்லையோ அயோத்யாகாண்டம் 19-ம் ஸர்க்கம் 16-ம் ச்லோகம் யாவத்த்வம் ந வநம் யாத: புராதஸ்மாதபித்வர: | பிதா தாவந்ந தே ராம ஸ்நாஸ்யதே போக்ஷ்யதேபி வா || என்று அது வரையில உன் பிதா எழுந்திருக்கமாட்டார் சாப்பிடமாட்டார், ஸ்நானம் செய்யமாட்டார் என்று கைகயீ சொன்னதும் ராஜாவானவர் அடுத்த ச்லோகத்தில் திக்கஷ்டமிதி நிச்வஸ்ய ராஜா சோகபரிப்லுத: | மூர்ச்சிதோ ந்யபதத் தஸ்மிந் பர்யங்கே ஹேமபூஷிதே என்று அவளை திரஸ்கரித்து கஷ்டம் என்று பெருமூச்சு விட்டுக்கொண்டு ஆஸனத்தில் மூர்ச்சையாகிவிட்டதை ராகவன் கண்டு அப்பாவை உபசரித்துவிட்டு அவளுடைய கடுமையான வார்த்தையால் அப்பொழுதே வனம் செல்லுபவராய் பூஜிக்கத்தகாத அவளைப் பார்த்து நான் பணத்தாசை பிடித்தவனலலன், என்று குறிப்பிட்டார். இவள் பிதாவை படுத்தின பாட்டைக் கண்டு பிதா பட்ட கஷ்டத்தையும் கண்டு ஸர்வத்திலும வெறுப் புற்றவராய் இவள் இந்த ராஜ்யத்திற்காக, இந்த ஸம்பத்துக்காகத் தானே இந்த பாடுபடுகிறாள். இவள் பணத்தாசை பிடித்தவள் என்று இவருக்கும் தெரியுமானபடியினால் முதலிலேயே தனக்கு, ராமனுக்கு சொல்லிரண்டில்லை என்று சொல்லியிருந்தும் இவள் கேட்டிருந்தும் மறுபடி பிதாவை தவிக்கும்படி செய்ததால்தான் இதை, அதாவது தான் ஆஸ்தை உடையவரல்ல என்று வெளிப் படுத்தினாரே தவிர வேறல்ல இதில் எனக்கு ஆஸ்தையுமில்லை. இந்த லோகத்தில் எனக்கு இருக்க இஷ்டமும் இல்லை. காட்டில் ஸர்வத்தையும் விட்ட ரிஷிகள் எப்படியிருப்பார்களோ அப்படி எண்ணும், எனக்கு தர்மம் பிரதானம் என்றும் என் சொல்லுக்கு இரண்டிலலை என்றதை ஸ்தாபிக்கவும் அப்பா வார்த்தைப்படி காட்டுக்கே போவேன் என்றதால் இப்படி ஸர்வத்தையும் வெ

றுத்துப் பேசப்பட்ட இந்த வார்த்தையால் தன்னைத்தெரியும் என்று சொல்ல இடம் இல்லையாதலால் மூன்ருவதும் பூர்வ பக்ஷம்.

ராகவன் பரதனை நீ என்னைத்தொடு ஆசமனம் செய் என்ற தால் தன்னை அறிந்து கொண்டார் என்பதில்லை ஏனெனில் பரதன் அதர்மத்தைச செய்துவிட்டதால் யார் நிமித்தமாய் அதர்மம் செய்யப்பட்டதோ அவர்களைத்தொட்டு நமஸ்கரித்தால் அந்த அல்பமான அதர்மமானது விமோசனமாகும் என்று ராமன் தன் தம்பி பரதன் மஹா தர்மிஷ்டனுதலால் தன்னிடத் தில் இருக்கும் பக்தியால் தன்னை அழைத்துப்போவதற்காக அதர் மத்தில பிரவர்த்திக்க ஆரம்பித்துவிட்டதால் அது கூடாது இது நமக்கு தகுந்தது அல்ல என்று சொல்லி அந்த அதர்மத்தில் இருந்து உடனே அவனுக்குப் பரிஹாரம் செய்யவேண்டும் என்று அவனை எழுந்திரு என்று சொல்லி தான் தர்மத்தை அனுஷ்டிப் பதால்தான் அதர்மத்தையே செய்வதில்லையாதலால் அவன் தன் நிமித்ததில் அதர்மம் செய்ய ஆரம்பித்ததால தனனைத் தொட் டால் அந்த அதர்மம் போகும் தொடு என்ருரே தவிற தன்னை அறிந்துகொண்டே சொல்லவிலலை என்பது ஸ்பஷ்டமாதலால் நாலாவதும் பூர்வபக்ஷம். ஸீதையை ராவணன் கொண்டுபோன தும் ராமன் அதிகோபத்தை வரவழைத்துககொண்டு ஸீதையை எடுத்தவன் எவனுயிருந்தாலும் கொண்டுவந்து விட்டாலாகிவிட் டது இல்லாவிட்டால ஸர்வலோகத்தையும் அழிப்பேன் என்று ராமன் கர்ஜஜிக்க அப்பொழுது ஸகலரும் பயப்பட்டார்களே இதனுலும் ராமன தனனை அறிந்து சொன்ஞர் என்பதற்கு இடமிலலை ஏனென்ருல் கொண்டுவந்துவிடாவிட்டால் ஸர்வலோ கத்தையும் அழிப்பேன் என்ருரே இவருக்குத்தான் சொல் இரண் டில்லையே அப்படியிருக்க ஸீதையை யாருமே கொண்டுவந்து கொடுக்கவில்லையே பிறகாவது ஸாவலோகத்தை அழித்தாரா இல்லையே ஏன்? இங்குஎன்ன வால்மீகி வர்ணிக்கிருஎனில், இவர் பத்னியைப் பிரிந்த வியோகம் பொருககமுடியாமல, ஆச்ரம ஸமீ பத்தில ராக்ஷஸன் அடியும் கண்டுவிட்டதால் எவனே எடுத்தா னல்லவா என்று தேவியைப் பிரிந்த வியோகத்தால் வரவழைத்

துக்கொண்ட கோபத்தால் விஜவஞ்சலெஂதநம் என்று புலம பினார் என்றார். அதனால் கோபத்தால் சொன்ன வார்த்தைக்கு மதிப்பில்லை என்று ஸ்தாபித்ததாலும் தவிரவும் வால்மீகி ஏற் கனவே இவர் அஸ்திரம் தொடர்ந்ததால் காகாஸுரன் மூன்று லோகத்திலும ஓடி ரக்ஷிக்கிறவர்கள் இல்லாமல் இவரிடமே திரும்பிவந்ததையும் அறிந்து இருப்பவர் ஆதலால் ராமன் தன் னிடம் உள்ள பௌருஷத்தையே சொன்னாரே தவிற வேறு இல்லை என்பதாலும் விச்வாமித்ரர் பலாதிபலா மந்திரத்தை உப தேசித்துவிட்டு மூன்று லோகத்திலும் உனக்குமேல் பலசாலி கிடையாது என்றும் பாலகாண்டம் 22-ம் ஸர்க்கம் 14-ம் ச்லோகம் த்ரிஷுலோகேஷு வை ராம நபவேத்ஸத்ருஶஸ்தவ। நபாஹுவீர்யே ப்ருதிவ்யாம் அஸ்தி கஶ்சந। என்று மூன்று லோகத் திலும் உனக்குமேல் யாருமே கிடையாது, பூலோகத்தில் கை பலத்தில் யாருமே கிடையாது என்று அனுக்ரஹம் செய்து இருப்பதாலும் இதை வால்மீகி அறிந்து இருப்பதாலும் அதையே ராமன் சொன்னதாலும் பௌருஷமுள்ளவன் பௌரு ஷத்தைச் சொன்னது விசித்திரமல்ல ஆகலாலும் இப்பொழுது சொன்ன பிரகரணம் பத்னியை பிரிந்த வியோகத்தால் உண் டான கோபததால சொன்னதால கவி இது அங்கீகரிக்க தகுந்த தல்ல என்றதால், இதனால் ஐந்தாவதும் பூர்வபக்ஷம்.

ராகவன் ஸீதை காணாமல்போனதும் வியோகம் பொறுக் காமல் பலவிதமாய் கதறிவிட்டு லக்ஷ்மணனைப் பார்த்து ஸீதை காணாமல்போய்விட்டதால் ராமன் பிராணனை விட்டுவிட்டான் என்று அம்மா கௌஸல்யையிடம் போய்சொல்லிவிடு என்றும் சொல்லி பலவிதமாய் ராமன் கதறினதைக் கண்டு லக்ஷ்மணன் ஸமாதானம் செய்கிறார். அதில் உமக்கு ஞானத்தை உண்டு பண்ணிவிடுகிறேன் என்றால் ராமனுக்கு ஞானோபதேசம் செய் கிறாரா- இவருக்கு இவரை தனக்கு விஷ்ணு பாகம் என்று தெரியாதபோது ராமருக்கு அவர் விஷ்ணு என்று எப்படிச் சொல்லமுடியும்? தன்னைத் தனக்குத் தெரிந்த பிறகல்லவா மற்ற வரைச் சொல்லமுடியும், லக்ஷ்மணருக்கு எப்படி ராமனை நீ விஷ்ணு என்று தெரிந்துகொள் என்று சொல்லமுடியும். விஷ்ணு

பலத்தின் பாதி பாகத்தில் அவதரித்து இருக்கும் ராகவனுக்கே தன்னைத் தெரியாதபோது விஷ்ணு பலம கால பாகத்தில பிறந்த லக்ஷ்மணனுக்கு எங்கிருந்து தெரியப்போகிறது. அப்படியிருக்க இவா அவருக்கு விஷ்ணு என்று தெரிந்து கொள்ளும் என்ற ஞானத்தைப் புகட்டினார் என்றால் எப்படிப் பொருந்தும். தவிர ஓர விஷயம். வீரனை லக்ஷ்மணன் ராமராவண முதலநாள் யுத்தத்தில வீரனை ராவணனை எதிர்த்துவிட அபபொழுது ராவணன கோபித்து ஓர் உக்ரமான பிர்மம சக்தியை லக்ஷ்மணன பேரில பிரயோகித்துவிட அது லக்ஷ்மணனை அடித்துத் தள்ளிவிட உடனே ராவணன் இந்த லக்ஷ்மணனைக் கொண்டு போய்விட்டால் ராமனுக்கு பிராணன் போய்விடும என்று அதற்காக வில முதலியவற்றை ரதத்தில வைததுவிட்டு அடிபட்டுக் கிடக்கும லக்ஷ்மணன ஸமீபம் வந்தான. அபபொழுது லக்ஷ்மணனை அசைக்க ஆரமபித்தான். இபபடி இவன் அசைப்பதற்கு கிட்டே வந்தபோது லக்ஷ்மணன் பிரக்ஞை இல்லாமல இருக்கிறார். ராவணன் தூக்கவந்து இருக்கிறான் என்பது அவருக்குத் தெரியாது. இப்படி இருக்கும் நிலையில் அநத லக்ஷ்மணன் யுத்தகாண்டம 59-ம் ஸர்க்கம 113-ம் சலோகத்தில பாஹு(ப்)யாம் ஸாம்பரிக்ருஹ்ய ஸமர்த்தோ நாபி ரக்ஷஸ: । விஷ்ணோர் பாகம் அமீமாம்ஸ்யம் ஆத்மாநம் ப்ரத்யநுஸ்மரன் । என்று பிர்மம சக்தியினால் லக்ஷ்மணன் மார்பில அடிக்கப்பட்டவராய்க்கொண்டு தனக்கு உள்ள விஷ்ணுவினுடைய சிந்திககமுடியாத பாகத்தை எண்ணினார். இதே சலோகம் மறுபடி 124-ம சலோகத்தில விஷ்ணோர் பாகம் அமீமாம்ஸ்யம் ஆத்மாநம் ப்ரத்யநுஸ்மரன் என்று விஷ்ணுவினுடைய சிநதிககமுடியாத பாகததை எண்ணினார் என்று இருக்கிறது. இபபொழுது லக்ஷமணனுக்குத் தெரிந்ததே எனில் இதிலும் தெரியவில்லை என்று ஸ்தாபனம். எப்படி எனில் அநத பிர்மம சக்தியால அடிபடுவதற்கு முந்தி லக்ஷ்மணனுககுத் தெரியவே தெரியாது. பிறகு தெரிந்ததால தான் சரீரம் அபார கனமுள்ளதாகி ராவணனால தூக்கமுடியாமல் போய்விட்டதாயும் பிறகு ஹநுமானுக்கு பரம பக்தியினாலும

ஸௌஹ்ருத பாவத்தாலும் இலேசானது. ராமரிடம் வந்தபிறகு மறுபடி அந்த தன்மையில் இருந்தது பிறகுதான அந்த சக்தி லக்ஷ்மணனை யானையைவிட்டு ராவணன் கைக்குத் திரும்பினது. பிறகு லக்ஷ்மணனை அந்த பிரம்ம சக்தியினால் விஷ்ணுபாகம் தனக்கு உண்டென்று ஸ்மரிக்கும்படி பண்ணப்பட்டவரான படியால் அந்த மாயையைவிட்டு போனதும் அந்தவிஷ்ணுபாகத்தை எண்ணிக்கொண்டு இருந்ததால் அந்த பிரம்ம சக்தியால் மார் பிளப்புண்டவர் அந்த ஸ்மரணையால காயம் இல்லாதவராயும். வேதனையில்லாதவராயுமாகி ஸௌஸ்தரானார். இப்படி ஸ்வஸ்த மான க்ஷணத்திலேயே அந்த விஷ்ணு பாகத்தை மறந்து விட்டார். இதற்கு பிறகு இவருக்கு ஸ்வர்க்கம்போகும் பரி யந்தம் தெரியவேயில்லை. ஆதலால்தான ராம ராவண கடைசி நாள் யுத்தத்தில் ராவணன் தனக்கு மாமனானமயனால் கொடுக்கப்பட்ட அந்த சக்தியை லக்ஷ்மணன் மேரில் போட அப்பொழுது லக்ஷ்மணன் அடிபட்டு கீழே விழுந்தார். அங்கு இவர் விஷ்ணு பாகத்தை ஸ்மரித்தான் லக்ஷ்மணன் என்று வால்மீகி சொல்லவில்லை. அங்கு காயம் மாறுவதற்கும் ஆறுவதற்கும் சஞ்சீவி பர்வதம் வந்து அதனால்தான் பிழைக்கவேண்டி வந்தது. அது பிரம்ம சக்தி இது மயசக்தி. இரண்டுக்கும் அடிக்கும் யோக்யதை உண்டு. பிரம்ம சக்தி லக்ஷ்மணன் விஷ்ணு பாகத்துடன பிறந்து இருப்பதால், எதிராளி உயிரை வாங்கக்கூடிய அந்த சக்தி, அவனை அறிந்து இருப்பதால் அவனைக் கொல்லாமல் அவருக்கு விஷ்ணு பாகம் உண்டு என்று காட்டிவிட்டு சென்றது. இப்படி அஸ்திர சஸ்திரங்கள் செய்யுமா எனில் ராவணன் நீலன் மேரில் அவனை வதத்திற்காக பிரயோகித்த அக்னியாஸ்திரமானது நீலனை அடித்ததே தவிர அவனை எரிக்கவில்லை. ஏனென்றால் அக்னிபுத்ரன் (அக்னிபுத்ரன் நீலன் என்று பாலகாண்டத்தில் வானரர்கள் உற்பத்திக் கட்டத்தில் இருக்கின்றது) ஆனதினால் எரிக்கப்படவில்லை என்று யுத்த காண்டம் 59-ம் ஸர்க்கத்தில குறிப்பிட்டதாலும் இந்த யோக்யதை அஸ்திர சஸ்திரங்களுக்கு உண்டு என்று இக்கிரந்தம். ஆனால் அஸ்திர சஸ்திரங்களுக்கு புத்தி கொடுக்கும் யோக்யதை

உண்டு என்று கிடையாது இக்கிரந்தப்படி யாருடையதற்கும் கிடையாதென்றே ஸித்தாந்தம். ஆதலால் மயசக்தி லக்ஷ்மணனை அடித்ததே தவிற அவருக்கு ஒரு விதத்தையும் ஞாபகப்படுத்த அதற்கு சக்தி கிடையாது. அது மாயாஸம்பந்தம். அதனால் தான் பிழைக்க ஸஞ்சீவியும் வேண்டியிருந்தது. மயகல்பிதமான சக்தியை ராமன் கண்டு அதன் தன்மையை கவனித்து அந்த சக்தியை சபித்தார். என் தம்பிக்கு மங்களம் உண்டாகட்டும் உன் எண்ணம் அதாவது என தம்பியை கொல்லவேண்டும் என்ற எண்ணம் ஒழியட்டும், உன் யத்னம் ஒழியட்டும் என்று சபித்ததால்தான அது லக்ஷ்மணன் உயிரை வாஙகிகொண்டு போகமுடியாமல் அப்படியே மாரை பிளந்துவிட்டு மார்போடு மார்பாக நின்றுவிட்டது. அதனால்தான் பிழைக்க ஸஞ்சீவியும் வேண்டியிருந்தது என்று வர்ணிக்கப்பட்டது. ஆதலால் பிர்ம்ம சக்தியால அடிபட்ட காலத்தில் லக்ஷ்மணன அந்த விஷ்ணு ஸ்மரணையினாலேயே சொஸ்தமானார் என்று ஸபஷ்டம் இந்த எண்ணம் அடிபடுவதற்கு முநதியிலலை. சொஸ்தமாகி எழுந்த பிறகும் இல்லை. புண்ய லோகம போகும் பரியந்தமும் இல்லை. ஆதலால் லெக்ஷ்மணனுக்கு தெரியும் என்று எப்படிச சொல்வது? (தவிற இந்த லக்ஷமணனுக்கு இந்த எண்ணம் ஏன் வந்து ஏன் போச்சு என்பதை கவனிககும்போது ராமனுக்கு அபர பிராணன் லக்ஷ்மணனனபடியால் ராவணன் லக்ஷ்மணனைக் கொண்டுபோய் விட்டால் ராமன் அவனைப பிரிந்ததால் பிராணனை விடுவன் என்றே கவி குறிப்பிட்டார். பிந்தி லக்ஷ்மணன் அடிபட்டபோது அவருக்கு இவர் கதறினார், தவிற புண்யலோகம செல்லும் கட்டத்தில் கால புருஷ நிமித்ததகில் லக்ஷ்மணனை ராமன் தியாகம் செய்துவிட்டதால் உடனே லக்ஷ்மணன் புண்யலோகம் அடைய லக்ஷ்மணனை பிரிந்ததும் நான் இனி இருக்கமாட்டேன் என்று ராகவன் உத்தரகாண்டம் 118-ம் ஸர்க்கத்தில் 3-ம் ச்லோகத்தில் அத்யைவாஹம் கமிஷ்யாமி லக்ஷ்மணேந கதாம் கதிம் ॥ என்று நான் இப்பொழுதே லக்ஷமணனால் அடையபபட்ட கதியை அடைகிறேன் என்று கிளம்பிவிட்டதால் ராமனுக்கு லக்ஷ்மண வியோகம் இல்லாமல் இருப்பதற்காகவே அந்த பிர்ம்மசக்தி

தர்மத்தில் இருந்தால் யாருக்கும் எதையும் கொடுக்கமுடியும் என்று இக்கிரந்தம்.) இக்கிரந்தத்தில தபஸால கொடுக்கலாம், ஸத்யத்தால கொடுககலாம் தர்மத்தால் எந்த லோகத்தையும் கொடுக்கலாம் என்கிறுர். ராகவன் கொடுத்ததுபோல் மற்றொருவர் கொடுக்கிறுர். அதை கவனிப்போம். தசரதன் வேட்டைக்குச் சென்றகாலத்தில் காட்டில இராத்திரிகாலம் ஸரயூநதியில வரும் மிருகஙகளை அடிக்கலாமென்று தங்கியிருக்க அப்பொழுது கேட்ட சப்தத்தால் யானை ஜலம் குடிப்பதாய் எண்ணி சப்தவேதியான பாணத்தைவிட்டபோது, அது தீர்த்தம் எடுத்துக்கொண்டு இருந்த ரிஷிகுமாரன மார்பில பாய்ந்துவிட அதனுல அவன் கதறிவிட தசரதன் தெரியாமல் அடித்ததாய்ச் சொல்ல அவன் இங்கு என் மாதா பிதாக்கள் இருக்கிறுர்கள் அவர்களிடம் இந்த தீாத்தத்தைக் கொடுத்து என் கதியைச் சொல்லும் என்று சொல்லி பிராணனை விடடுவிட தசரதனும் அவர்களிடத்தில் விஷயத்தைச் சொல்ல அப்பொழுது அவர்கள் அப்பிள்ளைக்கு கர்மாவைபபண்ணி அப்பிள்ளைக்குப் புண்யலோகத்தையும் கொடுத்தார்கள். அவர்கள் எந்த லோகத்தை கொடுத்தாகள் என்றுல் அயோதயா காண்டம் 64-ம் ஸர்க்கம் 41-ம் சலோகம் முதல் 45-ம் சலோகம்வரையில்

அபாபோஸி யதா புத்ர நிஹத: பாபகர்மணா । தேநஸத்யே
ந கச்சாஶு யே லோகா: ஶஸ்த்ரயோதிநாம் । யாந்தி ஶூரா கதிம்
யாம் ச ஸங்க்ராமேஷ்வநிவர்திந: । ஹதாஸ்த்வபிமுகா: புத்ர கதிம்
தாம் பரமாம் வ்ரஜ । யாம் கதிம் ஸகர: ஶைப்யோ திலீபோ ஜந
மேஜய: । நஹுஷோ துந்துமாரஶ்ச ப்ராப்தாஸ்தாம் கச்ச புத்ரக ।
யா கதி: ஸர்வஸாதூநாம் ஸ்வாத்யாயாத் தபஸஶ்ச யா । யா பூமித
ஸ்யாஹிதாக்நேரேகபத்நீவ்ரதஸ்ய ச । கோஸஹஸ்ரப்ரதாத்ரூ
ணாம் யா யா குருப்ருதாமபி । தேஹந்யாஸக்ருதாம் யா ச தாம்
கதிம் கச்ச புத்ரக । நஹி த்வஸ்மிந் குலே ஜாத: கச்சத்யகுஶ
லாம் கதிம் । என்று அந்த மாதா பிதாக்கள் அந்த பிள்ளையைப் பார்த்து நீ இந்த தசரதனுல் கொல்லப்பட்டபடியால் பால்யத்தில் அகாலத்தில் பிராணனை விட்டதால் நீ நரகத்தை அடையவேண்டாம் நாங்கள் உனக்கு ஸத்யத்தினுல் புண்ய

லோகம் கொடுக்கிறோம். மழை முதலிய சஸ்திராதிகளைக் கொண்டு யுத்தம் செய்து யுத்த காலத்தில அடிபட்ட வீரர் களுக்கு எந்த லோகமோ யுத்த காலத்தில் புறமுதுகு காட்டாதவர்களுக்கு எந்த லோகமோ, யுத்த களத்தில் எதிர் முகமாய் அடிபட்டவர்களுக்கு எந்த லோகமோ அந்த லோகத் தை நீ அடை. ஸகர சக்ரவர்த்தி எந்த லோகம் அடைந்தானோ சிபிசக்ரவர்த்தி எந்த லோகமடைந்தானோ திலீபசக்ரவர்த்தி எந்த லோகமடைந்தானோ ஜநமேஜயராஜா எந்த லோகமடைந்தா னோ (பாரத ஜநமேஜயன் அல்ல வேறு) நஹுஷ மஹாராஜன் (பாரத நஹுஷன் அல்ல வேறு) எந்த லோகம் அடைந்தானோ அந்த லோகத்தை நீ யடை. ஸர்வ ஸாதுக்களுக்கும் எந்த லோகமோ அத்யனத்தினால் எந்த லோகமோ, தபஸினால் எந்த லோகமோ, பூதானம் செய்தவனுக்கு எந்த லோகமோ, அக்னி ஹோத்ரம் செய்தவனுக்கு எந்த லோகமோ, ஏகபத்னி விரத முள்ளவனுக்கு எந்த லோகமோ, ஏராளமான கோதானம் செய் தவனுக்கு எந்த லோகமோ, குருவை ஸேவிக்கிறவர்களுக்கு எந்த லோகமோ, தேஹத்தில ஆஸ்தைவிட்டு விளங்கிவரும் யோகிகளுக்கு எந்த லோகமோ இந்த லோகங்களை நீ யடையக் கடவாய் என்றார்கள். உடனே அந்த முநிபுத்ரன் திவ்ய ரூபத் துடன் இந்திரனுடன் கூடினவனைக் கொண்டு ஸஹ-ஜனஸ்ராஹ ஹஸ் ஸ்வர்க்கத்தை அடைகிறவனைக்கொண்டு அந்த மாதா பிதாக்களை ஸமாதானம் செய்து உங்கள் கைங்கர்யத்தால் இந்த லோகம் அடைந்தேன் நீங்களும் என் இடத்தை அடையுங்கள் என்று சொல்லி ஸ்வர்க்கம் சென்றான். இவ்வளவினாலும் இவ் வளவு லோகமும் ஸ்வர்க்கம் என்றுதான் அர்த்தம். இதே லோகத்தைதான் ராமனும் ஜடாயுவுக்குக் கொடுத்திருக்கிறார். இவர்கள் இந்த பிள்ளைக்குக் கொடுத்ததைக் காட்டிலும் ராமன் ஜடாயுவுக்கு கொடுத்ததில் ஒரு விசேஷத்தையும் காணோமே. அப்படியிருக்க இந்த லோகங்களை கொடுப்பதற்காகவா ராமன் தன்னை விஷ்ணுவென்று எண்ணினார்? இது எவ்விதத்தில் பொருந்தும். ராமன் எப்படிக் கொடுத்தார் என்றால் வால்மீகி ராமனை ஸத்யஸந்தனாய் ஸ்தாபித்திருப்பதால் இக்கிரந்தத்திற்கும்

ஸத்ய கிரந்தம் என்றும் ராமனே ஸத்யமூர்த்தி என்றும் ராமன் இருந்த அயோத்திக்கும் ஸத்யம் என்று ஒரு பெயரென்றும் வால்மீகி குறிப்பிட்டிருப்பதாலும் நான் என் ஸத்யத்தைவிட மாட்டேன் என்றதாலும் ராவண வதம் ஆனதும் வால்மீகியும் ஸ_த-~மிஹ_தரிவ-ஃ ஷ்ரீரஃ வ_திஜ்ஞஃஷ்வ ஜ_நவௌஹாஷிவ்ரு_தாரணாராஜ ! என்று ராகவன் சத்ருவைக்கொன்று தன்னுடைய பிரதிக்ஞையை ஸ்தாபனம் செய்து ஸ்வஜனத்துடன் விளங்கினுர் என்றும் குறிப்பிட்டிருப்பதாலும் கவி அபிப்ராயத்தையும் தசரதர் ஸத்யத்தால் ராமன் ஸர்வ லோகத்தையும் ஜயித்து இருக்கிறுர் என்றதாலும் முக்ய பிரமாணம் கவி வாக்யமாதலா லும் ராமனே தன் வாக்கினுலும் ஸத்யத்தைக் காட்டிலும் மேல் பதமே கிடையாது என்றும் ஸ்தாபித்திருப்பதாலும் அதையே வால்மீகியும் அப்படியே குறிப்பிடுவதாலும் ராமன் ஸத்யத்தா லேயே ஜடாயுக்கு புண்யலோகம் கொடுத்தாரென்று ஸ்தாபித்து இருப்பதால் தன்னைத் தெரிந்து கொடுத்தார், விஷ்ணுவென்று அறிந்துகொண்டு கொடுத்தாரென்பது எப்படி பொருந்தும்? தவிற சுவராவதி-ஐநாம வைகுண்டமென்றும் வராது. தவிற வைகுண்டத்தை அடையுமென்று ஒரே வார்த்தையாய் சொல லுவதைவிட்டு யாகம் செய்தவாளுக்கு எந்த லோகமோ என்று தனித்தனியாய் குறிப்பிட்டு பிறகு வைகுண்டம் என்றுல் இத் தனை லோகமும் வைகுண்டம்தானு எப்படி முன் சொன்னவர் களுக்கெல்லாம் எந்த லோகமோ என்று சொல்லி சுவராவதி-ஐ நாம என்றுல் வைகுண்டம் திரும்பிவராத லோகம் வைகுண்டம் என்பது எப்படி பொருந்தும்? (ஒவ்வொன்று ஒவவொரு மத க்ரந்தமாதலால் அதைபபற்றி விசாரணையில்லை. இது இக்கவி யின் அபிப்பிராயம் அல்ல என்றமட்டும் பிரமாணம்) இக்கிரந்த ரீதியாய் சுவராவதி-ஐநாம என்பதற்கு யுத்தத்தில புறமுதுகாட் டாதவர்கள் என்றே அர்த்தம். ராகவன் ஸத்யத்தாலேயே புண்யலோகத்தை அளித்தாரென்று கவி சொல்லிவிட்டதால் அந்த ரிஷியும் பிள்ளைக்கு ஸத்யத்தால் கொடுத்திருப்பதாலும் புண்யலோகம் அளிப்பதற்கு தன்னை எண்ணவேண்டாமென்று கவி ஹ்ருதயமாதலாலும் ஸத்யத்தாலும் விசுவாமித்ரர் போல,

தபஸாலும் தர்மத்தாலும் கொடுக்க முடியுமென்று ஸூசிக்கிறத மாதலால் ஏழாவது பூர்வபக்ஷம்.

இதுவும் ஸீதாவியோகம் பொறுக்கமாட்டாமல் துக்கப்படும் ராகவனை மேலும் ஸமாதானப்படுத்தும் வாக்யமே தவிர வேறில்லை. கவியும் இப்படி சோகத்தினால் சித்தம் இழந்திருக்கும் அவரை சோகத்தினின்றும் எழுப்புகிறார் என்றே குறிப்பிடுவதால் கவிஹ்ருதயம் ஆத்யந்தமே தெரியாதென்ற ஸித்தாந்தமாதலால் கவி, சித்தம் இழந்திருக்கும் அவருக்கு கவலையைத் தேற்றுகிறார் லக்ஷ்மணன் என்று குறிப்பிட்டதினாலேயே விஷ்ணு ஞாபகத்தை உண்டுபண்ணுகிறார் என்று சொல்லமுடியாது. இதன் பூர்வபக்ஷம் ஆறாவதை பூர்வபக்ஷம் செய்ததிலும் இருக்கிறது. முந்தியும் பூர்வபக்ஷம் செய்யப்பட்டு இருப்பதினால் எட்டாவது பூர்வபக்ஷம். தவிர தேவதைகள் ராமஸ்தவராஜ ஸ்தோத்ரத்தில் பிர்ம்மாவுடன் ஸ்தோத்ரம் செய்தார்கள். பிர்ம்மா அப்பொழுது ராகவனைப் பார்த்து யுத்தகாண்டம் 120 ஸர்க்கம் 7-ம் ஸ்லோகத்தில் கதம் தேவகணச்ரேஷ்டம் ஆத்மாநம் நாவபுத்யஸே। என்று நீர் தேவதைகளுக்குள் சிரேஷ்டன் என்று உம்மை ஏன் எண்ணவில்லை என்கிறார். இந்த வாக்யப்படி பிர்ம்மாவே இன்னும் தெரிந்துகொள்ளவில்லையென்றும் காட்டும்போது லக்ஷ்மணன் தெரிந்த அவருக்கு அவரை ஞாபகப்படுத்துகிறார் என்றால் எப்படிப் பொருந்தும். ஆதலால் இதனாலும் எட்டாவது பூர்வபக்ஷம். தவிர உத்தர காண்டத்தில் அகஸ்தியபகவான் ராகவனைப் பார்த்து 46-ம் ஸர்க்கம் 108-ம் ஸ்லோகத்தில் ஸ்ருஷ்டிஸ்த்வயா ஆத்மநா நாராயணோ ஹ்யஹம்। என்று நான் நாராயணன் என்று நீர் ஏன் இன்னமும் தெரிந்துகொள்ளவில்லை. மயங்கவேண்டாம். நீர் உம்மை நினைத்துக்கொள்ளும் என்று சொல்லுவதால் இது பரியந்தமும் இவருக்குத் தெரியவில்லை என்றாகும்போது லக்ஷ்மணன் அவருக்கு ஞாபகப்படுத்துகிறார் என்பது எப்படி? இதனாலும் எட்டாவது பூர்வபக்ஷம். மேலும் உத்தரகாண்டத்தில் ஸீதா பூப்ரவேசம் ஆனதும் ராமன் ஸீதையை அழைத்துக்கொண்டுபோன பூமிதேவியை அழித்துவிடுகிறேன் என்று கர்ஜிக்கும்போது பிர்ம்மா வந்துசேர்ந்து

110-ம் ஸர்க்கம 12-ம் சலோகத்தில் ஸ்மரஸ்வ வைஷ்ணவம் பாவம் ஸம்ஸ்ம்ருத்யாத்மனஸ் தத: । தவ பூர்வம் மஹாபாஹோ ஸர்வ லோக ஹிதம் ஸதா । ஜந்ம கர்ம ச ஸ்வயம் க்ருதம் ஸ்மரஸ்வ ஜந்ம வைஷ்ணவம் । என்று ஏ ராமா நீ இப்பொழுது உன்னுடைய பூர்வ பாவதலதை எண்ணிக்கொள் என்றார். முந்திய காரணத்தை, காரியத்தை எண்ணிக்கொள்ளென்றார். (இன்னது என்று வால்மீகி சொல்லவில்லை) இந்தவேளை தடுக்கமுடியாது. விபரீதமானது உனது வைஷ்ணவமான பூர்வ ஜனமாவை ஸ்மரித்துக் கொள் என்கிறார் இதுபரியநதமும் தெரியவிலலையென்பது ஸ்பஷ்டம். தெரிந்து இருந்தால பிர்ம்மா ஸ்மரித்துக்கொள் என்று சொல்ல வேண்டியதில்லை. இபபடியே பூமிதேவியும் நீர் இப்பொழுது கோபம் முதலியதை அடையாதேயும் நீர் பாக்கி கதையைக் கேளுமென்று அவரைக் குறிப்பிடுகிறாள். இதனாலும் இதுபரியந்தமும் அவரை அவர் தெரிந்துகொள்ளாமல இருப்பதாய், நிசசயமலலவா ? தெரியுமென்று சொன்னால் தெரிந்து இருக்கும்போது லெக்ஷமணர் தெரிந்து இருக்கும் அவருக்கு ஞாபகப்படுததினா வைஷணவதன்மையை என்பது பொருநதாதாதலால எட்டாவது பூாவபக்ஷம்.

நான் நினைப்பேனேயாகில பிசாசர்கள், தானவர்கள், யக்ஷர்கள், பூமியில் உள்ள ராக்ஷஸர்கள் ஸகலரையும் என் சுண்டு விரலால் அழிபபேன் எனறு சொன்னதால் தன்னை விஷ்ணுவாய் அறிந்து பேசுகிறாரென்பது பொருத்தமல்ல. ஏனெனில் இவர் இதுசொனனது விசித்ரம அலல ஸர்வ லோகத்திற்கும் நேரிடச்சென்று ஸர்வ தேவர்களையும் எதிர்த்து யுத்தத்தில் ஜயித்த மஹா வீரனை ராவணனும் ஸம்ஹாரைச்வரநவஸ்தோமாத: என்று ஸீதையிடம் குறிப்பிடுகிறான இது பௌருஷ லக்ஷணம். இது உண்மையே. இராவணன் சொன்னபடி கடைசிநாள் ராமராவண யுத்ததில ராகவனை கையில இருக்கும் வில்லை நழுவவிடும்படிசெய்து மாதலியையும் அடித்துக் குதிரைகளையும் நகரவொட்டாமல்செய்து ராமன் சரீரம் முழுமையும் சல்லடைக். கண்ணாகத்துளைத்து உக்ரமான 1000 பாணஙகளால் ராமனை வாய்விட்டலறுமபடி அடித்து ராமன கிட்டேவந்து ராமனைப்

பிடித்தான் ராவணன் என்று வர்ணிக்கிறார் வால்மீகி. அதாவது யுத்தகாண்டம் 103-ம் ஸர்க்கம் 24-ம் ச்லோகத்தில் ஸஹஸ்ரஶ: ஶராம்ஶ்ச கோராந் ஶஸ்த்ரவர்ஷிபி: । தஸ்ய ஶஸ்த்ரஸஹஸ்ராணி ஶரக்ஷேபகாரிணம் । என்றும் சொல்லி மேலும் அதே ஸர்க்கம் 27-ம் ச்லோகத்தில் ஶரஜாலம் தராதரஶ்ச ஸஸ்த்ரவர்ஷைஶ்ச ய: । வ்யதிதாவா நரேந்த்ராஸ்ய பஹவோ விவிதைர்ஷணா: । ஶரைஸ்த்ரு ஸம்வ்ருக்ஷாஸ்த்ரம் ராவணராக்ஷஸா । என்று இப்படி விளங்கும் ராவணன் பத்துதலை இருபது கரங்களுடன் கம்பீரமாய் மைநாக பர்வதம்போல் நின்றான். இப்படி நின்ற அந்த ராவணனால் (இவ்வளவுதானா உனது பராக்ரமம் என்று) அலக்ஷ்யம் செய்யப்பட்டவராய் யுத்தகளத்தில் ராவண பாணங்களை ஸஹிக்கமுடியாதவராக ஆனார் என்று வால்மீகி வர்ணிக்கிறார். இப்படி ராவண பௌருஷம் இருக்க அவன் ஏன் ராமன் என் சுண்டு விரலுக்கு காணமாட்டான் என்று சொல்லமாட்டான்? எப்படி ராவணன் தனக்கு உள்ள பௌருஷத்தைச் சொன்னானோ அப்படியே ராகவனுமதான் காகாஸுரனுடன் கூடச் சென்ற அஸ்திரம் மூன்று லோகத்திலும் ஸஞ்சரித்து வந்து இருக்க எவராலும் தடுக்கமுடியாத பௌருஷத்துடன் கூடியவராதலால் அவரும் தன்னிடம் உள்ள பௌருஷத்தையே வெளிப்படுத்தினவராதலால் தன்னையறிந்துகொண்டு சொன்னார் என்பது ஒரு விதத்திலும பொருந்தாது என்பது பிரத்யக்ஷமாவதாலும், ராமன் தூங்கும்போது இந்த விபீஷணன் கொன்றுவிட்டால் என்ன செய்வதென்று தன்னிடம் சுக்ரீவன் சொன்னதால் அவனுக்கு அந்த பயமே இல்லாதிருக்கும்பொருட்டு தனது பௌருஷத்தை ராமன் வெளிபடுத்தியதால் இதனாலும் தன்னை தெரிந்துகொண்டு சொன்னார் என்பது பொருத்தமில்லையாதலால் ஒன்பதாவது பூர்வபக்ஷம்.

ஸமுத்ரராஜன் வராததால் வில்லைக்கொண்டுவா இவனை இப்பொழுதே அழிக்கிறேன் என்று சொன்னதும் தன்னிடத்தில உள்ள பௌருஷ லக்ஷணமே. ராவணனைக்கண்டு ஸம்ரோத்ரா விநகம்வதை என்று ஸமுத்ரமும் அலை அடிப்பதில்லை என்று

இருக்கிறது. ராவணன் இருப்பிடத்தில் ஸூர்யன் அதிதாபத்துடன் விளங்கக்கூடாது பக்கத்தில காற்று பலமாய் அடிக்கக் கூடாது என்று ராவண பௌருஷத்தில், எல்லாம் இப்படி பயப் படுகிறபோது ஏன் ராமன ஸமுத்திரத்தை வற்றடிக்கிறேன் என்று சொலலக்கூடாது. பௌருஷம் ஸத்யமான பௌருஷமானுல் எதையும் செய்ய முடியும். ஆதலால் இது விசித்ரமில்லை. இதனுலும் ராமன் தன்னைத் தெரிந்துகொண்டு ஸமுத்ரத்தை வற்றடிக்கிறேன் எனறு சொன்னுர் என்ருல் பொருந்தவில்லையாதலால் பததாவது பூர்வபக்ஷம்.

மாயா ஸீதாவதத்தில ராமன் அதிதுக்கத்தால் பிரக்ஞை இழந்து துக்கிப்பதால் அவர் ஸமாதானத்திற்காக இது சொல்லப்பட்டதால ஞாபகபபடுத்தரார் என்பது பொருந்தாது. இது ஏற்கனவே எட்டாவதை பூர்வபக்ஷம் செய்ததிலும் ஆருவதை பூர்வபக்ஷம் செய்ததிலும் பூர்வபக்ஷம் செய்யப்பட்டு இருக்கிறது. ஆதலால இங்கு தனித்துச சொல்லவில்லை. இதனுல் பதினேராவதும் பூாவபக்ஷம்.

இந்த அஸ்திரம் எனக்குத் தெரியும் பரமசிவத்திற்கு தெரியும் என்ருல் தன்னைத் தனக்குத்தெரிந்து சொன்னுர் என்று சொல்லமுடியாது. ஏனென்ருல் இந்த அஸ்திரத்தை விசவாமித்ராிடத்தில் ராமன் கற்றுக்கொண்டிருக்கிருர். இந்த மூலபல ஸேனையானது அளவிடமுடியாத ஏராள ஸேனையானபடியால் அத்தனையும் ஸம்ஹரித்துவிட்டு ராகவன் வானராதிகள் ஸகலரையும் பார்த்து இந்த அஸ்திரம் எனக்குத் தெரியும் பரமசிவத்திற்கு தெரியும். எனககு உபதேசித்த குரு விச்வாமித்ரருக்குத் தெரியும் என்று குறிப்பிடவில்லை ஸர்வ ஸம்ஹாரம் செய்யும் மூர்த்தி பரமசிவனுன அவராதலால் அவரைச்சொல்லி தான் ஸகல மூலபலத்தையும் ஸம்ஹரித்ததால் தனக்கும தெரியும் என்று குறிப்பிட்டாரே தவிற வேறு அல்ல. விச்வாமித்ரர் பொறுமையை அவலம்பித்து தபஸ்வியாய் இருப்பதால் அவருக்கு தெரிந்து இருந்தாலும் அவர் ஒன்றும் செய்யபபோவதிலலையாதலால் அந்த அஸ்திரம் தனக்குத் தெரியும் பரமசிவத்திற்கு தெரியும் என்று குறிப்பிட்டதால் இதனுல் தன்னை

விஷ்ணு என்று எண்ணினரென்று கவி சொல்லாதபோது சொன்னார் என்பது பொருந்தாததால் இதுவும் பனிரெண்டாவதும பூர்வபக்ஷம். இதற்கு ஒரு உபமானம். ஹநுமான் தன் பிரபாவத்தைச் சொன்னபோது இந்த வேகம் எனக்கு உண்டு என் பிதாவுக்கு உண்டு என்றார் அதாவது [illegible] என்றார் இப்பொழுது இவருக்கு தன்னை யார் என்று தெரியும்? ஆதலால் இதுகள் பௌருஷ யாதார்த்தையாதலால் தன்னைத் தெரியவேண்டுமென்று கிடையாதாதலால் இதுவும் பனிரண்டாவதும் பூர்வபக்ஷம.

தேவர்கள் ஸகலருடன் பரமேச்வரருடன் பிர்மமா ராம ஸ்தவராஜ ஸ்தோத்திரத்தை ராமனை உத்தேசித்து செய்ய, ராகவன் தன்னைப் பார்த்து ஸ்தோத்திரம் செய்த பிர்மம தேவனைப் பார்த்து, நான் என்னை தசரதன் பிள்ளை மானுஷனாக எண்ணிக்கொண்டு இருக்கிறேன் உமக்கு தோன்றினது நான் யார நான் எங்கிருந்து எதற்காக வந்தவன் சொல்லும் என்றார். (உைநு) என்கிற பதத்திற்கு நினைக்கிறேன் என்று ஸங்கேதமான அர்த்தம், அர்த்தமல்ல. எங்கும இப்படித்தான் என்று நிச்சயார்த்தமே. இந்த பதம் எங்கு எத்தனை இடத்தில் வந்திருக்கிறது என்று ஆத்யந்தம் பார்த்தால இப்படியே நிச்சயார்த்தம் என்றே தெரியும்) என இப்படி கேட்டார் என்றும் பிர்ம்மா தேவர்களுடன் ராமனை விராட்ரூபியாய் வர்ணித்துப் பேசியதால் நீர் என்னை இப்படி சொல்லிப் பேசுகிறீரே. நான் என்னை தசரதன் பிள்ளையாகவே எண்ணிக்கொண்டு இருக்கிறேன் நீர் என்னை இப்படிச் சொன்னதால் என்னைப்பற்றி யார் என்று சொல்லும் என்றார். பிறகு ராமனை, பரப்பிர்ம்மம் என்று விராட்ரூபியாய் பிர்ம்மா ஸ்தோத்திரம் செய்தார் அப்பொழுதும் ராமன் பேசாமல் இருந்தாரே தவிர அங்கீகரிக்கவே இல்லை. தவிர இப்படி ஸ்தோத்திரம் செய்யும் தேவதைகள் அத்தனை பேர்களும் ராமனை கைகளைச்சேர்த்து நமஸ்கரித்துக்கொண்டு இருந்தார்கள் ராகவனும் அவர்களை கைகளைச்சேர்த்து நமஸ்கரித்துக்கொண்டு இருந்தார். இவருக்குத் தன்னை விஷ்ணுவென்று தெரியுமேயானால் இவர் அவர்களை யுத்தகாண்டம் 120-ம் ஸர்க்கம் 5-ம்

ச்லோகத்தில் ஸர்வே தேவா: ஸமஹேந்த்ரா: ஸராஜர்ஷிம் ராகவம் ஸ்துதம் । என்று நமஸ்கரித்துக் கொண்டு இருக்கிறார் என்று இருக்கிறதே. பிர்ம்மா தேவதைகளுடன் ஸ்தோத்திரம் செய்த போதே ராமன் அவருக்கு பதில் சொல்லுவதற்கு முந்தியே பிர்ம்மா கதம் தேவகணச்ரேஷ்டமாத்மானம் நாவபுத்த்யஸே । என்று நீர் ஏன் தெரிந்துகொள்ளவில்லை என்றார். இந்த பிர்ம்ம தேவ வாகயத்தாலும் தெரியவில்லையென்றும் தெரிகிறதே. இவருக்கு தன்னைத்தெரிந்தால இவா அவர்களை நமஸ்கரித்துக்கொண்டு இருப்பரா ? இதனாலும் ராகவனுக்கு தனனை தெரியவில்லை என்று ஸ்பஷ்டமாகிறதே. இபபொழுது இவருக்குத் தன்னைத் தெரிந்தால் ஸாமானயதேவதைகளை எல்லாம அஞ்சலிசெய்வரா? நிற்க, இவர் தன வாயினால சுக்ரீவனைப் பார்த்து கிஷ்கிந்தா காண்டததில 12-ம் ஸர்க்கம் 35-ம சலோகத்தில ஸஹம் ச லக்ஷ்மணஸ்சைவ ஸீதா சாபி வரானநா । த்வததீனா வயம் ஸர்வே வனேஸ்மின் சரணம் பவான் । என்று நான லக்ஷ்மணனுடனும் உன் ஆதீனமல்லவா ? நான் ஏற்கனவே உம்மைச் சரணாகதி செய்து இருக்கிறேனல்லவாயென்றார். இவர் தன்னை விஷ்ணுவென்று தெரிந்து இருந்தால இவனைப்பார்த்து உனனை சரணம் செய்து இருக்கிறேனென்று சொல்லுவரா ? தவிற ராகவன் சுக்ரீவனிடம் ஸ்நேகம் செய்துகொள்வதற்கு முந்தி ஹநுமானிடம் லக்ஷ்மணனைக்கொண்டு பேசினபோது தன் அபிப்ராயத்தை ஹநுமானுக்குச் சொலலச்சொல்ல அப்பொழுது லக்ஷ்மணன அவர் மனோபாவத்தை அறிந்து சொன்னது என்னவென்றால நான் என் அண்ணாவான ராமனுடன் இருவரும் இந்தவேளை சுக்ரீவனை சரணாகதி செய்கிறோம் எனறும் எவர் உத்தம தானாதிகளைச் செய்து உத்தம கீர்த்தியை அடைந்து இருக்கிறாரோ எவர் முந்தி லோகநாதனோ (முந்தி அப்பாவுடன் கூடஇருந்து லோகத்தைப் பரிபாலித்தவர்) அவர் இப்பொழுது வீரனான சுக்ரீவனை தனக்கு முக்ய நாதனாக (எஜமானாக) இச்சிக்கிறார். எவருடைய ஒரு பிதா ஸகலராலும் ஸேவிக்கப பட்டவரோ அப்படிப்பட்ட அவருடைய மூத்த பிள்ளையான இவர் இப்பொழுது சுக்ரீவனை நமஸ்கரிக்கிறார். ஸகல லோகத்

திற்கும் தர்மாத்மாவான இந்த ராமன் எல்லாராலும் ஸேவிக்கத் தகுந்தவர் ஏற்கனவே என்னுடைய சரணாகதி செய்யப்பட்டவர். எனக்கு குருவாயும் பிதாவாயும் ரகுவம்சத்தில் பிறந்தவருமான இவர் இப்பொழுது சுக்ரீவனை சரணாகதிசெய்கிறார் என்றும் எவருடைய ஒரு பிரஸாதத்தை ஸர்வலோகமும் எதிர்பார்க்கிறதோ அந்த ராமன் இந்தவேளை சுக்ரீவன் அநுக்ரஹத்தை எதிர்பார்க்கிறார் என்றும், எந்த தசரதரால் ஸர்வ ராஜாக்களும் கொண்டாடப்பட்டார்களோ அவருடைய மூத்த பிள்ளையான இந்த ராகவன் மூன்று லோகத்திலும் பிரஸித்தராயிருக்கிறவர் சுக்ரீவனை வானரேந்திரனை சரணாகதி செய்கிறார் என்றும் ராமன் பத்னியைப் பிரிந்த வியோகத்தால் சுக்ரீவனை சரணாகதி செய்கிறரென்று இப்படி இவர் செய்ததால் சுக்ரீவன் ராமனுக்கு அனுக்ரஹம் செய்ய அர்ஹனே எனில் அவன் ராமனுக்கு அனுக்ரஹம் செய்வதற்கு அர்ஹன் என்றார். இப்படி லக்ஷ்மணன் கண்ணீருடன் சொன்னானென்றார் கவி. இப்பொழுது இப்படி ராமன் தனது அபிப்ராயத்தைச் சொல்லியிருக்க இவருக்குத் தன்னைத் தெரியுமேயானால் இப்படி சொல்லைச் சொல்லுவரா? தவிர இவரும் தன் வாயினால் மழைக்காலம் கழிந்து சுக்ரீவன் வராதபோது லக்ஷ்மணனைப் பார்த்து லக்ஷ்மணா. சுக்ரீவனை ராஜன் எனக்கு கிருபை செய்யவில்லை பார்த்தயா? ஏனெனில் நான் நாதனில்லாமல் அவனையே நாதனாக அடைந்து விட்டேனென்றும் நான் ராஜ்யம் அபஹரிக்கப்பட்டு விட்டேனென்றும் என் பத்னியை ராவணன் கொண்டுபோய்விட்டானென்றும் நான் தீனனென்றும் எனக்கு வீடு வெகுதூரத்திலிருக்கிறதென்றும் நம்மை வந்து ராமன் சரணாகதி செய்துவிட்டானென்றும் ராமன், நாம் கொடுக்கிறபோதுதானே ஸீதையை அடையவேண்டுமென்று எண்ணிவிட்டான். பார்த்தயாயென்றார். இவருக்குத் தன்னை விஷ்ணுவென்று தெரிந்தால் இப்படி வாக்யங்களைச் சொல்லுவரா? ராமன் நான் ஸமுத்ர ராஜனை சரணாகதி செய்கிறேனென்கிறார். இவருக்குத் தன்னை விஷ்ணுவென்று தெரிந்தால் நான் ஸமுத்ரராஜனை சரணாகதி செய்கிறேனென்று சொல்லுவரா? இவருக்குத் தன்னை விஷ்ணுவென்று

தெரிந்தால தேவர்களிடமிருந்து எதற்காக வரங்களைப் பெற்றுக்கொள்ளவேண்டும்? ஸகலமும அப்பொழுது விருத்தமல்லவா? வால்மீகி ராமனை நடித்தாரெனறு சொல்லாததால் தெரியாதென்றே ஸ்பஷ்டம். தவிற அவருக்கு எப்பொழுது தெரியுமென்றால் பதினோராயிர வருஷம முடிந்து மறுநாள் காலையில் காலபுருஷன் வந்து நேற்றுடன் நீர் எவ்வளவுகாலம் பூமியிலிருக்கிறேனென்றீரோ அககாலம் முடிந்துவிட்டது. நீர் அதை நியமத்துடன் முடித்தீர் என்றான். நியமம் என்பதே, தெரியாமல் இருக்கிறதெனறே ஸ்தாபித்தான். இபபடி சொல்லிவிட்டு நீர் உம்மைத் தெரிந்துகொண்டு தேவலோகம் வரவேண்டும். பிரமமா சொல்லச்சொனனார் என்று சொலல அப்பொழுது தான் ராகவன் அந்த காலபுருஷனைப்பார்த்து உத்தர காண்டம் 115-ம் ஸர்க்கம் 35-ம் ச்லோகத்தில் த்ரயாணாமபிலோகாநாம் கார்யார்த்தம் மம ஸம்பவ: என்று மூனறு லோகத்தினுடைய கார்யத்திற்காகவா என்னுடைய பிறப்பு. தெரிந்துகொண்டேன் நீா போம் நான் வருகிறேனெனறார். இந்த இடத்தில்தான் ராகவனுக்குத் தெரியுமெனறு கவி குறிப்பிட்டதாலும் இககிரந்தத்தில கவி வாகயத்திற்குத்தான முதல கௌரவமாதலாலும் இதுபரியந்தம் தெரியாதெனறு குறிபபிட்டதாலும் ராகவனுக்கு தன்னைத் தெரியாதென்றே ஸிததாந்தமானதால் பதின்மூன்றுவதும் பூர்வபக்ஷம்.

பதினான்காவதும் ஏறகனவே பூாவபக்ஷம செய்யப்பட்டுவிட்டதால இங்கு திருப்பிச சொலலபபடவில்லை.

இக்கிரந்தரீதியில் வால்மீகி வாக்யமே முதல பிரமாணமாதலால் இவா அபிபராயம் ஆத்யந்தம் ராகவனுககு தன்னை விஷ்ணுவெனறு தெரியாதென்றே அபிப்ராயம். ஆனால அவர் நமக்கெல்லாம் பரமாத்மாவே. பரப் பிர்ம்மமே. அவருக்குத்தான் தன்னைத் தெரியாதென்று வால்மீகியின் அபிபராயம். ஆதலால் தெரியுமென்பது ஒருவிதத்திலும் அங்கீகரிககத தகுநததில்லை. எனறும் வால்மீகியின் ஸிததாந்தம.

---

## 43. மஹாதேவப்பிரஸாதம் என்றால் எது என்ற ஸித்தாந்தம்

யுத்தகாண்டம் 126-ம் ஸர்க்கம், 21-ம் ச்லோகம் அத்ர பூர்வம் மஹாதேவ: ப்ரஸாதமகரோத் ப்ரபு: | என்று ராமன் ஸீதையைப் பார்த்து இந்த இடத்தில் முன்னொருமுறை பிரபுவான மஹாதேவன் அனுக்ரஹத்தைச் செய்தார் என்றார். இதுதான் ச்லோகார்த்தம்.

உலகத்தில் இதற்கு என்ன சொல்லுகிறார்கள் என்றால்:— ராமன் ஸீதையைப் பார்த்து எப்பொழுது சொன்னது என்றால் லங்கையில் விமானத்தில் ஏறிக்கொண்டு புறப்பட்ட பிறகு விமானம் லங்கையை பிரதக்ஷிணமாக வருகிறது. அப்பொழுது ராகவன் ஸீதையை பார்த்து ஸீதே நான் இந்த இடத்தில் ராவணனைக் கொன்றேன் இங்கு கும்பகர்ணவதம் இங்கு பிரஹஸ்த வதம், இங்கு தூம்ராக்ஷவதம், இங்கு இந்திரஜித்துவதம், இங்கு விகடன வதம் என்று இப்படிச் சொல்லிக்கொண்டு வருபவர் கடைசியில் இங்கு ராவணனுக்காக மண்டோதரி துக்கப்பட்ட இடம் என்றார். பிறகு இந்த ஸேதுவை (அணையை)ப் பார். இது உன் நிமித்தம் நளனால் கட்டப்பட்டது. இதோ தெரிகிறது ஹநுமானுடைய சிரமபரிஹாரத்திற்கு வந்த மைநாக பர்வதம் இக்கரைமுதல் அக்கரை பரியந்தம் ஸேது கட்டியிருப்பதால் மறுபடி அதை வர்ணிக்கிறார். இந்த ஸேது புண்யமானது. இந்த தீர்த்தத்தைப்பார். இது ஸர்வபாபத்தை போக்கக்கூடியது என்று சொல்லிவிட்டு பிறகு இந்த இடத்தில் மஹாதேவன் அனுக்ரஹம் செய்தாரென்று சொல்லப்பட்டது. பிறகு அடுத்த வரியில் இந்த இடத்தில் ராக்ஷஸ ராஜனான விபீஷணன் வந்தான் என்று இருக்கிறது. இப்படியிருப்பதால் சிலர் ராகவன் விமானமானது ஸமுத்ரத்தை தாண்டி இக்கரைக்கு வந்து விட்டது, எப்படி என்றால் எப்பொழுது ஸமுத்ரத்தில் ஹநுமான் சிரமபரிஹாரத்திற்காக வந்த மலையைக் காட்டினாரோ அப்பொழுது அது பரியந்தம் விமானம் வந்துவிட்டது. அதற்கு பிறகு தீர்த்தத்தைப் பார் என்று சொல்லி பிறகு இந்த ஸேது பாபத்தை அழிக்கக்கூடியது என்றும் பிறகு மஹாதேவன் அனுக்ரஹம் என்று சொல்லப்பட்டதால் விமானம் அக்கரைக்கு வந்ததாகத்

தீர்மானம் செய்துகொண்டு என்ன அர்த்தம் செய்கிறார்கள் என்றால் ஏற்கனவே ராகவன ஸமுத்ரக்கரைக்கு ஸகல வானரர்களுடன் வந்தபோது ஸமுத்ரக்கரையில் மூன்று நாள் ஸமுத்ர ராஜனை உபாஸித்தாரே, அவன்வந்து ராகவனுக்கு ஸேது கட்டும் அனுகூலத்தைச் செய்துபோனதால் அத்ர பூர்வம் மஹாதேவ: ப்ரஸாதமகரோத் ப்ரபு: இந்த இடத்தில பிரபுவான மஹாதேவனை, அதாவது மஹஸ் என்றால் ஜலத்திற்கு பெயர் அதுகளுக்கு தேவன் ஆதலால் மஹாதேவன ஸமுத்ரராஜன் (வருணன் என்கிறார்கள் வருணன் வேறு ஸமுத்ரராஜன் வேறு என்பது ஸ்பஷ்டம்) எனக்கு அனுக்ரஹம் செய்தான் என்று ராகவன் சொன்னதாக சிலர் அபிப்ராயம்.

மற்றும் சிலர் ராமன் இந்த சலோகத்தை வரும்போது மைநாக மலையைத் தாண்டிவந்த பிறகே சொன்னதால் ராமன் இக்கரைக்கு வந்தபிறகுதான் சொன்னது என்ற தீர்மானத்துடன இந்த இடத்தில் பிரபுவான மஹாதேவன் அனுக்ரஹம் செய்தார் என்று சொன்னதால ஏற்கனவே ஸர்வ வானரர்களுடன் ராமன ஸமுத்ரகரைக்கு வந்தபோது ஸேதுகட்டின ஸமயம் அநத ஸேதுவுக்கு விகாதம் இல்லாதிருப்பதற்காக சிவலிங்க பிரதிஷ்டைசெய்து பூஜைசெய்தார். அப்பொழுது பரமேச்வரன் அவருக்கு அனுகரஹம் செய்தார். அதை ராமன் ஸீதைக்குச் சொன்னதாய் சிலர் அபிப்ராயம்.

மற்றும் சிலர் ராவணனை ராமன் கொன்றுவிட்டதால் அவனைக் கொனறதற்காக அவன பிராம்மணன் அதனால் அவனைக் கொனற பிர்ம்மஹத்தி பாபத்திற்காக, வரும்போது சிவலிங்க பிரதிஷ்டைசெய்து பூஜைசெயது அந்த பாபத்தைப் போக்கடித்துக்கொண்டதாக சிலர் அபிப்ராயம் (ஆனால் இந்த சலோகத்திற்கு இது ஆர்த்தமல்ல).

மற்றும் சிலர், ராமேச்வரத்தில அத்ர பூர்வம் என்ற ஒரு லிங்கத்திற்கு பெயர். மஹா தேவம் என்று ஒரு லிங்கம. இரண்டுக்கும மத்தியில் ராமநாதலிஙகம். அது ராமனுக்கு அனுக்ரஹம் செய்ததாக அபிப்ராயம.

வால்மீகி எதெதைப்படி நடந்ததோ அப்படி அப்படியே வர்ணிப்பதாலும் நடந்தபடி அவருக்குத் தெரிந்ததாலும் அப்படி அப்படியே வர்ணிப்பதாலும் அவர் சிவத்துவேஷம் அல்லது மதத்துவேஷம் இல்லாமல இருப்பதாலும் வரும்போது அல்லது லங்கைக்கு போகும்போதாவது சிவபூஜை செய்ததாக அவருக்குத் தென்படாததால அவர் வர்ணிக்கவில்லை. இவரே உத்தரகாண்டத்தில் ராமன் பரமசிவத்தை பூஜித்துவிட்டு பரமசிவ ஸம்பந்தமான அசுவமேத யாகத்தைச் செய்கிறார் என்று கவியே வர்ணிக்கிறார். ஆதலால தவேஷம் இல்லாதவர் என்று நன்றாய்த் தெரிகிறது. தவிர ராமன் விபீஷணனுக்கு கொடுத்த குலதெய்வத்தை ஸ்ரீரங்கத்தில வைத்ததாக அவருக்குத் தென்படாததால அவர் அதையும் ஸ்ரீரங்கத்தில் வைத்தான் என்று சொல்லாமல் லங்கைக்கே கொண்டுபோய்விட்டதாக ராமன் கொடுத்த தன்மையால காட்டுகிறார். தவிர வால்மீகி சொன்ன 24536 சுலோகங்களுக்குள் அவர் வாக்யத்தால் சிவன் பெரிது விஷ்ணு பெரிது என்று பேசாமல ஸமத்வ பக்ஷத்திலேயே போகிறார். தவிர ராமனை உபமானம் சொன்ன இடத்தில் எல்லாம் பரமசிவத்தைப் போல் இருந்தார், ருத்ரனைப்போல் இருந்தார், ருத்ரனது சரீரத்தையே அடைந்தார் என்று இப்படியே சொல்லியிருக்கிறார். ஆதலால் தவேஷ சித்தம் இக்கிரந்தத்தில கூடாது என்று பிரமாணம். (தவிர இக்கிரந்தம் ஆத்யந்தம் ராமன் ஸ்நானம்செய்தார், ஸந்தியாவந்தனம் செய்தார் என்று அடிக்கடி குறிப்பிட்டு இருக்கும் வால்மீகி பகவான் நெற்றியில புண்ட்ரம் இல்லாமல் கர்மா செய்வது பிரயோஜனமில்லையே. அப்படியிருக்க இந்த வால்மீகி ராமனை நாமம் போட்டுக்கொண்டு இருந்தார் அல்லது விபூதி பூசிக்கொண்டு இருந்தார் என்று ஏதாவது வர்ணித்தாரா? கவனிக்கலாம், ஒன்றையும சொல்லவில்லையே. அப்படியிருக்க நெற்றியில இல்லாமல் கர்மாக்களை செய்தாரா? என்றால் இருக்கலாம்; இருக்கவும் இருக்கலாம். இதில் எதுவென்றால கவி சொல்லாதபோது நாம் எப்படிச் சொல்வது. [illegible] என்றெல்லாம் அவருக்குத் தெரிந்து இருக்கும்போது இதுமட்டும் அவருக்குத் தெரியவில்லையா? அவர்

சொல்லாததால் நமக்கும் சொல்லத் தெரியாது. வால்மீகி ராகவனை ஸாக்ஷாத் பிர்ம்மமாய் எண்ணியிருப்பதால் அவரிடம் லயித்துப்போய் இருபபதால் ஒரே ஜயோதி ஸ்வரூபம் என்று அவர் ஈடுபட்டு த்வேஷம் இல்லாமல் இருப்பதால் அப்படி ராகவனிடம் ஈடுபட்டு இருந்தால்தான் இக்கிரந்தம் அறியமுடியும் அபபடி ஈடுபட்டு இருப்பதால்தான் ஒன்றும் சொல்லவில்லை. ஆதலால த்வேஷம இல்லாமல் கவனிக்கவேண்டும். இப்பொழுது விஷயத்தைக் கவனிப்போம்:—

முந்தி சிலர் அபிப்பிராயங்கள் ஸர்க்க-௨௰ என்ற ச்லோகத்திற்கு சொல்லப்பட்டதே அவ்வளவும் ஸமயத்திற்கு பொருத்தமான அாத்தங்களாய் இல்லாமல் இருப்பதால் முன் பின் ஆதாரத்தினுல இதன அர்த்தம் தெரிவதால் அதை வால்மீகி வெளிபபடுத்தும் விதத்தை கவனிப்போம்.

(இக்கிரந்தத்திலேயே பெரியோர்கள் சொன்னது ஸமயத்திற்கு பொருத்தமில்லாததாய் இருந்தால் இந்த காரணத்தினுல் பொருத்தம இலலை என்று காரணத்துடன் அதை தள்ளிவிட்டு பொருத்தமுள்ளதை சொல்லவேண்டும என்று ஹநுமான் யுத்த காண்டத்தில குறிபபிட்டிருபபதாலும் உத்தரகாண்டத்தில் ராகவன் சிறு குழந்தை சொன்னுலும் சுபத்தை, பெரியோர்கள் தங்கள் வழியில் பிசகி இருந்தால அதை தள்ளிவிட்டு அக்குழந்தையின் சுபமான வாாத்தையை கேட்கவேண்டும் என்று ராகவனும் சொல்லியிருப்பதாலும இந்த இரண்டையும் அனுஸரித்து கவி எப்படி இந்த சலோக அர்த்தத்தை சொல்லுகிருர் என்று கவனிப்போம்:—

ஸமுத்ர ராஜனுக்கு இந்த கிரந்தரீதியாய் மஹாதேவன் என்ற பெயர் கிடையாது. இக்கிரந்தத்தில் தேவேந்திரனுக்கும் விஷ்ணுவுக்கும் பரமசிவனுக்கும் தான் இந்த மஹாதேவன் என்ற பெயர் சொல்லபபட்டு இருக்கிறதே தவிர ஸமுத்ர ராஜனுக்கு சொலலபபடாததால இது பொருத்தம் அல்ல என்ற ஸித்தாந்தம். இதனுலும் முதலாவது பூர்வபக்ஷம். தவிறவும் இந்த பிரகாணம் ஸமுத்ரராஜனுக்கு அல்ல என்றும் ஸித்தாந்

தம். ஸமுத்ரராஜனுக்கு மஹாதேவன் என்ற பெயர் என்று சிலர் அபிப்பிராயம் சொல்லப்பட்டதே. அதாவது ராமன் ஸமுத்ரக் கரையில் மூன்று நாள் உபாஸித்ததால் அவரும் வந்து அனுகூலம் செய்ததால் மஹாதேவன் என்பது ஸமுத்ரராஜன், வருணன் என்பது பொருத்தமல்ல கவனிப்போம். ராமன் ஸமுத்ரராஜனை மூன்று நாள் உபாஸித்தும் வராததுபோது லக்ஷ்மணா, இப்பொழுது வில்லைக்கொண்டுவா இவனை யழித்துவிடுகிறேன் என்று சொல்லி பல பாணங்களால் ஸமுத்ரராஜனை அடித்தார். அவன் அப்பொழுதும் வராததுகண்டு இவனை இப்பொழுதே அழித்துவிடுகிறேன் என்று உத்தமமான அஸ்திரத்தை கையில் எடுக்க அப்பொழுது ஸமுத்ரராஜன் வந்து சேர்ந்து அஞ்சலிபந்தத்துடன் கங்கா ஸிந்து முதலான பத்னிகளுடன் வந்து ராகவனைப் பார்த்து ராமா நீ, கோபிக்கவேண்டாம் நான் யாதொருவிதமான கெட்ட எண்ணத்தாலும் நான் வராமல் இருக்கவில்லை அவரவர்கள் ஸ்வபாவம் அவரவர்களை விடாது. என்னைப்போல் மற்ற தேவர்களுக்கும் சில ஸ்வபாவங்கள் உண்டு. எனக்கு ஜடஸ்வபாவம் என்னை அடித்து எழுப்பினால்தான் தெரியும் அவரவர் ஸ்வபாவம் அவர்களை விடாது. ஆதலால் உம்மால் அடிபட்டு நான் வந்தேன் நான் ரொம்ப அகாதத்தில் இருப்பவன் (ஹநுமான் ஏற்கனவே ஸமுத்ரம் தாண்டும்போது அவருடைய கைவேகம் துடைவேகம் இதுகளால் உண்டான காற்று வேகத்தால் அடிப்பட்டுத்தான் ஸமுத்ரராஜன் தன்னிடம் இருக்கும் மைநாகத்தைப் பார்த்து ஹநுமானுக்கு உபகாரம் செய்யும்படி சொன்னதாக ஸுந்தரகாண்டத்தில் இருக்கிறது) ஆதலால் ஸ்வபாவம் ஜடம் என்பது ஸத்யமே. ஆதலால் ராமா, நீர் என்னையடிக்கக்கூடாது என்றும் சொல்லி உமக்கு ஸமுத்ரத்தைத் தானே தாண்டவேண்டும் இதோ பக்கத்தில் இருக்கிறானே இந்த நளன் என்பவன் ஜலத்தில் கல்லைப்போட்டால் மிதக்கும். ஆனால் போட்ட இடத்தில் இருக்காது அலையடித்துக்கொண்டு போய்விடும். ஆனால் மிதக்கும். ஆதலால் போட்ட இடத்திலேயே இருக்கும்படி நான் அதைத் தாங்குகிறேன் என்று சொன்னான். அப்பொழுது ராகவன் உன் நிமித்தத்தில் எடுத்த அஸ்திரத்

திற்கு என்ன லக்ஷ்யம் என்று கேட்க, வடக்கு ஸமுத்ரத்தில் உள்ள சில துஷ்டர்கள் என்னைப் பீடிக்கிறார்கள். அவர்களைக் கொன்றுவிடும் என்று தெரிவிக்க அவரும் துஷ்டர்கள் எப்பொழுதும் தண்டிக்கத் தகுந்தவர்கள் என்று அவர்களை தெண்டித்தார். இங்கு சிலர் ஸமுத்ரராஜன் தன்னை ராமன் உபாஸிப்பதால் அதுகூடாது என்று அதற்காக அடிப்பட்டுத்தான், தான் வர வேண்டும என்று வந்தான் என்கிறார்கள். தவிற தன்னை வடக்கு ஸமுத்ரக்கரையில் உள்ள துஷ்டர்கள் ரொம்ப பீடிப்பதால் அவர்களைக் கொன்று கொள்ளுவதற்காக ராமன் உபாஸித்தும் பேசாமல் இருந்தான். ராமன் கோபித்துவிட்டால் அஸ்திரத்திற்கு ஆகாரமாய் அவர்களைக் காட்டிவிடலாம் என்று அவன் அவர் கோபித்து விலலெடுக்கிற பரியந்தம் வராமல் இருந்தான் என்கிறார்கள்! இது சரியல்ல. ஏனெனில ஸமுத்ரராஜன் என் ஸ்வபாவம் ஜடம் அதனால்தான், நான் வரவில்லை என்ற ஸ்பஷ்டமாய் சொலலிவிட்டதால் அடிப்பட்டுத்தான் வரவேண்டும் என்றும் தன் சத்ருக்களை கொன்று கொள்ளுவதற்காக வராமல் இருந்தான் என்பதெல்லாம் கவி ஹ்ருதயத்திற்கு நேரிட விரோதமே கவி சொல்லாதது ஒரு நாளும் அங்கீகரிக்கத்தகுந்ததல்ல என்று ஸ்பஷ்டம். இப்படி ராகவனால் அடிப்பட்டவனான இந்த ஸமுத்ரராஜா ராமனுக்கு எனன அனுக்ரஹம் செய்யப் போகிறான். தவிற இன்னும் சற்று நாழிகை வராமல் இருந்து இருப்பானேயாகில் ராமன் அவனையழித்து இருபபான். இப்படிப் பட்டவன் இவருக்கு என்ன அனுக்ரஹத்தை செய்யப் போகிறான். தவிற இக்கிரந்தத்தை கவனித்தால் ஸமுத்ரராஜன் ராமனுக்கு ஒருவித அனுக்ரஹத்தையும் செய்யவில்லை. ஆனால் உபகாரம் மட்டில் செய்தான். நளனானவன் ஜலத்தில் கல்லைப் போட்டால் அது மிதக்கும். ஆனால் அலை அடித்துக்கொண்டு போய்விடும். அப்படி போகாமல நான் அதை யுத்தகாண்டம் 22-ம் ஸர்க்கம் 47-ம் ச்லோகம் தாரயிஷ்யாமி என்று நான் அதை தரிக்கிறேன என்றானே தவிற இவன் வேறு ஒன்றும் செய்யவில்லையே அப்படியிருக்க ஸமுத்ரராஜன் ராமனுக்கு அனுக்ரஹம் செய்தான் என்றால் இது என்னவிதத்தில் பொருந்

தும். தெரிசனம் கொடுத்தான் என்றால் அடிப்பட்டு தெரிசனம் கொடுத்த அழகு என்ன அழகோ, இவன் ராமனுக்கு என்ன அனுகரஹம் செய்வது? ஆகலால் இது பொருத்தமல்ல, தவிர ஸமுத்ரராஜன வருணனுமல்ல, ஸமுத்ரராஜனே வருணனுகில் ஸீதா கல்யாணமாகி வரும்போது பரசுராமனிடம வாங்கின வில்லுடன் ராமன் பிறகு வருணன் வந்து அந்த வில்லை வாங்கி இருக்க, (இங்கு வருணனை ராமன் கூப்பிட்டார் என்று இல்லை) அப்படிப்பட்டவன் இந்த வருணனே ஸமுத்ர ராஜனுகில் என் ஸ்வபாவம் ஜடம், என்னை அடித்து எழுப்பினல்தான் தெரியும் என்றவன், இப்பொழுது ராமனிடம் இருந்த வில்லை வாங்குவதற்கு யார் அடித்து எழுப்பி வந்தான் இல்லையே, மருதகுமாரை ராஜ யாகத்திற்கு அடிபட்டா வந்தான் இல்லையே, ஸ்வபாவப்படி ஸமுத்ரராஜனுக்கு வரமுடியாது. வருணன் அப்படி அல்ல என்றால் ஸ்பஷ்டம் ஆகலால் வருணனும் ஸமுத்ர ராஜனும் ஒருவர் அல்ல வெவ்வேறா என்றும் ஸ்பஷ்டம். தவிர ஹநுமானை பரதனிடம் அனுப்பும்போது கதை எல்லாம் சொல்லி கடைசியில் ஸமுத்ரராஜ தர்சனம் கொடுத்ததைச் சொல்லு என்று சொல்லி பிறகு எனக்கு இந்திரன் கொடுத்த வரதானத்தையும் பிரம்மா கொடுத்த வரதானத்தையும் வருணன் கொடுத்த வரதானத்தையும் நீ போய் இதுகள் ஸகலத்தையும் சொல்லு என்றார். இப்பொழுது வருணனும் ஸமுத்ரராஜனும் ஒருவராகில ஸமுத்ரராஜன் தர்சனம் கொடுத்ததைச் சொல்லு என்று சொல்லிவிட்டு மறுபடியும் வருணன் வரதானத்தையும் சொல்லு என்றபோது இருவரும் வெவ்வேறு என்று ஸ்பஷ்டமாவதால் முதலாவது பூர்வபக்ஷம்.

இருவரும் ஒருவர் அல்ல. வேறு ஒரு விஷயத்தாலும் தெரிகிறது அதாவது ஸம்க்ஷேபமான பால காண்ட முதல் ஸர்க்க நாரத வாக்யம் 80-ம் ச்லோகத்தில் தர்சயாமாஸ சாத்மாநம் ஸமுத்ரஸ்ஸரிதாம்பதி: என்று நதிகளுக்கெல்லாம் பதியான ஸமுத்ரராஜன் தன்னை ராமனுக்கு காட்டினுன் என்றார். வால்மீகியும் யுத்தகாண்டம் 22-ம் ஸர்க்கத்தில் கங்கா, ஸிந்து முத

லான நதிகளான பத்னிகளுடன் ஸாமஸாஸ உஷி கூஉ என்று ஸமுத்ரராஜன் வந்தான் என்றார். ஸமுத்ரத்திற்கு மஹோததி என்று ஒரு பெயர். ராகவனும் யுத்தகாண்டம் 125-ம் ஸர்க்கம 10-ம் சலோகத்தில உவயாநம் ஸஉஜூஸ ஸாமஸாஸ ஊஸஊநம் என்று ஸமுத்ரராஜனை என்று குறிப்பிட்டு சூவமாவதிம் என்றும் சொன்னார். ஒருவராவது வருணன் என்று சொல்ல விலலை. பாலகாண்டததில பரசுராம கர்வபங்கமான பிறகு அவரிடம் வில் இருக்க அப்பொழுது விலலை வந்து வாங்கினவன் ஸமுதராராஜன் எனறு சொலலாமல் வாலமீகி வருணன்வந்து வாங்கிக்கொண்டு போனா என்றார். தவிர ஸீதை தன கல் யாண கதையை அனஸூயைக்கு சொன்னபோது என் பிதா யாகமசெய்தபோது வருணன் ஒரு விலலை என் ஸ்வயம்வரத் திற்காக கொண்டுவந்து கொடுத்தான என்றாள். தவிர ராகவன் காடு புறபபடுமபோது லக்ஷமணனைப் பார்த்து லக்ஷ்மணா, ஜநக மஹா யக்ஞத்தில இரண்டு உக்ரமான விலலுகளை மஹாத்மா வான வருணன கொண்டுவநது ஜனகனுககுக் கொடுத்தான. அதுகளை நான் வஸிஷ்ட புத்ரா ஆசரமத்தில் வைத்து இருக் கிறேன அதை எடுத்துவா என்றார். இபபடி பல இடஙகளில் வருணனைக் குறிப்பிட்டு இருக்கிறது. ஸமுத்ரராஜனுககு ஸ்வபா வம் ஜடமல்லவா? அடித்து எழுபபினாலதான் தெரியும். வரு ணனுக்கு அந்த ஸ்பாவம் இலலாததினாலேயே வருணன் ஸாதார ணமாய் உபாஸித்தால் வந்துவிடுவன். ஸமுத்ரராஜன் வரமுடி யாது. ஆதலால இருவரும் வெவ்வேறு என்று ஸ்பஷ்டம். தவிர ஸமுத்ரராஜன் ஜலரூபமாய் எப்பொழுதும் விளங்குவான். காரியம் ஏதாவது இருந்தால் தேவதா ரூபத்துடன் வெளிவரு வன. எபபடிபபோல் மைநாகப் பர்வததிறகு ஸ்வரூபம் மலை ரூபம். காரியம் உள்ளபோது தேததா ரூபத்துடன் வெளிவரு வன். தேவதா ரூபத்துடன் ஹநுமானிடம் பேசினதாக ஸுந் தரகாண்டத்தில இருககிறது. ஜலத்திற்கு ஸ்வபாவம் ஜடம் அநத தனமையில் ஸமுத்ர ராஜா விளங்குவதால் ஸமுத்ரராஜன் வேறு வருணன வேறு எனறு ஸ்பஷ்டம். இதனாலும முதல லாவது பூர்வபக்ஷம்.

தவிர வால்மீகியே ராமனை உபாஸித்தும ஸமுத்ரராஜன் வாராதபோது என்ன குறிப்பிட்டார் என்றால் யுத்தகாண்டம் 21-ம் ஸர்க்கம் 12-ம் ச்லோகத்தில் ந ச தர்சயதே மந்தஸ் ததா ராமஸ்ய ஸாகர: என்று மந்தனை ஸமுத்ரராஜன் ராமனுக்கு தரிசனம் கொடுக்கவில்லை என்றதால் எப்பொழுது கவியே மந்தன் என்று குறிப்பிட்டாரோ இதனால் ஸமுத்ரராஜனை வேறு வருணன் வேறு என்றும ஸ்பஷ்டம். இதே ஸமுத்ரராஜன் தன் வாயாலும் தன்னை தான் ஸ்வபாவத்திலிருப்பதாயும சொன்னான் ஸகலத்திற்கும வால்மீகி வாக்யமே பிரமாணமாதலால் அதன்படி இருவரும வெவவேறு என்று ஸ்பஷ்டமாவதால் இதனாலும் முதலாவது பூர்வபக்ஷம. மேலும ஸுந்தரகாண்டம் முதல் ஸர்க்கத்தில ஹநுமான் ஆகாசத்தில செல்லும்போது ஸமுத்ர ராஜன் இக்ஷ்வாகு குலத்தை மானிக்கிறவனாய்க் கொண்டு ஹநு மானுக்கு உபகாரம செய்ய ஸமுத்ரராஜா எண்ணினார் என்றார் கவி. வருணனை என்று சொல்லவில்லை. இப்பொழுது ஸமுத்ர ராஜா எப்படி எண்ணினனெனில ஹநுமானால் வேகத்தில் உண் டான காற்று வேகத்தால் ஸமுத்ரம் ஹலமேலாலப்பட்டதால் அதனால் முழித்துக்கொண்டு எண்ணினன் என்றார். இப்படி இக்ஷ்வாகு குலத்தை மானிக்க இச்சையுள்ளவன் ராமன் உபா ஸித்தபோது ஏன் வரவில்லை எனில் மந்தஸ்வபாவத்தால் வர வில்லை என்று கவியே குறிப்பிட்டதால் ஸமுத்ரராஜன் வேறு வருணன் வேறு என்றும் ஸித்தாந்தம். இதனாலும் முதலா வது பூர்வபக்ஷம்.

இரண்டாவது ஸேதுவுக்கு விகாதம் இல்லாதிருக்க வேண்டு மானால விக்னேச்வர பூஜை செய்யலாமே தவிர ஈசவர பூஜை செய்யவேண்டுமென்று விதியிலலையே தவிர அவர் பண்ணியிருந் தால் வால்மீகிக்கு உடனே தெரியும். அவர் சொல்லாததாலும், தவிர ஸமுத்ரராஜனே நான் அந்த மலைகளை தாங்குகிறேன் என்று சொல்லிப் போன பிறகு மறுபடி விகாதம் எப்படி வரும்? ஆதலால் விகாதம் வராமல் இருப்பதற்காக பூஜை செய்தார் அவர் அநுக்ரஹம் செய்தார் என்று இதுவும் அங்கீகரிக்கத் தகுந்ததில்லை என்று ஸித்தாந்தம். ஆதலால் இரண்டாவதும் பூர்வபக்ஷம்.

மூன்றாவதாக, ராமன் ராவணனை கொன்றுவிட்டதால் அவனைக கொன்ற பிர்ம்மஹத்தி பாபத்திற்காக வரும்போது பூஜை செய்தார் என்றால் அதுவும் பொருத்தமில்லை. ஏனெனில் ராவணனைக கொன்றதில் அவருக்கு பிர்ம்மஹத்தியிருந்தது என்று கவியே சொலலாதபோது எப்படி பூஜை செய்தார் என்று சொல்வது? தவிற அப்படி பிர்ம்மஹத்திபிடித்தவரையா ஸீதா அக்னிப் பிரவேச கட்டத்தில பரமசிவன் உள்பட ஸர்வ தேவதைகளும் நமஸ்கரித்துக்கொண்டு நிற்கும ராமனைப் பரமாத்மா என்று தஙகள் கைகளை அஞ்சலி பந்தம் செய்துகொண்டு ஸ்துதிததார்கள்? இப்படி பிர்ம்மஹத்தி பாபமுள்ளவனையா உத்தமன் தாமிஷ்டன் என்று வால்மீகி சொன்னார்? இக்கிரந்தபபடி கவனித்தால இதுகள் ஒனறும் அங்கீகரிக்கத் தகுந்ததில்லை. (அந்த அந்த புராணஙகளுக்கு அததுவே பிரமாணம். நாம ஒன்றையும் பொய்யாகச சொல்லவில்லை. குசலவாள் கானம் செய்தது இந்த கிரந்தமே தவிற வேறு அல்ல ஆதலால் இக்கிரநத மட்டில இக்கிரந்த கர்த்தாவின் அபிப்பிராயம் இன்னதெனறு தெரிவிபபதில் தோஷமே இல்லையாதலால் இக்கிரந்தப் பிரகாரம் மூன்றாவது பூாவபக்ஷம்.

நாலாவதாக, இந்த ச்லோகத்தை கவனித்தால பிரபுவான மஹாதேவன மூர்த்தி அனுக்ரஹம செய்தார் என்று இருப்பதால் இந்த பதார்த்தத்திறகே, ஈதூவஷெவ௨௦ என்ற லிங்கம், உஹாதெஷவ௦ என்றலிங்கம், மத்தியில் ராமநாத லிஙகம், இரண்டுக்கும் மத்தியில் இருக்கும் லிஙகம் அனுக்ரஹம் செய்தது என்பது விரோதமாய் இருபபதால அதுவும பொருத்தமலலஎன்ற ஸித்தாந்தம் இதனால நாலாவது பூர்வபக்ஷம.

இனி கவியின் அபிபபிராயத்தை கவனிப்போம்:—

ராகவன் ஸகலருடன் விமானத்தில ஏறிவிட விமானம் லங்கையை பிரதக்ஷிணமாக வருகிறது என்று பிரத்யக்ஷம். ராவணன் இந்த இடத்தில் அடிப்பட்டு விழுந்தான் என்று சொல்லிவிட்டு பிறகு வெகு பேரை சொல்லிக்கொண்டு எஙகெங்கு இன்னன்னார் அடிபபட்டார் என்று சொலலிக்கொண்டு வந்தார். கடைசியில்

இங்கு ராவணனுக்காக மந்தோதரி துக்கப்பட்டாள் என்றார். பிறகு ஸமுத்ரத்தைக் காட்டினார் பிறகு மைநாகத்தை காட்டினா பிறகு இந்த ஸேது பாபத்தை போக்கடிக்கக்கூடியது என்றார். பிறகு இங்கு மஹாதேவன் அனுக்ரஹம் செய்தார் என்றார் இப்பொழுது இதை கவனிக்க இந்த [illegible] சலோகம் இக்கரையில வந்து சொல்லவேயில்லை. இது லங்கையிலேயே சொன்ன ச்லோகம். எங்கே எப்பொழுது சொன்னார் என்றால: எத்தனைக்கெத்தனை விமானம் உயரத்தில இருக்கிறதோ அத்தனைக்கத்தனை தூர இருப்பது கிட்டத்தெரியுமாதலால உதாரணம் ராமன் விமானத்தில் வருகிறவர் பரத்வாஜாஸ்ரமத்தைக்கூட விமானம் அடையவில்லை. அதற்குள் ராமன் அயோத்தியை ஸீதைக்குக் காட்டுகிறார். அப்படிப் போல் விமானத்தில் லங்கையை ராமன் சுற்றி வரும்போது எது எது எபபொழுது தென்பட்டதோ அப்போதைக்கப்போது அதைச்சொல்லுகிறார். அப்படிச் சொல்லும்போது மறுபடி ராவணன் விழுந்த இடத்தில மநதோதரி துக்கபபட்டாள என்று சொல்லிவிட்டு ஏற்று நகர உடனே ரொம்ப உயரத்தில் இருப்பதால் கண்ணுக்குப் பக்கத்தில் தென்படும் ஸமுத்ரத்தையும் அணையையும், அக்கரை ப்ரியந்தம் அணை உண்டு என்று காட்டி உடனே ஸமுத்திரத்தில் இருந்து உயரக் கிளம்பி நிற்கும் மலையான மைநாகத்தையும் சொல்லிவிட்டு; உடனே ஏற்கனவே (ஸீதா அக்னி பிரவேசம் செய்து வெளிவந்த பிறகு ஸீதையுடன் லக்ஷ்மணனுடன் யுத்த களத்தில் ராமன் நின்றுகொண்டு இருக்கும் இடத்தை நாடி பரமசிவம், இந்திரலோகம் அடைந்து விளங்கும் தசரதருடன் ராம ஸமீபத்தை அடைந்து ஏ ராமா உன் காரியத்தில் ஸந்தோஷப்பட்டேன். நீர் இனி ஊரையடைந்து தம்பிக்கு தரிசனம் கொடுதது ராஜயத்தை யடைந்து பரிபாலனம் செய்துவிட்டு யாகாதிகளை எல்லாம் செய்துவிட்டு பிறகு புண்யலோகம் வாரும் என்று சொல்லிவிட்டு இதோ பாரும் இந்த விமானத்தில் உமது பிதா, நீர இவரை நமஸ்காரம் செய்யும் என்றார். ராகவன், பிதாவை தமபியுடன் பத்தினியுடன் ஸேவித்தார் தசரதன் அனுக்ரஹம் செய்தார. ஸீதைக்கும் தர்மத்தைச் சொல்லிவிட்டு

லக்ஷ்மணனிடம ராகவன் பரப்ரம்மம் என்று சொல்லிவிட்டு ராமனை உன் விஷயத்தில் ரொம்ப ஸந்தோஷப்பட்டேன் என்று சொல்ல உடனே ராகவன் உத்தமனே உமக்கு என் விஷயத்தில திருப்தி இருக்குமேயானால் தாங்கள் கைகயீயை தங்களுக்கு பத்னியிலலை என்றும் பரதன் இந்த அயோத்யா ராஜயத்தை இசசித்தால் ராமன் காடுபோன விஷயத்தில் அவன் திருப்தியடைந்தால் அவன் உமக்கு கர்மா செய்யக் கூடாது என்றீரே அவன் ராஜ்யத்தை இச்சிக்கவுமில்லை, நான் காடுபோன விஷயத்தில் திருப்தியும் அடையாமல் தங்களுக்கு கர்மாவையும் செய்தான். அம்மா கைகயீயை தாங்கள் பத்னியாய் அங்கீகரிக்கிற வரத்தையும் பரதனையும் பிள்ளையாய் அங்கீகரிக்கிற இந்த வரத்தையும் கொடுக்கவேண்டும் ஏனென்றால் எந்த பத்னியை எந்த பர்த்தா கைவிடுகிறானோ அவனை எந்த தெய்வமும் கைகொடுக்காதாதலாலும், எந்த பிள்ளையை எந்த பிதா வர்ஜஜிக்கிறானோ அவனையும் கைகொடுக்காதாதலாலும் அம்மா கைகயீயை எனக்கு மாதாவாயும் தங்களுக்கு பத்னியாயும் பரதனை தங்களுக்கு பிள்ளையாயும் அங்கீகரிக்கிற இந்த வரத்தை கொடுக்கவேண்டும் என்று தெரிவிக்க அவரும் அங்கீகரித்துக்கொண்டு பரமேச்சுவரனுடன் புண்ய லோகம் சென்றார்) பரமசிவன் எந்த இடத்தில் தசரதரைக் கொண்டுவந்து காட்டினாரோ லங்கையில் அந்த இடத்தை ராகவன் ஸீதைக்குக் காட்டி ஸீதை ஏற்கனவே பரமேச்சுவரரான பிரபுவான மஹாதேவன் எந்த இடத்தில் நமது அப்பாவை நாம பார்க்கும்படியான பிரஸாதத்தைச் செய்தாரோ அந்த இடம் இது அத்ர பூர்வம் மஹாதேவ: ப்ரஸாதமகரோத்விபு: என்று இப்படிச் சொன்னார். இந்த ச்லோகம் இந்த இடத்திற்குத்தான் சொன்னது. இதுதான் மஹாதேவப் பிரஸாதம் என்று பிரத்யக்ஷம். இதற்கு என்ன ஆதாரம் என்றால் யுத்த காண்டத்தில் ராமன் பரத்வாஜாஸ்ரமத்தை அடைந்த பிறகு ஹநுமானைப்பார்த்து நான்வந்த விஷயத்தை பரதனுக்குப் போய்ச் சொல்லும் என்று சொன்ன இடத்தில் 128-ம் ஸர்க்கம் 11-ம் ச்லோகத்தில் ஸங்கதம் மஹேந்த்ரேண வரதானம் ச

ணெநவ । உஹாதெவு ஸாக்ஷாது (வாரணஸாம் வுஸாஷ்ம்) விக்ராஜ ஸஜாஜம் ॥ என்று ஆஞ்சனேயர் பரதனுக்கு எல்லாக் கதையும் சொல்லிவிட்டு எனக்கு ஸுக்ரீவராஜனை தர்சனம் கொடுத்ததைச் சொல்லு. பிறகு எனக்கு இந்திரன் செத்துப் போன வானரங்களை எல்லாம் உண்டுபண்ணிக் கொடுத்த வர தானத்தையும் பிரம்மா ஸர்வ தேவதைகளுடன் என்னை ஸ்தோத்ரம் செய்துவிட்டு, அந்த ராமஸ்தவராஜம் என்ற ஸ்தோத்ரத்தை எவன் ஸ்தோத்ரம் செய்கிறானோ அவன் ஸர்வ பாபத்திலிருந்து பரிஹாரமடைகிறான் என்று அவர் கொடுத்த வரதானத்தையும் வருணன் கொடுத்த வரதானத்தையும் (இது இன்னதென்று தெரியவில்லை. ஹநுமான் பரதனிடம் போகும்போது யார் னுடைய வரதானத்தையும் என்றார். இந்த இரண்டும் இன்னும் ஆராய்ச்சியில் இருக்கிறது.) பிறகு மஹாதேவ பிரஸாதத்தால் அப்பாவைத் தரிசித்தேன் என்று சொல் என்றார். ஏனென்றால் அவனைப் பிள்ளையில்லை என்று சொல்லியிருப்பதாலும், அம்மாவையும் பத்னியில்லை என்று சொல்லியிருப்பதாலும் உன்னை அப்பாவுக்கு பிள்ளையாயும் உன் அம்மாவை அப்பாவுக்குப் பத்னியாயும் அப்பாவிடம் வரம்வாங்கி வந்தேன் என்று சொல்லு என்றால் அவன் ரொம்ப ஆநந்தப்படுவனாதலால் சொல்லு என்றார். ஆனால் சொன்னாலும் நம்ப யோசிப்பன். ஏனென்றால் அப்பா செத்துப்போனவரை அண்ணா எப்படிக் கண்டார். இருக்கிறவர்களுக்கு செத்தவர்கள் தென்படமாட்டார்களே என்று ஸம்சயப்படாமலிருக்கும்படி பரத, பரமேச்வரான பிரபுவான மஹாதேவ அனுக்ரஹத்தால் பிதாவுடன் சேர்க்கை என்று சொல்லும் என்றார். இப்படி ராகவன் மஹாதேவ அனுக்ரஹம் இன்னதுதான் என்று ஸ்பஷ்டமாக்கி இருப்பதால் இதுதான் ஸத்ருவாவேஷ்ம் என்ற ச்லோகத்தின் அர்த்தம் என்ற நிர்ணயம். இதற்கு எது விரோதமாய் இருந்தாலும் அவைகளை கவி பூர்வபக்ஷம் செய்து இதுதான் கவி ஹ்ருதயமாய் ஸ்தாபித்ததால் இதுதான் ஸத்யம். ஆதலால் பரமேச்வர அனுக்ரஹத்தால் பிதாவை தெரிசித்தது என்பதுதான் என்றும் இந்த ச்லோகம் லங்கையில் சொன்னதே தவிர இக்கரைக்கு வந்து

சொன்னதல்ல எனறும் ஸித்தாந்தம். இதற்குப பிறகு தான் ராமன் இக்கரைக்கு வந்தது. அங்குதான் விபீஷணன் வந்தான் என்று மேலே ராமன் சொனனார் இது வாஸ்தவமே. ஆதலால் இந்தச்லோகம லஙகையில் சொன்னதென்று வால்மீகி யின் ஸித்தாநதம்.

---

44. பரதன் லக்ஷ்மணனை அபிவாதனம் செய்யவில்லை என்றும் பரதன்தான் மூத்தவனே தவிற லக்ஷ்மணன் மூத்தவனல்ல என்ற ஸித்தாந்தம்.

(1) யுத்தகாண்டம 130-ம் ஸர்க்கம் 42-ம் ச்லோகத்தில் ததோ லக்ஷ்மணமாஸாத்ய வைதேஹீம் ச பரதஸ்ததா। அபிவாத்ய ததஃ ப்ரீதஃ பரதோ நாம சாப்ரவீத்। என்று பரதன் லக்ஷ்மணனை அடைந்து ஸீதையையும் அடைந்து அபிவாதனம் செய்து பிறகு நாமத்தையும் சொன்னான். (இது வால்மீகி வாக்யம்) இதிலிருந்து பரதன் லக்ஷ்மணனுக்கு மூத்தவன் என்றுகிறது.

(2) பாலகாண்டம் 73-ம் ஸர்க்கம் 31-ம் ச்லோகத்தில் ராமனுக்கு கல்யாணம் ஆனதும் லக்ஷ்மணனுக்குக் கல்யாணத்தைச் சொல்லி பிறகுதான் பரத கல்யாணம் சொல்லபபட்டதால் லக்ஷ்மணன் பரதனுக்கு ஜயேஷ்டன் என்றுகிறது.

(3) அயோத்யாகாண்டம் 56-ம் ஸர்க்கத்தில 27-ம் ச்லோகத்தில் ஸீதாமாதாய கச்ச த்வம் அக்ரதோ பரதாக்ரஜ। என்று ராகவன்லக்ஷமணனைப் பார்த்து ஏ பரதனுக்கு முன் பிறந்தவனே நீ ஸீதையை அழைததுககொண்டு முந்தி செல்லு. நான் பிந்தி வருகிறேன் என்றார். இதனால் லக்ஷ்மணன் பரதனுக்கு மூத்தவன் என்றுகிறது.

(4) யுத்தகாண்டம் 131-ம் ஸர்க்கம் 94-ம் சலோகம் ஸர்வாத்மனா பர்யநுநீயமானோ யதா ந ஸௌமித்ரிருபைதி யோகம்। நியுஜ்யமானோ புவி யௌவராஜ்யே ததோ(அ)ப்யஷிஞ்சத் பரதம் மஹாத்மா। என்று ராமன லக்ஷ்மணனைப் பார்த்து தர்மக்ஞ, பூர்வ ராஜாக்களால் ஆளப்பட்ட இந்த பூமியை என்னுடன்கூட நீ எனக்குத் துல்யனுதலால யௌவ ராஜ்யத்தின்

பாரத்தை வஹித்துக்கொள் என்றார். இதனால் ராமன் எப்பொழுது பரதனைச் சொல்லாமல லக்ஷ்மணனைச் சொன்னரோ அதனால் லக்ஷ்மணன மூத்தவன் என்றாகிறது.

(5) அயோத்யாகாண்டம் 99-ம் ஸர்க்கம் 17-ம் ச்லோகம் ஐதிஹ்ய ஸம்பந்தம் ... நிவதிஷ்யாமி ஸீதயாச லக்ஷ்மணஸ்ய (... ) என்று இதில் பரதன, ராம லக்ஷ்மண ஸீதைகளை காட்டனுப்பி ராஜ்யமடைந்தான் என்று லோகம், ஸம்பந் தப்படாத என்னைச் சொல்லுமே அதற்காக (பரதன்) ராம லக்ஷ்மண ஸீதை இவர்கள் பாதங்களில் விழுகிறேன் என்று பரதன் சொன்னதற்கு லக்ஷ்மணன் பரதனுக்கு மூத்தவன் என்று கிறது. இப்படி உள்ள இதுகளை வைத்துக்கொண்டு சிலர் லக்ஷ்மணன்தான் மூத்தவன் பரதன் கனிஷ்டன என்றும் தெரிவிக்கி ருர்கள் (கொஞ்ச காலத்திற்கு முந்தி மாத்வமித்ரன் என்ற பத்திரிகையில மனம் போனபடி பதங்களைப் பிரித்து வால்மீகி ஹ்ருதயத்திற்கு நேர் விரோதமாய் லக்ஷ்மணன் மூத்தவன் என்று எழுதினார்கள். அது ஒரு விதத்திலும் அங்கீகரிக்கத் தகுந்ததில்லை. ஆதி மத்வாசார்யாள் இப்படி அபிப்பிராயப் பட்டதாக மாத்வமித்ரன் பத்திரிகையில் எழுதப்பட்டது. அதுகள் ஸரியலல) வால்மீகி எப்படி இதுகளை பூர்வபக்ஷம் செய்கிருர் என்றும் பரதன்தான் ஜ்யேஷ்டன் என்று தன் வாக்கினுல் எப்படி வர்ணிக்கிருர் என்று கவனிப்போம் :—

வால்மீகி பரதன் லக்ஷ்மணனை அடைந்து ஸீதையையும் அடைந்து அபிவாதனம் செய்து பிறகு நாமத்தையும் சொன்னார் எனகிறதை எப்படி வர்ணிக்கிருரென்று கவனிப்போம்:

பரதன் லக்ஷ்மணனை அடைந்து ஆலிங்கனம் செய்து கொண்டு ஸீதையையும் அடைந்து நமஸ்கரித்து தன் பேரைச் சொன்னுன் என்ருர் வால்மீகி இதுதான் கவி ஹ்ருதயம். இது எப்படி தெரிகிறதென்ருல் இது யுத்தகாண்டம். அவர் பாலகாண்டம் 77-ம் ஸர்க்கம் 22-ம் ச்லோகத்தில் வர்ணிக்கும் போது பரதன் கேகயப் பட்டணத்திற்கு புறப்படும்போது

[illegible] என்று பரதன குருவான, ராமனே நமஸ்கரித்து லக்ஷ்மணனே ஆலிங்கனம் செய்துகொண்டு சத்ருக்னனுடன கேகயபட்டணம புறப்பட்டார் என்ருர். இப்படி வர்ணித்து இருப்பவர் அங்கு லக்ஷமணனே நமஸ்கரித்தார் என்று சொன்னுல் எவவிதம் பொருந்தும்? ஆதலால் இக் கிரந்தத்தில் வெகுஇடத்தில் பிரகரணத்தை ஒத்தும் முன்பின் ஆதாரங்கள் ஒத்தும் இக்கிரந்தம ஆத்யந்தம் எப்படிப் போய் இருக்கிறதோ அதை ஒத்தும் பட்டாபிஷேகம்ஆனபிறகே கிரந்தம் செய்யப்பட்டதால ஆத்யந்தம் கிரந்தத்தை பரிசீலனேசெய்து தான் அர்த்தம் செய்யவேண்டியிருப்பதால அதன்படி கவனிக்க கவி லக்ஷ்மணன் கனிஷ்டன் பரதன் ஜயேஷ்டன் என்றே ஸ்தாபிக்கிருர் வால்மீகியே யுத்தகாண்டம் 59-ம் ஸர்க்கம் 110-ம் சலோகத்தில் [illegible] என்று ராவணுல் விடுபட்ட தான அந்த பிர்மம சக்தியை பரதனுக்கு தம்பியான அவன் லெக்ஷ்மணன் உக்ரமான பாணங்களால் அதை அடிக்க அது அவவளவையும் லக்ஷ்யமசெய்யாமல லக்ஷ்மணனே அடித்ததாய் மேலே பிரமாணம. இபபடி இந்த இடத்தில் கவியே பரதனுக்கு தம்பி பரதானுஜன் என்று இவரே சொல்லிவிட்டு பிந்தி பரதன் லெக்ஷ்மணனே நமஸ்கரித்தான் என்றும் எபபடிச் சொல்வார். ஆதலால பரதனுக்குத் தம்பிதான் லக்ஷ்மணன் என்று கவிவாக்யபடி ஸித்தாந்தம். இதனுல முதலாவது பூர்வபக்ஷம்.

வால்மீகி யுத்தகாண்டம் 59-ம் ஸர்க்கம் 113-ம் ச்லோகத்தில் [illegible] என்று ராவணன் ஸாவதேவதைகளுடன் விளங்கிவரக்கூடிய ஹிமவான் மந்தரம முதலியவைகளே அசைத்தவன் இபபொழுது யுத்தத்தில் பரதனுக்குத தமபியான லக்ஷமணனே அசைக்கமுடியவில்லே என்று வர்ணிககிருர். கவியே பரதனுக்கு தம்பி லக்ஷ்மணன் என்று ஸ்பஷ்டமாய் சொன்னதால் லெக்ஷ்மணனே நமஸ்காரம்செய்தான் பரதன என்பது தர்மவிருத்தம் என்பதும

லக்ஷ்மணனை ஆலிங்கனம் செய்துகொண்டு ஸீதையை நமஸ்கரித்து தன் பேரைச் சொன்னான் என்பதுதான் முதலாவதுக்கு அர்த்தம் என்றும் லக்ஷ்மணனுக்கு பரதன் மூத்தவன்தான் என்பதும் கவி வாக்யப்படி ஸித்தாந்தம். இதனாலும் முதலாவது பூர்வபக்ஷம்.

இன்னம் முதலாவது அடிபடுகிறது மேலும் கவனிப்போம் இதனால் இன்னும் விஷயம் வெளியாகும். இரண்டாவது ராமனுக்கு கல்யாணம் ஆனதும் பரதன் கல்யாணத்தைச் சொல்லாமல் லக்ஷ்மணன் கல்யாணத்தை சொன்னதற்காக லக்ஷ்மணனை மூத்தவன் என்பது பொருத்தமல்ல விஷயத்தைக் கவனிக்க என் பொருத்தமில்லை எனில் பிறந்தபிறகல்லவோ கல்யாணம் கிரந்தம் எழுதும் கவியானவர் ராம ஜனனத்தை முந்திச் சொன்னார் பரத ஜனனத்திற்கு பிறகுதான் லக்ஷ்மண சத்ருக்ன ஜனனம் சொன்னார். இதனால் இப்பொழுது லக்ஷ்மணனை மூத்தவன் என்றாகவில்லையே எப்படி நடந்ததோ அப்படி கவி சொல்லுவதால் அவர் போன வழியில் நாம் போகவேண்டும். வில்லொடித்த ஸமயத்தில் ஜனகன் ராமனுக்கு ஸீதையையும் லக்ஷ்மணனுக்கு ஊர்மிளையையும் கொடுக்கிறேன் என்று ஸபையில் எல்லோரையும் வைத்துக்கொண்டு சொன்னதால் தன் பெண்களான இரண்டையும் முந்தி கொடுத்துவிட்டு பிறகு தம்பி பெண்களான இருவரையும் பிறகு பரத சத்ருக்னர்களுக்கு கொடுத்ததாய் தெரிகிறது. ஆதலால் இதனால் லக்ஷ்மணன் மூத்தவனென்ற ஸித்தாந்தத்திற்கு இது பிரமாணம் ஆகாது. இது ஜனகன் அபிப்பிராயமாகத் தெரிகிறது. வால்மீகியே ஓரிடத்தில் பரதனை ஜ்யேஷ்டனாய் சொல்லிவிட்டதால் பல இடத்தில் லக்ஷ்மணன் பரதனை நமஸ்கரித்து இருப்பதாய் பிரமாணம் இருப்பதால் இது பிரமாணமில்லை என்பது ஸ்பஷ்டம். கவி எப்படி நடந்ததோ அதைச் சொன்னார். ஜனகன் கல்யாணத்தை லக்ஷ்மணனுக்கு முந்தி செய்துவிட்டதற்காக லக்ஷ்மணனை மூத்தவனாய்ச் சொல்லமாட்டார். கவி வாக்யம்தான் கிரந்தத்திற்கு பிரமாணம். ஆதலால் இதுவும் பூர்வபக்ஷம். மூன்றாவதாக, ராகவன் லக்ஷ்மணனைப் பார்த்து பரதனுக்கு முன் பிறந்தவனே என்றழைத்த

பதத்திற்கே தாத்பர்யம் ஸாதாஞ்ஜ ! எனபதற்கு இந்த இடத்தில் பரதனை முன்பிறப்பாய் உடையவனே என்றே அர்த்தம். ஏனெனில இவரே பரதனைப் பார்த்து லக்ஷ்மணனுக்கு முன் பிறந்தவனே என்று கூப்பிடுகிறார். உத்தரகாண்டத்தில் அச்வமேதம் செய்வதா, ராஜஸூயம செய்வதா, என்று தம்பிகளுடன் கலக்கும்போது 95-ம் ஸர்க்கம் 28-ம் ச்லோகத்தில் பாலாநாம் தஂ ஸஂஸம் வாக்யம் க்ராஹ்யம் லக்ஷ்மணபூர்வஜ ! என்று லக்ஷ்மணனுக்கு முன் பிறந்தவனே. குழந்தைகள் சொன்னாலும் சுபமான வாக்யத்தை கேட்கவேண்டும் என்றார். இவரே முன் பின் விரோதமாய்ச் சொல்லுகிறாரே இதில் எது நிஜம் என்று கேட்வை? தவிற ராமாநுஜஃ, ஸாதாநுஜஃ, லக்ஷ்மணபூர்வஜஃ, ஸாதாக்ரஜஃ, "இவ்வளவுக்கு அந்த அந்த இடத்தில் எப்படி பிரயோகமோ அது முன்பின் கவி வாக்யத்திற்கு விரோதம் இல்லாமல." இருக்கும்படி சொல்லவேண்டும். ராமாநுஜஃ ! பரதன், லக்ஷ்மணன், சத்ருக்னன் மூவருக்கும் பெயர் உண்டு. மூன்று பேருக்கும் பிரயோகம் இக்கிரந்தத்தில் இருக்கிறது. ராமாநுஜஃ என்பதற்கு எவனொருவனுக்கு ராமன் தம்பியோ என்றல்ல ,ராமன் தம்பி இவருக்கும் பிரயோகம். ஸாதாநுஜஃ, பரதன் தம்பி லக்ஷ்மண சத்ருக்னர்களுக்கு பெயர், எவனொருவனுக்கு பரதன் தம்பியோ என்றர்த்தமல்ல. லக்ஷ்மணாநுஜஃ என்பதற்கு லக்ஷ்மணனுக்குத் தம்பி சத்ருக்னனுக்கு பெயர். எவனொருவனுக்கு லக்ஷ்மணன் தம்பியோ என்றர்த்தமல்ல. லக்ஷ்மணபூர்வஜஃ என்பதற்கு லக்ஷ்மணனுக்கு முன் பிறந்தவன் என்றர்த்தம் : வேறு அர்த்தம் இல்லை. பரதனுக்கும் ராகவனுக்கும்தான் பெயர். ஸாதாக்ரஜஃ ! பரதனுக்கு முன் பிறந்தவன் என்றர்த்தம். பரதனை எவனொருவன் முன் பிறப்பாய் உடையவனோ என்றாத்தமல்ல. ராமன் ஒருவருக்குத்தான பெயர். ஸ்ரீ ராகவனே லக்ஷ்மணனை ஒரு இடத்தில ஸாதாக்ரஜ எனறு குறிபபிட்டார். இங்கு பரதனை முன் பிறப்பாய் உடையவன் என்று கவியின் முன்பின் பிரமாணத்தை அனுசரித்து கவிஹ்ருதயம இதுதான என்று ஸ்தாபனம். ஆதலால மனம போனபடி அர்த்தம் செய்வது கூடாது என்று

ஸித்தாந்தம். ஆதலால் இந்த வார்த்தையை வைத்து பிரமாணம பேசமுடியாது. ஆதலால் ராமன் வாக்யம் பிரமாணம் அல்ல. கவிவாக்யம்தான் பிரமாணம். இதனை மூன்றாவதாம பூர்வ பக்ஷம். நான்காவது ராமன் லக்ஷ்மணனைப் பார்த்து லக்ஷ்மணா நீ எனக்குத்துல்யனாதலால் நீ யௌவ ராஜ்யத்தின் பாரத்தை வஹித்துக்கொள் அதாவது யுவ ராஜ்யத்தை பெற்றுக்கொள் என்றாரே. மூத்தவனுக்கு யுவ ராஜ்யமாயிருக்க இந்த லக்ஷ்மணனுக்கு பரதன் மூத்தவனாயிருக்க ஏன லக்ஷ்மணனை சொன்னா என்றால் ஏற்கனவே பிதா தனக்கு ராஜ்யம் கொடுக்கிறேன் என்றபோது அதைக் கேட்டுக்கொண்டு வந்தார். லக்ஷ்மணனிடம் எனக்கு பிதா ராஜ்யம் கொடுக்கப் போகிறார். நான் அடைந்தால் எல்லாம் உனக்காகவே என்றார். அதன் படியும் பரதன் சித்ரகூடத்தில் ராமனை தரிசிக்க வந்த காலத்தில் பரதனை கொல்லுகிறேன் என்று லக்ஷ்மணன் சொன்னபோது ராகவன் லக்ஷ்மணனைப் பார்த்து உனக்கு ராஜ்யத்தில் ஆசையிருந்தால் சொல்லு. பரதன் வரட்டும் உனக்கு ராஜ்யத்தை கொடுக்கச் சொல்லுகிறேன் என்றார் இந்த இரண்டையும் அனுஸரித்து இப்பொழுது யுவ ராஜ்யம் தயாராக இருக்கிறதுயென்று பல விதத்திலும் பெற்றுக்கொள் என்று சொன்னார். லக்ஷ்மணன் பரதனது பக்தியை அறிந்து இருப்பதாலும் பரதன் மூத்தவனாதலால் தான் யுவ ராஜ்யம் அடைவது அதர்மமாதலாலும் எந்த விதத்திலும் அதை அங்கீகரிக்கவில்லை உடனே ராகவன் பரதனுக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகம் செய்தார் என்று இருப்பதால் லக்ஷ்மணன் பரதனுக்கு மூத்தவன் ஏனாகாது. இதனால் நாலாவது பூர்வ பக்ஷம். தவிர இவரே பரதனை லக்ஷ்மணனுக்கு மூத்தவன் என்று சொல்லியிருப்பதாலும் பூர்வ பக்ஷமாகிறது. ஐந்தாவதாக பரதன் நான் ராமனை ஸீதை, லக்ஷ்மணன் இவர்கள் காலில் விழுகிறேன் என்றாரே ஏன் என்றால் இதை வால்மீகி அங்கீகரிக்காமல் பரதன் புலம்புகிறான் என்கிறார். ராமனை பிரிந்து இருக்கும் வியோகத்தால் தன்னிடம் ஒரு குற்றமும் இல்லாதிருக்க தன்னிடம் உகை அபவாதம் வருமே என்று வாயில் வந்தபடி எல்லாம் பேத்துகிறான் புலம்புகிறான் என்று

அதை புலம்பல் என்று வால்மீகி அடுத்த வரியில் ஸாவம் ஸவிருவம்ஸ்ஷுவீந வநெநஃபராயாதுஜஃ யென்று குறிப்பிட்ட தால் வால்மீகியால் அதி துக்கத்தில் இருக்கும்போது இல்லாத தெல்லாம் வரும் என்று பிரயோகித்து இருப்பதால் இவர் விருாவ என்று எந்த எந்த இடங்களில் சொன்னரோ அந்தந்த இடங்களிலும் அதுகளுக்கு கௌரவம் இல்லை. பேத்தல் ஆத லால் அதுகள் தள்ளத் தகுந்தது என்று ஸித்தாந்தமாதலால் இதனல் ஐந்தாவதும் பூர்வ பக்ஷம். உத்தர காண்டம் 73-ம் ஸர்க்கம் 12-ம் சலோகத்தில் கூதகஉஃராஉஹாவொஹொ உயூ ஹொரவாநுநஃ। என்று சத்ருக்னன் ராகவனைப் பார்த்து லவணஸாரவதத்திற்குதான் செலனுகிறேன் என்று சொல்லும் இடத்தில் உத்தமா, இந்த நடுவில் பிறந்தவரான பரதன் ஏற் கனவே நீர் காடு சென்றபோது அயோத்தில இருந்து ராஜ்யத் தில இருந்தார், ரொம்ப துக்கப்பட்டவர், ஆதலால் நான் சொல் லுகிறேன் என்றபோது பரதனை மத்யமன் என்றார். ராமன் முதலில் பிறந்தது. இரண்டாவது பரதன், பிறகு லக்ஷ்மண சத்ருக்னர்கள் ஆதலால் சத்ருக்னன் வாக்யபபடியும் ராமனுக்கு அடுத்தவன் பரதனுதலால் மத்யமன என்றதால் லக்ஷ்மணன் பரதனுக்கு கநிஷ்டன் என்றே ஸிததாந்தம். வால்மீகி வாக்யத்தில் லக்ஷ்மணன் பரதனுக்கு ஜயேஷ்டன் என்று வாக்யம் இல்லாததாலும வாலமீகி தன் வாக்யததால் லக்ஷ்மணனை பர தனுககுக் கனிஷ்டன் என்றே ஜனனத்தில் சொல்லியிருப்பதால் லக்ஷ்மணன் பரதனுக்கு கனிஷ்டன் என்றே ஸிததாந்தம். தவிற பாலகாண்டம 18-ம் ஸாககம 22ம் ச்லோகத்தில் பொலூாக் வூஹூதிஸாவீநூஃ லக்ஷ்ணொலக்ஷிவயஉநஃ। ராஉ ஸூரொகாஉஸூ ஹூாதஜெூஷஸூிதூபஃ என்று கைங் கர்ய லக்ஷ்மியை உடைய லக்ஷ்மணன், பிராதாவுக்கு (பரத னுக்கு) ஜயேஷ்டனன ராமனுக்கு பால்யம் முதல் ரொம்ப ஈடு பட்டு இருந்தார் என்றார் கவி. அப்படியே அதே ஸர்க்கம் 31-ம் சலோகம் ஹரதஸூா வி பதூவொ லக்ஷ்ணாவர ஜொஹிஸஃ। வூாணெஃ வீூயதரொநிதூம் தஸூஉாஸீ தஉாவிூயஃ। என்று லக்ஷ்மணனுக்கு தம்பியான சத்ருக்னனும்

பரதனும் மிகவும் பிரியமாய் இருந்தார் என்றா. இப்படி கவி பரதன் தான் மூத்தவன் லக்ஷ்மணன் கனிஷ்டன் தான் என்று பல இடங்களிலும் ஸ்தாபித்து இருப்பதால் பரதன் தான மூத்தவன், லக்ஷ்மணன் கனிஷ்டன் தான் எனறும் பரதன் லக்ஷ்மணனை அபிவாதனம் செய்ததே இலலை என்றும் கவியின ஸித்தாந்தம்.

## 45. குலதனம், குலதேய்வம், என்பது என்ன என்பது.

யுத்த காண்டம் 131-ம் ஸர்க்கம் 81-ம் சலோகம் ஸம்பாப்ய ராஜ்யம் லங்காம் ப்ராயாத் விபீஷண: । யென்பதில் (இது ரிஷி வாக்யம்) விபீஷணன் குலதனத்தையடைந்து லங்கையை யடைந்தான் என்பது இதுதான் வாச்யார்த்தம். இப்படியிருக்க சிலர் குலதனமான லங்கையை அடைந்து சென்றான் என்று சொல்லுகிறார்கள் இது அர்த்தம் ஸரியல்லை ச்லோகத்தை கவனித்தால் குலதனத்தை அடைந்து லங்கை அடைந்தான் என்றுதான் பதார்த்தம் சொல்லவேண்டும். ஆதலால் குலதனம், லங்கை என்ற அர்த்தம் ஸரியல்ல.

குலதனம் என்பதற்கு லங்கை என்று சொல்லுவதானால் யுத்த காண்டம் 125-ம் ஸர்க்கத்தில் 17-ம் ச்லோகத்தில் ஸ்வராஜ்யே வஸ லங்காயாம் த்வயா த்தே விபீஷண । என்று சொன்னதில என்றால் கொடுக்கப்பட்ட உன்னுடைய ராஜ்யத்தில் இரு என்றதால் எற்கனவே கொடுத்ததையா குலதனம் என்று கொடுத்தார். ஆதலால் இது குலதனம் என்பதல்ல. மேலும் ஸமுத்ரத்தை தாண்டுவதற்கு முந்தி ஸமுத்ரக்கரையில் ஒரு தடவை பட்டாபிஷேகம். இரண்டாந்தடவை ராவண வதாநந்தரம் மறுபடி பட்டாபிஷேகம். இப்படி, எப்படி கொடுத்ததை கொடுத்தார் என்றால் பொருந்தும். இதற்கு சிலர் ராமனிடம் ராஜ்யம் இல்லாததால் ராமன் ராஜாவான பிறகுதான் விபீஷணனுக்கு ராஜ்யம் கொடுக்கமுடியும். ஆதலால்தான் பிந்தி கொடுத்தார் என்று சிலர் பக்ஷம் அதிலும் விபீஷணன் ராக்ஷஸன் அவர்களுக்கு குலதனம் லங்கை என்றும் சொல்லுகிறார்கள். விபீஷணன் ராக்ஷஸன் அல்ல என்று வால்மீகி வாக்யமாதலாலும் விச்ரவஸ் வம்சம் விபீஷணனாதலாலும் அவனுக்கு குலதனம்

லங்கை அல்ல ஆதலாலும் லங்கை குலதனம் என்பது பொருத்தமல்ல. தவிற பட்டாபிஷேக தர்சனத்திற்கு சென்றவனுக்கு அவனுடையதை அவனுக்கு கொடுத்தார் என்பதும் உசிதம் அல்ல. ராமனும் லங்கையை கொடுத்தபோது குலதனமான லங்கையை பெற்றுக்கொள் என்றும் சொல்லவில்லை. ராம வாக்யப்படி கவனித்தால் அயோத்திக்கு செல்லும்போது ஸ்வராஜ்ய வஸூங்கூயாம் உயாதகத்தே விபீஷண என்று என்றால் கொடுக்கப்பட்டதில் வஸி என்றதால் பிறகு மறுபடி அதையே கொடுக்கிறார் என்பது ராம அபிப்ராயமும் அல்ல, வால்மீகி அபிப்பிராயமுமல்ல. ஆதலால் இதுவும் பொருத்தமல்ல என்று ஸித்தாந்தம்.

மற்றும் சிலர் மதத்தில் ராமன் வைகுண்டம் செல்லும்போது (குலதெய்வத்தை இக்கிரந்தத்தில ரெங்கநாதன் என்றுவது சிவனென்றுவது பிரயோகம் கிடையாது) தன் குலதெய்வத்தை விபீஷணனுக்குக் கொடுக்கும்போது இக்ஷ்வாகுகுல தெய்வமாயும் ஸர்வ தேவாதிகளால் பூஜிக்கப்பட்டதாயும் உள்ள இந்த ஜகந்நாதனை ஆராதனை செய்யும் என்று சொல்லிக்கொடுத்தார். இராகவன் வைகுண்டம் போகும்போது ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு நியமம் செய்யும்போது விபீஷணனைப் பார்த்து நீ என்னை பிரிவதாய் கவலைப்படவேண்டாம் எனக்கு பதிலாக உமக்கு இந்த இக்ஷ்வாகு குலதெய்வத்தை கொடுக்கிறேன் என்றார். பட்டாபிஷேக காலத்தில் குலதனத்தைக் கொடுத்தார். அதுவேதான் இது குலதெய்வம் என்று சிலர் மதம் அதையும் வால்மீகி கண்டிக்கிறார். ஜாம்பவான் மைந்தத்விவிதர்களைப் பார்த்து என் பிள்ளைகளையும் பேரன்களையும் பார்த்துக்கொண்டு இருங்கள் என்பதால ராம வம்சம் அழியவே போகிறதில்லை தன் பிள்ளைகளுக்கும் குலதெய்வத்தைக் கொடுக்காமல் புண்ய லோகம் போகும் காலத்தில் விபீஷணனுக்கு தன்னை பிரியமுடியாமல் இருக்கும்கவலை நீங்குவதற்காக கொடுக்கப்பட்டதே தவிற வேறு அல்ல. அவன் பணத்தாசையடையாத நிஷ்காம்ய பக்தனாதலாலும் அவனை பூமியில் இருக்கச் சொன்னதாலும் அவனிடம் தனக்கு பதில் குலதெய்வத்தை எப்பொழுதும் இருப்பதற்

காக புண்ய லோகம் போகும்போது கொடுக்கபட்டதே தவிர பட்டாபிஷேகமானபோது கொடுக்கபட்டது அல்ல. பட்டாபி ஷேகமானபோது குலதனம் தான் கொடுத்தது வால்மீகி ஸர்வ ரகஸ்யம் தெரிந்து எழுதுபவர் ஒரு இடத்திலும் பெயரை மாற்றி எழுதவில்லை ஆதலாலும் குலதனமே குலதெய்வமென் பது ஒரு விதத்திலும் பொருத்தமல்ல என்பது ஸத்யம். இக் கிரந்த ரீதியாய் கவி வாக்ய ரீதியாய் ஐஹநாயநு என்பது விஷ்ணு வுக்கு என்றமட்டில் பிரத்யக்ஷம். இப்படியிருக்க அந்த குல தெய்வத்திறகு ரெங்கநாதன என்ற பெயரை வைத்துக்கொண்டு அதற்குமேல் இருப்பது விமானம். அதற்கு குலதனம் என்ற பெயர். குலதெய்வம ஸம்பந்தமானதற்குத்தான் குலதனம் என்று பெயர் என்கிறார்கள் அப்படிப்பட்ட குலதனமான ஸ்ரீரங்கவிமானத்தை பட்டாபிஷேகம் ஆனதும் கொடுத்தார். அதைக் கொண்டுபோனான் என்கிறார்கள். இதுவும் அங்கீகரிக் கத்தகுந்ததில்லை, ஏனென்றால்:—பட்டாபிஷேகத்துக்குபோது அந்த ரங்கவிமானத்தை கொடுத்துவிட்டு இராமர் ரெங்கநாத னுக்கு விமானம் இல்லாமல் மொட்டையாகவே பதினோராயிர வருஷம் வைத்துக்கொண்டு பூஜை செய்துகொண்டு இருந்தாரா இவருக்கோ விமானம் இல்லாமல் ஸ்வாமி பிரயோசனம் இல்லை. விபீஷணன் ஸ்வாமியில்லாமல் விமானத்தை வைத்துக்கொண்டு என்ன பிரயோசனம் அடைந்தான். ஆதலால் இதுவும் பொ ருத்தமல்ல என்பது பிரத்யக்ஷம். சிலர் குலதனமான குலதெய் வத்தையே கொடுத்தார் என்கிறார்கள். குலதனமான குலதெய் வத்தை அவர் பட்டாபிஷேகத்தின்போது கொடுக்க குல தனத்தையடைந்து லங்கையை அடைந்துவிட்டதாய் அங்கு ச்லோகம. பிறகு பதினோராயிரவருஷம்கழித்து குலதெய்வத்தை கொடுக்கிறேன் பெற்றுக்கொள் என்கிறாரே அப்பொழுது இந்த குலதெய்வம் ஏது. ஆதலால் இதுவும் பொருத்தமல்ல. மேலும சிலர் ராமன் வைகுண்டம் போகிறபோது விபீஷண னுக்கு கொடுத்த குலதெய்வத்தை விபீஷணன் ஸ்ரீரங்கத்தில் வைத்துவிட்டதாக சொல்லுவார்கள் (அது விஷ்ணு புராண மாயும் மற்றதாயும் இருக்கலாம் அது இக்கிரந்தம் அல்ல) கவி

யானவர் ராமன தனனைப பிரிய, கவலைப்படபோகிருனே என்று அவன கவலைப்படாமல இருபபதற்காக, பிரியாமல் இருப்பதற் காக குலதெய்வத்தை கொடுத்ததாயும அதை அவன் லங்கை கொண்டுபோய்விட்டதாகவும கவியின் அபிப்பிராயமாதலால ஸ்ரீரங்கததில வைத்தார் என்பதும் இக்கவியின அபிப்பிராயம் அலல (அந்தந்த புராணததிற்கு அததததுவே பிரமாணம்) ராக வனும் ஒருவனுக்கு ஒனறைக கொடுகக அதைப் பெற்றுக் கொண்டவன அனுபவிககாமல, அதை அடையாமல் போவா னேயாகில கொடுத்து உபயோகம் இல்லையென்று ராமனே தெரிவித்து இருப்பதாலும் வழியில் ஸ்ரீரங்கத்தில் வைத்துவிட் டான் என்பதும் பொருததம் அலல. குலதனத்தை பட்டாபி ஷேக காலத்தில கொடுதத பிறகு புண்யலோகம் போகும்போது குலதெய்வத்தை கொடுத்ததாகச சொனனதால் கொடுத்தது இரண்டாந்தடவை என்பதும் குலதனம வேறு குலதெய்வம வேறு என்பதும் குலதனம லங்கையல்ல எனபதும குலதனம் ரஙகவிமானமும அலல என்பதும் பிரதயக்ஷம். இரண்டும் வேருதலால் இரண்டும் ஒன்றலல என்பதும் பிரத்யக்ஷம். ஜகந்நாத பதத்திற்கு விஷ்ணுதான என்று எப்படித் தெரிகிறதென்ருல் பாலகாண்டம் 18-ம் ஸர்க்கம 10-ம் ச்லோகத்தில ஹோதா ஜகந்நாதம் ஸர்வலோக நமஸ்க்ருதம்। என்று சொலலப்பட் டதால விஷ்ணு என்றமட்டில் பிரமாணம். ஆனல அயோத்யா காண்டத்தில் 6-ம் ஸர்க்கம் 1-ம் சலோகததில ஸஹபத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயணமுபாகமத்। என்று பத்னியான ஸீதையுடன் ராமன் நாருயணனை அடைந்தார் பகவானை பூஜித் தார் என்று சொல்லி இருக்கிறதே என்ருல, இதில் குலதெய்வம் ரெஙகநாதன் எனறில்லை. ஆதலால குலதெயவம் ஜகந்நாதனே என்று ஸ்திரம். ஆனல் கிரந்தரீதியில் குலதனமென்ருல் என்ன வென்று தெரிகிறதெனருல விபீஷணன பிதாவைப்போல பிள்ளை பிறந்தவனுதலால் அவர் தபஸ்வியாதலால் தபஸ்ஸே அவர் களுக்கு குலதனமாதலால் அதுவே இவனுக்கும் குலதனம். பிரம்மத்யானம். விபீஷணன் ஸ்ரீ ராமனை பரமாதமா எனறு எண்ணி வந்தவனுதலாலும் பரமாத்மாவிடம் பூர்ணம் தியானத்

துடன் கூடினவனுதலாலும் ராம பட்டாபிஷேகத்திற்கு சென்ற தால் அவா கொடுக்க அவருடையதாயும் நித்யமாயும், கொடுத்த தால குறையாததாயும் தன்னுடையதாயும் விபீஷணனுக்கும் ஆராதிக்கத் தகுந்ததாயும உள்ள ஸ்ரீராம நாமமான தாரக மந்திரத்தை அவனுக்கு உபதேசிக்க அவன் அதை பெற்றுக் கொண்டு லங்கையை அடைந்தான என்கிறார் கவி. இப்படி பகவானுடைய நாமதேயமான இந்த தாரக மந்திரத்திற்கே குலதனம் என்று பெயர். ஜகந்நாதனுக்கு குலதெய்வம் என்று பெயர் என்றும் ஸித்தாந்தம்.

---

உ

ஸ்ரீராமஜெயம்:

# உத்தரகாண்டம்

## 46. தசரதனுக்கு ராமனை விஷ்ணுவென்று தெரியும் என்ற ஸித்தாந்தம்.

உத்தரகாண்டம். 59-ம் ஸர்க்கம் ப்ரோக்தா நாம ஸம்ஞ்ய யாயம் தம் பாவம் த்ருஹ்ஹ்ருதவாந் । அதி பஷோ த்ரா தேஜா ஸ்ருகோணாவர்வேஜந்தி । அஹாமுதேர்ஹிவ்ருத்ய ஸும் தவவாயிவ ஸத்த । ராம அத்ராஹிவிவ்ராத ஸ்ருஷ்ட ப்ரோக்கேஷ்ட ராநஜ । என்றார். வஸிஷ்டர் ஆச்ரமத்தில் தசரத ரைப்பார்த்து அங்குவந்து இருந்த துர்வாஸர் ராமாதிகள் நான்கு குழந்தைகளும் பிறந்த 12-வது தினத்தில் உத்தமம, தசரத, உமக்கு பிறந்து இருக்கும் ராமன் யாரெனில் பூர்வ ஜந்மாவில பிருகுவானவர் விஷ்ணுவை பூமியில் ஜனித்து பத்னியை பிரிந்து இருக்கவேண்டும் என்று சபித்துவிட்டு ஏ விஷ்ணுவே உலக க்ஷேமத்திற்காகவே நீர் சாபத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று பிரார்த்திக்க அவர் ஒத்துக்கொண்டு இப்பொழுது உமக்குப பிள்ளையாய் வந்து பிறந்து இருக்கிறார் அவர் நாராயணன் அவர் மூன்று லோகத்திலும் பிரஸித்தரான ராமன் என்றும் பெயர் உடையவர். என்று இப்படி சொல்லி மேலும்

கொஞ்சம் கதை சொன்னார். இதைக் கேட்டு தசரதர் ஆச்ர மத்தைவிட்டு வெளிவந்த பிறகு மந்திரியாயும் ஸாரதியுமான சுமந்திரரைப்பார்த்து இந்த ரகஸ்யத்தை இது ரகஸ்யமாதலால் இதை நீர் ஒருககாலும் வெளிபபடுத்தக் கூடாது என்ருர். இதனால தசரதனுக்கு தன் பிள்ளை விஷ்ணு என்று பிறந்த 12-ம் தினத்திலேயே தெரியும் என்ற பிரமாணம். (இது தூர்வாஸர் சொன்னது). அபபடித் தெரிந்து இருக்குமேயானல் விச்வா மித்ரர் பிளளை ராமனை யாகத்தை ரெக்ஷிபபதற்காக கொடுக்க வேண்டும் எனற கேட்ட காலத்தில இவர் ராமனை விஷ்ணு வென்று தெரிந்துகொண்டு இருந்தால் என் பிள்ளை ராமன் கொஞ்சம் குறைந்த 16 பிராயமுள்ளவன் நீர் சொல்லும்படியான மாரீச சுபாகுக்களை கொல்லும்படியான யோக்யதை உடையவன் அல்ல என்கிருரே முன்பின் விரோதமல்லவா என்ருல், வால்மீகி என்ன சொன்னார் எனருல் தசரதன் அதிதுக்கத்தினல் வ்யதித உநாः மனம் உடைந்து விட்டதால் இப்படி புலம்பினார் என்று வர்ணித்தார். அதாவது பாலகாண்டத்தில 20-ம் ஸர்க்கம் 27-ம் சலோகத்தில் ஊதி நரவதிஜவ நாயிஜெஂ ஊ ஂ கூஃபிக ஸாதஂ ஸஃஊஹாவிெவஶஊநஃ। என்று இபபடி தசரதர் புலம்பினார் என்று வாலமீகி சொல்லிவிட்டதால அதிதுக்கத் தால் புலம்பும் வாகயத்திற்கு கௌரவம இலலை எனறு கவியின் பிரமாணமாதலாலும் துக்கம் வநதுவிட்டால் சிததம் முதலிய ஸகலமும் போய்விடும். துக்கம் வந்தால முதலில் தைரியம் போய்விடும், துக்கம் வந்தால வேதாந்த ஞானமும் போய்விடும் துக்கம் வநதால் ஸகலமும் போய்விடும். துக்கப்பட்டவனை துக்கம் கொன்றுவிடும். ஆதலால தசரதன் அதிதுக்கத்தில் புலம் பினதால் அதற்கு கௌரவம் இல்லையாதலால் தெரியும் என்றே ஸித்தாந்தம். தசரதன பாலகாண்டம் 11-ம் ஸர்க்கம 10-ம சலோகத்தில் வ ஊத்ராஸ்ரா ஸஂ ஹவிஷ்ஷ்யநி உக்வாரொஜிதவி க்ஊஃ। வஂஶவு திஷூநகராः ஸவஷுஜெொகெஷு ப விஶுதாः। என்று சுமந்திரன் தசரதரைப் பாாத்து அறபுத பராக்ரமமுள்ள நானகு பிள்ளைகளை உமககுப பிறககபபோகிருர்கள. ஸர்வமான லோகததிலும பிரஸித்தரானவர்களாய் வம்சத்தை ஸ்தாபிக்

கிறவர்களாய் உண்டாகப் போகிறார்கள் என்று சொன்னதால் அது தேவலோகத்தில ஸனத்குமாரர் சொன்னதை மந்திரி இப்பொழுது தனக்குச் சொன்னதாலும், மேலும் பாலகாண்டம் 12-ம் ஸர்க்கம் 12-ம் ச்லோகத்தில ஸவஷ்யாவு ராஜ்ஞோவை ஸுதாச் சதுரோ உஸ்வமிதவிக்ரமா: என்று ரிஷ்யசிருங்கர் முதற் பிரம்மவித்துக்களுடைய வாக்யம் பலவிதத்திலும் அற்புத பலமுள்ள நான்கு குழந்தைகளைப் குலவிருத்திக்கு நீர் அடையப் போகிறீர் என்று சொன்னதாலும், பாலகாண்டம் 14-ம் ஸர்க்கம் 59-ம் சலோகத்தில ஹவிஷ்யந்திவை-தாராஃ உத்வாரஸ்தே கு-ஜோத்வஹா: என்ற பிரமாணத்தாலும் பிரத்யக்ஷம்.

மேலும் ரிஷ்யசிருங்கர் வார்த்தையாலும் பிரத்யக்ஷம். ராமனை விஷ்ணு என்று தெரியும் பிள்ளைகள் பிறந்த பிறகு த்வாராவல வஸிஷ்டர் ஆசிரமத்தில் சொல்லப்பட்டு விஷ்ணு என்றமட்டில தெரியும். பிறகு தசரதன் புண்யலோகம் போன பிறகு ராமன் யுத்தகளத்தில் எல்லாரையும் கொன்று பிறகு யுத்த களத்தில அக்னிபிரவேசம் செய்து ஸீதையும் வந்த பிறகு பரமேச்வரன மஹாராஜாவான தசரதருடன் யுத்தகளத்தைநாடி வந்து ராகவனைப பார்த்து அவரைக் கொண்டாடிவிட்டு ஸீதைக்கும் அனுக்ரஹம செய்துவிட்டு யுத்தகாண்டம் 122-ம் ஸர்க்கம் 18-ம் சலோகத்தில இதாநீம் து விஜாநாமி யதா ஸௌம்ய ஸுரேஸ்வர: | வதார்த்தம் ராவணஸ்யேஹ விஹிதம் புருஷோத்தம | என்று ராகவனைப் பார்த்து ராமசந்திரா நான் இபபொழுது உன்னைததெரிந்துகொண்டேன் தேவதைகள் பிரார்த்தனைக்காக ராவணவதார்த்தம் அவதரித்தவன் என்று தெரிந்துகொண்டேன என்றார் (முந்தி குழந்தைகள் பிறந்த போதே தெரியுமே—அப்படியிருக்க ஏன இப்பொழுது தெரிந்து கொண்டேன் என்கிறாரே, என்னவென்றால் முந்தி அவர் பிருகு சாபத்திற்காக பிறந்து இருக்கிறார் என்று எண்ணியிருந்ததை வர்ஜித்து ஸத்தியமான இப்பொழுது ராமன் ராவண வதார்த்தம அவதரித்தவர் என்பதை ஸ்தாபித்து இபபொழுது தெரிந்து கொண்டேன என்று இப்படிச சொல்லிவிட்டு லக்ஷ்மணனைப் பார்த்து உத்தமா, இந்த ராமனை நீ எப்படி எண்ணவேண்டு

மென்றால் அவர் யார் என்று சொல்லுகிறேன் கேள் என்று யுத்தகாண்டம் 102 ஸர்க்கம் 32 சலோகம [Sanskrit verse in Grantha script] என்று தசரதன் ஸர்வ தேவதைகளும் இந்த ராமனை பூஜிக்கிறார்கள லக்ஷ்மணா! இந்த ரூபம் ஸாக்ஷாத் பிர்ம்மம், இது அக்ஷரம, லோக க்ஷேமத்திற்காக வேணும என்று பிர்ம்ம சருஷ்டியில கட்டுபபட்டு வந்தது இது வேதங்களுக்கு ஹ்ருதயம். இது ரொம்ப ரஹஸ்யமான வஸ்து என்று இப்படி தெரிவிததகால் ராமன் விஷ்ணுவென்று நன்றாய்த் தெரியும் தசரதருக்கு என்று ஸிததாநதம். (இது தசரத வாக்யம.)

பிருகு சாப விருத்தாந்தம் துர்வாஸர் தசரதருக்குச் சொன்ன கதையாக ஸுமந்திர வாக்யம். அக்கதை ஸத்ய மில்லையென்பது முக்யம். வாலமீகி வார்தைதைக்குத்தான் முதல் கௌரவம். கவி அபிப்ராயம் தசரதருக்கு நன்றாய் ராமனை விஷ்ணு என்று தெரியும் எனறு ஸித்தாந்தம். வால்மீகியும் தர்மிஷ்டன், உத்தமன், ஸத்யஸந்தன் ராமன் என்று நாரதரும நன்றாய் ஸ்தாபித்து இருப்பதால் களங்கமிலலாதவர் (தர்ம விக்ரஹம்) யார் என்று கேட்க நாரதர் அதற்கு பதில் ராமன் என்று சொன்னார். சாபத்தை அனுபவிக்கப் போகிறவரை எப்படி உத்தமன் என்று சொல்லலாம். ஆதலால் அது ஸரி யல்ல என்று ஸித்தாந்தம். தசரதன் அந்திய காலத்தில் தன் உயிரைவிடும்பொழுது ராமா, லக்ஷ்மணா, ஸீதே, என்றுசொல்லி பிராணனை விட்டதாலும் ராமன் காடு போகும்போது ராமனை அப்படியே பார்த்துக்கொண்டே இருக்கிறார் என்றும் ராமன் காடுபோனபிறகு ராமனைக்கண்ட கண்கள் ராமனோடு போய் விட்டது என்று தசரதர் சொன்னதாலும் விச்வாமித்ரர் கேட்ட காலத்திலும் அவனைபபிரிந்து இருக்க இஷ்டம் இல்லாமல் கொடுக்கமாட்டேன என்றதாலும், கைகயீடம் ராமனைப பிரிந்து நான உயிருடன் இருக்கமாட்டேன் என்றதாலும தசரதன் ஸர்வ விதத்திலும ராமஜனனமுதல் அவனை அறிந்து அவனிடம்

ஈடுபட்டு இருப்பதாலும் அதனாலேயே கைகேயிடம் அவனை யாசிக்கிறாராதலாலும், தசரதன் ராமனை விஷ்ணு என்று அறிந்து கொண்டு இருக்கிறார் என்றும ஸித்தாந்தம.

இவ்விஷயத்தை மேலே கவி குறிப்பிடுகிறார். ஸாக்ஷாத் பிர்ம்மமே, அதற்கு ரூபம் இல்லாததால் விஷ்ணுவாக தர்சனம் கொடுத்தபிறகு ராமனாகஜனித்தபிறகு அவதாரம் முடியும்போது விஷ்ணுவாக ஆகி பிர்ம்மமாக மறைந்துவிட்டதால் இப்பேர்ப பட்ட பிர்மத்தை வைகுண்டாரோஹண ஸர்க்கத்தில் ஸர்வ வேதங்களும் காயத்ரீ முதலிய ஸகலமும் பிராம்மண ரூபங் களுடன் அவரை அனுஸரித்து வந்ததுகள் என்று இருக்க சாப மூடையவரையா அனுஸரித்ததுகள், எப்படி ? ஆதலால் ஒரு விதத்திலும் இதை அங்கீகரிக்கவில்லை என்றும் ஸித்தாந்தம். ஆதலால் தசரதர் ராமனை விஷ்ணு என்றமட்டில் பூர்ணம் அறிந் தவர் என்று கவி ஸ்தாபிக்கிறார்.

மேலும் இந்த ராம விக்ரஹம் களங்கமற்ற விக்ரஹம் வைகுண்டாரோஹண ஸர்க்கத்தில் பிறந்த சரீரம் அறியாமல் நான்கு பிராதாக்களும் அப்படியே ஒன்றாகி பிர்ம்மமாகதாக சொல்லபபட்டதால சாபத்திற்காக மனுஷ்யனாக பிறந்து பத்னி வியோகத்தை அடைந்தார் என்பதை கவி ஒத்துக்கொள்ள வில்லை. ஆதலால் கவி வாக்யப்படி ராமாதிகளுக்கு தங்களைத் தாங்கள் எதற்கு பிறந்தவர்கள் என்று தெரியாது என்றும் வானரர்களுக்கு தாங்கள் எதற்காக பிறந்து இருக்கிறோம் என்று தெரியும் என்றும் தசரதருக்கு ராமனை விஷ்ணுவென்று தெரியும் என்றும் ஸித்தாந்தம்.

---

47. ஸ்ரீராமன் ஸீதையுடன் பதினாயிர வருஷம் இருந்தார் என்றும் ஆயிரம் வருஷம்தான் ஸீதையைப் பிரிந்து இருந்தார் என்ற ஸிந்தாந்தம்.

உத்தரகாண்டம் 51 ஸர்க்கம் 25 ச்லோகம் ஏ ஸவஷ ஸஹஸ்ராணி மதாநி ஸுமஹாத்மநோ: । ப்ராவ்யொஷ்ரியாந ஹொமாந வஸஷ:ஸஉவா ம த: । என்று வால்மீகி வர்ணிக்கிறார்.

இபபடி ஸகல வைபோகங்களையும் அனுப்வித்துக்கொண்டு இருக்கிற ராம ஸீதைகளுக்கு பதினுயிர வருஷங்கள் ஆகிவிட்டன. பிறகு எத்தனையோ வஸந்தருதுபோல வஸந்தருது வந்தது என்று கவி வர்ணனை. இங்கு ஏன் அப்படி வஸந்தருது வந்தது என்று குறிப்பிடுகிறார் என்றால் இதில்தான் ராமன் ஸீதையை அபவாதத்திற்காக காடு விடுகிறார் அதற்காக சொன்னது இப்படி ராமன் ராஜ்ய காரியங்களையும் பார்த்துக்கொண்டு ஸ்வகர்மாக்களையும் ஸ்வதர்மத்திலும் இருந்துகொண்டு பதினுயிர வருஷம் இருந்தார் என்றார் கவி. இதனால் பதினுயிர வருஷம் ராமன் ஸீதையுடன் இருந்த பிறகே ஸீதையை காடுவிட்டு விட்டார் என்பது ஷ்பஷ்டம். 12 வருஷம் ஸீதை வால்மீகி ஆச்ரமத்தில இருந்தாள் பிறகு 12 வருஷங்கள் குறைச்சலாக ஆயிரம் வருஷம், ஸீதை பூபிரவேசமான பிறகு ராமன் அயோத்தியில் இருந்தார் என்றும் ஸித்தாந்தம்.

முன் ச்லோகம் சொன்ன பிறகு உத்தரகாண்டம் 111-ம் ஸர்க்கத்தில் 9-ம் ச்லோகத்தில ஊபஸவஷ-உ ஸஹஸ்ராணி வாஜிமெயா_நயாகரொகு । என்று பதினுயிர வருஷங்களை (ஆயிரக்கணக்கான வருஷங்களில் தங்க விக்ரஹத்துடன்) அசுவமேதங்களைச் செய்தார் என்று இருப்பதினுலும முதல் யாகத்திலேயே ஸீதை இல்லையாதலால் அத்துடன பதினுயிர வருஷங்கள் யாகம் செய்ததாக இசலோகத்திற்கு அர்த்தமாதலால் ஸீதையை பிரிந்து பதினுயிரம் வருஷங்கள் இருந்ததாக ஒரு அபிப்பிராயம் சிலர் சொல்லுகிறார்கள். மேலும் இந்த ஸர்க்கத்திற்குமேல் ஸர்க்க கடைசியில் முன் கதாரம்பத்தில் இருக்கும் ச்லோகத்தைச் சொல்லி பிந்தி ஊவம வஷ-உ ஸஹஸ்ராணி பஹூநிந்யயயுः ஸுவம் என்று இப்படி அநேக ஆயிரக்கணக்கான வருஷங்கள் ஸுகத்துடன் சென்றதுகள் என்று இருப்பதாலும் உத்தரகாண்டம் 114 ஸர்க்கத்தில் 16 ச்லோகத்தில் ஊவம வஷ-உஸஹஸ்ராணிஊபஸதெஷாமயயுः ஸூஊா । என்றார் வால்மீகி. அதாவது இப்படி பதினுயிர வருஷஙகள் போய்விட்டதுகள் என்று இருப்பதால முனபின் விரோதம். இதுதான் ஸரி. மேலும் இதற்கு பிறகு 117 ஸர்க்கத்தில் உத்தரகாண்டத்

தில் 29 ச்லோகத்தில் [illegible] என்று காலபுருஷன் ராகவனைப் பார்த்து உம்மால் பதினோயிர வர்ஷங்கள் ரொம்ப நியமத்துடன் இருந்து போக்கப்பட்டது என்றதாலும் பதினோராயிர வருஷம் இரண்டு வருஷம் குறைவாக என்ற ஒரு ஆதாரம். தவிர லவணாஸுர வதத்திற்கு பரதனை செலுத்துகிறேன் என்று சொன்னபோது சத்ருக்னன பரதனை முந்தி ராஜ்ய பரிபாலனத்தில் சிரமப்பட்டவன் நானே போகிறேன் என்று சொன்னதால் ரொம்ப நாள் ஆயிருந்ததால் சிரமம் என்று சத்ருக்னன் சொல்லமாட்டான். ஆதலால் ஸமீபகாலமே ஸீதையை விட்டது. பட்டாபிஷேகமாகி இரண்டு வருஷத்திற்குள் என்பது ஒரு அபிப்ராயம். உத்தரகாண்டம் 51ம் ஸர்கத்தில் [illegible] என்றும் அடுத்த ச்லோகம். பதினாயிரம் வருஷம் இருந்தார்கள் அடுத்தபடி [illegible] என்று இருப்பதாலும் உத்தரகாண்டம் 48 ஸர்க்கத்தில் 30 ச்லோகம் [illegible] என்று அவர்களுக்கு இரண்டாவது சிசிருது சென்றது என்று இருப்பதாலும் இரண்டு வருஷங்கள்தான் ஸீதை ராமனுடன் இருந்தாள் என்பது, பிருகு மஹர்ஷி விஷ்ணுவுக்கு பகுவர்ஷம் பத்னிவியோகத்தை அடைய சாபம் கொடுத்து இருக்கிறார் என்றும் அதற்காக பதினோராயிர வர்ஷமும் பத்னியை பிரிந்தார் என்கிறார்கள். இது சிலர் கக்ஷி. ராமனுக்கு கடைசி பரியந்தம் தன்னை தெரியாததலால் பிருகு சாபத்தை அனுபவிக்கிறதாக தெரியவே இல்லை. ஆதலால் கவியும் அவர் சாபத்தை அனுபவிக்கிறார் ராமன் என்று குறிப்பிடவே இல்லை. ராமனுக்கு நன்றாய் நான் விஷ்ணுதான் என்ற நிச்சயம் தெரியாது என்றார் கவி. காலபுருஷன் வந்து சொன்னபோதுதான் தெரியும். ராவண வதாநந்தரமும் தெரியவில்லை. உத்தரகாண்டத்தில் அகஸ்தியர் எல்லாக் கதைகளையும் சொன்னபோது இவரும் மற்ற பலரும் இப்படி அடிக்கடி சொல்லுகிறார்களே நமக்கு திடப்பட இல்லையே என்று குழப்பம். ஸீதை பூமியில் பிரவேசித்தபோது பிர்ம்மா

வந்து மிசச கதையைக் கேளும் என்று சொல்ல, கேட்டபோது அப்பவும் தன் அவதாரம் தெரியாததால் இருக்குமோ என்ற எண்ணம் ஆனால நிச்சயமல்ல. காலபுருஷன் வந்த பிறகுதான் நிசசயமாதலால் ராமன் தன்னைத் தெரிந்துகொள்ளாமல் இருப் பதால கவியானவர் அதை (சாபத்தை) அனுபவிக்கிறா ளன்று அவர் வாயினால் குறிபபிடவில்லை. மந்திரி வாக்யத்தில் சாப கதை உண்டு. ஆனால் பிருகு சாபத்தை விஷ்ணு ரூபத்தில் வாங்கிகொண்டவர் அதை ராம ரூபத்தில் அனுபவித்து இருக் கிறார் எனபது கவிக்கு இஷ்டம் இலலையாதலால் பொருந்தாது. அவதார விசேஷமே தன்னைத் தெரியாமல் இருக்கவேண்டிய அவதாரமாதலால தனனையே தனக்கு தெரியாமல இருக்கும் போது அனுபவிக்கிறார் என்பது எப்படி என்றும் கவி தன் வாககினால சொலலவிலலை. ஆதலால ராமன் தன்னையறியவில்லை. தவிற பிருகு சாபத்தை அனுபவிக்கும் ஒரு பாபிஷ்டனை வால் மீகி உத்தமன் தர்மிஷ்டன் என்று எப்படி சொல்வார்? ஆத லால ராமன் சாபத்தை அனுபவிக்கிறார் எனபதை வால்மீகி அங்கீகரிககவிலலை. அதை வாலமீகி கண்டிக்கவும் கண்டிக்கிறார். ஆதலால் அது பிரமாணமாகாது என்று ஸித்தாந்தம். தவிற ஸாக்ஷாத விஷ்ணு பிருகு சாபத்தால பிறந்து இருந்தால சாபத் தால் பிறந்து இருபபவனை உத்தமன் தர்மிஷடன் எனறு எப்படி கவி சொல்வது? மஹாிஷி பத்னியைக் கொனறதற்கு (ஸ்திரீ ஹத்தியுடன் கூடினவரை) தண்டனை அனுபவிப்பவரை உத்த மன் என்று எப்படிச சொல்வார்? இந்த ராமாவதாரமான ஜந்மாவில் வாலி வதத்தை அதர்மமாய்ச செய்து அடுதத ஜந்மா வில் ஒரு வேடனால அடிப்படபபோகும் ஒரு பாபிஷ்டனை உத் தமன் தர்மிஷ்டன் ஸர்வகுண ஸம்பன்னன் எனறு எப்படி கவி சொன்னார் என்று கேட்வை? இக்கிரந்தத்தை பிருகு சாபத் தையும் கவி தன வாக்கினால் சொல்லவில்லை இவவிரண்டும் ஸத்யமலல எனறு ஸத்யம். ராகவனை பிர்ம்மமாக ஸ்வர்க்கா ரோ ஹண கட்டத்தில குறிபபிட்டிருப்பதால பிருகு சாபம விஷ்ணு வுக்கே தவிற பிரமமத்திற்கு அல்ல என்பதும் ஸத்யம். தவிற பிர்ம்மா தேவதைகளுக்காக ஸகுண ரூபமாக விஷ்ணுவாகி காட்டி

பிறகு ராமனாக வந்தது. அப்பொழுது சாபமில்லையோ எனில் ஸ்ரீராகவனுக்கு தன்னைத் தெரியாதபோது சாபத்தை அனுபவித்தார் என்பது எப்படிப் பொருந்தும்? கவி களங்கமில்லாதவன் உத்தமன் ராமன் என்று குறிப்பிட்டிருக்க மற்றதுகள் பொய் என்றும் ஸித்தாந்தம். குற்றவாளி குற்றத்திற்கு தண்டனையை அனுபவிக்கிறேன் என்றறியாவிட்டால் அத்தண்டனைக்கு உபயோகமில்லையே. குற்றவாளி குற்றத்தை அறியாமல் அனுபவித்தார் என்பது எப்படி? ராமனுக்கு தன்னை விஷ்ணுவாக தெரிந்தால் ராவணனை கொல்லமுடியாதே எப்படி தெரியும்? ராமன் தன்னை விஷ்ணுவாய் அறிந்தால் தன் பெண்ணையே கல்யாணம் செய்துகொண்டதாயாகுமே எப்படி? அவருக்கு எப்பொழுது தண்டனையை அனுபவிப்பதாய் தெரியவில்லையோ, வால்மீகியும அந்த குற்றம் அவருக்கு இருக்க, மற்ற ஸர்வாகஸ்யமும் தெரிந்து கிரந்தம் செய்தவருக்கு இந்த பிருகு சாபம்மட்டும் தெரியவில்லையா? ஆதலால் ராமப பிரமத்திற்கு சாபம் கிடையாது. சாபத்தை அனுபவிப்பனை அனுபவிக்கப் போகிறவனை ஸர்வதேவதைகளும பரப்பிரம்மம் என்று எப்படி ஸ்தோத்திரம் தார்கள்? ராமன் பிந்தி வியோகத்தை அடைந்ததை பிருகு சாபம என்று சொன்னால் ஊ...வெ...மயொவிஸௌ...ஷாக் என்று இருக்கிறதே. அதாவது துக்க பிராயனானாலும் ஸௌக்யத்துடன் இருக்கிறார் என்று மற்றவர்கள் வாக்யம் இருக்கிறதே எப்படி? தவிற ராமன் யாகம் முடிந்ததும் ஸீதா பூப்பிரவேசமானதும் ராமன் மனதினால் ஹ்ருதயத்தில் ஸீதையை நன்றாய் வைத்துக் கொண்டு அயோத்திக்கு சென்றார் என்று இருக்க பத்னி வியோகம் இவருக்கு ஏது? இவர் ஸுகத்தில் அல்லவா இருக்கிறார். தவிற இவர் ஸீதையை ஹ்ருதயத்தில் தரித்துக்கொண்டு ஸுகத்தில் இருக்கிறார் அயோத்தி சென்றார் என்று இருக்க இவள் இல்லாமல் இருந்தாலல்லவோ சாபத்திற்கு கௌரவம். ஆதலால் ராமன் சாபத்தை அனுபவிக்கிறார் என்பது பொருத்தமல்ல என்று ஸித்தாந்தம். லோகாபவாதத்திற்காகவே ஸீதையைவிட்டதே தவிர வேறு அல்ல என்றுகவி வாக்யத்தால் ஸ்பஷ்டம். ஆதலால ராமனுக்கு தனனைதெரியாதென்றே இக்கவியின்

ஸித்தாந்தம. இனி கவி அபிபபிராயத்தை கவனிப்போம்.— வாலமீகி வாகயபபடி ராமன் ஸீதையுடன இருந்தார் ஆயிர வர்ஷம் தான் பிரிநது இருந்தார் என்பதுதான ஸத்யம். அதாவது உத்தரகாண்டம 111 ஸர்க்கம் 9 ச்லோகத்தில பதினாயிர வருஷங்கள் அச்வமேதங்கள் எனறால பாககி ஆயிர வர்ஷங்களில் யாகம் செய்தாரா இல்லையா? தவிற பதினாயிர வர்ஷங்களில் யாகமே செய்துகொண்டு இருந்தாரா? ராஜய பரிபாலனமே இல்லையா? இராமனை ஶதாஶ்வ ஜெயி என்று இருக்கிறது. நூறு யாகங்கள் செய்தவர் என்று இருக்கிறது. செய்தது நூறு அச்வமேதமே. இபபடியிருக்க பதினாயிர வர்ஷங்கள் யாகமே செய்துகொண்டு இருந்தார் எனறால் அது எப்படி? இது இருக்கட்டும். முதல யாகமே பதினாயிர வர்ஷம் கழித்து செய்ததாய் ஸித்தாந்தம். ஆயிர வர்ஷத்தில (100) அசவமேதமும் மற்ற யாகங்களும் செய்ததாகத்தான் ஸித்தாந்தம்! பிறக 2 மாஸம் முடிந்ததும் சிசிருது வந்தது அதாவது பிறகு ராஜாக்கள் முதலிய எல்லாரையும் அனுபபினது சிசிருது என்பது அவர்கள் போன பிறகு ராமன் அசோகவனத்தில போககளை அனுபவிததுக்கொண்டு இருநதார். பிறகு அப்பொழுது சிசிருது வந்தது என்று காட்டி பிறகு இபபடி பதினாயிரம் வர்ஷம்வரை போகத்தை அனுபவிக்க, பிறகு வஸந்தருதுவந்தது. என்பது இதுபரியந்தம் எத்தனையோ வஸந்தருது வந்து போய்விட்டது. இது ஸீதையை விட்ட ருதுவாதலால் அது வந்தது என்று குறிப்பிடப்பட்டது எனறே ஸித்தாந்தம். (பிருகு சாபம் விஷ்ணுவுக்கு உண்டு அதை அனுபவிக்கிறார் ராமன் என்று வால்மீகி குறிப்பிடாததால அது அங்கீகரிக்க இடம் இலலை என்பது பிரதயக்ஷம். தவிற பிருகு வெருவ்ருஷம் பத்னிவியோகம அடைவீர் என்றாரே தவிற பதினோராயிர வருஷம் பிரியவேண்டும எனறும குறிப்பிடவில்லை. தவிற மற்றொரு விஷயம. உத்தரகாண்டம 111-ம் ஸர்க்கம் பதினாயிர வருஷம் அசவமேதங்களைச்செய்தார் என்ற பிறகு அதேஸர்க்கம் 15-ம சலோகததில [illegible] என்று பிறகு தீர்கக காலததிறகு பிறகு ராமமாதாவானவள்

புத்ரபௌத்ராதிகளுடன் கூடினவள் புண்யலோகம் அடைந்தாள் என்று இருக்கிறது. இத்தனை என்பது எத்தனை வருஷமென்ற அர்த்தமென்று கேள்வி? இதற்கு பிறகு இதேஸாககக்கடைசியில இப்படி பதினாயிர வருஷங்களை ராமன் சுகமாய்க கழித்தார என்று இருக்க இப்படி இருக்கும்போது முன்னால சொன்ன ஸுதீர்கவர்ஷ காலம் என்று, பிறகு, வெகு காலத்திற்கு பிறகு என்று சொன்ன வரிகளு அர்த்தமே இல்லைபோல் இருக்கிறதே. ஸுதீர்கவர்ஷ காலம் என்பதற்கு பதினாயிர வருஷங்களாகினதுமட்டும் அல்ல ராமனுக்கு முந்தி அப்பாவுடன் மாதா அறுபதினாயிர வருஷ பரியந்தம் இருந்தாராதலால் தீர்க்க காலம் என்பது தவிற பதினாயிரத்திற்குமேல் சில வருஷங்கள்கூட ஆயிருக்கும் என்று தாத்பர்யம் பிருகு விஷ்ணுவை சபித்தார் என்ற கதையில் பஹுவார்ஷிகம் என்பதற்கு 11000 வருஷம் என்றால் தீர்க்ககாலம் என்பதற்கு என்ன அர்த்தம். கிரந்த ரீதியில என்ன தெரிகிறதென்றால் பதினாயிர வருஷம் ஸீதையுடன் இராமன் இருந்த பிறகு ஸீதையை விட்ட கொஞ்ச காலததில் புண்ணியலோகமடைந்தார் என்பது. இதே வனவம் வஷ்ஸஹஸ்ராணி என்று இருப்பதால் இப்படி அநேக ஆயிர வருஷங்கள் என்ற தாத்பர்யம். இது நிற்க உத்தரகாண்டம் 42-ம் ஸர்க்கம 1-ம் சலோகத்தில் கஸ்யசித்வத காலஸ்ய யயாஜிகேகயாயிவ: என்றிருக்கிறது. இதில் கஸ்யசித்வத காலஸ்ய என்றால் எவ்வளவு காலத்திற்கு பிறகு என்பது. மாதா புண்யலோகம் போனபிறகு சொன்னது. எத்தனை பிந்தி என்று கேள்வை? இப்பொழுது கஸ்யசித்வத காலஸ்ய என்பதற்கும் பஹுவார்ஷிகம் என்பதறகும் வர்ஷங்கள் எத்தனை என்று நிர்ணயித்தால் நலம். இல்லையேல் வ்யவஹாரமே. பிரகாரணார்த்தத்தைக் கவனித்தால் வ்யவஹாரமே இல்லை என்று ஸ்பஷ்டம். இதுநிறக மற்றொரு விஷயம். ஆரண்யகாண்டத்தில் ஹேமந்த ருதுவில ராமனிடம் சூர்பணகி வந்தாள் என்று மூலப்படி. வாக்யம். ஆரண்யகாண்டம் 16-ம் ஸர்க்கத்தில் ராமன் ஸ்நானம் செய்துவிட்டு ஆசரமத்தில் இருக்கும்போது ராமனிடம் சூர்ப்பணகி வந்தாள் என்றபோது ஹேமந்தருதுவில் இருந்து எத்தனை

